சமாஜ வெளியீடு

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

நாற்பது திவ்விய பிரபந்தங்கள் அடங்கிய

# பதினொரந் திருமுறை



சைவ சித்தாந்த மகா சமாஜம்,

150, கோவிந்தப்பநாய்க்கன் தெரு,

சென்னை.

சாது அச்சுக்கூடம்,

இராயப்பேட்டை, சென்னை.

ஸ்ரீமுக௵ வைகாசிமீ

1933



தனிப்பிரதி விலை அணா பதினொன்று

எட்டு பிரதிகள் விலை ரூபா ஐந்து.

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# ப தி ப் பு ரை

மதிமலிபுரிசை மாடக்கூடல் வதியுங் கடவுள் அருட்டுணை கொண்டு அக்கடவுள் விடுத்த திருமுகத்தையே திருமுகமாகக் கொண்ட பதினோராந் திருமுறையின் அடக்கவிலைச் சுத்தப்பதிப் பாகிய இந்நூல், தெய்வத் திருமுறை வகுத்த சைவ சிகாமணியாகிய நம்பியாண்டார் நம்பியின் திருநாளாகிய இன்று அவர் ஞானோபதேசம் பெற்றுவதிந்த இத்திருநாரையூரிலே அவரது பாதகாணிக் கையாகச் சமர்ப்பிக்கப் பெறுகிறது. இந்நூலின்கண் திருமுருகாற் றுப்படை குகனடியார் பாராயண நூலாகத்திகழ்வதால் அதற்கு இந் நூற்றுண்டுக் கேற்ற எளியதமிழில் ஒருரை திரு. எஸ். வையாபுரி பிள்ளை பி. ஏ., பி. எல். அவர்களைக் கொண்டு செப்பஞ் செய்யப் பட்டது. இந்நூலில் நாற்பது பிரபந்தங்கள் அடங்கியுள்ளன. அவை களைப் பன்னிரு ஆசிரியர்கள் இயற்றி அருளினார்கள். அவ்வாசிரியர் கள் வரலாற்றினைச் சுருங்கக் கூறுவதும் இயலாதாயிற்று. மேலும் ஆசிரியர்கள் வரலாற்றாராய்ச்சியில் அபிப்பிராய பேதங்களும் பலவுள. எனவே, திருவாளர்கள் அ. பாலசுப்பிரமணிய பிள்ளை, கா. சுப்பிர மணிய பிள்ளை, ந. மு. வேங்கடசாமி நாட்டார், சோமசுந்தர தேசிகர் முதலிய பெரியார்களியற்றிய 'பன்னிரு திருமுறையாசிரியர் வர லாறு' 'பட்டினத்தடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும்' 'நக்கீரர்கபிலர்' 'சைவசிகாமணிகள் இருவர்' முதலிய நூல்களில் இவ்விவரங்களை யெல் லாம் கண்டு தெளிக. இத்திருமுறையின் மொத்த பாடற்றொகைக் கணக்கில் ஒவ்வொரு பக்கத்திலுமுள்ள முதற் பாடலின் எண் அப் பக்கத்தின் தலைப்பில் குறிக்கப்பட் டுள்ளது.

இந்நூலைச் செவ்வனே உரியகாலத்து அச்சிட்டுதவிய சாது அச்சுக்கூடத்தினருக்கும், அச்சுத்தாள்களைப் பரிசோதித்த திரு. அ. சோமசுந்தர செட்டியார், எம். ஏ., திரு. வி. உலகநாத முதலி யார் அவர்கட்கும், திருமுருகாற்றுப்படைக்கு உரை யெழுதிய திரு. எஸ். வையாபுரி பிள்ளையவர்கட்கும் சமாஜத்தின் நன்றி யுரி தும் உரித்து. இந்நூலைப்போலவே ஏனைய திருமுறைகளும் விரை வில் வெளிவர இறைவன் துணைபுரியுமாறு இறைஞ்சுகின்றோம்.

இங்ஙனம் :
ம. பாலசுப்பிரமணியன்,
பி. ஏ., பி. எல்., காரியதரிசி,
சைவ சித்தாந்த மகாசமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு,
சென்னை.

திருநாரையூர்
ஸ்ரீமுகஞு வைகாசிமீ கஙஉ
புனர்பூசத்திருநாள்,
28-5-1933.

# உள்ளுறை

திருவாலவாயுடையார்

## கபிலதேவ நாயனார்



## பரணதேவ நாயனார்



## இளம்பெருமானடிகள்



## அதிராவடிகள்



## பட்டணத்துப் பிள்ளையார்



## நம்பியாண்டார் நம்பி





உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பதினொராந் திருமுறை

(நாற்பது திவ்விய பிரபந்தங்கள்)

திருவாலவாயுடையார் அருளிய

## திருமுகப் பாசுரம்

திருச்சிற்றம்பலம்

மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவு பால்நிற வரிச்சிற
கன்னம் பயில்பொழில் ஆல வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
கொருமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்குஞ் சேரலன் காண்க
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

திருச்சிற்றம்பலம்

காரைக்காலம்மையார் அருளிய

# திரு ஆலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள்

## க. பண் - நட்டபாடை

*திருச்சிற்றம்பலம்*

கொங்கை திரங்கி நரம்பெழுந்து குண்டுகண் வெண்பற்
குழிவயிற்றுப், பங்கி சிவந்திரு பற்கள் நீண்டு பரடுயர் நீள்
கணைக் காலோர் பெண்பேய், தங்கி யலறி யுலறுகாட்டில்
தாழ்சடை யெட்டுத் திசையும்வீசி, அங்கங் குளிர்ந்தனல்
ஆடும்எங்கள் அப்ப னிடந்திரு ஆலங்காடே. க

கள்ளிக் கவட்டிடைக் காலை நீட்டிக் கடைக்கொள்ளி
வாங்கி மசித்துமையை, விள்ள எழுதி வெடுவெடென்ன நக்கு
வெருண்டு விலங்குபார்த்துத், துள்ளிச் சுடலைச் சுடுபிணத்
தீச் சுட்டிட முற்றுஞ் சுளிந்துபூழ்தி, அள்ளி அவிக்கநின்
றாடும்எங்கள் அப்ப னிடந்திரு ஆலங்காடே. உ

வாகை விரிந்துவெண் ணெற்றொலிப்ப மயங்கிருள் கூர்
நடு நாளைஆங்கே, கூகையொ டாண்டலை பாடஆந்தை கோட
தன் மேற்குதித் தோடவீசி, ஈகை படர்தொடர் கள்ளிநீழல்
ஈமம்இடுசுடு காட்டகத்தே, ஆகங் குளிர்ந்தனல் ஆடும்எங்கள்
அப்பனிடந்திரு ஆலங்காடே. ௩

குண்டிலோ மக்குழிச் சோற்றைவாங்கிக் குறுநரி
தின்ன அதனைமுன்னே, கண்டிலோ மென்று கனன்று
பேய்கள் கையடித் தோடிடு காடரங்கா, மண்டலம் நின்றங்கு
ளாளமிட்டு வாதித்து வீசி எடுத்தபாதம், அண்ட முற
நிமிர்ந் தாடும்எங்கள் அப்ப னிடந்திரு ஆலங்காடே. ௪

விழுது நிணத்தை விழுங்கியிட்டு வெண்டலை மாலை
விரவப்பூட்டிக், கழுதுதன் பிள்ளையைக் காளியென்று
பேரிட்டுச் சீருடைத் தாவளர்த்துப், புழுதி துடைத்து முலை
கொடுத்துப் போயின தாயை வரவுகாணு, தழுதுறங் கும்
புறங் காட்டிலாடும் அப்ப னிடந்திரு ஆலங்காடே. ௫

பட்டடி நெட்டுகிர்ப் பாறுகாற்பேய் பருந்தொடு கூகை பகண்டை ஆந்தை, குட்டி யிடமுட்டை கூகைப்பேய்கள் குறு நரி சென்றணங் காடுகாட்டிற், பிட்டடித் துப்புறங் காட்டி விட்ட பிணத்தினைப் பேரப் புரட்டிஆங்கே, அட்டமே பாய நின் றாடும்எங்கள் அப்பனிடந்திரு ஆலங்காடே. ௬

சுழலும் அழல்விழிக் கொள்ளிவாய்ப்பேய் சூழ்ந்து துணங்கையிட் டோடிஆடித், தழலு ளெரியும் பிணத்தை வாங்கித் தான்றடி தின்றணங் காடுகாட்டிற், கழலொலி யோசைச் சிலம்பொலிப்பக் காலுயர் வட்டணை யிட்டுநட்டம், அழல்உமிழ்ந் தோரி கதிக்கஆடும் அப்ப னிடந்திரு ஆலங் காடே. ௭

நாடு நகருந் திரிந்துசென்று நன்னெறி நாடி நயந்த வரை, மூடி முதுபிணத் திட்டமாடே முன்னிய பேய்க்கணஞ் சூழச்சூழக், காடுங் கடலும் மலையும்மண்ணும் விண்ணுஞ் சுழல அனல்கையேந்தி, ஆடும் அரவப் புயங்கன்எங்கள் அப்ப னிடந்திரு ஆலங்காடே. ௮

துத்தங் கைக்கிள்ளை விளரிதாரம் உழையிளி யோசை பண் கெழுமப்பாடிச், சச்சரி கொக்கரை தக்கையோடு தகு ணிதந் துந்துபி தாளம்வீணை, மத்தளங் கரடிகை வன்கை மென்தோல் தமருகங் குடமுழா மொந்தை வாசித், தத்தனை விரவினோ டாடும்எங்கள் அப்ப னிடந்திரு ஆலங்காடே. ௯

புந்தி கலங்கி மதிமயங்கி இறந்தவ ரைப்புறங் காட்டி விட்டுச், சந்தியில் வைத்துக் கடமைசெய்து தக்கவ ரிட்ட செந் தீவிளக்கா, முந்தி அமரர் முழவினோசை திசைகது வச் சிலம் பார்க்கஆர்க்க, அந்தியின் மாநடம் ஆடும்எங்கள் அப்ப னிடந்திரு ஆலங்காடே. ௧0

ஒப்பினை யில்லவன் பேய்கள்கூடி ஒன்றினை யொன் றடித் தொக்கலித்துப், பப்பினை யிட்டுப் பகண்டை பாடப் பாடிருந் தந்நரி யாழமைப்ப, அப்பனை அணிதிரு ஆலங்காட் டுள் அடிகளைச் செடிதலைக் காரைக்காற்பேய், செப்பிய செந் தமிழ் பத்தும்வல்லார் சிவகதி சேர்ந்தின்பம் எய்துவரே.

திருச்சிற்றம்பலம்

## உ. பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

எட்டி யிலவ மீகை சூரை காரை படர்ந்தெங்குஞ்
சுட்ட சுடலை சூழ்ந்த கள்ளி சோர்ந்த குடர்கௌவப்
பட்ட பிணங்கள் பரந்த காட்டிற் பறைபோல் விழிகட்பேய்
கொட்ட முழவங் கூளி பாடக் குழக னாடுமே. க

நிணந்தா னுருகி நிலந்தான் நனைப்ப நெடும்பற் குழிகட்பேய்
துணங்கை எறிந்து சூழு நோக்கிச் சுடலைநவிழ்த் தெங்கும்
கணங்கள் கூடிப் பிணங்கள் மாந்திக் களித்த மனத்தவாய்
அணங்கு காட்டில் அனல்கை ஏந்தி அழக னாடுமே. உ

புட்கள் பொதுத்த புலால்வெண் தலையைப் புறமே நரிகவ்வ
அட்டென் றழைப்ப ஆந்தை வீச அருகே சிறுகூகை
உட்க விழிக்க ஊமன் வெருட்ட ஓரி கதித்தெங்கும்
பிட்க நட்டம் பேணும் இறைவன் பெயரும் பெருங்காடே. ங

செத்த பிணத்தைத் தெளியாதொருபேய் சென்று விரல்சுட்டிக்
கத்தி யுறுமிக் கனல்விட் டெறிந்து கடக்கப் பாய்ந்துபோய்ப்
பத்தல் வயிற்றைப் பதைக்க மோதிப் பலபேய் இரிந்தோடப்
பித்த வேடங் கொண்டு நட்டம் பெருமா னாடுமே. ச

முள்ளி தீந்து முளரி கருகி மூளை சொரிந்துக்குக்
கள்ளி வற்றி வெள்ளில் பிறங்கு கடுவெங் காட்டுள்ளே
புள்ளி யுழைமான் தோலொன் றுடுத்துப் புலித்தோல் பியற்கிட்டுப்
பள்ளி யிடமும் அதுவே யாகப் பரம னாடுமே. ரு

வாளைக் கிளர வளைவாள் எயிற்று வண்ணச் சிறுகூகை
மூளைத் தலையும் பிணமும் விழுங்கி முரலும் முதுகாட்டில்
தாளிப் பனையின் இலைபோல் மயிர்க்கட் டழல்வாய் அழல்கட்பேய்
கூளிக் கணங்கள் குழலோ டியம்பக் குழக னாடுமே. சா

நொந்திக் கிடந்த சுடலை தடவி நுகரும் புழுக்கின்றிச்
சிந்தித் திருந்தங் குறங்குஞ் சிறுபேய் சிரமப் படுகாட்டின்
முந்தி அமரர் முழவின் ஓசை முறைமை வழுவாமே
அந்தி நிருத்தம் அனல்கை ஏந்தி அழக னாடுமே. எ

வேய்க ளோங்கி வெண்முத் துதிர வெடிகொள் சுடலையுள்
ஓயும் உருவில் உலறு கூந்தல் அலறு பகுவாய
பேய்கள் கூடிப் பிணங்கள் மாந்தி யணங்கும் பெருங்காட்டின்
மாய னாட மலையான் மகளும் மருண்டு நோக்குமே. அ

கடுவன் உகளுங் கழைசூழ் பொதும்பிற் கழுதும் பேயுமாய்
இடுவெண் டலையும் ஈமப் புகையும் எழுந்த பெருங்காட்டில்
கொடுவெண் மழுவும் பிறையுந் ததும்பக் கொள்ளென் றிசைபாடப்
படுவெண் டுடியும் பறையுங் கறங்கப் பரம னாடுமே. கூ

குண்டை வயிற்றுக் குறிய சிறிய நெடிய பிறங்கற்பேய்
இண்டு படர்ந்த இருள்சூழ் மயானத் தெரிவாய் எயிற்றுப்பேய்
கொண்டு குழவி தடவி வெருட்டிக் கொள்ளென் றிசைபாட
மிண்டி மிளிர்ந்த சடைகள் தாழ விமல னாடுமே. கo

சூடு மதியஞ் சடைமேல் உடையார் சுழல்வார் திருநட்டம்
ஆடும் அரவம் அரையில் ஆர்த்த அடிகள் அருளாலே
காடு மலிந்த கனல்வாய் எயிற்றுக் காரைக் காற்பேய்தன்
பாடல் பத்தும் பாடி ஆடப் பாவ நாசமே. கக

திருச்சிற்றம்பலம்

---

## திருஇரட்டை மணிமாலை

திருச்சிற்றம்பலம்

கிளர்ந்துந்து வெந்துயர் வந்தடும் போதஞ்சி நெஞ்சமென்பாய்
தளர்ந்திங் கிருத்தல் தவிர்திகண் டாய்தள ராதுவந்தி
வளர்ந்துந்து கங்கையும் வானத் திடைவளர் கோட்டு வெள்ளை
இளந்திங் களுமெருக் கும்இருக் குஞ்சென்னி ஈசனுக்கே.

ஈச னவனல்லா தில்லை யெனநினைந்து
கூசி மனத்தகத்துக் கொண்டிருந்து—பேசி
மறவாது வாழ்வாரை மண்ணுலகத் தென்றும்
பிறவாமைக் காக்கும் பிரான். உ

பிரானென்று தன்னைப்பன் னாள்பர வித்தொழு வாரிடர்கண்
டிரானென்ன நிற்கின்ற ஈசன்கண் டீர்இன வண்டுகிண்டிப் [வாய்
பொராநின்ற கொன்றைப் பொதும்பர்க் கிடந்துபொம் மென்றுறை
அராநின் றிரைக்குஞ் சடைச்செம்பொன் னீள்முடி அந்தணனே.

அந்தணனைத் தஞ்சமென் றாட்பட்டார் ஆழாமே
வந்தணைந்து காத்தளிக்கும் வல்லாளன்—கொந்தணைந்த
பொன்கண்டாற் பூணேதே கோள்நாகம் பூண்டானை
என்கண்டாய் நெஞ்சே இனி. ௪

இனிவார் சடையினிற் கங்கையென் பாளைஅங் கத்திருந்த
கனிவாய் மலைமங்கை காணில்என் செய்திகை யிற்சிலையான்
முனிவார் திரிபுரம் மூன்றும்வெந் தன்றுசெந் தீயின்மூழ்கத்
தனிவார் கணையொன்றி னால்மிகக் கோத்தஎஞ் சங்கரனே.

சங்கரனைத் தாழ்ந்த சடையானை அச்சடைமேற்
பொங்கரவம் வைத்துகந்த புண்ணியனை—அங்கொருநாள்
ஆவாவென் றாழாமைக் காப்பானை எப்பொழுதும்
ஓவாது நெஞ்சே உரை. ௬

உரைக்கப் படுவதொன் றுண்டுகேட் கிற்செவ் வான்தொடைமேல்
இரைக்கின்ற பாம்பினை என்றுந் தொடேல்இழிந் தோட்டத்தெங்குந்
திரைக்கின்ற கங்கையுந் தேனின்ற கொன்றையுஞ் செஞ்சடைமேல்
விரைக்கின்ற வன்னியுஞ் சென்னித் தலைவைத்த வேதியனே.

வேதியனை வேதப் பொருளானை வேதத்துக்
காதியனை யாதிரைநன் னாளானைச்—சோதிப்பான்
வல்லேன மாய்ப்புக்கு மாலவனும் மாட்டாது
இல்லேன மாவென்றான் கீழ். ௮

கீழா யினதுன்ப வெள்ளக் கடல்தள்ளி யுள்ளுறப்போய்
வீழா திருந்தின்பம் வேண்டுமென் பீர்விர வார்புரங்கள்
பாழா யிடக்கண்ட கண்டனெண் தோளன்பைம் பொற்கழலே
தாழா திறைஞ்சிப் பணிந்துபன் னாளுந் தலைநின்மினே. ௯

தலையாய ஐந்திணையுஞ் சாதித்துத் தாழ்ந்து
தலையா யினவுணர்ந்தோர் காண்பர்—தலையாய

அண்டத்தான் ஆதிரையான் ஆலாலம் உண் டிருண்ட
கண்டத்தான் செம்பொற் கழல். கo

கழற்கொண்ட சேவடி காணலுற் றார்தம்மைப் பேணலுற்றார்
நிழற்கண்ட போழ்தத்து நில்லா வினைநிக ரேதுமின்றித்
தழற்கொண்ட சோதிச்செம் மேனியெம் மானைக்கைம் மாமலர்தூய்த்
தொழக்கண்டு நிற்கிற்கு மோதுன்னி நம்மடுந் தொல்வினையே.

தொல்லை வினைவந்து சூழாமுன் தாழாமே
ஒல்லை வணங்கி உமையென்னும்—மெல்லியலோர்
கூற்றனைக் கூற்றுருவங் காய்ந்தானை வாய்ந்திலங்கு
நீற்றனை நெஞ்சே நினை. கஉ

நினையா தொழுதிகண் டாய்நெஞ்ச மேயிங்கோர் தஞ்சமென்று
மனையா ளையும்மக்கள் தம்மையுந் தேறி யோரா றுபுக்கு
நனையாச் சடைமுடி நம்பன்நந் தாதைநொந் தாதசெந்தீ
அனையான் அமரர் பிரான்அண்ட வாணன் அடித்தலமே. கங

அடித்தலத்தின் அன்றரக்கன் ஐந்நான்கு தோளும்
முடித்தலமும் நீமுரித்த வாறென்—முடித்தலத்தில்
ஆறுடி ஆறு அனலாடி அவ்வனலின்
நீறுடி நெய்யாடி நீ. கச

நீநின்று தானவர் மாமதில் மூன்றும் நிரந்துடனே
தீநின்று வேவச் சிலைதொட்ட வாறென் றிரங்குவல் வாய்ப்
பேய்நின்று பாடப் பெருங்கா டரங்காப் பெயர்ந்து நட்டம்
போய்நின்று பூதந் தொழச்செய்யும் மொய்கழற் புண்ணியனே.

புண்ணியங்கள் செய்தனவும் பொய்ந்நெறிக்கட் சாராமே
எண்ணியோ ரைந்தும் இசைந்தனவால்—திண்ணிய
கைம்மாவின் ஈருரிவை மூவுருவும் போர்த்துகந்த
அம்மானுக் காட்பட்ட அன்பு. கசு

அன்பால் அடைவதெவ் வாறுகொல் மேலதோ ராடரவந்
தன்பால் ஒருவரைச் சாரவொட் டாதது வேயுமன்றி
முன்பா யினதலை யோடுகள் கோத்தவை யார்த்துவெள்ளை
என்பா யினவும் அணிந்தங்கோர் ஏறுகந் தேறுவதே. கஎ

ஏறலால் ஏறமற் றில்லையே எம்பெருமான்
ஆறெலாம் பாயும் அவிர்சடையார்—வேறோர்
படங்குலவு நாகமுமிழ் பண்டமரர் சூழ்ந்த
தடங்கடல்நஞ் சுண்டார் தமக்கு. கஅ

தமக்கென்றும் இன்பணி செய்திருப் பேழுக்குத் தாமொருநாள்
எமக்கென்று சொன்னால் அருளுங்கொ லாமினை யாதுமின்றிச்
சுமக்கின்ற பிள்ளைவெள் ளேறொப்ப தொன்றுதொண் டைக்கனிவாய்
உமைக்கென்று தேடிப் பெறுதுட னேகொண்ட உத்தமரே.

உத்தமராய் வாழ்வார் உலந்தக்கால் உற்றார்கள்
செத்தமர மடுக்கித் தீயாமுன்—உத்தமனாய்
நீளாழி நஞ்சுண்ட நெய்யாடி தன்திறமே
கேளாழி நெஞ்சே கிளர்ந்து. உ௦

திருச்சிற்றம்பலம்

---

# அற்புதத் திருவந்தாதி

திருச்சிற்றம்பலம்

பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்—நிறந்திகழும்
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்ப திடர். க

இடர்களையா ரேனும் எமக்கிரங்கா ரேனும்
படருநெறி பணியா ரேனுஞ்—சுடருருவில்
என்பறாக் கோலத் தெரியாடும் எம்மானார்க்
கன்பறா தென்னெஞ் சவர்க்கு. உ

அவர்க்கே எழுபிறப்பும் ஆளாவோ மென்றும்
அவர்க்கேநாம் அன்பாவ தல்லாற்—பவர்ச்சடைமேற்
பாகாப்போழ் சூடு மவர்க்கல்லால் மற்றொருவர்க்
காகாப்போம் எஞ்ஞான்றும் ஆள். ௩

ஆளானோம் அல்லல் அறிய முறையிட்டால்
கேளாத தென்கொலோ கேளாமை—நீளாகஞ்
செம்மையா ளாகித் திருமிடறு மற்றொன்றாம்
எம்மையாட் கொண்ட இறை. ச

இறைவனே எவ்வுயிருந் தோற்றுவிப்பான் தோற்றி
இறைவனே ஈண்டிறக்கஞ் செய்வான்—இறைவனே
எந்தா யெனவிரங்கும் எங்கள்மேல் வெந்துயரம்
வந்தா லதுமாற்று வான். ரு

வானத்தா னென்பாரு மென்கமற் றும்பர்கோன்
தானத்தா னென்பாருந் தாமென்க—ஞானத்தான்
முன்னஞ்சத் தாலிருண்ட மொய்யொளிசேர் கண்டத்தான்
என்னெஞ்சத் தானென்பன் யான். சா

யானே தவமுடையேன் என்னெஞ்சே நன்னெஞ்சம்
யானே பிறப்பறுப்பான் எண்ணினேன்—யானேயக்
கைம்மா வுரிபோர்த்த கண்ணுதலான் வெண்ணீற்ற
அம்மானுக் காளாயி னேன். எ

ஆயினேன் ஆள்வானுக் கன்றே பெறற்கரியன்
ஆயினேன் அஃதன்றே யாமாறு—தூய
புனற்கங்கை ஏற்றானோர் பொன்வரையே போல்வான்
அனற்கங்கை ஏற்றான் அருள். அ

அருளே யுலகெலாம் ஆள்விப்ப தீசன்
அருளே பிறப்பறுப்ப தானால்—அருளாலே
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்
எப்பொருளு மாவ தெனக்கு. கூ

எனக்கினிய எம்மானை ஈசனை யானென்றும்
மனக்கினிய வைப்பாக வைத்தேன்—எனக்கவனைக்
கொண்டேன் பிரானாகக் கொள்வதுமே இன்புற்றேன்
உண்டே எனக்கரிய தொன்று. க0

ஒன்றே நினைந்திருந்தேன் ஒன்றே துணிந்தொழிந்தேன்
ஒன்றேஎன் உள்ளத்தின் உள்ளடைத்தேன்—ஒன்றேகாண்

கங்கையான் திங்கட் கதிர்முடியான் பொங்கொளிசேர்
அங்கையாற் காளாம் அது. ௧௧

அதுவே பிரானுமா(று) ஆட்கொள்ளு மாறும்
அதுவே யினியறிந்தோ மாறல்—அதுவே
பனிக்கணங்கு கண்ணியா ரொண்ணுதலின் மேலோர்
தனிக்கணங்கு வைத்தார் தகவு. ௧௨

தகவுடையார் தாமுளரேல் தாரதலஞ் சாரப்
புகவிடுதல் பொல்லாது கண்டீர்—மிகவடர
ஊர்ந்திடுமா நாகம் ஒருநாள் மலைமகளைச்
சார்ந்திடுமே லேபாவந் தான். ௧௩

தானே தனிநெஞ்சந் தன்னையுயக் கொள்வான்
தானே பெருஞ்சேமஞ் செய்யுமால்—தானேயோர்
பூணாகத் தாற்பொலிந்து பொங்கழல்சேர் நஞ்சுமிழும்
நீணாகத் தானை நினைந்து. ௧௪

நினைந்திருந்து வானவர்கள் நீள்மலரால் பாதம்
புனைந்தும் அடிபொருந்த மாட்டார்—நினைந்திருந்து
மின்செய்வான் செஞ்சடையாய் வேதியனே என்னின்றேற்
கென்செய்வான் கொல்லோ இனி. ௧௫

இனியோநாம் உய்ந்தோம் இறைவன்அருள் சேர்ந்தோம்
இனியோர் இடரில்லோம் நெஞ்சே—இனியோர்
வினைக்கடலை யாக்குவிக்கும் மீளாப் பிறவிக்
கனைக்கடலை நீந்தினோம் காண். ௧௬

காண்பார்க்குங் காணலாந் தன்மையனே கைதொழுது
காண்பார்க்குங் காணலாங் காதலாற்—காண்பார்க்குச்
சோதியாய்ச் சிந்தையுளே தோன்றுமே தொல்லுலகுக்
காதியாய் நின்ற அரன். ௧௭

அரனென்கோ நான்முக னென்கோ அரிய
பரனென்கோ பண்புணர மாட்டேன்—முரணழியத்
தானவனைப் பாதத் தனிவிரலாற் செற்றானை
யானவனை எம்மானை இன்று. ௧௮

இன்று நமக்கெளிதே மாலுக்கும் நான்முகற்கும்
அன்றும் அளப்பரியன் ஆனானை—என்றுமோர்
மூவா மதியானை மூவே ழுலகங்கள்
ஆவானைக் காணும் அறிவு. ௧௯

அறிவானுந் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே—அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பார் ஆகாயம்
அப்பொருளுந் தானே அவன். ௨௦

அவனே இருசுடர்தீ ஆகாசம் ஆவான்
அவனே புவிபுனல்காற் றாவான்—அவனே
இயமான னாய்அட்ட மூர்த்தியுமாய் ஞான
மயனாகி நின்றானும் வந்து. ௨௧

வந்திதனைக் கொள்வதே யொக்கும்இவ் வாளரவின்
சிந்தை யதுதெரிந்து காண்மினோ—வந்தோர்
இராநீர் இருண்டனைய கண்டத்தீர் எங்கள்
பிரானீருஞ் சென்னிப் பிறை. ௨௨

பிறையும் புனலும் அனலரவுஞ் சூடும்
இறைவ ரெமக்கிரங்கா ரேனுங்—கறைமிடற்ற
எந்தையார்க் காட்பட்டேம் என்றென் றிருக்குமே
எந்தையா வுள்ளம் இது. ௨௩

இதுவன்றே ஈசன் திருவுருவ மாமா
றிதுவன்றே என்றனக்கோர் சேமம்—இதுவன்றே
மின்னுஞ் சுடருருவாய் மீண்டாயென் சிந்தனைக்கே
இன்னுஞ் சுழல்கின்ற திங்கு. ௨௪

இங்கிருந்து சொல்லுவதென் எம்பெருமான் எண்ணாதே
எங்கும் பலிதிரியும் எத்திறமும்—பொங்கிரவில்
ஈமவனத் தாடுதும் என்னுக்கென் றாராய்வோம்
நாமவனைக் காணலுற்ற ஞான்று. ௨௫

ஞான்ற குழற்சடைகள் பொன்வரைபோல் மின்னுவன
போன்ற கறைமிடற்றான் பொன்மார்பின்—ஞான்றெங்கும்

மிக்கயலே தோன்ற விளங்கி மிளிருமே
அக்கயலே வைத்த அரவு. உசு

அரவமொன் றாகத்து நீநயந்து பூணேல்
பரவித் தொழுதிரந்தோம் பன்னாள்—முரணழிய
ஒன்னாதார் மூவெயிலும் ஓரம்பால் எய்தானே
பொன்னாரம் மற்றொன்று பூண். உஎ

பூணாக வொன்று புனைந்தொன்று பொங்கதளின்
நாணாக மேன்மிளிர நன்கமைத்துக்—கோணாகம்
பொன்முடிமேற் சூடுவது மெல்லாம் பொறியிலியேற்
கென்முடிவ தாக இவர். உஅ

இவரைப் பொருளுணர மாட்டாதார் எல்லாம்
இவரை யிகழ்வதே கண்டீர்—இவர்தமது
பூக்கோல மேனிப் பொடிபூசி என்பணிந்த
பேய்க்கோலங் கண்டார் பிறர். உகூ

பிறரறிய லாகாப் பெருமையருந் தாமே
பிறரறியும் பேருணர்வுந் தாமே—பிறருடைய
என்பே யணிந்திரவில் தீயாடும் எம்மானார்
வன்பேயும் தாமும் மகிழ்ந்து. ௩0

மகிழ்தி மடநெஞ்சே மானுடரில் நீயுந்
திகழ்தி பெருஞ்சேமஞ் சேர்ந்தாய்—இகழாதே
யாரென்பே யேனும் அணிந்துழல்வார்க் காட்பட்ட
பேரன்பே யின்னும் பெருக்கு. ௩க

பெருகொளிய செஞ்சடைமேற் பிள்ளைப் பிறையின்
ஒருகதிரே போந்தொழுகிற் றொக்குந்—தெரியின்
முதற்கண்ணான் முப்புரங்க ளன்றெரித்தான் மூவா
நுதற்கண்ணான் றன்மார்பின் நூல். ௩உ

நூலறிவு பேசி நுழைவிலா தார்திரிக
நீல மணிமிடற்றான் நீர்மையே—மேலுலந்த
தெக்கோலத் தெவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத் தவ்வுருவே யாம். ௩௩

ஆமா றறியாமே வல்வினைகள் அந்தரத்தே
நாமாளென் றேத்தா நகர்மூன்றும்—வேமா
றொருகணையாற் செற்றானை உள்ளத்தால் உள்ளி
அருகணையா தாரை அடும். ரு௪

அடுங்கண்டாய் வெண்மதியென் றஞ்சி இருள்போந்
திடங்கொண் டிருக்கின்ற தொக்கும்—படங்கொள்
அணிமிடற்ற பேழ்வாய் அரவசைத்தான் கோல
மணிமிடற்றி னுள்ள மறு. ருரு

மறுவுடைய கண்டத்தீர் வார்சடைமேல் நாகந்
தெறுமென்று தேய்ந்துழலும் ஆ!ஆ!—உறுவான்
தளரமீ தோடுமேல் தானதனை அஞ்சி
வளருமோ பிள்ளை மதி. ருசு

மதியா அடலவுணர் மாமதில்மூன் றட்ட
மதியார் வளர்சடையி னானை—மதியாலே
என்பாக்கை யாலிகழா தேத்துவரேல் இவ்வுலகில்
என்பாக்கை யாய்ப்பிறவார் ஈண்டு. ருஎ

ஈண்டொளிசேர் வானத் தெழுமதியை வாளரவந்
தீண்டச் சிறுகியதே போலாதே—பூண்டதோர்
தாரேறு பாம்புடையான் மார்பில் தழைந்திலங்கு
கூரேறு காரேனக் கொம்பு. ருஅ

கொம்பினையோர் பாகத்துக் கொண்ட குழகன்தன்
அம்பவள மேனி அதுமுன்னஞ்—செம்பொன்
அணிவரையே போலும் பொடியணிந்தால் வெள்ளி
மணிவரையே போலும் மறித்து. ருகூ

மறித்து மடநெஞ்சே வாயாலுஞ் சொல்லிக்
குறித்துத் தொழுதொண்டர் பாதங்—குறித்தொருவர்
கொள்ளாத திங்கட் குறுங்கண்ணி கொண்டார்மாட்
டுள்ளாதார் கூட்டம் ஒருவு. ௬௦

ஒருபால் உலகளந்த மாலவனும் மற்றை
ஒருபால் உமையவளாம் என்றால்—இருபாலும்

நின்னுருவ மாக நிறந்தெரிய மாட்டோம்மால்
நின்னுருவோ மின்னுருவோ நேர்ந்து. சக

நேர்ந்தரவங் கொள்ளச் சிறுகிற்றே நீயதனை
ஈர்ந்தளவே கொண்டிசைய வைத்தாயோ—பேர்ந்து
வளங்குழவித் தாய்வளர மாட்டாதோ என்றே
இளங்குழவித் திங்கள் இது. சஉ

திங்க ளிதுசூடிச் சில்பலிக்கென் றார்திரியேல்
எங்கள் பெருமானே என்றிரந்து—பொங்கொளிய
வானோர் விலக்காரேல் யாம்விலக்க வல்லமே
தானே அறிவான் தனக்கு. சங

தனக்கே அடியனாய்த் தன்னடைந்து வாழும்
எனக்கே அருளாவா றென்கொல்—மனக்கினிய
சீராளன் கங்கை மணவாளன் செம்மேனிப்
பேராளன் வானோர் பிரான். சச

பிரானவனை நோக்கும் பெருநெறியே பேணிப்
பிரானவன்தன் பேரருளே வேண்டிப்—பிரானவனை
எங்குற்றான் என்பீர்கள் என்போல்வார் சிந்தையினும்
இங்குற்றான் காண்பார்க் கெளிது. சரு

எளிய திதுவன்றே ஏழைகாள் யாதும்
அளியீர் அறிவிலீர் ஆ!ஆ!—வொளிகொள்மிடற்
றெந்தைஅராப் பூண்டுழலும் எம்மானை உள்நினைந்த
சிந்தையராய் வாழுந் திறம். சசா

திறத்தான் மடநெஞ்சே சென்றடைவ தல்லால்
பெறத்தானும் ஆதியோ பேதாய்—நிறத்த
இருவடிக்கண் ஏழைக் கொருபாகம் ஈந்தான்
திருவடிக்கட் சேருந் திரு. சஎ

திருமார்பில் ஏனச் செழுமருப்பைப் பார்க்கும்
பெருமான் பிறைக்கொழுந்தை நோக்கும்—ஒருநாள்
இதுமதியென் றொன்றாக இன்றளவுந் தேரா
ததுமதியொன் றில்லா அரா. சஅ

அராவி வளைத்தனைய அங்குழவித் திங்கள்
விராவு கதிர்விரிய வோடி—விராவுதலால்
பொன்னோடு வெள்ளிப் புரிபுரிந்தாற் போலவே
தன்னோடே யொப்பான் சடை. சகூ

சடைமேலக் கொன்றை தருகனிகள் போந்து
புடைமேவித் தாழ்ந்தனவே போலும்—முடிமேல்
வலப்பாலக் கோல மதிவைத்தான் தன்பங்கின்
குலப்பாவை நீலக் குழல். ருO

குழலார் சிறுபுறத்துக் கோல்வளையைப் பாகத்
தெழிலாக வைத்ததேக வேண்டா—கழலார்ப்பப்
பேரிரவில் ஈமப் பெருங்காட்டிற் பேயோடும்
ஆரழல்வாய் நீயாடும் அங்கு. ருக

அங்கண் முழுமதியஞ் செக்கர் அகல்வானத்
தெங்கும் இனிதெழுந்தால் ஒவ்வாதே—செங்கண்
திருமாலைப் பங்குடையான் செஞ்சடைமேல் வைத்த
சிரமாலை தோன்றுவதோர் சீர். ருஉ

சீரார்ந்த கொன்றை மலர்தழைப்பச் சேணுலவி
நீரார்ந்த பேரியாறு நீத்தமாய்ப்—போரார்ந்த
நாண்பாம்பு கொண்டசைத்த நம்மீசன் பொன்முடிதான்
காண்பார்க்குச் செவ்வேயோர் கார். ருங

காருருவக் கண்டத்தெங் கண்ணுதலே எங்கொளித்தாய்
ஓருருவாய் நின்னோ டுழிதருவான்—நீருருவ
மேகத்தாற் செய்தனைய மேனியான் நின்னுடைய
பாகத்தான் காணாமே பண்டு. ருச

பண்டமரர் அஞ்சப் படுகடலில் நஞ்சுண்டு
கண்டங் கறுத்ததுவும் அன்றியே—உண்டு
பணியுறுவார் செஞ்சடைமேற் பால்மதியி னுள்ளே
மணிமறுவாய்த் தோன்றும் வடு. ருரு

வடுவன் றெனக்கருதி நீமதித்தி யாயில்
சுடுவெண் பொடிநிறத்தாய் சொல்லாய்—படுவெண்

புலாற்றலையி னுள்ளூண் புறம்பேசக் கேட்டோம்
நிலாத்தலையிற் சூடுவாய் நீ. ௫௬

நீயுலக மெல்லாம் இரப்பினும் நின்னுடைய
தீய அரவொழியச் செல்கண்டாய்—தூய
மடவரலார் வந்து பலியிடார் அஞ்சி
விடஅரவம் மேலாட மிக்கு. ௫௭

மிக்க முழங்கெரியும் வீங்கிய பொங்கிருளும்
ஒக்க வுடனிருந்தால் ஒவ்வாதே—செக்கர்போல்
ஆகத்தான் செஞ்சடையும் ஆங்கவன்தன் பொன்னுருவில்
பாகத்தாள் பூங்குழலும் பண்பு. ௫௮

பண்புணர மாட்டேன்நான் நீயே பணித்துக்காண்
கண்புணரு நெற்றிக் கறைக்கண்டா—பெண்புணரும்
அவ்வுருவோ மாலுருவோ ஆனேற்றாய் நீறணிவ
தெவ்வுருவோ நின்னுருவ மேல். ௫௯

மேலாய மேகங்கள் கூடியோர் பொன்விலங்கல்
போலாம் ஒளிபுதைத்தால் ஒவ்வாதே—மாலாய
கைம்மா மதக்களிற்றுக் காருரிவை போர்த்தபோ
தம்மான் திருமேனி அன்று. ௬0

அன்றுந் திருவுருவங் காணாதே ஆட்பட்டேன்
இன்றுந் திருவுருவங் காண்கிலேன்—என்றுந்தான்
எவ்வுருவோ நும்பிரான் என்பார்கட் கென்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவ மேது. ௬௧

ஏதொக்கும் ஏதொவ்வா தேதாகும் ஏதாகா
தேதொக்கும் என்பதனை யாரறிவார்—பூதப்பால்
வில்வேட னாகி விசயனோ டேற்றநாள்
வல்வேட னான வடிவு. ௬௨

வடிவுடைய செங்கதிர்க்கு மாறாய்ப் பகலே
நெடிதுலவி நின்றெறிக்குங் கொல்லோ—கடியுலவு
சொன்முடிவொன் றில்லாத சோதியாய் சொல்லாயால்
நின்முடிமேல் திங்கள் நிலா. ௬௩

நிலாஇலங்கு வெண்மதியை நேடிக்கொள் வான்போல்
உலாவி யுழிதருமா கொல்லோ—நிலாவிருந்த
செக்கரவ் வானமே யொக்குந் திருமுடிக்கே
புக்கரவங் காலையே போன்று. ௬௪

காலையே போன்றிலங்கும் மேனி கடும்பகலின்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு—மாலையின்
தாங்குருவே போலுஞ் சடைக்கற்றை மற்றவற்கு
வீங்கிருளே போலும் மிடறு. ௬௫

மிடற்றில் விடமுடையீர் உம்மிடற்றை நக்கி
மிடற்றில் விடங்கொண்ட வாறே—மிடற்றகத்து
மைத்தா மிருள்போலும் வண்ணங் கரிதாலோ
பைத்தாடு நும்மார்பிற் பாம்பு. ௬௬

பாம்பும் மதியும் மடமானும் பாய்புலியுந்
தாம்பயின்று தாழுருவி தாங்குதலால்—ஆம்பொன்
உருவடிவில் ஓங்கொளிசேர் கண்ணுதலான் கோலத்
திருவடியின் மேய சிலம்பு. ௬௭

சிலம்படியாள் ஊடலைத் தான்தவிர்ப்பான் வேண்டிச்
சிலம்படிமேற் செவ்வரத்தஞ் சேர்த்தி—நலம்பெற்
றெதிராய செக்கரினும் இக்கோலஞ் செய்தான்
முதிரா மதியான் முடி. ௬௮

முடிமேற் கொடுமதியான் முக்கணான் நல்ல
அடிமேற் கொடுமதியோங் கூற்றைப்—படிமேற்
குனியவலை மாமேருவுமை கொண்டாடப் பெற்றேம்
இனிஅவலம் உண்டோ எமக்கு. ௬௯

எமக்கிதுவோ பேராசை என்றுந் தவிரா
தெமக்கொருநாள் காட்டுதியோ எந்தாய்—அமைக்கவே
போந்தெரிபாய்ந் தன்ன புரிசடையாய் பொங்கிரவில்
எந்தெரிபாய்ந் தாடும் இடம். ௭௦

இடப்பால வானத் தெழுமதியை நீயோர்
மடப்பாவை தன்னருகே வைத்தால்—இடப்பாகங்

கொண்டாள் மலைப்பாவை கூறொன்றுங் கண்டிலங்காண்
கண்டாயே முக்கண்ணாய் கண். எக

கண்டெந்தை என்றிறைஞ்சிக் கைப்பணியான் செய்யேனேல்
அண்டம் பெறினும் அதுவேண்டேன்—துண்டஞ்சேர்
விண்ணாளுந் திங்களாய் மிக்குலகம் ஏழினுக்குங்
கண்ணாளா ஈதென் கருத்து. எஉ

கருத்தினால் நீகருதிற் றெல்லாம் உடனே
திருத்தலாஞ் சிக்கெனநான் சொன்னேன்—பருந்தரங்க
வெள்ளநீ ரேற்றான் அடிக்கமலம் நீவிரும்பி
உள்ளமே எப்போதும் ஓது. எங

ஓத நெடுங்கடல்கள் எத்தனையும் உய்த்தட்ட
ஏது நிறைந்தில்லை என்பரால்—பேதையர்கள்
எண்ணா திடும்பலியால் என்னோ நிறைந்தவா
கண்ணார் கபாலக் கலம். எச

கலங்கு புனற்கங்கை யூடால லாலும்
இலங்கு மதிஇயங்க லாலும்—நலங்கொள்
பரிசுடையான் நீள்முடிமேற் பாம்பியங்க லாலும்
விரிசடையாங் காணில் விசும்பு. எரு

விசும்பில் விதியுடைய விண்ணோர் பணிந்து
பசும்பொன் மணிமகுடந் தேய்ப்ப—முசிந்தெங்கும்
எந்தாய் தழும்பேறி யேபாவம் பொல்லாவாம்
அந்தா மரைபோ லடி. எசு

அடிபேரிற் பாதாளம் பேரும் அடிகள்
முடிபேரின் மாமுகடு பேரும்—கடகம்
மறிந்தாடு கைபேரில் வான்திசைகள் பேரும்
அறிந்தாடும் ஆற்றா தரங்கு. எஎ

அரங்கமாய்ப் பேய்க்காட்டி லாடுவான் வாளா
இரங்குமோ எவ்வுயிர்க்கும் ஏழாய்—இரங்குமேல்
என்னாக வையான்தான் எவ்வுலகம் ஈந்தளியான்
பன்னா ளிரந்தாற் பணிந்து. எஅ

பணிந்தும் படர்சடையான் பாதங்கள் போதால்
அணிந்தும் அணிந்தவரை யேத்தத்—துணிந்தென்றும்
எந்தையார்க் காட்செய்யப் பெற்ற இதுகொலோ
சிந்தையார்க் குள்ள செருக்கு. எக

செருக்கினால் வெற்பெடுத்த எத்தனையோ திண்டோள்
அரக்கனையும் முன்னின் றடர்த்த—திருத்தக்க
மாலயனுங் காணா தரற்றி மகிழ்ந்தேத்தக்
காலனையும் வென்றுதைத்த கால். அ0

காலனையும் வென்றோம் கடுநரகங் கைகழன்றோம்
மேலை இருவினையும் வேரறுத்தோம்—கோல
அரணார் அவிந்தழிய வெந்தீயம் பெய்தான்
சரணார விந்தங்கள் சார்ந்து. அக

சார்ந்தார்க்குப் பொற்கொழுந்தே யொத்திலங்கிச் சாராது
பேர்ந்தார்க்குத் தீக்கொடியின் பெற்றியதாம்—தேர்ந்துணரில்
தாழ்சுடரோன் செங்கதிருஞ் சாயுந் தழல்வண்ணன்
வீழ்சடையே என்றுரைக்கும் மின். அஉ

மின்போலுஞ் செஞ்சடையான் மாலோடும் ஈண்டிசைந்தால்
என்போலுங் காண்பார்கட் கென்றிரேல்—தன்போலும்
பொற்குன்றும் நீல மணிக்குன்றுந் தாமுடனே
நிற்கின்ற போலும் நெடிது. அந

நெடிதாய பொங்கெரியுந் தண்மதியும் நேரே
சுடிதாங் கடுஞ்சுடரும் போலுங்—கொடிதாக
விண்டார்கள் மும்மதிலும் வெந்தீ யினில்அழியக்
கண்டாலும் முக்கணான் கண். அச

கண்ணாரக் கண்டும்என் கையாரக் கூப்பியும்
எண்ணார எண்ணத்தால் எண்ணியும்—விண்ணோன்
எரியாடி என்றென்றும் இன்புறுவன் கொல்லோ
பெரியானைக் காணப் பெறின். அரு

பெறினும் பிறிதியாதும் வேண்டேம் நமக்கீ
துறினும் உறுதொழியு மேனுஞ்—சிறிதுணர்த்தி

மற்றொருகண் நெற்றிமேல் வைத்தான்றன் பேயாய
நற்கணத்தி லொன்றாய நாம். ௮௬

நாமாலை சூடியும் நம்மீசன் பொன்னடிக்கே
பூமாலை கொண்டு புனைந்தன்பாய்—நாமோர்
அறிவினையே பற்றினால் எற்றே தடுமே
எறிவினையே என்னும் இருள். ௮௭

இருளின் உருவென்கோ மாமேக மென்கோ
மருளின் மணிநீல மென்கோ—அருளெமக்கு
நன்றுடையாய் செஞ்சடைமேல் நக்கிலங்கு வெண்மதியம்
ஒன்றுடையாய் கண்டத் தொளி. ௮௮

ஒளிவி லிவன்மதனை யொண்பொடியா நோக்கித்
தெளிவுள்ள சிந்தையினிற் சேர்வாய்—ஒளிநஞ்சம்
உண்டவா யஃதிருப்ப வுன்னுடைய கண்டமிருள்
கொண்டவா றென்இதனைக் கூறு. ௮௯

கூறெமக்கீ தெந்தாய் குளிர்சடையை மீதழித்திட்
டேற மிகப்பெருகின் என்செய்தி—சீறி
விழித்தூரும் வாளரவும் வெண்மதியும் ஈர்த்துத்
தெழித்தோடுங் கங்கைத் திரை. ௯0

திரைமருவு செஞ்சடையான் சேவடிக்கே ஆளாய்
உரைமருவி யாமுணர்ந்தோந் தாங் கண்டீர்—தெரிமினோ
இம்மைக்கும் அம்மைக்கும் எல்லாம் அமைந்தோமே
எம்மைப் புறனுரைப்ப தென். ௯௧

என்னை யுடையானும் ஏகமாய் நின்றானுந்
தன்னை யறியாத தன்மையனும்—பொன்னைச்
சுருளாகச் செய்தனைய தூச்சடையான் வானோர்க்
கருளாக வைத்த அவன். ௯௨

அவன்கண்டாய் வானோர் பிரானாவா னென்றும்
அவன்கண்டாய் அம்பவள வண்ணன்—அவன்கண்டாய்
மைத்தமர்ந்த கண்டத்தான் மற்றவன்பால் நன்னெஞ்சே
மெய்த்தமர்ந்தன் பாய்நீ விரும்பு. ௯௩

விருப்பினால் நீபிரிய கில்லாயோ வேறா
இருப்பிடமற் றில்லையோ என்றோ—பொருப்பன்மகள்
மஞ்சுபோல் மால்விடையாய் நிற்பிரிந்து வேறிருக்க
அஞ்சுமோ சொல்லாய் அவள். ௯௪

அவளோர் குலமங்கை பாகத் தகலாள்
இவளோர் சலமகளும் ஈதே—தவளநீ
றென்பணிவீ ரென்றும் பிரிந்தறியீர் ஈங்கிவருள்
அன்பணியார் சொல்லுமின்இங் கார். ௯௫

ஆர்வல்லார் காண அரனவனை அன்பென்னும்
போர்வை யதனாலே போர்த்தமைத்துச்—சீர்வல்ல
தாயத்தால் நாமுந் தனிநெஞ்சி னுள்ளடைத்து
மாயத்தால் வைத்தோம் மறைத்து. ௯௬

மறைத்துலக மேழினிலும் வைத்தாயோ அன்றேல்
உறைப்போடும் உன்கைக்கொண் டாயோ—நிறைத்திட்
டுளைந்தெழுந்து நீயெரிப்ப மூவுலகும் உள்புக்
களைந்தெழுந்த செந்தீ யழல். ௯௭

அழலாட அங்கை சிவந்ததோ அங்கை
அழகா லழல்சிவந்த வாறோ—கழலாடப்
பேயாடு கானிற் பிறங்க அனலேந்தித்
தீயாடு வாயிதனைச் செப்பு. ௯௮

செப்பேந் திளமுலையாள் காணவோ தீப்படுகாட்
டப்பேய்க் கணமவைதாங் காணவோ—செப்பெனக்கொன்
றாகத்தான் அங்காந் தனலுமிழும் ஐவாய
நாகத்தா யாடுன் நடம். ௯௯

நடக்கிற் படிநடுங்கும் நோக்கில் திசைவேம்
இடிக்கின் உலகனைத்தும் ஏங்கும்—அடுக்கல்
பொரும்ஏறோ ஆன்ஏறோ பொன்னொப்பாய் நின்ஏ(று)
உரும்ஏறோ ஒன்று உரை. ௧00

உரையினால் இம்மாலை அந்தாதி வெண்பாக்
கரைவினாற் காரைக்காற் பேய்சொல்—பரவுவார்
ஆராத அன்பினோ டண்ணலைச்சென் றேத்துவார்
பேராத காதல் பிறந்து. கoக

திருச்சிற்றம்பலம்

ஐயடிகள் காடவர்கோன் நாயனார் அருளிய

# க்ஷேத்திரத் திருவெண்பா

திருச்சிற்றம்பலம்

ஓடுகின்ற நீர்மை ஒழிதலுமே உற்றாருங்
கோடுகின்றார் மூப்புங் குறுகிற்று—நாடுகின்ற
நல்லச்சிற் றம்பலமே நண்ணாமுன் நல்நெஞ்சே
தில்லைச்சிற் றம்பலமே சேர். க

கடுவடுத்த நீர்கொடுவா காடிதா வென்று
நடுநடுத்து நாவடங்கா முன்னம்—பொடியடுத்த
பாழ்க்கோட்டஞ் சேராமுன் பன்மாடத் தென்குடந்தைக்
கீழ்க்கோட்டஞ் செப்பிக் கிட. உ

குந்தி நடந்து குனிந்தொருகை கோலூன்றி
நொந்திருமி ஏங்கி நுரைத்தேறி—வந்துந்தி
ஐயாறு வாயாறு பாயாமுன் நெஞ்சமே
ஐயாறு வாயால் அழை. ங

காளை வடிவொழிந்து கையுறவோ டையுறவாய்
நாளும் அணுகி நலியாமுன்—பாளை
அவிழ்கமுகம் பூஞ்சோலை ஆரூரற் காளாய்க்
கவிழ்கமுகங் கூம்புகஎன் கை. ச

வஞ்சியன நுண்ணிடையார் வாள்தடங்கண் நீர்சோரக்
குஞ்சி குறங்கின்மேற் கொண்டிருந்து—கஞ்சி

அருத்தொருத்தி கொண்டுவா என்றுமுன் நெஞ்சே
திருத்துருத்தி யான்பாதஞ் சேர். ௫

காலைக் கரையிழையாற் கட்டித்தன் கையார்த்து
மாலை தலைக்கணிந்து மையெழுதி—மேலோர்
பருக்கோடி மூடிப் பலரழா முன்னந்
திருக்கோடி காவடைநீ சென்று. ௬

மாண்டுவாய் அங்காவா முன்னம்மட நெஞ்சே
வேண்டுவா யாகி விரைந்தொல்லைப்—பாண்டவாய்த்
தென்னிடைவாய் மேய சிவனூர் திருநாமம்
நின்னிடைவாய் வைத்து நினை. ௭

தொட்டுத் தடவித் துடிப்பொன்றுங் காணாது
பெட்டப் பிணமென்று பேரிட்டுக்—கட்டி
எடுங்களத்தா என்றுமுன் ஏழைமட நெஞ்சே
நெடுங்களத்தான் பாதம் நினை. ௮

அழுகு திரிகுரம்பை ஆங்கதுவிட் டாவி
ஒழுகும் பொழுதறிய ஒண்ணா—கழுகு
கழித்துண் டலையாமுன் காவிரியின் தென்பாற்
குழித்தண் டலையானைக் கூறு. ௯

படிமுழுதும் வெண்குடைக்கீழ்ப் பாரெலாம் ஆண்ட
முடியரசர் செல்வத்து மும்மை—கடியிலங்கு
தோடேந்து கொன்றையந்தார்ச் சோதிக்குத் தொண்டுபட்
டோடேந்தி யுண்ப துறும். ௧௦

குழீஇயிருந்த சுற்றங் குணங்கள்பா ராட்ட
வழீஇயிருந்த வங்கங்கள் எல்லாந்—தழீஇயிருந்தும்
என்றுனைக் காவா இதுதகா என்றுமுன்
தென்றுனைக் காவடைநீ சென்று. ௧௧

குயிலொத் திருள்குஞ்சி கொக்கொத் திருமல்
பயிலப் புகாமுன்னம் நெஞ்சே—மயிலைத்
திருப்புன்னை யங்கானல் சிந்தியா யாகில்
இருப்பின்னை யங்காந் திளைத்து. ௧௨

காளையர்கள் ஈளையர்க ளாகிக் கருமயிரும்
பூளையெனப் பொங்கிப் பொலிவழிந்து—சூளையர்கள்
ஓகாளஞ் செய்யாமுன் நெஞ்சமே உஞ்சேனை
மாகாளங் கைதொழுது வாழ்த்து. ௧௩

இல்லும் பொருளும் இருந்த மனையளவே
சொல்லு மயலார் துடிப்பளவே—நல்ல
கிளைகுளத்து நீரளவே கிற்றியே நெஞ்சே
வளைகுளத்துள் ஈசனையே வாழ்த்து. ௧௪

அஞ்சனஞ்சேர் கண்ணார் அருவருக்கும் அப்பருவமாய்க்
குஞ்சி வெளுத்துடலங் கோடாமுன்—நெஞ்சமே
பேய்க்காடு கூடப் புலம்பாது பூம்புகார்ச்
சாய்க்காடு கைதொழுநீ சார்ந்து. ௧௫

இட்ட குடிநீ ரிருநாழி யோருழக்காச்
சட்டவொரு முட்டைநெய் தான்கலந்—தட்ட
வருவாச்சா ரென்றங் கழாமுன்னம் பாரில்
திருவாச்சி ராமமே சேர். ௧௬

கழிந்தது நன்னெற்றுக் கட்டுவிட்டு நாறி
ஒழிந்த துடலிரா வண்ணம்—அழிந்த
திராமல்ஐயா கொண்டுபோ என்னுமுன் நெஞ்சே
சிராமலையான் பாதமே சேர். ௧௭

இழவாடிச் சுற்றத்தார் எல்லாருங் கூடி
விழவாடி ஆவி விடாமுன்னம்—மழபாடி
ஆண்டானை ஆரமுதை அன்றயன்மால் காணாமை
நீண்டானை நெஞ்சே நினை. ௧௮

உள்ளிடத்தான் வல்லையே நெஞ்சமே ஊழ்வினைகள்
கள்ளிடத்தான் வந்து கலவாமுன்—கொள்ளிடத்தின்
தென்திருவாப் பாடியான் தெய்வமறை நான்கினையுந்
தன்திருவாய்ப் பாடியான் தாள். ௧௯

என்னெஞ்சே உன்னை இரந்தும் உரைக்கின்றேன்
கன்னஞ்செய் வாயாகிற் காலத்தால்—வன்னெஞ்சேய்

மாகம்பத் தானை உரித்தானை வண்கச்சி
ஏகம்பத் தானை இறைஞ்சு. ௨௦

கரமூன்றிக் கண்ணிடுங்கிக் கால்குலைய மற்றோர்
மரமூன்றி வாய்குதட்டா முன்னம்—புரமூன்றுந்
தீச்சரத்தாற் செற்றான் திருப்பனந்தாள் தாடகைய
வீச்சரத்தான் பாதமே ஏத்து. ௨௧

தஞ்சாக மூவுலகும் ஆண்டு தலையளித்திட்
டெஞ்சாமை பெற்றிடினும் யான்வேண்டேன்—நஞ்சங்
கரந்துண்ட கண்டர்தம் ஒற்றியூர் பற்றி
இரந்துண் டிருக்கப் பெறின். ௨௨

நூற்றனைத்தோர் பல்லூழி நுண்வயிர வெண்குடைக்கீழ்
வீற்றிருந்த செல்வம் விழையாதே—கூற்றுதைத்தான்
ஆடரவங் கச்சா அரைக்கசைத்த அம்மான்தன்
பாடரவங் கேட்ட பகல். ௨௩

உய்யும் மருந்திதனை உண்மின் எனவுற்றார்
கையைப் பிடித்தெதிரே காட்டியக்கால்—ஐயய
எழுந்திருமி யான்வேண்டேன் என்னுமுன் நெஞ்சே
செழுந்திரு மயானமே சேர். ௨௪

திருச்சிற்றம்பலம்



சேரமான் பெருமாள் நாயனார் அருளிய

# பொன்வண்ணத்தந்தாதி

திருச்சிற்றம்பலம்

பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்மேனிபொலிந்திலங்கும்
மின்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் வீழ்சடை வெள்ளிக்குன்றந்
தன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மால்விடை தன்னைக்கண்ட
என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணமாகிய ஈசனுக்கே.

ஈசனைக் காணப் பலிகொடு செல்லஎற் றேஇவளோர்
பேயனைக் காமுறு பிச்சிகொ லாமென்று பேதையர்முன்
றாயெனை யீர்ப்பத் தமியேன் தளரஅத் தாழ்சடையோன்
வாவெனப் புல்லவென் றன்இமை விண்டன வாட்கண்களே.

கண்களங் கஞ்செய்யக் கைவளை சோரக் கலையுஞ்செல்ல
ஒண்களங் கண்ணுதல் வேர்ப்பவொண் கொன்றையந் தார்உருவப்
பெண்களங் கம்மிவள் பேதுறும் என்பதோர் பேதைநெஞ்சம்
பண்களங் கம்இசை பாடநின் றாடும் பரமனையே. ௩

பரமனை யேபலி தேர்ந்துநஞ் சுண்டது பன்மலர்சேர்
பிரமனை யேசிரங் கொண்டுங் கொடுப்பது பேரருளாஞ்
சரமனை யேஉடம் பட்டும் உடம்பொடு மாதிடமாம்
வரமனை யேகிளை யாகும்முக் கண்ணுடை மாதவனே. ௪

தவனே உலகுக்குத் தானே முதல்தான் படைத்தஎல்லாஞ்
சிவனே முழுதுமென் பார்சிவ லோகம் பெறுவர்செய்ய
அவனே அடல்விடை ஊர்தி கடலிடை நஞ்சம்உண்ட
பவனே யெனச்சொல்லு வாரும் பெறுவர்இப் பாரிடமே. ௫

இடமால் வலந்தா னிடப்பால் துழாய்வலப் பாலொண்கொன்றை
வடமா லிடந்துகில் தோல்வலம் ஆழியிடம் வலமான்
இடமால் கரிதால் வலஞ்சே திவனுக் கெழில்நலஞ்சேர்
குடமா லிடம்வலங் கொக்கரை யாம்எங்கள் கூத்தனுக்கே. ௬

கூத்துக்கொ லாமிவ ராடித் திரிவது கோல்வளைகள்
பாத்துக்கொ லாம்பலி தேர்வது மேனி பவளங்கொலாம்
ஏத்துக் கொலாமிவ ராதரிக் கின்ற திமையவர்தம்
ஓத்துக் கொலாமிவர் கண்ட(து)இண் டைச்சடை உத்தமரே.

உத்தம ராயடி யாருல காளத் தமக்குரிய
மத்தம ராமதி மாடம் பதிநலஞ் சீர்மைகுன்றா
எத்தம ராயும் பணிகொள்ள வல்ல இறைவர்வந்தென்
சித்தம ராயக லாதுட னாடித் திரிதவரே. அ

திரிதவர் கண்ணுள்ளும் உள்ளத்தி னுள்ளுந் திரிதரினும்
அரிதவர் தன்மை யறிவிப்ப தாயினும் ஆழிநஞ்சேய் [றும்
கரிதவர் கண்டம் வெளிதவர் சாந்தங்கண் மூன்றொடொன்
பரிதவர் தாமே யருள்செய்து கொள்வர்தம் பல்பணியே. கூ

பணிபதம் பாடிசை யாடிசை யாகப் பனிமலரால்
அணிபதங் கன்பற்கொ ளப்பனை யத்தவற் கேஅடிமை
துணிபதங் காமுறு தோலொடு நீறுடல் தூர்த்துநல்ல
தணிபதங் காட்டிடுஞ் சஞ்சல நீயென் தனிநெஞ்சமே. க0

நெஞ்சந் தளிர்விடக் கண்ணீர் ததும்ப முகம்மலர
அஞ்செங் கரதலங் கூம்பஅட் டாங்கம் அடிபணிந்து [ன்
தஞ்சொல் மலரால் அணியவல் லோர்கட்குத் தாழ்சடையா
வஞ்சங் கடிந்து திருத்திவைத் தான்பெரு வானகமே. கக

வானகம் ஆண்டுமந் தாகினி யாடிநந் தாவனஞ்சூழ்
தேனக மாமலர் சூடிச் செல்வோருஞ் சிதவல்சுற்றிக்
கானகந் தேயத் திரிந்திரப் போருங் கனகவண்ணப்
பால்நிற நீற்றற் கடியரு மல்லாப் படிறருமே. கஉ

படிறா யினசொல்லிப் பாழுடல் ஓம்பிப் பலகடைச்சென்
றிடறா தொழிலும் எழுநெஞ்ச மேஎரி யாடிஎம்மான்
கடறா யினநஞ்சம் உண்டபி ரான்கழல் சேர்தல்கண்டாய்
உடல்தா னுளபய னாவசொன் னேன்இவ் வுலகினுள்ளே. கங

உலகா ளுறுவீர் தொழுமின் விண்ணாள்வீர் பணிமின்நித்தம்
பலகா முறுவீர் நினைமின் பரமனொ டொன்றலுற்றீர்

நலகா மலரால் அருச்சிமின் நாள்நர கத்துநிற்கும்
அலகா முறுவீர் அரனடி யாரை அலைமின்களே. கச

அலையார் புனல்அனல் ஞாயி றவனி மதியம்விண்கால்
தொலையா உயிருடம் பாகிய சோதியைத் தொக்குமிதே
தலையாற் சுமந்துந் தடித்தொண் கொடித்தேர் அரக்கனென்னே
கலையான் ஒருவிரல் தாங்ககில் லாவிட்ட காரணமே. கரு

காரணன் காமரம் பாடவோர் காமர்அம் பூமுரந்தன்
தாரணங் காகத் தளர்கின்ற தையலைத் தாங்குவர்யார்
போரணி வேற்கண் புனற்படம் போர்த்தன பூந்தணங்கார்
ஏரணி கொங்கையும் பொற்பட மூடி இருந்தனவே. கசு

இருந்தன மெய்தியும் நின்றுந் திரிந்துங் கிடந்தலைந்தும்
வருந்திய வாழ்க்கை தவிர்த்திடு போகநெஞ் சேமடவாள் [ன்
பொருந்திய பாகத்துப் புண்ணியன்புண்ணிய நூலதன்மெய்
திருந்திய போதவன் தானே களையும்நம் தீவினையே. கஎ

தீவினை யேனைநின் றைவ ரிராப்பகல் செத்தித்தின்ன
மேவினை வாழ்க்கைவெறுத்தேன் வெறுத்துவிட் டேன்வினை
ஓவின துள்ளந் தெளிந்தது கள்ளங் கடிந்தடைந்தேன் [யும்
பாவின செஞ்சடை முக்கணன் ஆரணன் பாதங்களே. கஅ

பாதம் புவனி சுடர்நய னம்பவ னம்முயிர்ப்போங்
கோத முடுக்கை யுயர்வான் முடிவிசும் பேயுடம்பு
வேத முகந்திசை தோள்மிகு பன்மொழி கீதமென்ன
போத மிவற்கோர் மணிநிறந் தோற்பது பூங்கொடியே. ககூ

கொடிமேல் இடபமும் கோவணக் கீளுமோர் கொக்கிறகும்
அடிமேற் கழலும் அகலத்தில் நீறும் ஐவாய்அரவும்
முடிமேல் மதியும் முருகலர் கொன்றையும் மூவிலைய
வடிவேல் வடிவுமென் கண்ணுளெப் போதும் வருகின்றவே.

வருகின்ற மூப்பொடு தீப்பிணிக் கூற்றம் வைகற்குவைகல்
பொருகின்ற போர்க்கொன்று மாற்றகில் லேன்பொடிப் பூசிவந்தென்
அருகொன்றி நிற்க அருளுகண் டாய்அழல் வாய்அரவம்
வெருகொன்ற வெண்மதி செஞ்சடை மேல்வைத்த வேதியனே.

வேதியன் பாதம் பணிந்தேன் பணிந்துமெய்ஞ் ஞானமென்னுஞ்
சோதியென் பால்கொள்ள வுற்றுநின் றேற்கின்று தொட்டிதுதான்
நீதியென் றன்செல்வ மாவதென் றேன்மேல் நினைப்புவண்டோர்
ஓதிநின் போல்வகைத் தேயிரு பாலும் ஒழித்ததுவே. உஉ

ஒழித்தேன் பிறவியை ஊர்ந்தேன் அறுபகை ஓங்கிற் றுள்ளம்
இழித்தேன் உடம்பினை ஏலேன் பிறரிடை இம்மனையும்
பழித்தேன் பழியே விளைக்கும்பஞ் சேந்தியக் குஞ்சரமுந்
தெழித்தேன் சிவனடி சேர்ந்தேன் இனிமிகத் தெள்ளியனே.

தெள்ளிய மாந்தரைச் சேர்ந்திலன் தீங்கவி பாடலுற்றேன்
ஒள்ளிய சொல்லும் பொருளும் பெறேன்உரைத் தாருரைத்த
கள்ளிய புக்காற் கவிகளொட் டார்கடல் நஞ்சயின்றாய்
கொள்ளிய வல்லகண் டாய்புன்சொ லாயினுங் கொண்டருளே.

அருளால் வருநஞ்சம் உண்டுநின் றாயை அமரர்குழாம்
பொருளார் கவிசொல்ல யானும்புன் சொற்கள் புணர்க்கலுற்றேன்
இருளா சறஎழில் மாமதி தோன்றவும் என்றதென்ன
வெருளா தெதிர்சென்று மின்மினி தானும் விரிகின்றதே.

விரிகின்ற ஞாயிறு போன்றது மேனிஅஞ் ஞாயிறுசூழ்ந்
தெரிகின்ற வெங்கதிர் ஒத்தது செஞ்சடை அச்சடைக்கீழ்ச்
சரிகின்ற கார்இருள் போன்றது கண்டம்அக் கார்இருள்கீழ்ப்
புரிகின்ற வெண்முகில் போன்றுள தால்எந்தை ஒண்பொடியே.

பொடிக்கின் றிலமுலை போந்தில பல்சொற் பொருள்தெரியா
முடிக்கின் றிலகுழ லாயினுங் கேண்மின்கண் மூரிவெள்ளங்
குடிக்கொண்ட செஞ்சடைக் கொண்டலங் கண்டன்மெய்க் கொண்
சுடிக்கொன்றை நாறுகின் றாளறி யேன்பிறர் கட்டுரையே. [டணிந்த

உரைவளர் நான்மறை ஓதி உலகமெ லாந்திரியும்
விரைவளர் கொன்றை மருவிய மார்பன் விரிசடைமேல்
திரைவளர் கங்கை நுரைவளர் தீர்த்தஞ் செறியச்செய்த
கரைவளர் வொத்துள தாற்சிர மாலைஎங் கண்டனுக்கே. உஅ

கண்டம் கரியன் கரியீ ருரியன் விரிதருசீர்
அண்டங் கடந்த பெருமான் சிறுமான் தரித்தபிரான்

பண்டன் பரம சிவனோர் பிரமன் சிரம்அரிந்த
புண்தங் கயிலன் பயிலார மார்பன்எம் புண்ணியனே. ௨௯

புண்ணியன் புண்ணியல் வேலையன் வேலைய நஞ்சன்அங்கக்
கண்ணியன் கண்ணியல் நெற்றியன் காரணன் காரியங்கும்
விண்ணியன் விண்ணியல் பாணியன் பாணி கொளஉமையாள்
பண்ணியன் பண்ணியல் பாடலன் நாடல் பசுபதியே. ௩௰

பதியார் பலிக்கென்று வந்தார் ஒருவர்க்குப் பாவைநல்லீர்
கதியார் விடையுண்டு கண்மூன் றுளகறைக் கண்டமுண்டு
கொதியார் மழுவுண்டு கொக்கரை யுண்டிறை கூத்துமுண்டு
மதியார் சடையுள மாலுள தீவது மங்கையர்க்கே. ௩௧

மங்கைகொங் கைத்தடத் திங்குமக் குங்குமப் பங்கநுங்கி
அங்கமெங் குந்நெகச் சங்கமங் கைத்தலத் தாங்கவர்வான்
கங்கைநங் கைத்திரைப் பொங்குசெங் கண்ணர வங்கள்பொங்கிப்
பங்கிதங் கும்மலர்த் திங்கள்தங் கும்முடிப் பண்டங்கனே.

பண்டங்கன் வந்து பலிதா என்றான்பக லோற்கிடென்றேன்
அண்டங் கடந்தவன் அன்னம்என் றான்அயன் ஊர்திஎன்றேன்
கொண்டிங் குன்ஐயம் பெய்என்றான் கொடித்தேர் அநங்கனென்றேன்
உண்டிங் கமைந்ததென் றற்கது சொல்ல உணர்வுற்றதே.

உற்றடி யாருல காளவோர் ஊணும் உறக்கும்இன்றிப்
பெற்றம தாவதென் றேறும் பிரான்பெரு வேல்நெடுங்கண்
சிற்றடி யாய்வெண்பற் செவ்வா யிவள்சிர மாலைக்கென்றும்
இற்றிடை யாம்படி யாகஎன் னுக்கு மெலிக்கின்றதே. ௩௪

மெலிக்கின்ற வெந்தீ வெயில்வா யிழுதழல் வாய்மெழுகு
கலிக்கின்ற காமங் கரதல மெல்லி துறக்கம்வெங்கூற்
றொலிக்கின்ற நீருறு தீயொளி யார்முக்கண் அத்தர்மிக்க
பலிக்கென்று வந்தார் கடிக்கொன்றை சூடிய பல்லுயிரே.

பல்லுயிர் பாகம் உடல்தலை தோல்பக லோன்மறல்பெண்
வில்லியோர் வேதியன் வேழ நிரையே பறித்துதைத்துப்
புல்லியுஞ் சுட்டும் அறுத்தும் உரித்துங்கொண் டான்புகழே
சொல்லியும் பாடியும் ஏத்தக் கெடும்நங்கள் சூழ்துயரே. ௩௬

துயருந் தொழும்அழுஞ் சோருந் துகிலுங் கலையுஞ்செல்லப்
பெயரும் பிதற்றும் நகும்வெய் துயிர்க்கும் பெரும்பிணிகூர்ந்
தயரும் அமர்விக்கும் மூரி நிமிர்க்கும்அந் தோஇங்ஙனே
மயரும் மறைக்காட் டிறைக்காட் டகப்பட்ட வாணுதலே. ௩௭

வாணுதற் கெண்ணநன் றன்று வளர்சடை எந்தைவந்தால்
நாணுதற் கெண்ணுள் பலிகொடு சென்று நகும்நயந்து
பேணுதற் கெண்ணும் பிரமன் திருமா லவர்க்கரிய
தாணுவுக் கென்னோ இராப்பகல் நைந்திவள் தாழ்கின்றதே.

தாழுஞ் சடைசடை மேலது கங்கையக் கங்கைநங்கை
வாழுஞ் சடைசடை மேலது திங்களத் திங்கட்பிள்ளை
போழுஞ் சடைசடை மேலது பொங்கர(வு) அவ்வரவம்
வாழுஞ் சடைசடை மேலது கொன்றைஎம் மாமுனிக்கே.

முனியே முருகலர் கொன்றையி னாய்என்னை மூப்பொழித்த
கனியே கழலடி யல்லாற் களைகள்மற் றொன்றுமிலேன்
இனியேல் இருந்தவஞ் செய்யேன் திருந்தஅஞ் சேநினைந்து
தனியேன் படுகின்ற சங்கடம்ஆர்க்கினிச் சாற்றுவனே. ௪௦

சாற்றுவன் கோயிற் றலையு மனமுந் தவமிவற்றால் [ரால்
ஆற்றுவன் அன்பெனும் நெய்சொரிந் தாற்றிஅஞ் சொன்மல
ஏற்றுவன் ஈசன்வந் தென்மனத் தானென் றெழுந்தலரே
தூற்றுவன் தோத்திர மாயின வேயினிச் சொல்லுவனே.

சொல்லா தனகொழு நாவல்ல சோதியுட் சோதிதன்பேர்
செல்லாச் செவிமரம் தேறித் தொழாதகை மண்திணிந்த
கல்லாம் நினையா மனம்வணங் காத்தலை யும்பொறையாம்
அல்லா அவயவந் தானும் மனிதர்க் கசேதனமே. ௪௧

தனக்குன்ற மாவையஞ் சங்கரன் தன்னருள் அன்றிப்பெற்றான்
மனக்கென்று நஞ்சிற் கடையா நினைவன் மதுவிரியும்
புனக்கொன்றை யானரு ளாற்புழு வாகிப் பிறந்திடினும்
எனக்கென்றும் வானவர் பொன்னுல கோடொக்க எண்ணுவனே.

எண்ணம் இறையே பிழைக்கும்கொ லாம்இமை யோர்இறைஞ்சுந்
தண்ணம் பிறைச்சடைச் சங்கரன் சங்கக் குழையன்வந்தென்

உள்நன் குறைவ தறிந்தும்ஒளிமா திறங்கவர்வான்
கண்ணும் உறங்கா திராப்பகல் எய்கின்ற காமனுக்கே. ௪௪

காமனை முன்செற்ற தென்றா ளவளிவள் காலனென்னுந்
தாமநன் மார்பனை முன்செற்ற தென்றுதன் கையெறிந்தாள்
நாமுனஞ் செற்றதன் றுரையென் றேற்கிரு வர்க்கும்அஞ்சி
யாமெனக் கிற்றில ரன்றெனக் கிற்றிலர் அந்தணரே. ௪௫

அந்தண ராமிவ ராரூர் உறைவதென் றேனதுவே
சந்தனைத் தோளியென் றார்தலை யாய சலவனென்றேன்
பந்தணை கையா யதுவுமுண் டென்றார் உமையறியக்
கொந்தணை தாரீர் உரைமினென் றேன்துடி. கொட்டினரே. ௪௬

கொட்டுஞ் சிலபல சூழநின் றார்க்குங்குப் புற்றெழுந்து
நட்ட மறியுங்கி ரீடிக்கும் பாடும் நகும்வெருட்டும்
வட்டம் வருமருஞ் சாரணை செல்லு மலர்தயங்கும்
புட்டங் கிரும்பொழில் சூழ்மறைக் காட்டரன் பூதங்களே.

பூதப் படையுடைப் புண்ணிய ரேபுறஞ் சொற்கள்நும்மேல்
ஏதப் படஎழு கின்றன வால்இனி யாளொடும்மைக்
காதற் படுப்பான் கணைதொட்ட காமனைக் கண்மலரால்
சேதப் படுத்திட்ட காரணம் நீரிறை செப்புமினே. ௪௮

செப்பன கொங்கைக்குத் தேமலர்க் கொன்றை திறம்பணித்தான்
மைப்புரை கண்ணுக்கு வார்புனற் கங்கைவைத் தான்மனத்துக்
கொப்பன வில்லா வொளிகிளர் உன்மத்த மும்அமைத்தான்
அப்பனை யம்மனை நீயென்பெ ருதுநின் றார்க்கின்றதே. ௪௯

ஆர்க்கின்ற நீரும் அனலும் மதியும்ஐ வாயரவும்
ஓர்க்கின்ற யோகும் உமையும் உருவும் அருவும்வென்றி
பார்க்கின்ற வேங்கையும் மானும் பகலும் இரவும்எல்லாங்
கார்க்கொன்றை மாலையி னார்க்குட னாகிக் கலந்தனவே. ௫௦

கலந்தனக் கென்பலர் கட்டவிழ் வார்கொன்றை கட்டரவார்
சலந்தனக் கண்ணிய கானகம் ஆடியோர் சாணகமும்
நிலந்தனக் கில்லா அகதிய னாகிய நீலகண்டத்
தலந்தலைக் கென்னே யலந்தலை யாகி யழிகின்றதே. ௫௧

அழிகின்ற தாருயி ராகின்ற தாகுலம் ஏறிடுமால்
இழிகின்ற சங்கம் இருந்த முலைமேற் கிடந்தனபீர்
பொழிகின்ற கண்ணீர் புலர்ந்தது வாய்கலை போனவந்தார்
மொழிகின்ற தென்னினி நான்மறை முக்கண் முறைவனுக்கே.

முறைவனை மூப்புக்கும் நான்மறைக் கும்முதல் ஏழ்கடலந்
துறைவனைச் சூழ்கயி லாயச் சிலம்பனைத் தொன்மைகுன்றா
இறைவனை எண்குணத் தீசனை ஏத்தினர் சித்தந்தம்பால்
உறைவனைப் பாம்பனை யாம்பின்னை என்சொல்வி ஓதுவதே.

ஓதவன் நாமம் உரையவன் பல்குணம் உன்னைவிட்டேன்
போதவன் பின்னே பொருந்தவன் வாழ்க்கை திருந்தச்சென்று
மாதவ மாகிடு மாதவ மாவளர் புன்சடையான்
யாதவன் சொன்னன் அதுகொண் டொழியினி ஆரணங்கே.

ஆரணங் கனமுகம ஐங்கணை யானஅகம் அவவகத்தில்
தோரணந் தோளவன் தேரகல் அல்குல்தொன் மைக்கண்
பூரண கும்ப முலையிவை காணப் புரிசடைஎங் [வந்த
காரணன் தாள்தொழும் அன்போ பகையோ கருதியதே.

கருதிய தொன்றில்லை யாயினுங் கேள்மின்கள் காரிகையாள்
ஒருதின மும்முள ளாகவொட் டாதொடுங் காரொடுங்கப்
பொருதநன் மால்விடைப் புண்ணியன் பொங்கிளங் கொன்றையின்
தருதிர்நன் றுயிடுந் தாரா விடிற்கொல்லுந் தாழிருளே. [னே

இருளார் மிடற்றால் இராப்பகல் தன்னால் வரைமறையால்
பொருளால் கமழ்கொன்றை யான்முல்லை புற்றர வாடுதலால்
தெருளார் மதிவிசும் பால்பௌவந் தெண்புனல் தாங்குதலால்
அருளாற் பலபல வண்ணமு மாலரன் ஆயினனே. ருள

ஆயின அந்தணர் வாய்மை யரைக்கலை கைவளைகள்
போயின வாள்நிகர் கண்ணுறு மைந்நீர் முலையிடையே
பாயின வேள்கைக் கரபத்தி ரத்துக்குச் சூத்திரம்போல்
ஆயின பல்சடை யார்க்கன்பு பட்டஎம் ஆயிழைக்கே. ருஅ

இழையார் வனமுலை வீங்கி இடையிறு கின்றதிற்றாற்
பிழையாள் நமக்கிவை கட்டுண்க என்பது பேச்சுக்கொலாங்

கழையார் கழுக்குன்ற வாணனைக் கண்டனைக் காதலித்தாள்
குழையார் செவியொடு கோலக் கயற்கண்கள் கூடியதே. ௫௯

கூடிய தன்னிடத் தானுமை யாளிடத் தானைஐயா
நீடிய பல்சடை மேற்றெறி வண்ணம் எனப்பணிமின்
பாடிய நான்மறை பாய்ந்தது கூற்றைப் படர்புரஞ்சுட்
டாடிய நீறுசெஞ் சாந்திவை யாம்எம் அயனெனவே. ௬0

அயமே பலியிங்கு மாடுள தானுவோர் குக்கிக்கிடப்
பயமே மொழியும் பசுபதியே றெம்மைப் பாய்ந்திடுமால்
புயமேய் குழலியர் புண்ணியர் போமின் இரந்தல்பொல்லா
நயமே மொழியினும் நக்காம மாவுமமை நானுதுமே. ௬௧

நாணா நடக்க நலத்தார்க் கிடையில்லை நாமெழுக
வேணார் இருந்தமி ழான்மற வேனுந் நினைமின்என்றும்
பூணார் முலையீர் நிருத்தன் புரிசடை எந்தைவந்தால்
காணா விடேன்கண் டிரவா தொழியேன் கடிமலரே. ௬௨

கடிமலர்க் கொன்றை தரினும்புல் லேன்கலை சாரவொட்டேன்
முடிமலர் தீண்டின் முனிவன் முலைதொடு மேற்கெடுவன்
அடிமலர் வானவர் ஏத்தநின் றுய்க்கழ கல்லனென்பன்
தொடிமலர்த் தோள்தொடு மேல்திரு வாணை தொடங்குவனே

தொடங்கிய வாழ்க்கையை வாளா துறப்பர் துறந்தவரே
அடங்கிய வேட்கை அரன்பால் இலர்அறு காற்பறவை
முடங்கிய செஞ்சடை முக்கண னார்க்கன்றி இங்குமன்றிக்
கிடங்கினிற் பட்டக ராவனை யார்பல கேவலரே. ௬௪

வலந்தான் கழல்இடம் பாடகம் பாம்பு வலம்இடமே
கலந்தான் வலம்நீ றிடஞ்சாந் தெரிவலம் பந்திடம்என்
பலந்தார் வலம்இடம் ஆடகம் வேல்வலம் ஆழியிடஞ்
சலந்தாழ் சடைவலந் தண்ணங் குழலிடஞ் சங்கரற்கே. ௬௫

சங்கரன் சங்கக் குழையன் சரணார விந்தந்தன்னை
அங்கரங் கூப்பித் தொழுதாட் படுமின்தொண் டீர்நமனார்
கிங்கரர் தாஞ்செய்யுங் கீழா யினமிறை கேட்டலுமே
இங்கர மாயிர மீரஎன் நெஞ்சம் எரிகின்றதே. ௬௬

எரிகின்ற தீயொத் துளசடை யீசற்கத் தீக்கிமையோர்
சொரிகின்ற பாற்கடல் போன்றது சூழ்புனல் அப்புனலிற்
சரிகின்ற திங்களோர் தோணியொக் கின்றதத் தோணியுய்ப்பான்
தெரிகின்ற திண்கழை போன்றுள தாலத் திறல்அரவே. ௨௭

அரவம் உயிர்ப்ப அழலும் அங்கங்கை வளாய்க்குளிருங்
குரவங் குழலுமை யூடற்கு நைந்துருகும்அடைந்தோர்
பரவும் புகழண்ணல் தீண்டலும் பார்வா னவைவிளக்கும்
விரவும் இடரின்பம் எம்இறை சூடிய வெண்பிறையே. ௨௮

பிறைத்துண்டஞ் சூடலுற் றேபிச்சை கொண்டனல் ஆடலுற்றே
மறைக்கண்டம் பாடலுற் றேஎன்பு நீறு மருவலுற்றே
கறைக்கண்டம் புல்லலுற் றேகடு வாயர வாடலுற்றே
குறைக்கொண் டிவளரன் பின்செல்வ தென்னுக்குக் கூறுமினே.

கூறுமின் ஈசனைச் செய்ம்மின்குற் றேவல் குளிர்மின்கண்கள்
தேறுமின் சித்தந் தெளிமின் சிவனைச் செறுமின்செற்றம்
ஆறுமின் வேட்கை யறுமின் அவலம் இவைநெறியா
ஏறுமின் வானத் திருமின் விருந்தாம் இமையவர்க்கே. ௩0

இமையோர் கொணர்ந்திங் கிழித்திட நீர்மைகெட் டேந்தல்பின்போய்
அமையா நெறிச்சென்றோர் ஆழ்ந்த சலமகளாய்அணைந்தே
எமையா ளுடையான் தலைமக ளாஅங் கிருப்பஎன்னே
உமையா ளவள்கீழ் உறைவிடம் பெற்றே உறைகின்றதே.

உறைகின் றனர்ஐவர் ஒன்பது வாயிலோர் மூன்றுளதால்
மறைகின்ற என்பு நரம்போ டிறைச்சி உதிரமச்சை
பறைகின்ற தோல்போர் குரம்பை பயனில்லை போயடைமின்
அறைகின்ற தெண்புனல் செஞ்சடைக் கொண்டோன் மலரடிக்கே.

அடிக்கண் ணிகைதொழு தார்க்(கு)அகல் ஞாலங் கொடுத்தடிநாய்
வடிக்கண்ணி நின்னைத் தொழவளை கொண்டனை வண்டுண்கொன்றைக்
கடிக்கண்ணி யாய்எமக் கோருர் இரண்டகங் காட்டினையாற்
கொடிக்கண்ணி மேல்நல்ல கொல்லே றுயர்த்த குணக்குன்றமே.

குன்றெடுத் தான்செவி கண்வாய் சிரங்கள் நெரிந்தலற
அன்றடர்த் தற்றுகச் செற்றவன் அற்றவர்க் கற்றசிவன்

மன்றிடைத் தோன்றிய நெல்லிக் கனிநிற்ப மானுடர்போய்
ஒன்றெடுத் தோதிப் புகுவர் நரகத் துறுகுழியே. ௭௪

குழிகட் கொடுநடைக் கூன்பற் கவட்டடி நெட்டிடையூன்
உழுவைத் தழைசெவித் தோன்முலைச் சூறை மயிர்ப்பகுவாய்த்
தெழிகட் டிரைகுரல் தேம்பல் வயிற்றுத் திருக்குவிரற்
கழுதுக் குறைவிடம் போல்கண்டன் ஆடுங் கடியரங்கே. ௭௫

அரங்கா மணியன்றில் தென்றலோர் கூற்றம் மதியம்அங்கிச்
சரங்காமன் எய்பஞ்சு சந்துட் பகையால்இவள் தளர்ந்தாள்
இரங்கா மனத்தவ ரில்லை இரங்கான் இமையவர்தஞ்
சிரங்கா முறுவான் எலும்புகொள் வான்என்றன் தேமொழிக்கே.

மொழியக்கண் டான்பழி மூளக்கண் டான்பிணி முன்கைச்சங்கம்
அழியக்கண்டான் அன்றில் ஈரக்கண்டான்தென்றல் என்னுயிர்மேல்
சுழியக்கண் டான்துயர் கூரக்கண் டான்துகில் சூழ்கலையுங்
கழியக்கண் டான்தில்லைக் கண்ணுத லான்கண்ட கள்ளங்களே.

கள்ளவ ளாகங் கடிந்தடி மைப்படக் கற்றவர்தம்
உள்ளவ ளாகத் துறுகின்ற உத்தமன் நீள்முடிமேல்
வெள்ளவ ளாகத்து வெண்ணுரை சூடி வியன்பிறையைக்
கொள்ளவ ளாய்கின்ற பாம்பொன் றுளது குறிக்கொண்மினே.

குறிக்கொண் டிவள்பெய்த கோல்வளை யேவந்து கோளிழைத்தீர்
வெறிக்கொண்ட வெள்ளிலம் போதோ எலும்போ விரிசடைமேல்
உறைக்கொன்றை யோவுடைத் தோலோ பொடியோ வுடைகலை
கறைக்கண்ட ரேநுமக் கென்றே சிறுமி கடவியதே. ௭௯

கடவிய தொன்றில்லை யாயினுங் கேள்மின்கள் காரிகையாள்
மடவிய வாறுகண் டாம்பிறை வார்சடை எந்தைவந்தாற்
கிடவிய நெஞ்சம் இடங்கொடுத் தாட்க வலங்கொடுத்தான்
தடவிய கொம்பதன் தாள்மே லிருந்து தறிக்குறுமே. ௮௦

தறித்தாய் அயன்தலை சாய்த்தாய் சலந்தர னைத்தழலாப்
பொறித்தாய் அநங்கனைச் சுட்டாய் புரம்புன லுஞ்சடைமேற்
செறித்தாய்க் கிவைபுக ழாகின்ற கண்டிவள் சில்வளையும்
பறித்தாய்க் கிதுபழி யாகுங்கொ லாம்என்று பாவிப்பனே.

பாவிக்கும் பண்டையள் அல்லள் பரிசறி யாள்சிறுமி
ஆவிக்குங் குற்குறு நாளும் அகநெக அங்கமெங்கும்
காவிக்கண் சோரும்பொச் சாப்பும் கறைமிடற் றானைக்கண்ணில்
தாவிக்கும் வெண்ணகை யாளம்மெல் லோதிக்குச் சந்தித்தவே.

சந்தித்த கூற்றுக்குக் கூற்றும் பிணிக்குத் தனிமருந்தாஞ்
சிந்திக்கிற் சிந்தா மணியாகித் தித்தித் தமுதமுமாம்
வந்திக்கில் வந்தென்னை மால்செய்யும் வானோர் வணங்கநின்ற
அந்திக்கண் ஆடியி னான்அடி யார்களுக் காவனவே. ௮௩

ஆவன யாரே அழிக்கவல் லார்அமை யாவுலகில்
போவன யாரே பொதியகிற் பார்புரம் மூன்றெரித்த
தேவனைத் தில்லைச் சிவனைத் திருந்தடி கைதொழுது
தீவினை யேன்இழந் தேன்கலை யோடு செறிவளையே. ௮௪

செறிவளை யாய்நீ விரையல் குலம்நலங் கல்விமெய்யாம்
இறையவன் தாமரைச்சேவடிப்போதென்றெல் லோருமெத்தும்
நிறையுடை நெஞ்சிது வேண்டிற்று வேண்டிய நீசர்தம்பால்
கறைவளர் கண்டனைக் காணப் பெரிதுங் கலங்கியதே. ௮௫

கலங்கின மால்கடல் வீழ்ந்தன கார்வரை ஆழ்ந்ததுமண்
மலங்கின நாகம் மருண்டன பல்கணம் வானங்கைபோய்
இலங்கின மின்னொடு நீண்ட சடைஇமை யோர்வியந்தார்
அலங்கல்நன் மாநட மார்க்கினி யாடுவ தெம்பிறையே. ௮௬

எம்பிறை வன்இமை யோர்தலை வன்உமை யாள்கணவன்
மும்முறை யாலும் வணங்கப் படுகின்ற முக்கண்நக்கற்
கெம்முறை யாள்இவள் என்பிழைத் தாட்கிறை என்பிழைத்தான்
இம்முறை யாலே கவரக் கருதிற் றெழிற்கலையே. ௮௭

கலைதலை சூலம் மழுக்கனல் கண்டைகட் டங்கங்கொடி
சிலையிவை ஏந்திய எண்தோள் சிவற்கும னஞ்சொல்செய்கை
நிலைபிழை யாதுகுற் றேவல்செய் தார்நின்ற மேருவென்னும்
மலைபிழை யாரென்ப ரால்அறிந் தோர்கள்இம் மாநிலத்தே.

மாநிலத் தோர்கட்குத் தேவ ரனையஅத் தேவரெல்லாம்
ஆனலத் தால்தொழும் அஞ்சடை யீசன் அவன்பெருமை

தேனலர்த் தாமரை யோன்திரு மாலவர் தேர்ந்துணரார்
பானலத் தாற்கவி யாம்எங்ங னேஇனிப் பாடுவதே. ௫௯

பாடிய வண்டுறை கொன்றையி னான்படப் பாம்புயிர்ப்ப
ஓடிய தீயால் உருகிய திங்களின் ஊறலொத்த
தாடிய நீறது கங்கையுந் தெண்ணீர் யமுனையுமே
கூடிய கோப்பொத்த தால்உமை பாகம்எங் கொற்றவற்கே.

கொற்றவ னேயென்றுங் கோவணத் தாயென்றும் ஆவணத்தால்
நற்றவ னேயென்றும் நஞ்சுண்டி யேயென்றும் அஞ்சமைக்கப்
பெற்றவ னேயென்றும் பிஞ்ஞக னேயென்றும் மன்மதனைச்
செற்றவ னேயென்றும் நாளும் பரவும்என் சிந்தனையே. ௬௧

சிந்தனை செய்ய மனம்அமைத் தேன்செப்ப நாஅமைத்தேன்
வந்தனை செய்யத் தலையமைத் தேன்கை தொழஅமைத்தேன்
பந்தனை செய்வதற் கன்பமைத் தேன்மெய் அரும்பவைத்தேன்
வெந்தவெண் ணீறணி யீசற் கிவையான் விதித்தனவே. ௬௨

விதித்தன வாழ்நாள் பெரும்பிணி விச்சைகள் கொண்டுபண்டே
கொதிப்பினில் ஒன்றுங் குறைவில்லை குங்குமக் குன்றனைய
பதித்தனங் கண்டனங் குன்றம்வெண் சந்தனம் பட்டனைய
மதித்தனங் கண்டனம் நெஞ்சினி என்செய்யும் வஞ்சனையே.

வஞ்சனை யாலே வரிவளை கொண்டுள்ள மால்பணிப்பத்
துஞ்சும் பொழுதும் உறத்தொழு தேன்சொரி மாலருவி
அஞ்சன மால்வரை வெண்பிறை கவ்விஅன் னாந்தனைய
வெஞ்சின ஆனையின் ஈருரி மூடிய வீரனையே. ௬௪

வீரன் அயனரி வெற்பலர் நீரெரி பொன்எழிலார்
காரொண் கடுக்கை கமலந் துழாய்விடை தொல்பறவை
பேரொண் பதிநிறந் தாரிவர் ஊர்திவெவ் வேறென்பரால்
யாரும் அறியா வகையெங்கள் ஈசர் பரிசுகளே. ௬௫

பரியா தனவந்த பாவமும் பற்றும்மற் றும்பணிந்தார்க்
குரியா னெனச்சொல்லி யுன்னுட னவன் எனஅடி யார்க்
கரியான் இவனென்று காட்டுவன் என்றென் றினையிவையே
பிரியா துறையுஞ் சடையான் அடிக்கென்றும் பேசுதுமே.

பேசுவ தெல்லாம் அரன்திரு நாமம்அப் பேதைநல்லாள்
காய்சின வேட்கை அரன்பா லதுஅது காற்பறவை
மூசின கொன்றை முடிமே லதுமுலை மேல்முயங்கப்
பூசின சாந்தந் தொழுமால் இவையொன் றும்பொய்யலவே.

பொய்யா நரகம் புகினுந் துறக்கினும் போந்துபுக்கிங்
குய்யா வுடம்பினொ டூர்வ நடப்ப பறப்பஎன்று
ஐயா விளியினும் நானிலம் ஆளினும் நான்மறைசேர்
மையார் மிடற்றான் அடிமற வாவரம் வேண்டுவனே. ௯௮

வேண்டிய நாட்களிற் பாதியுங் கங்குல் மிகஅவற்றுள்
ஈண்டிய வெந்நோய் முதல்து பிள்ளைமை மேலதுமூப்
பாண்டின அச்சம் வெகுளி அவாஅழுக் காறிங்ஙனே
மாண்டன சேர்தும் வளர்புன் சடைமுக்கண் மாயனையே.

மாயன்நன் மாமணி கண்டன் வளர்சடை யாற்கடிமை
ஆயின தொண்டர் துறக்கம் பெறுவது சொல்லுடைத்தே
காய்சின ஆனை வளருங் கனக மலையருகே
போயின காக்கையும் அன்றே படைத்தது பொன்வண்ணமே.

திருச்சிற்றம்பலம்

## ஆக்கியோன் பெயர்

*அன்றுவெள் ளானையின் மீதிமை யோர்சுற் றணுகுறச்செல்
வன்தொண்டர் பின்பரி மேற்கொண்டு வெள்ளி மலையரன்முன்
சென்றெழி லாதி யுலாஅரங் கேற்றிய சேரர்பிரான்
மன்றிடை யோதுபொன் வண்ணத்தந் தாதி வழங்கிதுவே.



*இப்பாடல் சில பிரதிகளிலில்லை. இது பிற்காலத்தானொரு-
ராற் செய்யப்பட்டது. இத்திருமுறையின் மொத்த பாடற்றொகைக்
கணக்கிலும் இது சேர்க்கப்படவில்லை.

சேரமான்பெருமாள் நாயனார் அருளிய

# திருவாரூர் மும்மணிக்கோவை*

திருச்சிற்றம்பலம்

விரிகடல் பருகி அளறுபட் டன்ன
கருநிற மேகம் கன்முக டேறி
நுண்துளி பொழிய நோக்கி ஒண்டொடி
பொலங்குழை மின்னப் புருவ வில்லிட்
5 டிலங்கெழிற் செவ்வாய் கோபம் ஊர்தரக்
கைத்தலம் என்னுங் காந்தள் மலர
முத்திலங் கெயிறெனும் முல்லை அரும்பக்
குழலுஞ் சுணங்கும் கொன்றை காட்ட
எழிலுடைச் சாயல் இளமயில் படைப்ப
10 உள்நிறை உயிர்ப்பெனும் ஊதை யூர்தரக்
கண்ணீர்ப் பெருமழை பொழிதலின் ஒள்நிறத்
தஞ்சனக் கொழுஞ்சே றலம்பி எஞ்சா
மணியும் பொன்னும் மாசறு வயிரமும்
அணிகிளர் அகிலும் ஆரமும் உரிஞ்சிக்
15 கொங்கை என்னுங் குவட்டிடை இழிதரப்
பொங்கு புனல்காட்டி யோளே கங்கை
வருவிசை தவிர்த்த வார்சடைக் கடவுள்
அரிவை பாகத் தண்ணல் ஆரூர்
எல்லையில் இரும்பலி சொரியுங்
20 கல்லோ சென்ற காதலர் மனமே.

மனமால் உறாதே மற்றென்செய் யும்வாய்ந்த
கனமால் விடையுடையோன் கண்டத்—தினமாகித்
தோன்றினகார் தோன்றிலதேர் சோர்ந்தனசங் கூர்ந்
கான்றனநீர் ஏந்திழையாள் கண். [தனபிர்

* முறையே அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறைப் பாக்களை மும்மணிகளாகவுடைய கோவை.

கண்ணார் நுதல்எந்தை காமரு கண்ட மெனஇருண்ட
விண்ணா லுருமொடு மேலது கீழது கொண்டல்விண்ட
மண்ணார் மலைமேல் இளமயி லான்மட மானனைய
பெண்ணாம் இவளினி என்னாய்க் கழியும் பிரிந்துறைவே.

உறைகழி யொள்வாள் மின்னி உருமெனும்
அறைகுரல் முரசம் ஆர்ப்பக் கைபோய்
வெஞ்சிலை கோலி விரிதுளி என்னும்
மின்சரந் துரந்தது வானே நிலனே
5 கடிய வாகிய களவநன் மலரொடு
கொடிய வாகிய தளவமும் அந்தண்
குலைமேம் பட்ட கோடலுங் கோபமோ
டலைமேம் பட்ட காந்தளும் இவற்றொடு
காயா வெந்துயர் தருமே லவரே
10 பொங்கிரும் புரிசை போக்கற வளைஇக்
கங்குலும் பகலுங் காவல் மேவி
மாசறு வேந்தன் பாசறை யோரே
யானே யின்னே
அலகி லாற்றல் அருச்சுனற் கஞ்ஞான்
15 றுலவா நல்வரம் அருளிய உத்தமன்
அந்த ணாரூர் சிந்தித்து மகிழா
மயரிய மாக்களைப் போலத்
துயருழந் தழியக் கண்துயி லாவே. ௪

துயிலாநோ யாந்தோன்றத் தோன்றித்தீத் தோன்ற
மயிலால வந்ததான் மாதோ—அயலாய
அண்டத்துக் கப்பாலான் அந்திங்கட் கண்ணியான்
கண்டத்துக் கொப்பாய கார். ௫

காரும் முழக்கொடு மின்னொடு வந்தது காதலர்தந்
தேருந் தெருவுஞ் சிலம்பப் புகுந்தது சில்வளைகள்
சோருஞ் சிலபல அங்கே நெரிந்தன துன்னருநஞ்
சாரும் மிடற்றண்ணல் ஆரூரன் ஐய அணங்கினுக்கே. ௬

அணங்குறை நெடுவரை அருமைபே ணாது
மணங்கமழ் தெரியல் சூடி வைகலும்

விடுசுடர் நெடுவேல் முன்னடி விளக்காக்
கடுவிசைக் கான்யாற்று நெடுநீர் நீந்தி
5 ஒருதனிப் பெயரும் பொழுதிற் புரிகுழல்
வானர மகளிர் '*நின் மல்வழங் ககலத்
தானுக் காத லாகுவர்' என்று
புலவி யுள்ளமொடு பொருந்தாக் கண்ணள்
கலைபிணை திரியக் கையற வெய்தி
10 மெல்விரல் நெரித்து விம்மிவெய் துயிர்த்து
அல்லியங் கோதை அழலுற் றுஅங்
கெல்லையி லிருந்துயர் எய்தினள் புல்லார்
திரிபுரம் எரிய ஒருகணை தெரிந்த
அரிவை பாகத் தண்ணல் ஆரூர்
15 வளமலி கமல வாண்முகத்
திளமயிற் சாயல் ஏந்திழை தானே. எ

இழையார் வனமுலையீர் இத்தண் புனத்தின்
உழையாகப் போந்ததொன் றுண்டே—பிழையாச்சீர்
அம்மான் அனலாடி ஆரூர்க்கோன் அன்றுரித்த
கைம்மாநே ரன்ன களிறு. அ

களிறு வழங்க வழங்கா அதர்கதிர் வேல்துணையா
வெளிறு விரவ வருதிகண் டாய்மின்னின் நின்றிழிந்த
பிளிறு குரற்கங்கை தாங்கிய பிஞ்ஞகன் பூங்கழல்மாட்
டொளிறு மணிக்கொடும் பூணிமை யோர்செல்லும் ஓங்கிருளே.

இருள்புரி கூந்தலும் எழில்நலஞ் சிதைந்தது
மருள்புரி வண்டறை மாலையும் பரிந்தது
ஒண்ணுதல் திலகமும் அழிந்தது கண்ணும்
மைந்நிறம் ஒழிந்து செந்நிறம் எய்தி
5 உள்ளறி கொடுமை உரைப்ப போன்றன
சேதகம் பரந்தது செவ்வாய் மேதகு
குழைகெழு திருமுகம் வியர்ப்புள் ளுறுத்தி
இழைகெழு கொங்கையும் இன்சாந் தழீஇக்

*'நீண்மலை வழங்கக் கலத்தானுகா தலர்க்கவர்' என்றும் பாடம்.

கலையுந் துகிலும் நிலையிற் கலங்கி
10 என்னிது விளைந்த வாறெனை மற்றி
தன்ன தறிகிலம் யாமே செறிபொழில்
அருகுடை ஆரூர் அமர்ந்துறை அமுதன்
முருகுவிரி தெரியல் முக்கண் மூர்த்தி
மராமரச் சோலைச் சிராமலைச் சாரல்
15 சுரும்பிவர் நறும்போது கொய்யப்
பெருஞ்செறு வனத்தில்யான் பிரிந்ததிப் பொழுதே.

பொழுது கழிந்தாலும் பூம்புனங் காத்தெள்கி
எழுது கொடியிடையா யேகான்—தொழுதமரர்
முன்னஞ்சேர் மொய்கழலான் முக்கணன் நான்மறையான்
மன்னுஞ்சேய் போலொருவன் வந்து. கக

வந்தார் எதிர்சென்று நின்றேற் கொளிரும்வண் தார்தழைகள்
தந்தா ரவையொன்று மாற்றகில் லேன்தக்கன் வேள்விசெற்ற
செந்தா மரைவண்ணன் தீர்த்தச் சடையன் சிராமலைவாய்க்
கொந்தார் பொழிலணி நந்தா வனஞ்சூழ் குளிர்புனத்தே. கஉ

புனமயிற் சாயல் பூங்குழல் மடந்தை
மனைமலி செல்வம் மகிழா ளாகி
ஏதில னொருவன் காதல னாக
விடுசுடர் நடுவண்நின் றடுதலின் நிழலும்
5 அடியகத் தொளிக்கும் ஆரழற் கானத்து
வெவ்வினை வேடர் துடிக்குரல் வெரீஇ
மெய்விதிர் எறியுஞ் செவ்விய ளாகி
முள்ளிலை யீந்து முளிதாள் இலவமும்
வெள்ளிலும் பரந்த வெள்ளிடை மருங்கிற்
10 கடுங்குரற் கதநாய் நெடுந்தொடர் பிணித்துப்
பாசந் தின்ற தேய்கால் உம்பர்
மரையதள் மேய்ந்து மயிர்ப்புன் குரம்பை
விரிநரைக் கூந்தல் வெள்வாய் மறத்தியர்
விருந்தா யினள்கொல் தானே திருந்தாக்
15 கூற்றெனப் பெயரிய கொடுந்தொழில் ஒருவன்
ஆற்றல் செற்ற அண்ணல் ஆரூர்ச்

செய்வளர் கமலச் சீறடிக்
கொவ்வைச் செவ்வாய்க் குயில்மொழிக் கொடியே. ௧௩

கொடியேர் நுடங்கிடையாள் கொய்தாரான் பின்னே
அடியா னடந்தடைந்தா ளாக—பொடியாக
நண்ணாரூர் மூன்றெரித்த நாகஞ்சேர் திண்சிலையான்
தண்ணாரூர் சூழ்ந்த தடம். ௧௪

தடப்பாற் புனற்சடைச் சங்கரன் தண்மதி போன்முகத்து
மடப்பான் மடந்தை மலரணைச் சேக்கையிற் பாசம்பிரீஇ
இடப்பால் திரியில் வெருவும் இருஞ்சுரஞ் சென்றனளாற்
படப்பா லனவல்ல வால்தமி யேன்றையல் பட்டனவே. ௧௫

பட்டோர் பெயரும் ஆற்றலும் எழுதி
நட்ட கல்லும் மூதூர் நத்தமும்
பரன்முரம் பதரு மல்லது படுமழை
வரன்முறை யறியா வல்வெயிற் கானத்துத்
5 தேனிவர் கோதை செல்ல மானின
மஞ்சி லோதி நோக்கிற் கழிந்து
நெஞ்செரி வுடைமையின் விலங்காது விடுக
கொங்கைக் கழிந்து குன்றிடை அடைந்த
கொங்கிவர் கோங்கமுஞ் செலவுடன் படுக
10 மென்றோட் குடைந்து வெயினிலை நின்ற
குன்ற வேய்களுங் கூற்றடைந் தொழிக
மாயிருங் கடற்றிடை வைக லாயிரம்
பாவையை வளர்ப்போ யந்நனி பாவையை
விலக்காது பிழைத்தனை மாதோ நலத்தகும்
15 அலைபுனல் ஆரூர் அமர்ந்துறை யமுதன்
கலையமர் கையன் கண்ணுதல் எந்தை
தொங்கலஞ் சடைமுடிக் கணிந்த
கொங்கலர் கண்ணி யாயின குரவே. ௧௬

குரவங் கமழ்கோதை கோதைவே லோன்பின்
விரவுங் கடுங்கானம் வெவ்வாய்—அரவஞ்
சடைக்கணிந்த சங்கரன் தார்மதனன் தன்னைக்
கடைக்கணித்த தீயிற் கடிது. ௧௭

கடிமலர்க் கொன்றையுந் திங்களுஞ் செங்கண் அரவுமங்கே
முடிமல ராக்கிய முக்கணக் கன்மிக்க செக்கரொக்கும்
படிமலர் மேனிப் பரம னடிபர வாதவர்போல்
அடிமலர் நோவ நடந்தோ கடந்தநெம் அம்மனையே. ௧௮

மனையுறை குருவி வளைவாய்ச் சேவல்
சினைமுதிர் பேடைச் செவ்வி நோக்கி
ஈனில் இழைக்க வேண்டி யாறு
அன்புபொறை கூர மென்மென முயங்கிக்
5 கண்ணுடைக் கரும்பி னுண்டோ டுகவரும்
பெருவளந் தழீஇய பீடுசால் கிடக்கை
வருபுன லூரன் பார்வை யாகி
மடக்கொடி மாதர்க் குவலையாய்த் தோன்றிப்
படிற்று வாய்மொழி பலபா ராட்டி
10 உள்ளத் துள்ளது தெள்ளிதிற் கரந்து
கள்ள நோக்கமொடு கைதொழு திறைஞ்சி
எம்மி லோயே பாண அவனேல்
அமரரும் அறியா ஆதி மூர்த்தி
குமரன் தாதை குளிர்சடை இறைவன்
15 அறைகழல் எந்தை ஆரூர் ஆவணத்
துறையில் தூக்கும் எழில்மென் காட்சிக்
கண்ணடி யனைய நீர்மைப்
பண்ணுடைச் சொல்லியர் தம்பா லோனே. ௧௯

பாலாய சொல்லியர்க்கே சொல்லுபோய்ப் பாண்மகனே
ஏலாஇங் கென்னுக் கிடுகின்றாய்—மேலாய
தேந்தண் கமழ்கொன்றைச் செஞ்சடையான் தாள்சூடும்
பூந்தண் புனலூரன் பொய். ௨0

பொய்யார் தொழுலும் அருளும் இறைகண்டம் போல்இருண்ட
மையார் தடங்கண் மடந்தையர் கேட்கிற்பொல் லாதுவந்துன்
கையா லடிதொடல் செல்லவெற் புல்லல் கலையலையல்
ஐயா இவைநன்கு கற்றாய் பெரிதும் அழகியவே. ௨௧

அழகுடைக் கிண்கிணி அடிமிசை அரற்றத்
தொழிலுடைச் சிறுபறை பூண்டு தேரீர்த்

தொருதனி யுருட்டி ஒண்பொடி யாடிப்
பொருகளி றனைய போகமொடு பிறழ்ந்த
5 பூங்கழற் சிறுவரொடு தூங்குநடை பயிற்றி
அக்கரை யுடுத்தி ஐம்படை கட்டி
ஒக்கரை யிருக்கும் ஒளிர்புன் குஞ்சிக்
குதலையங் கிளவிப் புதல்வன் தன்னை
உள்ளச் சொரிந்த வெள்ளத் தீம்பால்
10 உடைய வாகிய தடமென் கொங்கை
வேண்டாது பிரிந்த விரிபுனல் ஊரன்
பூண்டாங் ககலம் புல்குவ னெனப்போய்ப்
பெருமட முடையை வாழி வார்சடைக்
கொடுவெண் திங்கட் கொழுநில வேய்க்குஞ்
15 சுடுபொடி யணிந்த துளங்கொளி யகலத்
தண்ண லாரூர் திண்ணி திற் செய்த
சிறைகெழு செம்புனல் போல
நிறையொடு நீங்காய் நெஞ்சம் நீயே. ௨௨

நீயிருந்திங் கென்போது நெஞ்சமே நீளிருட்கண்
ஆயிரங்கை வட்டித் தனலாடித்—தீயரங்கத்
தைவாய் அரவசைத்தான் நன்பணைத்தோட் கன்பமைந்த
செய்வான வூரன் திறம். ௨௩

திறமலி சின்மொழிச் செந்துவர் வாயினை யெங்கையர்க்கே
மறமலி வேலோன் அருளுக வார்சடை யான்கடவூர்த்
துறைமலி யாம்பல்பல் லாயிரத் துத்தமி யேயெழினும்
நறைமலி தாமரை தன்னதன் றேசொல்லு நற்கயமே. ௨௪

கயங்கெழு கருங்கடல் முதுகுதெரு மாறுற
வியங்கு திமில்தடவி எறியினி நுளையர்
நெய்ம்மீன் கவரல் வேண்டிக் கைம்மிகுத்
தால வட்டம் ஏய்ப்ப மீமிசை
5 முடிகெழு தருவலை வீசி முந்நீர்க்
குடரென வாங்கிக் கொள்ளை கொண்ட
சுரிமுகச் சங்குஞ் சுடர்விடு பவளமும்
எரிகதிர் நித்திலத் தொகுதியுங் கூடி

விரிகதிர் நிலவுஞ் செக்கருந் தாரகை
10 உருவது காட்டும் உலவாக் காட்சித்
தண்ணந் துறைவன் தடவரை யகலங்
கண்ணுறக் கண்டது முதலா ஒள்நிறக்
காள மாசுணங் கதிர்மதிக் குழவியைக்
கோளிழைத் திருக்குங் கொள்கை போல
15 மணிதிகழ் மிடற்று வானவன் மருவு
அணிதிக ழகலத் தண்ணல் ஆரூர்
ஆர்கலி விழவி னன்னதோர்
போலலாச் சிறந்தது சிறுநல் லூரே. ௨௫

ஊரெலாந் துஞ்சி யுலகெலாம் நள்ளென்று
பாரெலாம் பாடவிந்த பாயிருட்கட்—சீருலா
மாந்துறைவா யீசன் மணிநீர் மறைக்காட்டுப்
பூந்துறைவாய் மெய்ந்துறங்கா புள். ௨௬

புள்ளுந் துயின்று பொழுதிறு மாந்து கழுதுறங்கி
நள்ளென்ற கங்குல் இருள்வாய்ப் பெருகிய வார்பனிநாட்
டுள்ளுங் கலைக்கைச் சுடர்வண் ணனைத்தொழு வார்மனம்போன்
றுள்ளும் உருக வொருவர்திண் தேர்வந் துலாத்தருமே.

உலாநீர்க் கங்கை யொருசடைக் கரந்து
புலால்நீர் ஒழுகப் பொருகளி றுரித்த
பூத நாதன் ஆதி மூர்த்தி
திருமட மலைமகட் கொருகூறு கொடுத்துத்தன்
5 அன்பின் அமைத்தவன் ஆரூர் நன்பகல்
வலம்புரி யடுப்பா மாமுத் தரிசி
சலஞ்சலம் நிறைய வேற்றி நலந்திகழ்
பவளச் செந்தீ மூட்டிப் பொலம்பட
விப்பியந் துடுப்பால் ஒப்பத் துழாவி
10 அடாஅ தட்ட அமுதம் வாய்மடுத்
திடாஅ வாயமோ டுண்ணும் பொழுதில்
திருந்திழைப் பணைத்தோள் தேமொழி மாதே
விருந்தின் அடியேற் கருளுதி யோவென

முலைமுகம் நோக்கி முறுவலித் திறைஞ்சலின்
15 நறைகமழ் எண்ணெய்ச் சிறுநுண் துள்ளி
பொங்குபுன லுற்றது போலவென்
அங்க மெல்லாந் தானா யினனே. உஅ

ஆயினவன் பாரே யழிப்பர் அனலாடி
பேயினவன் பாரோம்பும் பேரருளான்—தீயினவன்
கண்ணாளன் ஆரூர்க் கடலார் மடப்பாவை
தண்ணாருங் கொங்கைக்கே தாழ்ந்து. உகூ

தாழ்ந்து கிடந்த சடைமுடிச் சங்கரன் தாள்பணியா(து)
ஆழ்ந்து கிடந்துநை வார்கிளை போலயர் வொற்றோங்கிச்
சூழ்ந்து கிடந்த கரைமேல் திரையெனுங் கையெறிந்து
வீழ்ந்து கிடந்தல றித்துயி லாதிவ் விரிகடலே. ௩0

திருச்சிற்றம்பலம்

சேரமான் பெருமாள் நாயனார் அருளிய

## *திருக்கைலாய ஞானவுலா

திருச்சிற்றம்பலம்

திருமாலும் நான்முகனுந் தேர்ந்துணரா தன்றங்
கருமா லுறஅழலாய் நின்ற—பெருமான்
பிறவாதே தோன்றினான் காணாதே காண்பான்
துறவாதே யாக்கை துறந்தான்—முறைமையால்
5 ஆழாதே ஆழ்ந்தான் அகலா தகலியான்
ஊழா லுயராதே ஓங்கினான்—சூழொளிநூல்
ஓதா துணர்ந்தான் நுணுகாது நுண்ணியான்
யாதும் அணுகா தணுகியான்—ஆதி
அரியாகிக் காப்பான் அயனாய்ப் படைப்பான்
10 அரனாய் அழிப்பவனுந் தானே—பரனாய

*திரு ஆதியுலா எனவும் பெயர் பெறும்.

தேவர் அறியாத தோற்றத்தான் தேவரைத்தான்
மேவிய வாறே விதித்தமைத்தான்—ஓவாதே
எவ்வுருவில் யாரொருவர் உள்குவார் உள்ளத்துள்
அவ்வுருவாய்த் தோன்றி அருள்கொடுப்பான்—எவ்வுருவுந்
தானேயாய் நின்றளிப்பான் தன்னிற் பிறிதுருவம்
ஏனோர்க்குங் காண்பரிய எம்பெருமான்—ஆனாத
சீரார் சிவலோகந் தன்னுள் சிவபுரத்தில்
ஏரார் திருக்கோயி லுள்ளிருப்ப—ஆராய்ந்து
10 செங்கண் அமரர் புறங்கடைக்கட் சென்றீண்டி
எங்கட்குக் காட்சியருள் என்றிரப்ப—அங்கொருநாள்
பூமங்கை பொய்தீர் தரணி புகழ்மங்கை
நாமங்கை யென்றிவர்கள் நன்கமைத்த—சேமங்கொள்
ஞானக் கொழுந்து நகராசன் தன்மடந்தை
தேன்மொய்த்த குஞ்சியின்மேற் சித்திரிப்ப—ஊனமில்சீர்
நந்தா வனமலரும் மந்தா கினித்தடஞ்சேர்
செந்தா மரைமலர்நூ றாயிரத்தால்—நொந்தா
வயந்தன்தொ டுத்தமைத்த வாசிகை சூட்டி
நயந்திகழும் நல்லுறப்புக் கூட்டிப்—பயன்கொள்
15 குலமகளிர் செய்த கொழுஞ்சாந்தங் கொண்டு
நலமலிய ஆகந் தழீஇக்—கலைமலிந்த
கற்பகம் ஈன்ற கமழ்பட் டினையுடுத்துப்
பொற்கழல்கள் கான்மேற் பொலிவித்து—வில்பகருஞ்
சூளா மணிசேர் முடிகவித்துச்—சுட்டிசேர்
வாளார் நுதற்பட்டம் மன்னுவித்துத்—தோளா
மணிமகர குண்டலங்கள் காதுக் கணிந்தாங்
கணிவயிரக் கண்டிகை பொன்னாண்—பணிபெரிய
ஆர மவைபூண் டணிதிக ழுஞ்சன்ன
வீரந் திருமார்பில் வில்விலக—ஏருடைய
20 எண்டோட்குக் கேயூரம் பெய்துதர பந்தனமுங்
கண்டோர் மனமகிழக் கட்டுறீஇக்—கொண்டு
கடிசூத் திரம்புனைந்து கங்கணங் கைப்பெய்து
வடிவுடைய கோலம் புனைந்தாங்—கடிநிலைமேல்
நந்திமா காளர் கடைகழிந்த போழ்தத்து
வந்து வசுக்கள் இருக்குரைப்ப—அந்தமில்சீர்

எண்ணருங் கீர்த்தி எழுவர் இருடிகளும்<br>
அண்ணல்மேல் ஆசிகள் தாமுணர்த்த—ஒண்ணிறத்த<br>
பன்னிருவர் ஆதித்தர் பல்லாண் டெடுத்திசைப்ப<br>
மன்னும் மகதியன்யாழ் வாசிப்பப்—பொன்னியலும்<br>
25 அங்கி கமழ்தூபம் ஏந்த யமன்வந்து<br>
மங்கல வாசகத்தால் வாழ்த்துரைப்பச்—செங்கண்<br>
நிருதி முதலோர் நிழற்கலன்கள் ஏந்த<br>
வருணன் மணிக்கலசந் தாங்கத்—தெருவெலாம்<br>
வாயு நனிவிளக்க மாமழை நீர்தெளிப்பத்<br>
தூயசீர்ச் சோமன் குடையெடுப்ப—மேவிய<br>
ஈசானன் வந்தடைப்பை கைக்கொள்ள அச்சுனிகள்<br>
வாயார்ந்த மந்திரத்தால் வாழ்த்துரைப்பத்—தூய<br>
உருத்திரர்கள் தோத்திரங்கள் சொல்லக் குபேரன்<br>
திருத்தகு மாநிதியஞ் சிந்தக்—கருத்தமைந்த<br>
30 கங்கா நதியமுனை உள்ளுறுத்த தீர்த்தங்கள்<br>
பொங்கு கவரி புடையிரட்டத்—தங்கிய<br>
பைந்நாகம் எட்டுஞ் சுடரெடுப்பப் பைந்தறுகட்<br>
கைந்நாகம் எட்டுங் கழல்வணங்க—மெய்ந்நாக<br>
மேகம் விதானமாய் மின்னெலாஞ் சூழ்கொடியாய்<br>
மேகத் துருமு முரசறையப்—போகஞ்சேர்<br>
தும்புரு நாரதர்கள் பாடத் தொடர்ந்தெங்குங்<br>
கொம்புருவ நுண்ணிடையார் கூத்தாட—எம்பெருமான்<br>
விண்ணோர் பணிய உயர்ந்த விளங்கொளிசேர்<br>
வெண்ணார் மழவிடையை மேல்கொண்டாங்—கெண்ணார்<br>
35 கருத்துடைய பாரிடங்கள் காப்போத்துச் செய்யத்<br>
திருக்கடைக ளேழ்கழிந்த போதிற்—செருக்குடைய<br>
சேனா பதிமயில்மேல் முன்செல்ல யானைமேல்<br>
ஆனைப்போர் இந்திரன் பின்படர—ஆனாத<br>
அன்னத்தே ஏறி அயன்வலப்பால் கைபோதக்<br>
கன்னவிலுந் திண்டோள் கருடன்மேல்—மன்னிய<br>
மாலிடப்பாற் செல்ல மலரார் கணைஐந்து<br>
மேலிடப்பான் மென்கருப்பு வில்லிடப்பால்—ஏல்வுடைய<br>
சங்கணையும் முன்கைத் தடமுலையார் மேலெய்வான்<br>
கொங்கணையும் பூவாளி கோத்தமைத்த—ஐங்கணையான்

40 காமன் கொடிப்படைமுன் போதக் கதக்காரி
வாமன் புரவிமேல் வந்தணைய—நாமஞ்சேர்
வேழ முகத்து விநாயகனை உள்ளுறுத்திச் [தாழ்கூந்தல்
சூழ்வளைக்கைத் தொண்டைவாய்க் கெண்டையொண்கண்—
மங்கை எழுவருஞ் சூழ மடநீலி
சிங்க அடலேற்றின் மேற்செல்லத்—தங்கிய
விச்சா தரர்இயக்கர் கின்னரர் கிம்புருடர்
அச்சா ரணர்அரக்க ரோடசுரர்—எச்சார்வும்
சல்லரி தாளந் தகுணிதந் தத்தளகங்
கல்லலகு கல்லவடம் மொந்தை—நல்லிலயத்
45 தட்டழி சங்கஞ் சலஞ்சலந் தண்ணுமை
கட்டழியாப் பேரி கரதாளங்—கொட்டுங்
குடமுழவங் கொக்கரை வீணை குழல்யாழ்
இடமாந் தடாரி படகம்—இடவிய
மத்தளந் துந்துபி வாய்ந்த முருடிவற்றால்
எத்திசை தோறும் எழுந்தியம்ப—ஒத்துடனே
மங்கலம் பாடுவார் வந்திறைஞ்ச மல்லருங்
கிங்கரரும் எங்குங் கிலுகிலுப்பத்—தங்கிய
ஆறும் இருதுவும் யோகும் அருந்தவமும்
மாறாத முத்திரையும் மந்திரமும்—ஈறார்ந்த
50 காலங்கள் மூன்றுங் கணமுங் குணங்களும்
வால கிலியரும் வந்தீண்டி—மேலை
இமையோர் பெருமானே போற்றி எழில்சேர்
உமையாள் மணவாளா போற்றி—எமையாளுந்
தீயாடி போற்றி சிவனே யடிபோற்றி
ஈசனே எந்தாய் இறைபோற்றி—தூயசீர்ச்
சங்கரனே போற்றி சடாமகுடத் தாய்போற்றி
பொங்கரவா பொன்னங் கழல்போற்றி—அங்கொருநாள்
ஆய விழுப்போர் அருச்சுனன் ஆற்றற்குப்
பாசுபத மீந்த பதம்போற்றி—தூய
55 மலைமேலாய் போற்றி மயானத்தாய் வானோர்
தலைமேலாய் போற்றிதாள் போற்றி—நிலைபோற்றி
போற்றியெனப் பூமாரி பெய்து புலன்கலங்க
நாற்றிசையும் எங்கும் நலம்பெருக—ஏற்றுக்

கொடியும் பதாகையுங் கொற்றக் குடையும்
வடிவுடைய தொங்கலுஞ் சூழக்—கடிகமழும்
பூமாண் கருங்குழலார் உள்ளம் புதிதுண்பான்
வாமான ஈசன் வரும்போழ்திற்—சேமேலே

## குழாங்கள்

வாமான ஈசன் மறுவில்சீர் வானவர்தங்
கோமான் படைமுழக்கங் கேட்டலுமே—தூமாண்பின்
60 வானநீர் தாங்கி மறையோம்பி வான்பிறையோ
டூனமில் சூலம் உடையவாய்—ஈனமிலா
வெள்ளை யணிதலால் வேழத் துரிபோர்த்த
வள்ளலே போலும் வடிவுடைய—ஒள்ளிய
மாட நடுவின் மலரார் அமளியே
கூடிய போர்க்கள மாக்குறித்துக்—கேடில்
சிலம்பு பறையாகச் சேயரிக்கண் அம்பா
விலங்கு கொடும்புருவம் வில்லா—நலந்திகழுங்
கூழைபின் தாழ வளையார்ப்பக் கைபோந்து
கேழ்கிளரும் அல்குலாந் தேருந்திச்—சூழொளிய
65 கொங்கைமாப் பொங்கக் கொழுநர் மனங்கவர
அங்கம் பொருதசைந்த ஆயிழையார்—செங்கேழற்
பொற்கலசத் துள்ளால மணிநீர் முகஞ்சேர்த்தி
நற்பெருங் கோலம் மிகப்புனைந்து—பொற்புடைய,
பேதை முதலாகப் பேரிளம்பெண் ஈறாக
மாதிவருஞ் சொல்லார் மகிழ்ந்தீண்டிச்—சோதிசேர்
சூளிகையுஞ் சூட்டுஞ் சுளிகையுஞ் சுட்டிகையும்
வாளிகையும் பொற்றோடும் மின்விலக—மாளிகையின்
மேலேறி நின்று தொழுவார் துயர்கொண்டு
மாலேறி நின்று மயங்குவார்—நூலேறு
70 தாமமே தந்து சடாதாரி நல்கானேல்
யாமமேல் எம்மை அடுமென்பார்—காமவே
ளாம்என்பார் அன்றென்பார் ஐயுறுவார் கையெறிவார்
தாமுன்னை நாணோடு சங்கிழப்பார்—பூமன்னும்
பொன்னரி மாலையைப் பூண்பார்அப் பூண்கொண்டு
துன்னரி மாலையாச் சூடுவார்—முன்னம்

ஒருகண் எழுதிவிட் டொன்றெழுதா தோடித்
தெருவம் புகுவார் திகைப்பார்—அருகிருந்த
கண்ணாடி மேற்பஞ்சு பெய்வார் கிளியென்று [மேற்
பண்ணாடிச் சொற்பந்துக் குற்றுரைப்பார்—அண்ணல்
75 கண்ணென்னும் மாசாலங் கோலிக் கருங்குழலார்
திண்ண நிறைந்தார் திகைத்திட்டார்—ஒண்ணிறத்த

## பேதை

பேதைப் பருவம் பிழையாதாள் வெண்மணலால்
தூதைச் சிறுசோ றடுதொழிலாள்—தீதில்
இடையாலும் எக்கழுத்த மாட்டாள் நலஞ்சேர்
உடையாலும் உள்ளுருக்க கில்லாள்—நடையாலுங்
கௌவைநோய் காளையரைச் செய்யாள் கதிர்முலைகள்
வெவ்வநோய் செய்யுந் தொழில்பூணாள்—செவ்வனேர்
நோக்கிலும் நோய்நோக்க நோக்காள் தன் செவ்வாயின்
வாக்கிற் பிறர்மனத்தும் வஞ்சியாள்—பூக்குழலும்
80 பாடவந் தோன்ற முடியாள் இளவேய்த்தோள்
ஆடவர் தம்மை அயர்வுசெய்யாள்—நாள்தோறும் [கட்
ஒன்றுரைத் தொன்றுன்னி யொன்றுசெய் தொன்றின்
சென்ற மனத்தளாஞ் சேயிழையாள்—நன்றாகத்
தாலி கழுத்தணிந்து சந்தனத்தால் மெய்பூசி
நீல அறுவை விரித்துடுத்துக்—கோலஞ்சேர்
பந்தரிற் பாவைகொண் டாடிஇப் பாவைக்குத்
தந்தையார் என்றொருத்தி தான்வினவ—அந்தமில்சீர்
ஈசன் எரியாடி என்ன அவனையோர் [ன்ன
காய்சின மால்விடைமேற் கண்ணுற்றுத்—தாய்சொ
85 இக்கணக்கு நோக்காள் இவள்போல்வாள் காமநூல் [ய
நற்கணக்கின் மேற்சிறிதே நாட்செய்தாள்—பொற்புடை

## பெதும்பை

பேரொளிசேர் காட்சிப் பெதும்பைப் பிராயத்தாள்
காரொளிசேர் மஞ்ஞைக் கவினியலாள்—சீரொளிய
தாமரை யொன்றி னிரண்டு குழையிரண்டு
காமருவு கெண்டையோர் செந்தொண்டை—தாமருவு

முத்த முரிவெஞ் சிலைசுட்டி செம்பவளம்
வைத்தது போலும் மதிமுகத்தாள்—ஒத்தமைந்த
கங்கணஞ் சேர்ந்திலங்கு கையாள் கதிர்மணியின்
கிங்கிணி சேர்ந்த திருந்தடியாள்—ஒண்கேழல்
90 அந்துகில் சூழ்ந்தசைந்த அல்குலா ளாய்பொதியிற்
சந்தனந் தோய்ந்த தடந்தோளாள்—வந்து
திடரிட்ட திண்வரைக்கண் செய்த முலையாள்
கடல்பட்ட இன்னமுதம் அன்னாள்—மடல்பட்ட
மாலை வளாய குழலாள் மணநாறு
சோலை இளங்கிளிபோல் தூமொழியாள்—சாலவும்
வஞ்சனை செய்து மனங்கவரும் வாட்கண்ணுக்
கஞ்சனத்தை யிட்டங் கழகாக்கி—எஞ்சா
மணியாரம் பூண்டாழி மெல்விரலிற் சேர்த்தி
அணியார் வளைதோள்மேல் மின்ன—மணியார்ந்த
95 தூவெண் மணற்கொண்டு தோழியருந் தானுமாய்க்
காமன் உருவம் வரஎழுதிக்—காமன்
கருப்புச் சிலையும் மலரம்புந் தேரும்
ஒருப்பட் டுடனெழுதும் போழ்தில்—விருப்பூருந்
தேனமருங் கொன்றையந்தார்த் தீர்த்தன் சிவலோகன்
வானமா லேற்றின்மேல் வந்தணைய—தானமா
நன்றறிவார் சொன்ன நலந்தோற்றும் நாண்தோற்றும்
நின்றறிவு தோற்றும் நிறைதோற்றும்—நன்றாகக்
கைவண்டுங் கண்வண்டும் ஓடக் கலையோட
நெய்விண்ட பூங்குழலாள் நின்றொழிந்தாள்—மொய்கொண்ட

மங்கை

100 மங்கை இடங்கடவா மாண்பினாள் வானிழிந்த
கங்கைச் சுழியனைய உந்தியாள்—தங்கிய
அங்கை கமலம் அடிகமல மானோக்கி
கொங்கை கமல முகங்கமலம்—பொங்கெழிலார்
இட்டிடையும் வஞ்சி யிரும்பணைத்தோள் வேயெழிலார்
பட்டுடைய அல்குலுந் தேர்த்தட்டும்—மட்டுவிரி
கூந்தல றல்பவளஞ் செய்யவாய் அவ்வாயில்
ஏய்ந்த மணிமுறுவல் இன்முத்தம்—வாய்ந்தசீர்

வண்டு வளாய வளர்வா சிகைசூட்டிக்
கண்டி கழுத்திற் கவின்சேர்த்திக்—குண்டலங்கள்
105 காதுக் கணிந்து கனமே கலைதிருத்தித்
தீதில் செழுங்கோலஞ் சித்திரித்து—மாதராள்
பொற்கூட்டிற் பூவையை வாங்கி யதனோடுஞ்
சொற்கோட்டிக் கொண்டிருந்த எல்லைக்கண்—நற்கோட்டு
வெள்ளி விலங்கன்மேல் வீற்றிருந்த ஞாயிறுபோல்
ஒள்ளிய மால்விடையின் மேல்கொண்டு—தெள்ளியநீர்
தாழுஞ் சடையான் சடாமகுடந் தோன்றுதலும்
வாழவன்மேல் மம்மர் மனத்தளாய்ச்—சூழொளியான்
தார்நோக்குந் தன்தாரும் நோக்கும் அவனுடைய
ஏர்நோக்குந் தன்ன தெழில்நோக்கும்—பேரருளான்
110 தோணோக்குந் தன்தோளும் நோக்கும் அவன்மார்பில்
நீணோக்கம் வைத்து நெடிதுயிர்த்து—நாணோக்கா
துள்ளம் உருக ஒழியாத வேட்கையாம்
வெள்ளத் திடையழுந்தி வெய்துயிர்த்தாள்—ஒள்ளிய

## மடந்தை

தீந்தமிழின் தெய்வ வடிவாள் திருந்தியசீர்
வாய்ந்த மடந்தைப் பிராயத்தாள்—ஏய்ந்தசீர்
ஈசன் சிலையும் எழில்வான் பவளமுஞ்
சேய்வலங்கை வேலுந் திரள்முத்தும்—பாசிலைய
வஞ்சியும் வேயும் வளர்தா மரைமொட்டும்
மஞ்சில்வரும் மாமதிபோல் மண்டலமும்—எஞ்சாப்
115 புருவமுஞ் செவ்வாயுங் கண்ணும் எயிறும்
உருவ நுசுப்பும் மென்தோளும்—மருவினிய
கொங்கையும் வாண்முகமு மாக்கொண்டாள் கோலஞ்சேர்
பங்கயப் போதனைய சேவடியாள்—ஒண்கேழல்
வாழைத்தண் டன்ன குறங்கினாள் வாய்ந்தசீர்
ஆழித்தேர்த் தட்டனைய அல்குலாள்—ஊழித்
திருமதிய மற்றொன்று மென்று முகத்தை
உருவுடைய நாண்மீன்சூழ்ந் தாற்போற்—பெருகொளிய
முத்தாரங் கண்டத் தணிந்தாள் அணிகலங்கள்
மொய்த்தார வாரம் மிகப்பெருகி—வித்தகத்தால்

தந்தளிர்போற் சேவடியும் அங்கையுஞ் செம்மையால்
அந்திவான் காட்டும் அழகினாள்—அந்தமில்
சீரார் முகமதிய மாதலாற் சேயிழையாள்
ஏரார் இரவின் எழில்கொண்டாள்—சீராருங்
கண்ணார் பயோதரமும் நுண்ணிடையும் உண்மையால்
தண்ணிளங் காரின் சவிகொண்டாள்—வண்ணஞ்சேர்
155 மாந்தளிர் மேனி முருக்கிதழ்வாய் ஆதலால்
வாய்ந்த இளவேனில் வண்மையாள்—மாந்தர்
அறிவுடையீர் நின்மின்கள் அல்லார்போம் என்று
பறையறைவ போலுஞ் சிலம்பு—முறைமையாற்
சீரார் திருந்தடிமேற் சேர்த்தினாள் தேரல்குல்
ஓரா தகல லுருதென்று—சீராலே
அந்துகிலும் மேகலையுஞ் சூழ்ந்தாள் அணிமுலைகள்
மைந்தர் மனங்கவரும் என்பதனால்—முந்துறவே
பூங்கச்சி னால்அடையப் பூட்டுநீஇப் பொற்கொடியாள்
காம்பொத்த தோளிணையைக் காப்பேவி—வாய்ந்தசீர்
160 நற்கழுத்தை நல்லாரத் தான்மறைத்துக் காதுக்கு
விற்பகருங் குண்டலங்கள் மேவுவித்து—மைப்பகருங்
காவியங் கண்ணைக் கதந்தணிப்பாள் போலத்தன்
தாவிய அஞ்சனத்தை முன்னூட்டி—யாவரையும்
ஆகுலம் ஆக்கும் அழகினாள் அன்னமுங்
கோகிலமும் போலுங் குணத்தின—ளாகிப்
பலகருதிக் கட்டிக் கரியவாய்க் கோடி
அலர்சுமந்து கூழைய வாகிக்—கலைகரந்
துள்யாது மின்றிப் புறங்கமழ்ந்து கீழ்தாழ்ந்து
கள்ளாவி நாறுங் கருங்குழலாள்—தெள்ளொளிய
165 செங்கழுநீர்ப் பட்டுடுத்துச் செங்குங் குமமெழுதி
அங்கழுநீர்த் தாமம் நுதல்சேர்த்திப்—பொங்கெழிலார்
பொற்கவற்றின் வெள்ளிப் பலகை மணிச்சூது
நற்கமைய நாட்டிப் பொரும்பொழுதில்—விற்பகிருந்
தோளான் நிலைபெறு தோற்றங்கே டாய்நின்ற
தாளான் சடாமகுடந் தோன்றுதலுங்—கேளாய
நாணார் நடக்க நலத்தார்க் கிடையில்லை
ஏணார் ஒழிக எழில்ஒழிக—பேணுங்

குலத்தார் அகன்றிடுக குற்றத்தார் வம்பின்
நலத்தீர் நினைமின்நீர் என்று—சொலற்கரிய
170 தேவாதி தேவன் சிவனாயில் தேன்கொன்றைப்
பூவார் அலங்கல் அருளாது—போவானேற்
கண்டால் அறிவ னெனச்சொல்லிக் கைசோர்ந்து
வண்டார்பூங் கோதை வளந்தோற்றாள்—ஒண்டாங்கு

## பேரிளம்பெண்

பெண்ணரசாய்த் தோன்றிய பேரிளம் பெண்மையாள்
பண்ணமரும் இன்சொற் பணிமொழியாள்—மண்ணின்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும் [மேல்
ஒண்டொடி கண்ணே யுளஎன்று—பண்டையோர்
கட்டுரையை மேம்படுத்தாள் கண்ணாடி மண்டலம்போல்
விட்டிலங்கு நல்லுகிர்சேர் மெல்விரலாள்—கட்டரவம்
175 அஞ்சப் பரந்தகன்ற அல்குலா ளாய்நலத்த
வஞ்சிக் கொடிநுடங்கு நுண்ணிடையாள்—எஞ்சாத
பொற்செப் பிரண்டு முகடு மணியழுத்தி
வைத்தன போல வளர்ந்தேந்தி—ஒத்துச்
சுணங்குந் திதலையுஞ் சூழ்போந்து கண்டார்க்
கணங்கும் அமுதமுமாய்த் தோன்றி—இணங்கொத்த
கொங்கையாள் கோலங்கட் கெல்லாமோர் கோலமா
நங்கையாள் நாகிளவேய்த் தோளினாள்—அங்கையாற்
காந்தட் குலம்பழித்தாள் காமவேள் காதலாள்
சாந்தம் இலங்கும் அகலத்தாள்—வாய்ந்துடனே
180 ஏய்ந்து குவிந்து திரண்டு மறிந்திருபால்
தேய்ந்து துடித்த செழும்பவளங்—காய்ந்திலங்கி
முத்தமுந் தேனும் பொதிந்து முனிவரையுஞ்
சித்தந் திறைகொள்ளுஞ் செவ்வாயாள்—ஒத்து
வரிகிடந் தஞ்சன மாடி மணிகள்
உருவம் நடுவுடைய வாகிப்—பெருகிய
தண்ணங் கயலுஞ் சலஞ்சலமுந் தோன்றுதலால்
வண்ணங் கடலனைய வாட்கண்ணாள்—ஒண்ணிறத்த
குண்டலஞ்சேர் காதினாள் கோலக் குளிர்மதிய
மண்டலமே போலும் மதிமுகத்தாள்—வண்டலம்ப

185 யோசனை நாறுங் குழலாள் ஒளிநுதல்மேல்
வாசிகை கொண்டு வடிவமைத்தாள்—மாசில்சீர்ப்
பாதாதி கேசம் பழிப்பிலாள் பாங்கமைந்த
சீதாரி கொண்டுதன் மெய்புகைத்தாள்—மாதார்ந்த [ர்
பண்கவருஞ் சொல்லார்பல் லாண்டேத்தப் பாயொளிசே
வெண்கவரி வெள்ளத் திடையிருந்—தொண்கேழற்
கண்ணவனை யல்லாது காணு செவிஅவன
தெண்ணருஞ்சீ ரல்ல திசைகேளா—அண்ணல்
கழலடி யல்லது கைதொழா வஃதான் [டைய
றழலங்கைக் கொண்டான்மாட் டன்பென்—றெழிலு
190 வெண்பா விரித்துரைக்கும் போழ்தில் விளங்கொளிசேர்
கண்பாவு நெற்றிக் கறைக்கண்டன்—விண்பால்
அரியரணஞ் செற்றுங் கலைபுனலும் பாம்பும்
புரிசடைமேல் வைத்த புராணன்—எரியிரவில்
ஆடும் இறைவன் அமரர்குழாம் தற்சூழ
மாட மறுகில் வரக்கண்டு—கேடில்சீர்
வண்ணச் சிலம்படி மாதரார் தாமுண்ட
கண்ணெச்சில் எம்மையே யூட்டுவான்—அண்ணலே
வந்தாய் வளைகவர்ந்தாய் மாலும் அருந்துயருந்
தந்தாய் இதுவோ தகவென்று—நொந்தாள்போற்
195 கட்டுரைத்துக் கைசோர்ந் தகமுருகி மெய்வெளுத்து
மட்டிவரும் பூங்கோதை மால்கொண்டாள்—கொட்டிமைசேர்
பண்ணுறும் இன்சொற் பணைப்பெருந்தோட் செந்துவர்வாய்ப்
பெண்ணார வாரம் பெரிதன்றே—விண்ணோங்கி
மஞ்சடையும் நீள்குடுமி வாள்நிலா வீற்றிருந்த
செஞ்சடையான் போந்த தெரு.

*பெண்ணீர்மை காமின் பெருந்தோ ளிணைகாமின்
உண்ணீர்மை மேகலையும் உள்படுமின்—தெண்ணீரக்
காரேறு கொன்றையந்தார்க் காவாலி கட்டங்கன்
ஊரேறு போந்த துலா.

திருச்சிற்றம்பலம்

* இவ்வெண்பா பிற்காலத் தான்றோராற் செய்யப்பட்டது. மொத்த பாடற்றொகைக் கணக்கில் இது சேர்க்கப்படவில்லை.

நக்கீரதேவ நாயனார் அருளிய

# கைலைபாதி காளத்திபாதி அந்தாதி

திருச்சிற்றம்பலம்

சொல்லும் பொருளுமே தூத்திரியும் நெய்யுமா
நல்இடிஞ்சில் என்னுடைய நாவாகச்—சொல்லரிய
வெண்பா விளக்கா வியன்கயிலை மேலிருந்த
பெண்பாகர்க் கேற்றினேன் பெற்று. ௧

பெற்ற பயனிதுவே யன்றே பிறந்தியான்
கற்றவர்கள் ஏத்துஞ்சீர்க் காளத்திக்—கொற்றவற்குத்
தோளாகத் தாடரவஞ் சூழ்ந்தணிந்த அம்மானுக்
காளாகப் பெற்றேன் அடைந்து. ௨

அடைந்துய்ம்மின் அம்மானை உம்ஆவி தன்னைக்
குடைந்துண்ண எண்ணிய வெங்கூற்றம்—கடைந்துநுங்
கண்ணுளே பார்க்கும் பொழுது கயிலாயத்
தண்ணலே கண்டீர் அரண். ௩

அரணம் ஒருமூன்றும் ஆரழலாய் வீழ
முரணம்பு கோத்த முதல்வன்—சரணமே
காணுமா லுற்றவன்றன் காளத்தி கைதொழுது
பேணுமால் உள்ளம் பெரிது. ௪

பெரியவர்கா ணீரென் உள்ளத்தின் பெற்றி
தெரிவரிய தேவாதி தேவன்—பெரிதுந்
திருத்தக்கோ ரேத்துந் திருக்கயிலைக் கோனை
இருத்தத்தான் போந்த திடம். ௫

இடப்பாகம் நீள்கோட் டிமவான் பயந்த
மடப்பாவை தன்வடிவே யானால்—விடப்பாற்
கருவடிசேர் கண்டத்தெங் காளத்தி யாள்வார்க்
கொருவடிவே யன்றால் உரு. ௬

உருவு பலகொண் டுணர்வரிதாய் நிற்கும்
ஒருவ னொருபால் இருக்கை—மருவினிய [சும்
பூக்கையிற்கொண் டெப்பொழுதும் புத்தேளிர் வந்திறைஞ்
மாக்கயிலை என்னும் மலை. எ

மலைவரும்போல் வானவருந் தானவரும் எல்லாம்
அலைகடல்வாய் நஞ்செழல்கண் டஞ்சி—நிலைதளரக்
கண்டமையால் தண்சாரற் காளத்தி யாள்வார்நஞ்
சுண்டமையால் உண்டிவ் வுலகு. அ

உலக மனைத்தினுக்கும் ஒண்ணுதன்மே லிட்ட
திலக மெனப்பெறினுஞ் சீசீ—இலகியசீர்
ஈசா திருக்கயிலை எம்பெருமான் என்றென்றே
பேசா திருப்பார் பிறப்பு. கூ

பிறப்புடையர் கற்றோர் பெருஞ்செல்வர் மற்றுஞ்
சிறப்புடைய ராகிலுஞ் சீசீ—இறப்பில்
கடியார் நறுஞ்சோலைக் காளத்தி யாள்வார்
அடியாரைப் பேணா தவர். க0

அவரும் பிறந்தாராய்ப் போவார்கொல் ஆவி
எவருந் தொழுதேத்தும் எந்தை—சிவமன்னு
தேக்குவார் சோலைத் திருக்கயிலை ஏத்தாதே
போக்குவார் வாளா பொழுது. கக

வாளா பொழுது கழிக்கின்றார் மானுடவர்
கேளார்கொல் அந்தோ கிறிபட்டார்—கிளரொளிசேர்
அண்ணற் கனுக்கராய்க் காளத்தி யுள்நின்ற
கண்ணப்ப ராவார் கதை. கஉ

கதையிலே கேளீர் கயிலாய நோக்கிப்
புதையிருட்கண் மாலோடும் போஒய்ச்—சிதையாச்சீர்த்
தீர்த்தன்பாற் பாசுபதம் பெற்றுச் செருக்களத்திற்
பார்த்தன்போர் வென்றிலனோ பண்டு. கந

பண்டு தொடங்கியும் பாவித்தும் நின்கழற்கே
தொண்டு படுவான் தொடர்வேனைக்—கண்டுகொண்

டாளத் தயாவுண்டோ இல்லையோ சொல்லாயே
காளத்தி யாய்உன் கருத்து. கச

கருத்துக்குச் சேயையாய்க் காண்டக்கோர் காண
விருத்தி திருக்கயிலை என்றால்—ஒருத்தர்
அறிவா னுறுவார்க் கறியுமா றுண்டோ
நெறிவார் சடையாய் நிலை. கரு

நிலையில் பிறவி நெடுஞ்சுழியிற் பட்டுத்
தலைவ தடுமாறு கின்றேன்—தொலைவின்றிப்
போந்தேறக் கைதாராய் காளத்திப் புத்தேளிர்
வேந்தேயிப் பாசத்தை விட்டு. கசு

பாசத்தை விட்டுநின் பாதத்தின் கீழேயென்
நேசத்தை வைக்க நினைகண்டாய்—பாசத்தை
நீக்குமா வல்ல கயிலாயா நீயென்னைக்
காக்குமா றித்தனையே காண். கஎ

காணு தலக்கின்றார் வானோர்கள் காளத்திப்
பூணார மார்பன்தன் பொற்பாதம்—நாணாதே
கண்டிடுவான் யானிருந்தேன் காணீர் கடல்நஞ்சை
உண்டிடுவான் தன்னை ஒருங்கு. கஅ

ஒருங்கா துடனேநின் றோர்ஐவர் எம்மை
நெருங்கா மல்நித்தம் ஒருகால்—நெருங்கிக்
கருங்கலோங் கும்பற் கயிலாய மேயான்
வருங்கொலோ நம்பால் மதித்து. கசு

நமபான மதிததுறையுங காளததி நணணுமீத
வம்பார் மலர்தூய் வணங்காதே—நம்பாநின்
சீலங்கள் ஏத்தாதே தீவினையேன் யானிருந்தேன்
காலங்கள் போன கழிந்து. உ௦

கழிந்த கழிகிலாய் நெஞ்சே கழியா
தொழிந்தநாள் மேற்பட் டுயர்ந்தோர்—மொழிந்தசீர்க்
கண்ணுதலான் எந்தை கயிலாய மால்வரையை
நண்ணுதலாம் நன்மை நமக்கு. உக

நமக்கிசைந்த வாநாளும் ஏத்திறல் நம்பர்
தமக்கழகு தாமே அறிவர்—அமைப்பொதும்பிற்
கல்லவா நீடருவிக் காளத்தி யாள்வாரை
வல்லவா நெஞ்சமே வாழ்த்து. உஉ

வாழ்த்துவாய் வாழ்த்தா தொழிவாய் மறுசுழியிட்
டாழ்த்துவாய் அஃதறிவாய் நீயன்றே—யாழ்த்தகைய
வண்டார் பொழிற்கயிலை வாழ்கென் றிருப்பதே
கண்டாய் அடியேன் கடன். உ௩

கடநாக மூடாடுங் காளத்திக் கோனைக்
கடனாகக் கைதொழுவார்க் கில்லை—இடம்நாடி
இந்நாட்டிற் கேவந்திங் கீண்டிற்றுக் கொண்டுபோய்
அந்நாட்டில் உண்டுழலு மாறு. உ௪

மாறிப் பிறந்து வழியிடை யாற்றிடை
ஏறி இழியும் இதுவல்லால்—தேறித்
திருக்கயிலை ஏத்தீரேற் சேமத்தால் யார்க்கும்
இருக்கயிலைக் கண்டீர் இனிது. உ௫

இனிதே பிறவி யினமரங்க ளேறிக்
கனிதேர் கடுவன்கள் தம்மின்—முனிவாய்ப்
பிணங்கிவருந் தண்சாரற் காளத்தி பேணி
வணங்கவல்ல ராயின் மகிழ்ந்து. உ௬

மகிழ்ந்தலரும் வண்கொன்றை மேலே மனமாய்
நெகிழ்ந்து நெகிழ்ந்துள்ளே நெக்குத்—திகழ்ந்திலங்கும்
விண்ணுறங்கா வோங்கும் வியன்கயிலை மேயாயென்
பெண்ணுறங்காள் என்செய்கேன் பேசு. உ௭

பேசும் பரிசறியாள் பேதை பிறர்க்கெல்லாம்
ஏசும் பரிசானா ளேபாவ—மாசுணைநீர்க்
காம்பையலைத் தாலிக்குங் காளத்தி யென்றென்று
பூம்பசலை மெய்ம்முழுதும் போர்த்து. உ௮

போர்த்த களிற்றுரியும் பூண்ட பொறியரவுந்
தீர்த்த மகளிருந்த செஞ்சடையும்—மூர்த்தி

குயிலாய மென்மொழியாள் கூறுய வாறுங்
கயிலாயா யான்காணக் காட்டு. உகூ

காட்டில் நடமாடிக் கங்காள ராகிப்போய்
நாட்டில் பலிதிரிந்து நாள்தோறும்—ஓட்டுண்பார்
ஆனாலும் என்கொலோ காளத்தி யாள்வாரை
வானோர் வணங்குமா வந்து. ௩0

வந்தமரர் ஏத்தும் மடைக்கூழும் வார்சடைமேல்
கொந்தவிழும் மாலை கொடுத்தார்கொல்—வந்தித்து
வாலுகுத்த வண்கயிலைக் கோமான் மணிமுடிமேல்
பாலுகுத்த மாணிக்குப் பண்டு. ௩க

பண்டிதுவே யன்றுகிற் கேளீர்கொல் பல்சருகு
கொண்டிலிங்கத் தும்பின்றாற் கூட்டிழைப்பக்—கண்டு
நலந்திக் கெலாமேத்துங் காளத்தி நாதர்
சிலந்திக்குச் செய்த சிறப்பு. ௩உ

செய்த சிறப்பெண்ணில் எங்குலக்குஞ் சென்றடைந்து
கைதொழுவார்க் கெந்தை கயிலாயர்—நொய்தளவிற்
காலற்காய்ந் தாரன்றே காணீர் கழல்தொழுத
பாலற்கா யன்று பரிந்து. ௩௩.

பரிந்துரைப்பார் சொற்கேளாள் எம்பெருமான் பாதம்
பிரிந்திருக்க கில்லாமை பேசும்—புரிந்தமரர்
நாதாவா காளத்தி நம்பாவா என்றென்று
மாதாவா வுற்ற மயல். ௩௪

மயலைத் தவிர்க்கநீ வாரா யொருமூன்
றெயிலைப் பொடியாக எய்தாய்—கயிலைப்
பருப்பதவா நின்னுடைய பாதத்தின் கீழே
இருப்பதவா வுற்றாள் இவள். ௩ரு

இவளுக்கு நல்லவா றெண்ணுதிரேல் இன்றே
தவளப் பொடியிவள்மேல் சாத்தி—இவளுக்குக்
காட்டுமின்கள் காளத்தி காட்டிக் கமழ்கொன்றை
சூட்டுமின்கள் தீருந் துயர். ௩௬

பதி. ௫

துயர்க்கெலாங் கூடாய தோற்குரம்பை புக்கு
மயக்கில் வழிகாண மாட்டேன்—வியற்கொடும்போர்
ஏற்றானே வண்கயிலை எம்மானே என்கொலோ
மேற்றான் இதற்கு விளைவு. ௧௭

விளையும் வினையரவின் வெய்ய விடத்தைக்
களைமின்ஞே காளத்தி யாள்வார்—வளைவில்
திருந்தியசீர் ஈசன் திருநாமம் என்னும்
மருந்தினைநீர் வாயிலே வைத்து. ௧௮

வாயிலே வைக்கு மளவின் மருந்தாகித்
தீய பிறவிநோய் தீர்க்குமே—தூயவே
கம்பெருமா தேவியொடு மன்னு கயிலாயத்
தெம்பெருமான் ஓரஞ் செழுத்து. ௧௯

அஞ்செழுத்துங் கண்டீர் அருமறைக ளாவனவும்
அஞ்செழுத்துங் கற்க அணித்தாகும்—நஞ்சவித்த
காளத்தி யார்க்குங் காண்டற் கரிதாய்ப்போய்
நீளத்தே நின்ற நெறி. ௨0

நெறிவார் சடையாய் நிலையின்மை நீயொன்
றறியாய்கொல் அந்தோ அயர்ந்தாள்—நெறியிற்
கனைத்தருவி தூங்குங் கயிலாயா நின்னை
நினைத்தருவி கண்சோர நின்று. ௨௧

நின்றும் இருந்துங் கிடந்தும் நடந்தும்யாம்
என்றும் நினைந்தாலும் என்கொலோ—சென்றுதன்
தாள்வா னவர்இறைஞ்சுந் தண்சாரற் காளத்தி
ஆள்வான் அருளாத வாறு. ௨௨

அருளாத வாறுண்டே யார்க்கேனு மாக
இருளார் கறைமிடற்றெம் ஈசன்—பொருளாய்ந்து
மெய்ம்மையே யுன்னில் வியன்கயிலை மேயான்வந்
திம்மையே தீர்க்கும் இடர். ௨௩

இடர்நீர் உமக்கோர் இடநாடிக் கொண்டு
நடவீரோ காலத்தால் நாங்கள்—கடல்வாய்க்

கருப்பட்டோங் கொண்மூகில்சேர் காளத்தி காண
ஒருப்பட்டோங் கண்டீர் உணர்ந்து. ௪௪

உணருங்கால் ஒன்றை உருத்தெரியக் காட்டாய்
புணருங்கால் ஆரமுதே போலும்—இணரிற்
கனியவாஞ் சோலைக் கயிலாய மேயாய்
இனியவா காண்நின் இயல்பு. ௪௫

நின்னியல்பை யாரே யறிவார் நினையுங்கால்
மன்னியசீர்க் காளத்தி மன்னவனே—நின்னில்
வெளிப்படுவ தேழுலகும் மீண்டே யொருகால்
ஒளிப்பதுவு மானால் உரை. ௪௬

உரையும் பொருளும் உடலும் உயிரும்
விரையும் மலரும்போல் விம்மிப்—புரையின்றிச்
சென்றவா றோங்குந் திருக்கயிலை எம்பெருமான்
நின்றவா றெங்கு நிறைந்து. ௪௭

நிறைந்தெங்கும் நீயேயாய் நின்றாலும் ஒன்றின்
மறைந்தைம் புலன்காண வாராய்—சிறந்த
கனியாருந் தண்சாரற் காளத்தி யாள்வாய்
பணியாயால் என்முன் பரிசு. ௪௮

பரிசறியேன் பற்றிலேன் கற்றிலேன் முற்றுங்
கரியுரியாய் பாதமே கண்டாய்—திரியும்
புரமாளச் செற்றவனே பொற்கயிலை மன்னும்
பரமா அடியேற்குப் பற்று. ௪௯

பற்றுவான் எவ்வுயிர்க்கும் எந்தை பசுபதியே
முற்றுவெண் திங்கள் முளைசூடி—வற்றுவாங்
கங்கைசேர் செஞ்சடையான் காளத்தி யுள்நின்ற
மங்கைசேர் பாகத்து மன். ௫0

மன்னா கயிலாயா மாமுத்த மாணிக்கம்
பொன்னார மாக்கொண்டு பூணாதே—எந்நாளும்
மின்செய்வார் செஞ்சடையாய் வெள்ளெலும்பு பூண்கின்ற
தென்செய்வான் எந்தாய் இயம்பு. ௫௧

இயம்பாய் மடநெஞ்சே ஏனோர்பால் என்ன
பயம்பார்த்துப் பற்றுவான் உற்றாய்—புயம்பாம்பால்
ஆர்த்தானே காளத்தி அம்மானே என்றென்றே
ஏத்தாதே வாளா இருந்து. ருஉ

இருந்தவா காணீர் இதுவென்ன மாயம்
அருந்தண் கயிலாயத் தண்ணல்—வருந்திப்போய்த்
தானும் பிச்சை புகும்போதுந் தன்னடியார்
வானை மண்ணை வைத்து. ருங

வைத்த இருநிதியே என்னுடைய வாழ்முதலே
சித்திலமே காளத்தி நீள்சுடரே—மொய்த்தொளிசேர்
அக்காலத் தாசை யடிநாயேன் காணுங்கால்
எக்காலத் தெப்பிறவி யான். ருச

யானென்றுந் தானென் றிரண்டில்லை என்பதனை
யானென்றுங் கொண்டிருப்பன் ஆனாலுந்—தேனுண்
டளிகள்தாம் பாடும் அகன்கயிலை மேயான்
தெளிகொடான் மாயங்கள் செய்து. ருரு

மாயங்கள் செய்தைவர் சொன்ன வழிநின்று
காயங்கொண் டாடல் கணக்கன்று—காயமே
நிற்பதன் றாதலாற் காளத்தி நின்மலன்சீர்
கற்பதே கண்டீர் கணக்கு. ருசு

கணக்கிட்டுக் கொண்டிருந்து காலனார் நம்மை
வணக்கி வலைப்படா முன்னம்—பிணக்கின்றிக்
காலத்தால் நெஞ்சே கயிலாயம் மேவியநற்
சூலத்தான் பாதந் தொழு. ருஎ

தொழுவாள் பெருளே தன் தோள்வளையுந் தோற்றாள்
மழுவாளன் காளத்தி வாழ்த்தி—எழுவாள்
நறுமா மலர்க்கொன்றை நம்முன்னே நாளைப்
பெறுமாறு காணீர்என் பெண். ருஅ

பெண்ணின் றயலார்முன் பேதை பிறைசூடி
கண்ணின்ற நெற்றிக் கயிலைக்கோன்—உள்நின்ற

காமந்தான் மீதூர நைவாட்குன் கார்க்கொன்றைத்
தாமந்தா மற்றிவளைச் சார்ந்து. ௫௯

சார்ந்தாரை எவ்விடத்துங் காப்பனவுஞ் சார்ந்தன்பு
கூர்ந்தார்க்கு முத்தி கொடுப்பனவும்—கூர்ந்துள்ளே
மூளத் தியானிப்பார் முன்வந்து நிற்பனவுங்
காளத்தி யார்தங் கழல். ௬0

தங்கழல்க ளார்ப்ப விளக்குச் சலன்சலனென்
றங்கழல்க ளார்ப்ப அனலேந்திப்—பொங்ககலத்
தார்த்தா டரவம் அகன்கயிலை மேயாய்நீ
கூத்தாடல் மேவியவா கூறு. ௬௧

கூறாய்நின் பொன்வாயாற் கோலச் சிறுகிளியே
வேறாக வந்திருந்து மெல்லெனவே—நீல்தாவு
மஞ்சடையும் நீள்குடுமி வாளருவிக் காளத்திச்
செஞ்சடைஎம் ஈசன் திறம். ௬௨

ஈசன் திறமே நினைந்துருகும் எம்மைப்போல்
மாசில் நிறத்த மடக்குருகே—கூசி
இருத்தியாய் நீயும் இருங்கயிலை மேயாற்
கருத்தியாய்க் காமுற்றா யாம். ௬௩

காமுற்றா யாமன்றே காளத்தி யான்கழற்கே
யாமுற்ற துற்றா யிருங்கடலே—யாமத்து
ஞாலத் துயிரெல்லாங் கண்துஞ்ச நள்ளிருள்கூர்
காலத்துந் துஞ்சாதுன் கண். ௬௪

கண்ணுங் கருத்துங் கயிலாய ரேஎமக்கென்
றெண்ணி யிருப்பன்யான் எப்பொழுதும்—நண்ணும்
பொறியா டரவசைத்த பூதப் படையார்
அறியார்கொல் நெஞ்சே யவர். ௬௫

நெஞ்சே யவர்கண்டாய் நேரே நினைவாரை
அஞ்சேலென் றாட்கொண் டருள்செய்வார்—நஞ்சேயுங்
கண்டத்தார் காளத்தி யாள்வார் கழல்கண்டீர்
அண்டத்தார் சூடு மலர். ௬௬

அலரோன் நெடுமால் அமரர்கோன் மற்றும்
பலராய்ப் படைத்துக்காத் தாண்டு—புலர்காலத்
தொன்றாகி மீண்டு பலவாகி நிற்கின்றான்
குன்றாத சீர்க்கயிலைக் கோ. கஎ

கோத்த மலர்வாளி கொண்(டு)அநங்கன் காளத்திக்
கூத்தன்மேல் அன்று குறித்தெய்யப்—பார்த்தலுமே
பண்பொழியாக் கோபத்தீச் சுற்றுதலும் பற்றற்று
வெண்பொடியாய் வீழ்ந்திலனோ வெந்து. கஅ

வெந்திறல்வேற் பார்த்தற் கருள்செய்வான் வேண்டியோர்
செந்தறுகட் கேழல் திறம்புரிந்து—வந்தருளும்
கானவனுங் கோலமியான் காணக் கயிலாய
வானவர்தங் கோமானே வா. கக

வாமான்தேர் வல்ல வயப்போர் விசயனைப்போல்
தாமா ருலகில் தவமுடையார்—தாமியார்க்குங்
காண்டற் கரியராய்க் காளத்தி யாள்வாரைத்
தீண்டத்தாம் பெற்றமையாற் சென்று. எ0

சென்றிறைஞ்சும் வானோர்தஞ் சிந்தைக்குஞ் சேயராய்
என்றும் அடியார்க்கு முன்னிற்பர்—நன்று
கனியவாஞ் சோலைக் கயிலாய மேயார்
இனியவர் பத்தர்க் கிவர். எக

இவரே முதற்றேவர் எல்லார்க்கும் மிக்கார்
இவரல்ல ரென்றிருக்க வேண்டாங்—கவராதே
காதலித்தின் றேத்துதிரேல் காளத்தி யாள்வார்நீர்
ஆதரித்த தெய்வமே யாம். எஉ

ஆமென்று நாளை யுளவென்று வாழ்விலே
தாமின்று வீழ்கை தவமன்று—யாமென்றும்
இம்மாய வாழ்வினையே பேணா திருங்கயிலை
அம்மானைச் சேர்வ தறிவு. எங

அறியாம லேனும் அறிந்தேனுஞ் செய்து
செறிகின்ற தீவினைகள் எல்லாம்—நெறிநின்று

நன்முகில்சேர் காளத்தி நாதன் அடிபணிந்து
பொன்முகரி யாடுதலும் போம். ௭௪

போகின்ற மாமுகிலே பொற்கயிலை வெற்பளவும்
ஏகின் றெமக்காக எம்பெருமான்—ஏகினால்
உண்ணப் படாநஞ்சம் உண்டாற்கென் உள்ளூறுநோய்
விண்ணப்பஞ் செய்கண்டாய் வேறு. ௭௫

வேறேயுங் காக்கத் தகுவேனை மெல்லியலாள்
கூறேயுங் காளத்திக் கொற்றவனே—ஏறேறும்
அன்பா அடியேற் கருளா தொழிகின்ற
தென்பாவ மேஅன்றோ இன்று. ௭௬

இன்று தொடங்கிப் பணிசெய்வேன் யான்உனக்(கு)
என்றும் இளமதியே எம்பெருமான்—என்றும்என்
உட்காதல் உண்மை உயர்கயிலை மேயாற்குத்
திட்காதே விண்ணப்பஞ் செய். ௭௭

செய்ய சடைமுடியென் செல்வனையான் கண்டெனது
கையறவும் உள்மெலிவும் யான்காட்டப்—பையவே
காரேறு பூஞ்சோலைக் காளத்தி யாள்வார்தம்
போரேறே இத்தெருவே போது. ௭௮

போது நெறியனவே பேசிநின் பொன்வாயால்
ஊதத் தருவன் ஒளிவண்டே—காதலாற்
கண்டார் வணங்குங் கயிலாயத் தெம்பெருமான்
வண்டார்மோந் தென்குழற்கே வா. ௭௯

வாவா மணிவாயான் மாவின் தளிர்கோதிக்
கூவா திருந்த குயிற்பிள்ளாய்—ஓவாதே
பூமாம் பொழிலுடுத்த பொன்மதில்சூழ் காளத்திக்
கோமான் வரவொருகாற் கூவு. ௮௰

கூவுதலும் பாற்கடலே சென்றவனைக் கூடுகஎன்
றேவினான் பொற்கயிலை எம்பெருமான்—மேவியசீர்
அன்பாற் புலிக்காலன் பாலன்பால் ஆசையினால்
தன்பாற்பால் வேண்டுதலுந் தான். ௮௧

தானே உலகாள்வான் தான்கண்ட வாவழக்க
மானான்மற் றார்இதனை யன்றென்பார்—வானோர்
களைகண்டா னாய்நின்ற காளத்தி யாள்வார்
வளைகொண்டார் மால்தந்தார் வந்து. ௮௨

வந்தோர் அரக்கனார் வண்கயிலை மால்வரையைத்
தந்தோள் வலியினையே தாங்கருதி—அந்தோ
இடந்தார் இடந்திட் டிடார்க்கீழ் எலிபோற்
கிடந்தார் வலியெலாங் கெட்டு. ௮௩

கெட்ட அரக்கரே வேதியரே கேளீர்கொல்
பட்டதுவும் ஓராது பண்டொருநாள்—ஒட்டக்
கலந்தரனார் காளத்தி யாள்வார்மேற் சென்று
சலந்தரனார் பட்டதுவுந் தாம். ௮௪

தாம்பட்ட தொன்றும் அறியார்கொல் சார்வரே
காம்புற்ற செந்நெற் கயிலைக்கோன்—பாம்புற்ற
ஆரத்தார் பத்தர்க் கருகணையார் காலனார்
தூரத்தே போவார் தொழுது. ௮௫

தொழுது நமனுந்தன் தூதுவர்க்குச் சொல்லும்
வழுவில்சீர்க் காளத்தி மன்னன்—பழுதிலாப்
பத்தர்களைக் கண்டாற் பணிந்தகலப் போமின்கள்
எத்தனையுஞ் சேய்த்தாக வென்று. ௮௬

வென்றைந்துங் காமாதி வேரறுத்து மெல்லவே
ஒன்ற நினைதிரேல் ஒன்றலாஞ்—சென்றங்கை
மானுடையான் என்னை யுடையான் வடகயிலை
தானுடையான் தன்னுடைய தாள். ௮௭

தாளொன்றாற் பாதாள மூடுருவத் தண்விசும்பில்
தாளொன்றால் அண்டங் கடந்துருவித்—தோளொன்றால்
திக்கனைத்தும் போக்குந் திறற்காளி காளத்தி
நக்கனைத்தான் கண்ட நடம். ௮௮

நடமாடுஞ் சங்கரன்தாள் நான்முகனுங் காணான்
படமாடு பாம்பணையான் காணான்—விடமேவுங்

காரேறு கண்டன் கயிலாயன் தன்னுருவை
யாரே அறிவார் இசைந்து. அக

இசையுந்தன் கோலத்தை யான்காண வேண்டி
வசையில்சீர்க் காளத்தி மன்னன்—அசைவின்றிக்
காட்டுமேற் காட்டிக் கலந்தென்னைத் தன்னோடுங்
கூட்டுமேற் கூடலே கூடு. கூo

கூடி யிருந்து பிறர்செய்யுங் குற்றங்கள்
நாடித்தங் குற்றங்கள் நாடாதே—வாடி
வடகயிலை ஏத்தாதே வாழ்ந்திடுவான் வேண்டில்
அடகயில ஆரமுதை விட்டு. கூக

விட்டாவி போக உடல்கிடந்து வெந்தீயில்
பட்டாங்கு வேமாறு பார்த்திருந்தும்—ஒட்டாவாங்
கள்ளலைக்கும் பூஞ்சோலைக் காளத்தி யுள்நின்ற
வள்ளலைச்சென் றேத்த மனம். கூஉ

மனமுற்று மையலாய் மாதரார் தங்கள்
கனமுற்றுங் காமத்தே வீழ்வர்—புனமுற்
றினக்குறவர் ஏத்தும் இருங்கயிலை மேயான்
தனக்குறவு செய்கலார் தாழ்ந்து. கூ௩

தாழ்ந்த சடையுந் தவளத் திருநீறுஞ்
சூழ்ந்த புலியதளுஞ் சூழரவுஞ்—சேர்ந்து
நெருக்கிவா னோரிறைஞ்சுங் காளத்தி யாள்வார்க்
கிருக்குமா கோலங்கள் ஏற்று. கூச

ஏற்றின் மணியே யமையாதோ ஈர்ஞ்சடைமேல்
வீற்றிருந்த வெண்மதியும் வேண்டுமோ—வாற்றருவி
கன்மேற்பட் டார்க்குங் கயிலாயத் தெம்பெருமான்
என்மேற் படைவிடுப்பாற் கிங்கு. கூரு

ஈங்கேவா என்றருளி என்மனத்தில் எப்பொழுதும்
நீங்காமல் நீவந்து நின்றாலுந்—தீங்கை
அடுகின்ற காளத்தி ஆள்வாய் நானல்ல
படுகின்ற வண்ணம் பணி. கூசா

பணியாது முன்னிவனைப் பாவியேன் வாளா
கணியாது காலங் கழித்தேன்—அணியுங்
கருமா மிடற்றெங் கயிலாயத் தெங்கள்
பெருமான தில்லை பிழை. கஎ

பிழைப்புவாய்ப் பொன்றறியேன் பித்தேறி னாற்போல்
அழைப்பதே கண்டாய் அடியேன்—அழைத்தாலும்
என்னா தரவேகொண் டின்பொழில்சூழ் காளத்தி
மன்னா தருவாய் வரம். கஅ

வரமாவ தெல்லாம் வடகயிலை மன்னும்
பரமாவுன் பாதார விந்தஞ்—சிரமார
ஏத்திடும்போ தாகவந் தென்மனத்தில் எப்பொழுதும்
வைத்திடுநீ வேண்டேன்யான் மற்று. கக

மற்றும் பலபிதற்ற வேண்டாம் மடநெஞ்சே
கற்றைச் சடையண்ணல் காளத்தி—நெற்றிக்கண்
ஆராஅமுதின் திருநாமம் அஞ்செழுத்துஞ்
சோராமல் எப்பொழுதுஞ் சொல். ௧00

திருச்சிற்றம்பலம்



## நக்கீரதேவ நாயனார் அருளிய

# திருஈங்கோய்மலை எழுபது

திருச்சிற்றம்பலம்

அடியும் முடியும் அரியும் அயனும்
படியும் விசும்பும் பாய்ந்தேறி—நொடியுங்கால்
இன்னதென அறியா ஈங்கோயே ஓங்கார
மன்னதென நின்றான் மலை. ௧

அந்தவிள மாக்குழவி யாயம் பிரிந்ததற்குக்
கொந்தவிழ்தேன் தோய்த்துக் குறமகளிர்—சந்தின்
இலைவளைக்கை யாற்கொடுக்கும் ஈங்கோயே மேரு
மலைவளைக்கை வில்லி மலை. ௨

அம்பவள வாய்மகளிர் அம்மனைக்குந் தம்மனையைச்
செம்பவளந் தாவென்னச் சீர்க்குறத்தி—கொம்பின்
இறுதலையி னாற்கிளைக்கும் ஈங்கோயே நம்மேல்
மறுதலைநோய் தீர்ப்பான் மலை. ௩

அரிகரியைக் கண்டவிடத் தச்சலிப்பா யோடப்
பிரிவரிய தன்பிடியைப் பேணிக்— கரிபெரிதுங்
கையெடுத்து நீட்டிக் கதஞ்சிறக்கும் ஈங்கோயே
மையடுத்த கண்டன் மலை. ௪

அரியும் உழுவையும் ஆளியுமே ஈண்டிப்
பரியிட்டுப் பன்மலர்கொண் டேறிச்—சொரிய
எரியாடி கண்டுகக்கும் ஈங்கோயே கூற்றந்
திரியாமற் செற்றான் சிலம்பு. ௫

ஆளி தொடர அரிதொடர ஆங்குடனே
வாளி கொடுதொடரு மாக்குறவர்—கோளின்
இடுசிலையி னாற்புடைக்கும் ஈங்கோயே நம்மேற்
கொடுவினைகள் வீட்டுவிப்பான் குன்று. ௬

இடுதினைதின் வேழங் கடியக் குறவர்
வெடிபடு வெங்கவண்கல் ஊன்ற—நெடுநெடென
நீண்டகழை முத்துதிர்க்கும் ஈங்கோயே ஏங்குமணி
பூண்டகழை யேறி பொருப்பு. ௭

ஈன்ற குறமகளிர்க் கேழை முதுகுறத்தி
நான்றகறிக் கேறசலை நற்கிழங்—கூன்றவைந்
தென்னன்னை உண்ணென் றெடுத்துரைக்கும் ஈங்கோயே
மின்னன்ன செஞ்சடையான் வெற்பு. ௮

ஈன்ற குழவிக்கு மந்தி யிருவரைமேல்
நான்ற நறவத்தைத் தானணுகித்—தோன்று
விரலால்தேன் தோய்த்தூட்டும் ஈங்கோயே நம்மேல்
வரலாநோய் தீர்ப்பான் மலை. ௯

உண்டிருந்த தேனை அறுபதங்கள் ஊடிப்போய்ப்
பண்டிருந்த யாழ்முரலப் பைம்பொழில்வாய்க்—கண்டிருந்த
மாமயில்க ளாடி மருங்குவரும் ஈங்கோயே
பூமயிலி தாதை பொருப்பு. ௧௦

ஊடிப் பிடிஉறங்க ஒண்கதலி வண்கனிகள்
நாடிக் களிறு நயந்தெடுத்துக்—கூடிக்
குணமருட்டிக் கொண்டாடும் ஈங்கோயே வானோர்
குணமருட்டுங் கோளரவன் குன்று. ௧௧

எய்யத் தொடுத்தோன் குறத்திநோக் கேற்றதெனக்
கையிற் கணைகளைந்து கன்னிமான்—பையப்போ
என்கின்ற பாவனைசெய் ஈங்கோயே தூங்கெயில்கள்
சென்றன்று வென்றான் சிலம்பு. ௧௨

ஏழை இளமாதே என்னொடுநீ போதென்று
கூழை முதுவேடன் கொண்டுபோய்—வேழ
வினைக்குவால் வீட்டுவிக்கும் ஈங்கோயே நந்தம்
வினைக்குவால் வீட்டுவிப்பான் வெற்பு. ௧௩

ஏனம் உழுத புழுதி இனமணியைக்
கானவர்தம் மக்கள் கனல்என்னக்—கூனல்

இறக்கங் கதிர்வெதுப்பும் ஈங்கோயே நம்மேல்
மறுக்கங்கள் தீர்ப்பான் மலை. கச

ஏனங் கிளைத்த இனபவள மாமணிகள்
கானல் எரிபரப்பக் கண்டஞ்சி—யானை
இனமிரிய முல்லைநகும் ஈங்கோயே நம்மேல்
வினையிரியச் செற்றுகந்தான் வெற்பு. கரு

ஒருகணையுங் கேழல் உயிர்செகுத்துக் கையில்
இருகணையும் ஆனைமேல் எய்ய—வருகணையும்
ஆளரிதா னோட அரிவெருவும் ஈங்கோயே
கோளரிக்குங் காண்பரியான் குன்று. கசு

ஓங்கிப் பரந்தெழுந்த ஒள்ளிலவத் தண்போதைத்
தூங்குவதோர் கொள்ளி யெனக்கடுவன்—மூங்கில்
தழையிறுத்துக் கொண்டோச்சும் ஈங்கோயே சங்கக்
குழையிறுத்த காதுடையான் குன்று. கஎ

ஓடு முகிலை உகிரால் இறவூன்றி
மாடுபுக வான்கை மிகமடுத்து—நீடருவி
மாச்சீயம் உண்டு மனங்களிக்கும் ஈங்கோயே
சோச்சீயங் காண்பரியான் குன்று. கஅ

கண்ட கனிநுகர்ந்த மந்தி கருஞ்சுனைநீர்
உண்டு குளிர்ந்திலவென் றூடிப்போய்க்—கொண்டல்
இறைக்கீறி வாய்மடுக்கும் ஈங்கோயே நான்கு
மறைக்கீறு கண்டான் மலை. ககூ

கருங்களிற்றின் வெண்கொம்பாற் கல்லுரல்வாய் நல்லார்
பெருந்தினைவெண் பிண்டி யிடிப்ப—வருங்குறவன்
கைக்கொணருஞ் செந்தேன் கலந்துண்ணும் ஈங்கோயே
மைக்கொணருங் கண்டன் மலை. உ௦

கனையபா லாங்கனிகள் கல்விளையர் தொக்க
நனைய கலத்துரத்தி லேந்தி—மனைகள்
வரவிரும்பி ஆய்பார்க்கும் ஈங்கோயே பாங்கார்
குரவரும்பு செஞ்சடையான் குன்று. உக

கடக்களிறு கண்வளரக் கார்நிறவண் டார்ப்பச்
சுடர்க்குழையார் பாட்டெழவு கேட்டு—மடக்கிளிகள்
கீதம் தெரிந்துரைக்கும் ஈங்கோயே ஆல்கீழ்நால்
வேதந் தெரிந்துரைப்பான் வெற்பு. உஉ

கறுத்தமுலைச் சூற்பிடிக்குக் கார்யானை சந்தம்
இறுத்துக்கை நீட்டுமீங் கோயே—செறுத்த
கடதடத்த தோலுரிவைக் காப்பமையப் போர்த்த
விடமிடற்றி னான்மருவும் வெற்பு. உங

கங்குல் இரைதேருங் காகோ தரங்கேழற்
கொம்பின் இடைக்கிடந்த கூர்மணியைப்—பொங்கி
உருமென்று புற்றடையும் ஈங்கோயே காமன்
வெருவொன்றக் கண்சிவந்தான் வெற்பு. உச

கலவிக் களிறசைந்த காற்றெறங்குங் கானா
திலைகைக்கொண் டேந்திக்கால் வீச—உலவிச்சென்
றொண்பிடிகாற் றேற்றுகக்கும் ஈங்கோயே பாங்காய
வெண்பொடிநீற் றான்மருவும் வெற்பு. உரு

கன்னிப் பிடிமுதுகிற் கப்பருவ முட்பருகி
அன்னைக் குடிவரலா றஞ்சிப்—பின்னரே
ஏன்தருக்கி மாதவஞ்செய் ஈங்கோயே நீங்காத
மான்தரித்த கையான் மலை. உசு

கள்ள முதுமறவர் காட்டகத்து மாவேட்டை
கொள்ளென் றழைத்தகுரல் கேட்டுத்—துள்ளி
இனக்கவலை பாய்ந்தோடும் ஈங்கோயே நந்தம்
மனக்கவலை தீர்ப்பான் மலை. உஎ

கல்லைப் புனமேய்ந்து கார்க்கொன்றைத் தார்போர்த்துக்
கொல்லை எழுந்த கொழும்புறவின்—முல்லையங்கட்
பல்லரும்பு மொய்த்தினும் ஈங்கோயே மூவெயிலுங்
கொல்லரும்பக் கோல்கோத்தான் குன்று. உஅ

கல்லாக் குரங்கு பளிங்கிற் கனிகாட்ட
எல்லாக் குரங்கும் உடன்ஈண்டி—வல்லே

இருந்துகிராற் கற்கிளைக்கும் ஈங்கோயே மேனிப்
பொருந்தஅராப் பூண்டான் பொருப்பு. ௨௯

கண்கொண் டவிர்மணியின் நாப்பண் கருங்கேழல்
வெண்கோடு வீழ்ந்த வியன்சாரல்—தண்கோ
டிளம்பிறைசேர் வான்கடுக்கும் ஈங்கோயே வேதம்
விளம்பிறைசேர் வான்கடுக்கும் வெற்பு. ௩௦

காந்தள்அங் கைத்தலங்கள் காட்டக் களிமஞ்ஞை
கூந்தல் விரித்துடனே கூத்தாடச்—சாய்ந்திரங்கி
ஏர்க்கொன்றை பொன்கொடுக்கும் ஈங்கோயே செஞ்சடைமேற்
கார்க்கொன்றை ஏன்றான் கடறு. ௩௧

குறமகளிர் கூடிக் கொழுந்தினைகள் குத்தி
நறவமாக் கஞ்சகங்கள் நாடிச்—சிறுகுறவர்
கைந்நீட்டி உண்ணக் களித்துவக்கும் ஈங்கோயே
மைந்நீட்டுங் கண்டன் மலை. ௩௨

கூழை முதுமந்தி கோல்கொண்டு தேன்பாய
ஏழை இளமந்தி சென்றிருந்து—வாழை
இலையால்தே னுண்டுவக்கும் ஈங்கோயே இஞ்சி
சிலையாற்றான் செற்றான் சிலம்பு. ௩௩

கொல்லை இளவேங்கைக் கொத்திறுத்துக் கொண்டுசுனை
மல்லைநீர் மஞ்சனமா நாட்டிக்கொண்—டொல்லை
இருங்கைக் களிறேறும் ஈங்கோயே மேனோய்
வருங்கைக் களைவான் மலை. ௩௪

கொவ்வைக் கனிவாய்க் குறமகளிர் கூந்தல்சேர்
கவ்வைக் கடிபிடிக்குங் காதன்மையாற்—செவ்வை
எறித்தமலர் கொண்டுவிடும் ஈங்கோயே அன்பர்
குறித்தவரந் தான்கொடுப்பான் குன்று. ௩௫

கொடுவிற் சிலைவேடர் கொல்லை புகாமற்
படுகுழிகள் கல்லுதல்பார்த் தஞ்சி—நெடுநாகந்
தண்டூன்றிச் செல்லுஞ்சீர் ஈங்கோயே தாழ்சடைமேல்
வண்டூன்றுந் தாரான் மலை. ௩௬

கோங்கின் அரும்பழித்த கொங்கைக் குறமகளிர்
வேங்கை மணிநீழல் விளையாடி—வேங்கை
வரவதனைக் கண்டிரியும் ஈங்கோயே தீங்கு
வரவதனைக் காப்பான் மலை. ௩எ

சந்தனப்பூம் பைந்தழையைச் செந்தேனில் தோய்த்தியானை
மந்தண் மடப்பிடியின் வாய்க்கொடுப்ப—வந்ததன்
கண்களிக்கத் தான்கலிக்கும் ஈங்கோயே தேங்காதே
விண்களிக்க நஞ்சுண்டான் வெற்பு. ௩அ

சந்தின் இலையதனுள் தண்பிண்டி தேன்கலந்து
கொந்தி யினிதுண்ணக் குறமகளிர்—மந்தி
இளமகளிர் வாய்க்கொடுத்துண் ஈங்கோயே வெற்பின்
வளமகளிர் பாகன் மலை. ௩௯

சாரற் குறத்தியர்கள் தண்மருப்பால் வெண்பிண்டி
சேரத் தருக்கி மதுக்கலந்து—வீரத்
தமரினிதா உண்ணுஞ்சீர் ஈங்கோயே இன்பக்
குமரன்முது தாதையார் குன்று. ௪0

தாயோங்கித் தாமடரும் தண்சாரல் ஒண்கானம்
வேயோங்கி முத்தம் எதிர்பிதுங்கித்—தீயோங்கிக்
கண்கன்றித் தீவிளைக்கும் ஈங்கோயே செஞ்சடைமேல்
வண்கொன்றைத் தாரான் வரை. ௪௧

செடிமுட்டச் சிங்கத்தின் சீற்றத்தீக் கஞ்சிப்
பிடியட்ட மாக்களிறு போந்து—கடம்முட்டி
என்னேசீ என்னுஞ்சீர் ஈங்கோயே ஏந்தழலிற்
பொன்னே ரனையான் பொருப்பு. ௪௨

சுனைநீடு தாமரையின் தாதளைந்து சோதிப்
புனைநீடு பொன்னிறத்த வண்டு—மனைநீடி
மன்னி மணம்புணரும் ஈங்கோயே மாமதியஞ்
சென்னி அணிந்தான் சிலம்பு. ௪௩

செந்தினையின் வெண்பிண்டி பச்சைத்தே னாற்குழைத்து
வந்த விருந்தூட்டும் மணிக்குறத்தி—பந்தியாக்

தேக்கிலைகள் இட்டுச் சிறப்புரைக்கும் ஈங்கோயே
மாக்கலைகள் வைத்தான் மலை. சச

தடங்குடைந்த கொங்கைக் குறமகளிர் தங்கள்
இடம்புகுந்தங் கின்நறவம் மாந்தி—உடன்கலந்து
மாக்குரவை யாடி மகிழ்ந்துவரும் ஈங்கோயே
கோக்குரவை யாடிகொழுங் குன்று. சரு

தாமரையின் தாள்தகைத்த தாமரைகள் தாள்தகையத்
தாமரையிற் பாய்ந்துகளுந் தண்புறவில்—தாமரையின்
ஈட்டம் புலிசிதறும் ஈங்கோயே எவ்வுயிர்க்கும்
வாட்டங்கள் தீர்ப்பான் மலை. சசு

தெள்ளகட்ட பூஞ்சுனைய தாமரையின் தேமலர்வாய்
வள்ளவட்டப் பாழி மடலேறி—வெள்ளகட்ட
காராமை கண்படுக்கும் ஈங்கோயே வெங்கூற்றைச்
சேராமற் செற்றான் சிலம்பு. சஎ

தேன்மருவும் பூஞ்சுனைக்கட் புக்குச்செழு * * சஅ

சகூ—கூக - இவை எப்பிரதிகளிலும் கிடைத்தில.

* * * *

கலைகள் வருவனகள் கண்டு—சிலையை
இருந்தெடுத்துக் கோல்தெரியும் ஈங்கோயே மானைப்
புரிந்திடத்துக் கொண்டான் பொருப்பு. கூஉ

மத்தக் கரிமுகத்தை வாளரிகள் பீறவொளிர்
முத்தம் பனிநிகர்க்கும் மொய்ம்பிற்றால்—அத்தகைய
ஏனற் புனம்நீடும் ஈங்கோயே தேங்குபுனல்
கூனற் பிறையணிந்தான் குன்று. கூங

மந்தி இனங்கள் மணிவரையின் உச்சிமேல்
முந்தி யிருந்து முறைமுறையே—நந்தி
அளைந்தாடி ஆலிக்கும் ஈங்கோயே கூற்றம்
வளைந்தோடச் செற்றான் மலை. கூச

மந்தி மகவினங்கள் வண்பலவின் ஒண்சுளைக்கண்
முந்திப் பறித்த முறியதனுள்—சிந்திப்போய்த்
தேனாறு பாயுஞ்சீர் ஈங்கோயே செஞ்சடைமேல்
வானாறு வைத்தான் மலை. கரு

முள்ளார்ந்த வெள்ளிலவம் ஏறி வெறியாது
கள்ளார்ந்த பூப்படியுங் கார்மயில்தான்—ஒள்ளார்
எரிநடுவுட் பெண்கொடியார் ஏய்க்குமீங் கோயே
புரிநெடுநூல் மார்பன் பொருப்பு. கசு

வளர்ந்த இளங்கன்னி மாங்கொம்பின் கொங்கை
அளைந்து வடுப்படுப்பான் வேண்டி—இளந்தென்றல்
எல்லிப் புகநுழையும் ஈங்கோயே தீங்கருப்பு
வில்லிக்குக் கூற்றானான் வெற்பு. கஎ

வான மதிதடவல் உற்ற இளமந்தி
கான முதுவேயின் கண்ணேறித்—தானங்
கிருந்துயரக் கைநீட்டும் ஈங்கோயே நம்மேல்
வருந்துயரந் தீர்ப்பான் மலை. கஅ

வேய்வனத்துள் யானை தினைகவர வேறிருந்து
காய்வனத்தே வேடன் கணைவிசைப்ப—வேயணைத்து
மாப்பிடிமுன் ஓட்டுமீங் கோயே மறைகலிக்கும்
பூப்பிடிபொற் றாளான் பொருப்பு. கசு

வழுகிதழ்க் காந்தள்மேல் வண்டிருப்ப ஒண்தீ
முழுகியதென் றஞ்சி முதுமந்தி—பழகி
எழுந்தெழுந்து கைநெரிக்கும் ஈங்கோயே திங்கட்
கொழுந்தெழுந்த செஞ்சடையான் குன்று. எ௦

திருச்சிற்றம்பலம்

இப்பிரபந்தத்திலே சில செய்யுள்களும் அடிகளும் கிடைத்தில.

நக்கீரதேவ நாயனார் அருளிய

# திருவலஞ்சுழி மும்மணிக்கோவை*

திருச்சிற்றம்பலம்

வணங்குதும் வாழி நெஞ்சே புணர்ந்துடன்
பொருகடல் முகந்து கருமுகிற் கணம்நற்
படவர வொடுங்க மின்னிக் குடவரைப்
பொழிந்து கொழித்திழி அருவி குணகடல்
5 மடுக்குங் காவிரி மடந்தை வார்புனல்
உடுத்த மணிநீர் வலஞ்சுழி
அணிநீர்க் கொன்றை அண்ணல தடியே. க

அடிப்போது தந்தலைவைத் தவ்வடிகள் உன்னிக்
கடிப்போது கைக்கொண்டார் கண்டார்—முடிப்போதா
வானுகஞ் சூடும் வலஞ்சுழியான் வானோருங்
காணாத செம்பொற் கழல். உ

கழல்வண்ண முஞ்சடைக் கற்றையும் மற்றவர் காணகில்லாத்
தழல்வண்ணங் கண்டே தளர்ந்தார் இருவரந் தாமரையின்
நிழல்வண்ணம் பொன்வண்ணம் நீர்நிற வண்ணம் நெடியவண்ணம்
அழல்வண்ணம் முந்நீர் வலஞ்சுழி யாள்கின்ற அண்ணலையே.

அண்ண லதுபெருமை கண்டனங் கண்ணுதற்
கடவுள் மன்னிய தடமல்கு வலஞ்சுழிப்
பனிப்பொருட் பயந்து பல்லவம் பழிக்குந்
திகழொளி முறுவல் தேமொழிச் செவ்வாய்த்
5 திருந்திருங் குழலியைக் கண்டு
வருந்தியென் உள்ளம் வந்த அப்போதே. ச

போதெலாம் பூங்கொன்றை கொண்டிருந்த பூங்கொன்றைத்
தாதெலாந் தன்மேனித் தைவருமால்—தீதின்

*முறையே அகவல், வெண்பா, கட்டளைக்கலித்துறைப் பாக்களாலாகிய கோவை.

மறைக்கண்டன் வானோன் வலஞ்சுழியான் சென்னிப்
பிறைக்கண்டங் கண்டணைந்த பெண். ௫

பெண்கொண் டிருந்து வருந்துங்கொ லாம்பெரு மான்திருமால்
வண்கொண்ட சோலை வலஞ்சுழி யான்மதி சூடிநெற்றிக்
கண்கொண்டகோபங்கலந்தனபோல்மின்னிக் கார்ப்புனத்துப்
பண்கொண்டு வண்டினம் பாடநின் றார்த்தன பன்முகிலே.

முகிற்கணம் முழங்க முனிந்த வேழம்
எயிற்றிடை யடக்கிய வெகுளி யாற்ற
அணிநடை மடப்பிடி யருகுவந் தணைதருஞ்
சாரல் தண்பொழில் அணைந்து சோருந்
5 தேனுகு தண்டழை செறிதரு வனத்திற்
சருவரி வாரல்எம் பெருமநீர் மல்கு
சடைமுடி ஒருவன் மருவிய வலஞ்சுழி
அணிதிகழ் தோற்றத் தங்கயத் தெழுந்த
மணிநீர்க் குவளை யன்ன
10 அணிநீர்க் கருங்கண் ஆயிழை பொருட்டே. ௭

பொருட்டக்கீர் சில்பலிக்கென் றில்புகுந்தீ ரேனும்
அருட்டக்கீர் யாதுமூ ரென்றேன்—மருட்டக்க
மாமறைய மென்றார் வலஞ்சுழிநம் வாழ்வென்றார்
தாமறைந்தார் காணேன்கைச் சங்கு. ௮

சங்கம் புரளத் திரைசுமந் தேறுங் கழியருகே
வங்கம் மலியுந் துறையிடைக் காண்டிர் வலஞ்சுழியா
றங்கம் புலனைந்து மாகிய நான்மறை முக்கண்நக்கன்
பங்கன் றிருவர்க் கொருவடி வாகிய பாவையையே. ௯

பாவை யாடிய துறையும் பாவை
மருவொடு வளர்ந்த வன்னமு மருவித்
திருவடி யடியேன் தீண்டிய திறனுங்
கொடியேன் உள்ளங்கொண்ட சூழலுங் கள்ளக்
5 கருங்கண் போன்ற காவியும் நெருங்கி
அவளை போன்ற தன்றே தவளச்
சாம்பலம் பொடிசாந் தெனத்தை வந்து

தேம்பல் வெண்பிறை சென்னிமிசை வைத்த
வெள்ளேற் றுழவன் வீங்குபுனல் வலஞ்சுழி
10 வண்டினம் பாடுஞ் சோலைக்
கண்ட வம்மஅக் கடிபொழில் தானே. ௧0

தானேறு மானேறு கைதொழேன் தண்சடைமேல்
தேனேறு கொன்றைத் திறம்பேசேன்—வானேறு
மையாருஞ் சோலை வலஞ்சுழியான் என்கொலென்
கையார் வளைகவர்ந்த வாறு. ௧௧

ஆறுகற் றைச்சடைக் கொண்டொர்ஒற் றைப்பிறை சூடிமற்றைக்
கூறுபெண் ணுயவன் கண்ணூர் வலஞ்சுழிக் கொங்குதங்கு
நாறுதண் கொம்பரன் னீர்களின் னேநடந் தேகடந்தார்
சீறுவென் றிச்சிலைக் கானவர் வாழ்கின்ற சேண்நெறியே. ௧௨

நெறிதரு குழலி விறலியொடு புணர்ந்த
செறிதரு தமிழ்நூற் சீரியாழ்ப் பாண
பொய்கை யூரன் புதுமணம் புணர்தர
மூவாமூன்று பயன்பெற் றனமே நீயவன்
5 புனைதார் மாலை பொருந்தப் பாடி
இல்லதும் உள்ளதுஞ் சொல்லிக் கல்லல்
வாசகம் வழாமற் பேச வண்மையில்
வானர மகளிர்வான் பொருள்பெற் றனை யவரேல்
எங்கையர் கொங்கைக் குங்குமந் தழீஇ
10 விழையா இன்பம் பெற்றனர் யானேல்
அரனமர்ந் துறையும் மணிநீர் வலஞ்சுழிச்
சுரும்பிவர் நறவயற் சூழ்ந்தெழு கரும்பில்
தீநீரன்ன வாய்நீர் சோருஞ்
சிலம்புகுரற் சிறுபறை பூண்ட
15 வலம்புகுரற் கிங்கிணிக் களிறுபெற் றனனே. ௧௩

தனமேறிப் பீர்பொங்கித் தன்னங்கம் வேறாய்
மனம்வேறு பட்டொழிந்தாள் மாதோ—இனமேறிப்
பாடாலம் வண்டலம்பும் பாய்நீர் வலஞ்சுழியான்
கோடாலங் கண்டணைந்த கொம்பு. ௧௪

கொம்பார் குளிர்மறைக் காடனை வானவர் கூடிநின்று
நம்பா எனவணங் கப்பெறு வானை நகரெரிய
அம்பாய்ந் தவனை வலஞ்சுழி யானைஅண் ணமலைமேல்
வம்பார் நறுங்கொன்றைத் தாருடை யானை வணங்குதுமே.

திருச்சிற்றம்பலம்

## நக்கீரதேவ நாயனூர் அருளிய

# திருவெழுகூற்றிருக்கை



திருச்சிற்றம்பலம்

ஓருடம் பிருரு வாயினை யொன்றுபுரிந்
தொன்றி நீரிதழ்க் கொன்றை சூடினை
மூவிலைச் சூலம் ஏந்தினை
சடருஞ் சென்னி மீமிசை
5 இருகோட் டொருமதி எழில்பெற மிலைச்சினை
ஒருகணை யிருதோள் செவியுற வாங்கி
மூவெயில் நாற்றிசை முரண்அரண் செகுத்தனை
ஆற்ற முன்னெறி பயந்தனை
செறிய இரண்டு நீக்கி
10 ஒன்று நினைவோர்க் குறுதி யாயினை
அந்நெறி யொன்று
மனம்வைத் திரண்டு நினைவி லோர்க்கு
முன்னெறி யுலகங் காட்டினை அந்நெறி
நான்கென வூழி தோற்றினை
15 சொல்லும் ஐந்தலை அரவசைத் தசைந்தனை
நான்முகன் மேல்முகங் கபாலம் ஏந்தினை
நூன்முக முப்புரி மார்பில்
இருவர் அங்கம் ஒருங்குடன் ஏந்திய
ஒருவநின் ஒருதி காணு திருவர்
20 மூவுல குழன்று நாற்றிசை உழிதர

ஐம்பெருங் குன்றத் தழலாய்த் தோன்றினை
ஆறுநின் சடையது ஐந்துநின் நிலையது
நான்குநின் வாய்மொழி மூன்றுநின் கண்ணே
இரண்டுநின் குழையே ஒன்றுநின் ஏறே
25 ஒன்றிய காட்சி உமையவள் நடுங்க
இருங்களிற் றுரிவை போர்த்தனை நெருங்கி
முத்தீ நான்மறை ஐம்புலன் அடக்கிய
அறுதொழி லாளர்க் குறுதி பயந்தனை
ஏழில் இன்னரம் பிசைத்தனை
30 ஆறில் அமுதம் பயந்தனை ஐந்தில்
விறலியர் கொட்டு மழுத்த வேந்தினை
ஆல நீழல் அன்றிருந் தறநெறி
நால்வர் கேட்க நன்கினி துரைத்தனை
நன்றி யில்லா மூந்நீர்ச் சூர்மாக்
35 கொன்றங் கிருவரை எறிந்த ஒருவன்
தாதை யொருமிடற் றிருவடி வாயினை
தருமமூவகை உலகம் உணரக்
கூறுவை நால்வகை
இலக்கண இலக்கியம் நலத்தக மொழிந்தனை
40 ஐங்கணை யவனொடு காலனை அடர்த்தனை
அறுவகைச் சமயமும் நெறிமையில் வகுத்தனை
ஏழின் ஓசை இராவணன் பாடத்
தாழ்வாய்க் கேட்டவன் தலையளி பொருத்தினை
ஆறிய சிந்தை யாகி ஐங்கதிர்த்
45 தேரொடு திசைசெல விடுத்தோன்
நாற்றோள் நலனே நந்திபிங் கிருடியென்
றேற்ற பூதம் மூன்றுடன் பாட
இருகண் மொந்தை யொருகணங் கொட்ட
மட்டுவிரி யலங்கல் மலைமகள் காண
50 நட்ட மாடிய நம்ப அதனாற்
சிறியேன் சொன்ன அறிவில் வாசகம்
வறிதெனக் கொள்ளா யாக வேண்டும்
வெறிகமழ் கொன்றையொடு வெண்ணில வணிந்து

கீதம் பாடிய அண்ணல்
55 பாதஞ் சென்னியிற் பரவுவன் பணிந்தே. க

பணிந்தேன் நின்பாதம் பரமேட்டி பால்நீ
றணிந்தால வாயில் அமர்ந்தாய்—தணிந்தென்மேல்
மெய்யெரிவு தீரப் பணித்தருளு வேதியனே
ஐயுறவொன் றின்றி அமர்ந்து. உ

திருச்சிற்றம்பலம்

நக்கீரதேவ நாயனர் அருளிய

# பெருந்தேவபாணி

திருச்சிற்றம்பலம்

சூல பாணியை சுடர்தரு வடிவனை
நீல கண்டனை நெற்றியோர் கண்ணனை
பால்வெண் ணீற்றனை பரம யோகியை
காலனைக் காய்ந்த கறைமிடற் றண்ணலை
5 நூலணி மார்பனை நுண்ணிய கேள்வியை
கோல மேனியை கொக்கரைப் பாடலை
வேலுடைக் கையனை விண்டோய் முடியனை
ஞாலத் தீயினை நாதனைக் காய்ந்தனை
தேவ தேவனை திருமறு மார்பனை
10 காலமாகிய கடிகமழ் தாரனை
வேத கீதனை வெண்டலை யேந்தியை
பாவ நாசனை பரமேச்சு வரனை
கீதம் பாடியை கிளர்பொறி அரவனை
போதணி கொன்றைஎம் புண்ணிய ஒருவனை
15 ஆதி மூர்த்தியை அமரர்கள் தலைவனை
சாதி வானவர் தம்பெரு மான்தனை
வேத விச்சையை விடையுடை அண்ணலை
ஓத வண்ணனை உலகத் தொருவனை

நாத னாகிய நன்னெறிப் பொருளினை
20 மாலை தானெரி மயானத் தாடியை
வேலை நஞ்சினை மிகஅமு தாக்கியை
வேத வேள்வியை விண்ணவர் தலைவனை
ஆதி மூர்த்தியை அருந்தவ முதல்வனை
ஆயிர நூறுக் கறிவரி யானை
25 பேயுருவு தந்த பிறையணி சடையனை
மாசறு சோதியை மலைமகள் கொழுநனை
கூறிய மழுவனை கொலற்கருங் காலனைச்
சீறிய அடியாற் செற்றருள் சிவனை
பூதிப் பையனை புண்ணிய மூர்த்தியை
30 பீடுடை யாற்றைப் பிராணி தலைவனை
நீடிய நிமலனை நிறைமறைப் பொருளினை
ஈசனை இறைவனை ஈறில் பெருமையை
நேசனை நினைப்பவர் நெஞ்சத் துள்ளனை
தாதணி மலரனை தருமனை பிரமனை
35 காதணி குழையனை களிற்றின் உரியனை
சூழ்சடைப் புனலனை சுந்தர விடங்கனை
தார்மலர்க் கொன்றை தயங்கு மார்பனை
வித்தக விதியனை
தீதமர் செய்கைத் திரிபுரம் எரித்தனை
40 பிரமன் பெருந்தலை நிறைய தாகக்
கருமன் செந்நீர் கபாலம் நிறைத்தனை
நிறைத்த கபாலச் செந்நீர் நின்று
முறைத்த வுருவார் ஐயனைத் தோற்றினை
தேவரும் அசுரருந் திறம்படக் கடைந்த
45 அராவமுண் நஞ்சம் அமுத மாக்கினை
ஈரமில் நெஞ்சத் திராவணன் தன்னை
வீரம் அழித்து விறல்வாள் கொடுத்தனை
திக்கமர் தேவருந் திருந்தாச் செய்கைத்
தக்கன் வேள்வியைத் தளரச் சாடினை
50 வேதமும் நீயே வேள்வியும் நீயே
நீதியும் நீயே நிமலன் நீயே

புண்ணியன் நீயே புனிதன் நீயே
பண்ணியன் நீயே பழம்பொருள் நீயே
ஊழியும் நீயே உலகமும் நீயே
55 வாழியும் நீயே வரதனும் நீயே
தேவரும் நீயே தீர்த்தமும் நீயே
மூவரும் நீயே முன்னெறி நீயே
மால்வரை நீயே மறிகடல் நீயே
இன்பமும் நீயே துன்பமும் நீயே
60 தாயும் நீயே தந்தையும் நீயே
விண்முதற் பூதம் ஐந்தவை நீயே
பத்தியும் நீயே முத்தியும் நீயே
சொலற்கருந் தன்மைத் தொல்லோய் நீயே அதனாற்
கூடல் ஆலவாய்க் குழகனாவ
65 தறியா தருந்தமிழ் பழித்தனன் அடியேன்
ஈண்டிய சிறப்பின் இணையடிக் கீழ்நின்று
வேண்டு மதுவினி வேண்டுவன் விரைந்தே. க

விரைந்தேன்மற் றெம்பெருமான் வேண்டியது வேண்டா
திகழ்ந்தேன் பிழைத்தேன் அடியேன்—விரைந்தென்மேல்
சீற்றத்தைத் தீர்த்தருளுந் தேவாதி தேவனே
ஆற்றவுநீ செய்யும் அருள். உ

திருச்சிற்றம்பலம்



நக்கீரதேவ நாயனார் அருளிய

# கோபப் பிரசாதம்

திருச்சிற்றம்பலம்

தவறுபெரி துடைத்தே தவறுபெரி துடைத்தே
வெண்டிரைக் கருங்கடல் மேல்துயில் கொள்ளும்
அண்ட வாணனுக் காழியன் றருளியும்
உலகம் மூன்றும் ஒருங்குடன் படைத்த
5 மலரோன் தன்னை வான்சிரம் அரிந்தும்
கான வேடுவன் கண்பரிந் தப்ப
வான நாடு மற்றவற் கருளியுங்
கடிபடு பூங்கணைக் காம னுருடல்
பொடிபட விழித்தும் பூதலத் திசைந்த
10 மானுட னாகிய சண்டியை
வானவ னாக்கியும்
மறிகடல் உலகின் மன்னுயிர் கவருங்
கூற்றுவன் தனக்கோர் கூற்றுவ னாகியுங்
கடல்படு நஞ்சங் கண்டத் தடக்கியும்
15 பருவரை சிலையாப் பாந்தள் நாணாத்
திரிபுரம் எரிய ஒருகணை துரந்துங்
கற்கொண் டெறிந்த சாக்கியன் அன்பு
தற்கொண் டின்னருள் தான்மிக அளித்துங்
கூற்றெனத் தோன்றியுங் கோளரி போன்றுந்
20 தோற்றிய வாரணத் தீருரி போர்த்தும்
நெற்றிக் கண்ணும் நீள்புயம் நான்கும்
நற்றா நந்தீச் சுவரற் கருளியும்
அறிவிலை யோரா அரக்க னுருடல்
நெறநெற இறுதர ஒருவிரல் ஊன்றியுந்
25 திருவுரு வத்தொடு செங்கண் ஏறும்
அரியன திண்திறல் அசுரனுக் கருளியும்
பல்கதிர் உரவோன் பற்கெடப் பாய்ந்தும்

மல்குபிறுங் கிருடிக்கு மாவரம் ஈந்துந்
தக்கன் வேள்வி தகைகெடச் சிதைத்து
30 மிக்க வரம்நந்தி மாகாளர்க் கருளியுஞ்
செந்தீக் கடவுள்தன் கரதலஞ் செற்றும்
பைந்தார் நெடும்படை பார்த்தற் கருளியுங்
கதிர்மதி தனையோர் காற்பயன் கெடுத்து
நிதிபயில் குபேரற்கு நீள்நகர் ஈந்துஞ்
35 சலந்தரன் உடலந் தான்மிகத் தடிந்துட்
மறைபயில் மார்க்கண் டேயனுக் கருளியுந்
தாருகற் கொல்லமுன் காளியைப் படைத்துஞ்
சீர்மலி சிலந்திக் கின்னர சளித்துங்
கார்மலி யுருவக் கருடனைக் காய்ந்தும்
40 ஆலின் கீழிருந் தறநெறி யருளியும்
இன்னவை பிறவும் எங்கள் ஈசன்
கோபப் பிரசாதங் கூறுங் காலைக்
கடிமல ரிருந்தோன் கார்க்கடற் கிடந்தோன்
புடமுறு சோலைப் பொன்னகர் காப்போன்
45 உரைப்போ ராகிலும் ஒண்கடல் மாநீர்
அங்கைகொண் டிறைக்கும் ஆதர் போன்றுளர்
ஒடுங்காப் பெருமை உம்பர் கோனை
அடங்கா ஐம்புலத் தறிவில் சிந்தைக்
கிருமிநா வாற்கிளத் தும் பரமே அதாஅன்
50 றொருவகைத் தேவரும் இருவகைத் திறமும்
மூவகைக் குணமும் நால்வகை வேதமும்
ஐவகைப் பூதமும் அறுவகை இரதமும்
எழுவகை ஓசையும் எண்வகை ஞானமும்
ஒன்பதின் வகையும் ஒண்மலர் சிறப்பும்
55 பத்தின் வகையும் ஆகிய பரமனை
இன்பனை நினைவோர்க் கென்னிடை அமுதினைச்
செம்பொனை மணியினைத் தேனினைப் பாலினைத்
தஞ்சமென் றொழுகுந் தன்னடி யார்தம்
நெஞ்சம் பிரியா நிமலனை நீடுயர்
60 செந்தழல் பவளச் சேணுறு வரையனை

முக்கட் செல்வனை முதல்வனை மூர்த்தியைக்
கள்ளங் கைவிட் டுள்ளம துருகிக்
கலந்து கசிந்துதன் கழலிணை யவையே
நினைந்திட ஆங்கே தோன்றும் நிமலனைத்
65 தேவ தேவனைத் திகழ்சிவ லோகனைப்
பாவ நாசனைப் படரொளி உருவனை
வேயார் தோளி மெல்லியல் கூறனைத்
தாயாய் மன்னுயிர் தாங்குந் தந்தையைச்
சொல்லும் பொருளு மாகிய சோதியைக்
70 கல்லுங் கடலு மாகிய கண்டனைத்
தோற்றம் நிலையீ றாகிய தொன்மையை
நீற்றிடைத் திகழும் நித்தனை முத்தனை
வாக்கும் மனமும் இறந்த மறையனைப்
பூக்கமழ் சடையனைப் புண்ணிய நாதனை
75 இனைய தன்மையன் என்றறி வரியவன்
தனைமுன் விட்டுத் தாமற்று நினைப்போர்
மாமுயல் விட்டுக்
காக்கை பின்போம் கலவர் போலவும்
விளக்கங் கிருப்ப மின்மினி கவரும்
80 அளப்பருஞ் சிறப்பில் ஆதர் போலவுங்
கச்சங் கொண்டு கடுந்தொழில் முடியாக்
கொச்சைத் தேவரைத் தேவரென் றெண்ணிப்
பிச்சரைப் போலவோர்
ஆரியப் புத்தகப் பேய்கொண்டு புலம்புற்று
85 வட்டணை பேசுவர் மானுடம் போன்று
பெட்டினை யுரைப்போர் பேதை யர்நிலத்துன்
றலைமீன் றலையெண் பலமென் றுலதனை
அறுத்து நிறுப்போர் ஒருத்த ரின்மையில்
மத்திர மாகுவர் மாநெறி கிடப்பவோர்
90 சித்திரம் பேசுவர் தேவ ராகில்
இன்னோர்க் காய்ந்தனர் இன்னோர்க் கருளினர்
என்றறிய உலகின்
முன்னே யுரைப்ப தில்லை யாகிலும்

மாடு போலக் கூடிநின் றழைத்தும்
95 மாக்கள் போல வேட்கையி னுண்டும்
இப்படி ஞானம் அப்படி யமைத்தும்
இன்ன தன்மையன் என்றிரு நிலத்து
முன்னே யறியா மூர்க்க மாக்களை
இன்னேகொண் டேகாக் கூற்றந்
100 தவறு பெரிதுடைத்தே தவறு பெரிதுடைத்தே.

திருச்சிற்றம்பலம்

நக்கீரதேவ நாயனார் அருளிய

## காரெட்டு

திருச்சிற்றம்பலம்

அரவம் அரைக்கசைத்த அண்ணல் சடைபோல்
விரவி எழுந்தெங்கும் மின்னி—அரவினங்கள்
அச்சங்கொண் டோடி அணைய அடைவுற்றே
கைச்சங்கம் போல்முழங்குங் கார். ௧

மையார் மணிமிடறு போற்கருகி மற்றவன்தன்
கையார் சிலைவிலகிக் காட்டிற்றே—ஐவாய்
அழலரவம் பூண்டான் அவிர்சடைபோல் மின்னிக்
கழலரவங் காண்புற்ற கார். ௨

ஆலமர் கண்டத் தரன்தன் மணிமிடறுங்
கோலக் குழற்சடையுங் கொல்லேறும்—போல
இருண்டொன்று மின்தோன்றி யம்பொனவ் வானங்
கருண்டொன்று கூருதலிற் கார். ௩

இருள்கொண்ட கண்டத் திறைவன்தன் சென்னிக்
குருள்கொண்ட செஞ்சடைபோல் மின்னிச்—சுருள்கொண்டு
பாம்பினங்கள் அஞ்சிப் படமொடுங்க ஆர்த்ததே
காம்பினங்கள் தோளியக் கார்.

கோடரவங் கோடல் அரும்பக் குருமணிகான்
றூடரவம் எல்லாம் அளையடைய—நீடரவம்
பொற்பகலம் பூண்டான் புரிசடைபோல் மின்னிற்றே
கற்பகலம் காண்புற்ற கார். ரு

பாரும் பனிவிசும்பும் பாசுபதன் பல்சடையும்
ஆரும் இருள்கீண்டு மின்விலகி—ஊரும்
அரவஞ் செலஅஞ்சும் அஞ்சொலார் காண்பார்
கரவிந்தம் என்பார்அக் கார். சு

செழுந்தழல் வண்ணன் செழுஞ்சடைபோல் மின்னி
அழுந்தி அலர்போல் உயர—எழுந்தெங்கும்
ஆவிசேர் நெஞ்சினரை அன்பளக்க வுற்றதே
காவிசேர் கண்ணாய்அக் கார். எ

காந்தள் மலரக் கமழ்கொன்றை பொன்சொரியப்
பூந்தளவ மாரப் புகுந்தின்றே—ஏந்தொளிசேர்
அண்டம்போல் மீதிருண்ட ஆதியா னாய்மணிசேர்
கண்டம்போல் மீதிருண்ட கார். அ

திருச்சிற்றம்பலம்

நக்கீரதேவ நாயனார் அருளிய

# போற்றித் திருக்கலிவெண்பா

திருச்சிற்றம்பலம்

திருத்தங்கு மார்பில் திருமால் வரைபோல்
எருத்தத் திலங்கிய வெண்கோட்டுப்—பருத்த
குறுத்தாள் நெடுமூக்கிற் குன்றிக்கண் நீல
நிறத்தாற் பொலிந்த நிலமேழ்—உறத்தாழ்ந்து
பன்றித் திருவுருவாய்க் காணாத பாதங்கள்
நின்றவா நின்ற நிலைபோற்றி—அன்றியும்
புண்டரிகத் துள்ளிருந்த புத்தேள் கழுகுருவாய்

அண்டரண்டம் ஊடுருவ ஆங்கோடிப்—பண்டொருநாள்
5 காணுன் இழியக் கனக முடிகவித்துக்
கோணுது நின்ற குறிபோற்றி—நாணுளும்
பேணிக்கா லங்கள் பிரியாமைப் பூசித்த
மாணிக்கா அன்று மதிற்கடவூர்க்—காண
வரத்திற் பெரிய வலிதொலைத்த காலன்
உரத்தில் உதைத்த உதைபோற்றி—கரத்தாமே
வெற்பன் மடப்பாவை கொங்கைமேற் குங்குமத்தின்
கற்பழியும் வண்ணங் கசிவிப்பான்—பொற்புடைய
வாமன் மகனும் மலர்க்கணையொன் றேட்டியஅக்
காமன் அழகழித்த கண்போற்றி—தூமப்
10 படமெடுத்த வாளரவம் பார்த்தடரப் பற்றி
விடமெடுத்த வேகத்தான் மிக்குச்—சடலம்
முடங்க வலிக்கு முயலகன்தன் மொய்ம்பை
அடங்க மிதித்த அடிபோற்றி—நடுங்கத்
திருமால் முதலாய தேவா சுரர்கள்
கருமால் கடல்நாகம் பற்றிக்—குருமாற
நீலமுண்ட நீள்முகில்போல் நெஞ்சழல வந்தெழுந்த
ஆலமுண்ட கண்டம் அதுபோற்றி—சாலமண்டிப்
போருகந்த வானவர்கள் புக்கொடுங்க மிக்கடர்க்குந்
தாருகன்தன் மார்பில் தனிச்சூலம்—வீரங்
15 கொடுத்தெறியு மாகாளி கோபந் தவிர
எடுத்த நடத்தியல்பு போற்றி—தடுத்து
வரையெடுத்த வாளரக்கன் வாயா றுதிர
நிரையெடுத்து நெக்குடலம் இற்றுப்—புரையெடுத்த
பத்தனைய பொன்முடியுந் தோளிருப தும்நெரிய
மெத்தெனவே வைத்த விரல்போற்றி—அத்தகைத்த
வானவர்கள் தாம்கூடி மந்திரித்த மந்திரத்தை
மேனவில வோடி விதிர்விதிர்த்துத்—தான்வருக்
கொட்டுக் குறளை யுரைத்த அயன்சிரத்தை
வெட்டிச் சிரித்த விறல்போற்றி—மட்டித்து
20 வாலுகத்தான் நல்லிலிங்க மாவகுத்து மற்றதன்மேல்
பாலுகுப்பக் கண்டு பதைத்தோடி—மேலுதைத்தங்

கோட்டி யவன் தாதை யிருதாள் எறிந்துயிரை
வீட்டிய சண்டிக்கு வேறாக—நாட்டின்கட்
பொற்கோயில் உள்ளிருத்திப் பூமாலை போனகமும்
நற்கோலம் ஈந்த நலம்போற்றி—நிற்க
வலந்தருமால் நான்முகனும் வானவருங் கூடி
அலந்தருமால் கொள்ள அடர்க்குஞ் சலந்தரனைச்
சக்கரத்தால் ஈர்ந்தரிதன் தாமரைக்கண் சாத்துதலும்
மிக்கஅஃ தன்றீந்த விறல்போற்றி—அக்கணமே
25 நக்கிருந்த நாமகளை மூக்கரிந்து நால்வேதந்
தொக்கிருந்த வண்ணந் துதிசெய்ய—மிக்கிருந்த
அங்கைத் தலத்தே அணிமானை ஆங்கணிந்த
செங்கைத் திறத்த திறல்போற்றி—திங்களைத்
தேய்த்ததுவே செம்பொற் செழுஞ்சடைமேற் சேர்வித்து
வாய்த்திமையோர்தம்மையெல்லாம்வன்சிறையிற்—பாய்த்திப்
பிரமன் குறையிரப்பப் பின்னும் அவற்கு
வரமன் றளித்த வலிபோற்றி—புரமெரித்த
அன்றுய்ந்த மூவர்க் கமர்ந்து வரமளித்து
நின்றுய்ந்த வண்ணம் நிகழ்வித்து—நன்று
30 நடைகாவன் மிக்க அருள்கொடுத்துக் கோயில்
கடைகாவல் கொண்டவா போற்றி—விடைகாவல்
தானவர்கட் காற்றாது தன்னடைந்த நன்மைவிறல்
வானவர்கள் வேண்ட மயிலூருங்—கோனவனைச்
சேனா பதியாகச் செம்பொன் முடிகவித்து
வாணாள வைத்த வரம்போற்றி—மேனாள்
அதிர்த்தெழுந்த அந்தகனை அண்டரண்டம் உய்யக்
கொதித்தெழுந்த சூலத்தாற் கோத்துத்—துதித்தங்
கவனிருக்கும் வண்ணம் அருள்கொடுத்தங் கேழ்
பவமறுத்த பாவனைகள் போற்றி—கவைமுகத்த
35 பொற்பா கரைப்பிளந்து கூறிரண்டாப் போகட்டு
மெற்பா சறைப்போக மேல்விலகி—நிற்பால
மும்மதத்து வெண்கோட்டுக் கார்நிறத்துப் பைந்தறுகண்
வெம்மதத்த வேகத்தான் மிக்கோடி—விம்மி
அடர்த்திரைத்துப் பாயும் அடுகளிற்றைப் போக
எடுத்துரித்துப் போர்த்த இறைபோற்றி—தொடுத்தமைத்த

நாண்மாலை கொண்டணிந்த நால்வர்க்கன் றால்நிழற்கீழ்
வாண்மாலை யாகும் வகையருளித்—தோள்மாலை
விட்டிலங்கத் தக்கிணமே நோக்கி வியந்தகுணம்
எட்டிலங்க வைத்த இறைபோற்றி—ஒட்டி
40 விசையன் விசையளப்பான் வேடுருவ மாகி
அசைய வுடல்திரியா நின்று—வசையினாற்
பேசு பதப்பான பிழைபொறுத்து மற்றவற்குப்
பாசுபதம் ஈந்த பதம்போற்றி—நேசத்தால்
வாயில்நீர் கொண்டு மகுடத் துமிழ்ந்திறைச்சி
ஆயசீர்ப் போனகமா அங்கமைத்துத்—தூயசீர்க்
கண்ணிடந்த கண்ணப்பர் தம்மைமிகக் காதலித்து
விண்ணுலகம் ஈந்த விறல்போற்றி—மண்ணின்மேல்
காளத்தி போற்றி கயிலைமலை போற்றியென
நீளத்தி னால்நினைந்து நிற்பார்கள்—தாளத்தோ
45 டெத்திசையும் பன்முரசம் ஆர்த்திமையோர் போற்றிசைப்ப
அத்தனடி சேர்வார்கள் ஆங்கு.

திருச்சிற்றம்பலம்

நக்கீரதேவ நாயனார் அருளிய

# திருமுருகாற்றுப்படை*

திருச்சிற்றம்பலம்

## க. திருப்பரங்குன்றம்

உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு
பலர் புகழ் ஞாயிறு கடல் கண்டாஅங்கு

*குறிப்பு:—இது புலவர் ஆற்றுப்படை எனவும் வழங்கும். இதை திரு+முருகு+ஆற்று+படை எனப் பிரித்து ஆன்றோர் பொருள் உரைப்பர். முருகக் கடவுளுடைய திருவருள் பெற்ற ஒரு புலவன், மற்றொரு புலவனுக்கு, அக்கடவுள் எழுந்தருளி யிருக்கும் இடங்கள், அக்கடவுளது இயல்பு, புகழ் முதலியவற்றை விளக்கி, அவரை எவ்வாறு அடைந்து வழிபடின் திருவருளைப் பெறலாமென்று கூறி, அவனை அவர்பால் செலுத்தியதாக, மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரரால் இது பாடப்பெற்றது. இந்நூலின் வரலாறு பின் வருமாறு கூறப்படுகிறது :—

இமயமலை யென்று சீகாளத்தி புராணமும், திருப்பரங்கிரி யென்று திருப்பரங்கிரிப் புராணமும் வெவ்வேறாக கூறுகின்ற ஒரு மலைச்சாரலில், ஒரு தடாகக் கரையில், ஓர் ஆலமரத்தின்கீழ் நக்கீரர் சிவபூஜை செய்துகொண்டிருக்கும்பொழுது, மரத்திலிருந்த ஒரு பழுத்த இலையின் ஒரு பாதி தண்ணீரிலும் மற்றொரு பாதி கரையிலுமாக விழுந்தன. உடனே நீரில் விழுந்த ஒரு பாதி, மீன் வடிவமும், புறத்தே விழுந்த மற்றொரு பாதி, பறவை வடிவமும் பெற்று, பறவை மீனை இழுத்துக்கொண்டிருக்க, நக்கீரர் இக்காட்சியில் கருத்தைச் செலுத்தினதால் சிவபூஜைக்குப் பங்கம் உண்டாயிற்று. அதற்கு முன்பு இவ்வாறு சிவபூஜையில் வழுவிய 999 பேரை ஒரு குகையில் அடைத்து இன்னும் ஒருவர் வேண்டுமெனக் காத்திருந்த ஒரு பூதம், நக்கீரரையும் கொண்டுபோய் அடைத்து, தனது நியமப்படி இவ்வாயிரம் பேரையும் உண்ணுவதற்குமுன் நீராடப் போயிற்று.

அப்போது அதுவரை உணவு பெற்றுப் பிழைத்திருந்த 999 பேரும் நக்கீரர் வருகையால் தாங்கள் இறக்கவேண்டி நேரிட்டதை, அவர்க்குத் தெரிவித்து அழுதார்கள். அவ்வழுகையைக்கேட்ட நக்கீரர், அவர்கள் நிலைக்கு இரங்கித் திருமுருகாற்றுப்படை என்னும் இப்பாட்டைப் பாடினார். உடனே முருகக் கடவுள் அவர்கள்

ஓ அற இமைக்கும் சேண் விளங்கு அவிர் ஒளி
உறுநர்த் தாங்கிய மதன் உடை நோன் தாள்
5 செறுநர்த் தேய்த்த செல் உறழ் தடக்கை
மறு இல் கற்பின் வாள் நுதல் கணவன்
கார்கோள் முகந்த கமம் சூல் மா மழை
வாள் போழ் விசும்பின் வள் உறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தண் நறுங் கானத்து
10 இருள் படப் பொதுளிய பராரை மராஅத்து
உருள் பூந் தண் தார் புரளும் மார்பினன்

எதிரில் தோன்றி எல்லோரையுங் குகையிலிருந்து வெளிப்படுத்திக் காப்பாற்றினார்.

ஒருமுருகா என்றென் னுள்ளங் குளிர உவந்துடனே
வருமுருகா என்று வாய்வெருவா நிற்பக் கையிங்ஙனே
தருமுருகா என்று தான்புலம்பா நிற்பத் தையல்முன்னே
திருமுரு காற்றுப் படையுடனே வருஞ் சேவகனே.

உரை :—(1—6) உலகத்திலுள்ள உயிரினங்களெல்லாம் மகிழும் படியாக எழுந்து மகா மேருவை வலமாகச் சுற்றி வரும், பலர் புகழ்கின்ற சூரியன் கடலிடத்தே *தோன்றினாற்போல, நீக்கமின்றி எப்போதும் நெடுந் தூரம் சென்று விளங்கும் ஒளியையுடையவன் முருகன். அவனது அழகும் வலிமையுமுள்ள திருவடிகள் வந்தடைந்தோர்களுடைய தீவினையையும் அறியாமையையும் போக்கி அவர்களைக் காக்கும். அவனுடைய திருக்கரங்கள் இடியைப்போலப் பகைவரை அழிக்க வல்லன. அவன் குற்றமற்ற கற்பினையும் ஒளி பொருந்திய நெற்றியினையுமுடைய தெய்வயானையின் கணவன்.

(7—11) கடலிலே நீரை முகந்து கொண்ட சூல் முதிர்ந்த கருமேகம், சூரியனும் சந்திரனும் இருளை நீக்கும் ஆகாயத்தே நின்று, பெருந்துளிகளைச் சிதறிக் கார் காலத்து முதல் மழையைப் பொழிந்த குளிர்ந்த மணம் பொருந்திய காட்டிலே, இருள் மிகும்படியாகத் தழைத்தோங்கிய பருத்த அடிப்பாகத்தையுடைய வெண்கடம்பினது

* சூரியன் புற இருளைக் கெடுக்குமாறு போலத் தன்னை மனத்தால் நோக்குவாரது அகவிருளை (=மலத்தை) முருகன் எளிதில் கெடுத்து விடுகிறான். உதய சூரியனை நோக்குவாருக்குக் கடலின் நீலமும் சூரியனது செம்மையும் தோன்றுவது போல, முருகனை நோக்குவாருக்கு மயிலின் நீலமும் அவனது திருமேனிச் செம்மையும் தோன்றும்.

மால் வரை நிவந்த சேண் உயர் வெற்பில்
கிண்கிணி கவைஇய ஒண் செம் சீறடிக்
கணைக் கால் வாங்கிய நுசுப்பின் பணைத் தோள்
15 கோபத்து அன்ன தோயாப் பூந்துகில்
பல் காசு நிரைத்த சில் காழ் அல்குல்
கை புனைந்து இயற்றாக் கவின் பெறு வனப்பின்
நாவலொடு பெயரிய பொலம்புனை அவிர் இழைச்
சேண் இகந்து விளங்கும் செயிர் தீர் மேனித்
20 துணையோர் ஆய்ந்த இணை ஈர் ஓதிச்
செங்கால் வெட்சிச் சீறிதழ் இடை இடுபு
பைந் தாள் குவளைத் தூ இதழ் கிள்ளித்
தெய்வ உத்தியொடு வலம்புரி வயின் வைத்துத்

பூவால், தேருருள்போலச் செய்யப்பட்ட குளிர்ந்த உருண்ட பூமாலைகள் அவனது மார்பில் அசைந்து கொண்டிருக்கும்.

(12, 40, 41, 13—19) பெரிய மூங்கில்கள் ஓங்கி வளரும் ஆகாயத்தை அளாவுகின்ற மலையிலேயுள்ள சோலையில், தெய்வத்தன்மையால் அச்சத்தை விளைவிக்கின்ற தெய்வப் பெண்கள் பலருங்கூடி, அழகு விளங்குகின்ற மலையிடமெல்லாம், எதிரொலி எழும்படியாகப் பாடியாடுவர். கிண்கிணி சூழ்ந்த ஒளி பொருந்திய சிவந்த சிறிய பாதங்களையும், திரண்ட கால்களையும், வளைந்து ஒடுங்கிய இடையையும் உடையவர்கள் இப்பெண்கள். இவர்களுடைய தோள்கள் மூங்கிலைப் போன்றிருக்கும்; இவர்களது பூந்துகில் இந்திர கோபப் பூச்சியின் நிறத்தைப் போல இயல்பாகச் சிவந்திருக்கும் ; அது சாயந் தோய்க்கப் பெற்றதன்று. பல மணிகள் கோத்த எழுவடங்கள் கொண்ட மேகலையை இவர்கள் அரையில் அணிந்திருப்பார்கள். இயற்கையாகவே இவர்கள் மிகுந்த அழகுடையவர்கள். இவ்வித அழகைச் செயற்கையில் தோன்றச் செய்வது அரிது. இவர்களணிந்த ஒளிமிக்க ஆபரணங்கள் சாம்பூநத மென்ற பொன்னால் செய்யப்பட்டவை. இவர்கள் நிறம் குற்றமற்றது ; நெடுந் தூரத்தைக்கடந்து செல்லும் காந்தியையுடையது.

(20—39) இவர்கட்குத் துணை செய்யும் தோழிப் பெண்கள், கோதி வகிர்ந்து ஒழுங்காயமைந்த நுனிகளையும் மென்மையையும் பளபளப்பையும் உடைய இவர்களது கூந்தலிலே, சிவந்த காம்புகளையுடைய சிறிய வெட்சிப் பூக்களின் இதழ்களை விடுபூவாகத் தூவி, அதற்கு நடுவே பசும் காம்பினையுடைய குவளைப் பூவின் மாசற்ற

திலகம் தைஇய தேம் கமழ் திரு நுதல்
25 மகரப் பகு வாய் தாழ மண்ணுறுத்துத்
துவர முடித்த துகள் அறு முச்சிப்
பெருந் தண் சண்பகம் செரீஇக் கரும் தகட்டு
உளைப் பூ மருதின் ஒள் இணர் அட்டிக்
கிளைக் கவின்று எழுதரு கீழ் நீர்ச் செவ் வரும்பு
30 இணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண் காது நிறைந்த பிண்டி ஒண் தளிர்
நுண் பூண் ஆகம் திளைப்பத் திண் காழ்
நறும் குறடு உரிஞ்சிய பூங் கேழ்த் தேய்வை
தேம் கமழ் மருது இணர் கடுப்பக் கோங்கின்
35 குவி முகிழ் இளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண் தாது அப்பிக் காண்வர
வெள்ளிற் குறு முறி கிள்ளுபு தெறியாக்
கோழி ஓங்கிய வென்று அடு விறற் கொடி
வாழிய பெரிது என்று ஏத்திப் பலருடன்

---

இதழ்களைக் கிள்ளியிட்டு முடிப்பர்; ஸ்ரீதேவி யென்னும் தலையா
பரணத்தையும் வலம்புரி வடிவாகச் செய்த தலையாபரணத்தையும்
வைத்தற்குரிய இடத்தே வைப்பர்; திலகமிட்ட மணங்கமழும் இவர்
களது அழகிய நெற்றியிலே சுறுமீனின் திறந்த வாய்போலச் செய்த
ஆபரணம் தங்கும்படி அலங்கரிப்பர்; நன்றாக முடித்த இவரது
கொண்டையிலே பெரிய குளிர்ந்த சண்பகப் பூவைச் செருகுவர்;
கரிய புறவிதழ்களையும் பஞ்சு நுனிபோன்ற மேற் பக்கத்தையு
முடைய பூக்களுள்ள மருதின் ஒளி பொருந்திய பூங்கொத்துக்களை
அதன் மேலே இட்டு வைப்பர்; நீர்க் கீழுள்ள பசிய கிளையினின்
றும் மேலே எழுந்து தோன்றுகின்ற சிவந்த அரும்புகளைச் சேர்த்
துக் கட்டிய மாலையை அதன் மேலே வளைவாகச் சூட்டுவர்; அசோக
மரத்தின் ஒளி பொருந்திய தளிர்களை ஒரே அளவாகத் திருத்தி
இவர்களது வளமைபொருந்திய காதிலே இட்டு நிறைத்திருப்பர்.
நுட்ப வேலையையுடைய ஆபரணங்களை யணிந்த இவர்களது மார்
பிடத்தே அத் தளிர்கள் அசைந்துகொண்டிருக்கும். திண்ணிய வைரத்
தையுடைய வாசனைமிக்க சந்தனமுரைத்த குழம்பை மணம் வீசும்
மருதம் பூவை அப்பினாலொப்பத் தமது அழகிய மார்பில் இவர்கள்
அப்பியிருப்பர்; விரிந்த மலரையுடைய வேங்கையின் நுண்ணிய மகரந்
தத்தையும் அதன்மேலே அப்புவர்; விளா மரத்தினது சிறிய தளி
ரைக் கிள்ளி அழகுபெற ஒருவர் மேலொருவர் தெறித்து விளையாடு

40 சீர்திகழ் சிலம்பகம் சிலம்பப் பாடிச்
சூர் அர மகளிர் ஆடும் சோலை
மந்தியும் அறியா மரன் பயில் அடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப் பூங் காந்தள்
பெருந் தண் கண்ணி மிலைந்த சென்னியன்
45 பார்முதிர் பனிக் கடல் கலங்க உள் புக்குச்
சூர் முதல் தடிந்த சுடர் இலை நெடு வேல்
உலறிய கதுப்பின் பிறழ் பல் பேழ் வாய்ச்
சுழல் விழிப் பசுங் கண் சூர்த்த நோக்கின்
கழல் கண் கூகையொடு கடும் பாம்பு தூங்கப்
50 பெரு முலை அலைக்கும் காதின் பிணர் மோட்டு
உரு கெழு செலவின் அஞ்சு வரு பேய் மகள்
குருதி ஆடிய கூர் உகிர்க் கொடு விரல்
கண் தொட்டு உண்ட கழிமுடைக் கருந் தலை
ஒண் தொடித் தடக்கையின் ஏந்தி வெருவர
55 வென்று அடு விறற் களம் பாடித் தோள் பெயரா
நிணம் தின் வாயள் துணங்கை தூங்க
இரு பேர் உருவின் ஒரு பேர் யாக்கை
அறு வேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல் வலம் அடங்கக் கவிழ் இணர்
60 மா முதல் தடிந்த மறு இல் கொற்றத்து

---

வர்; "வஞ்சியாது எதிர் நின்று கொல்லுகின்ற வெற்றியையுடைய கோழிக்கொடி நெடுங்காலம் வாழ்வதாக" என்று கூறி வாழ்த்துவர்.

(42—44) இத்தகைய சிறப்புவாய்ந்த சோலையையுடைய மலைச் சரிவிலே, குரங்குகளுங்கூட ஏறி யறியாதபடி மரங்கள் அடர்ந்து நெருங்கியிருக்கும். அவ்விடத்தே காந்தள் பூக்கள் பூத்திருக்கும். அவைகளை வண்டுகள் மொய்ப்பதில்லை. ஒளி வீசுகின்ற அக் காந்தளின் பூக்களாலாகிய பெரிய குளிர்ந்த மாலையானது முருகன் திருமுடியிலே விளங்கிக்கொண்டிருக்கும்.

(45, 46, 57—60) விளங்குகின்ற இலை வடிவான நுனியையுடைய (முருகனது) நீண்ட வேலாயுதம், நிலத்திலே பழமையாக வுள்ள குளிர்ந்த கடலும் நிலை குலையும்படி அதனுள்ளே புகுந்து, அங்கே ஒளிந்துகொண்டிருந்த சூரபன்மனை இருகூறாகப் பிளந்தது. குதிரைத் தலையும் மனித வுடலுமாகிய இரண்டு பெரிய வடிவங்களும்

எய்யா நல் இசைச் செவ் வேல் சேஎய்
சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம் புரிந்து உறையும்
செலவு நீ நயந்தனை ஆயின் பலவுடன்
65 நன்னர் நெஞ்சத்து இன் நசை வாய்ப்ப
இன்னே பெறுதி நீ முன்னிய வினையே
செருப் புகன்று எடுத்த சேண் உயர் நெடுங் கொடி
வரிப் புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போர் அரு வாயில்
70 திரு வீற்றிருந்த தீது தீர் நியமத்து

---

ஒன்ருயமைந்த அச்சூரபன்மனுடைய சரீரம் உடனே அறுபட்டு வேறு வேருகத் துண்டித்துப் போயிற்று. கவிழ்ந்து தொங்கும் பூங் கொத்துக்களேயுடைய மாமரமாக அவன் மாறிநின்ருன். அச்சம் தோன்றப் போரிலே மண்டிச்சென்று, அவுணர்கட்கு நல்வெற்றியே இல்லாமற் போகும்படி, முருகன் அவனைக் கொன்ருன்.

(47—56) அப்போர்க்களத்தில் வந்து கூடிய பெண் பேய்கள் காய்ந்த மயிரை யுடையன; ஒழுங்கற்ற பல்வரிசையையும் பெரிய வாயையும் உடையன; சுழல்கின்ற விழிகளேயும், ஊன் வடிவதால் பசுமையான கண்களேயும், கொடும் பார்வையையும் உடையன; பிதுங் கிய கண்ணுடைய ஆந்தையும் கடும் பாம்பும் தொங்கிக் கிடக்க, பெரிய மார்பை அலேக்கின்ற காதுகளேயுமுடையன. அவை, இரத்தத்தை அளேந்த, கூரிய நகமுடைய, வளேந்த, தம் விரல்களினுலே, இறந்து பட்ட அவ்வவுணர்களுடைய முடை நாற்றம் மிக வீசுகின்ற பெரிய தலேகளிலுள்ள கண்களேத் தோண்டிப் புசித்து, அத்தலேகளே, ஒள் ளிய வளேகளே யணிந்த தம்முடைய அகன்ற கைகளிலே ஏந்தி, நிணத்தைத் தின்றுகொண்டிருக்கும் வாய்களே யுடையனவாக, அச் சந் தோன்ற, முருகன் வஞ்சியாது அவுணர்களின் எதிரே நின்று அவர்களேக் கொன்ற வெற்றிக் களத்தைப் பாடித் தமது தோள்களே யசைத்துத் துணங்கைக் கூத்தாடின.

(60—77) இத்தகைய குற்றமற்ற வெற்றியினேயும், ஒருவராலும் அளந்தறிய வொண்ணுத நல்ல புகழினேயும், சிறந்த வேலாயுதத்தை யும் உடையவன் முருகன். அவனுடைய திருவடியை நினேக்கின்ற, நன்மை பொருந்திய கொள்கையுடைய சிறந்த உள்ளத்தோடு அவ னிடம் போதலே நீ விரும்பினேயாயின், நற்குணங்கள் பலவும் சேருத லால் நன்மைபொருந்திய நெஞ்சத்திலே உண்டான உன் இனிய விருப்பமானது கைகூடும்படி நீ கருதிய செயலே இப்பொழுதே

மாடம் மலி மறுகில் கூடற் குடவயின்
இரும் சேற்று அகல் வயல் விரிந்து வாய் அவிழ்ந்த
முள் தாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கள் கமழ் நெய்தல் ஊதி எல் படக்
75 கண் போல் மலர்ந்த காமர் சுனை மலர்
அம் சிறை வண்டின் அரிக் கணம் ஒலிக்கும்
குன்று அமர்ந்து உறைதலும் உரியன் ; அதாஅன்று,

## உ. திருச்சீரலைவாய்

வைந் நுதி பொருத வடு ஆழ் வரி நுதல்
வாடா மாலை ஓடையொடு துயல்வரப்

பெறுவாய். அதைப் பெறுதற்கு, அவன் எங்கே உளன் என்னில், திருப்பரங்குன்றிலே நெஞ்சார விரும்பி அமர்ந்திருத்தலும் உரியன். போரில் வெற்றிக் குறியாக விரும்பிக் கட்டி வானுற ஓங்கிய நீண்ட கொடியையும், வரிந்து கட்டிய *பந்தும் பாவையும் பயனற்றுக் கிடக்கும்படி பகைவர்களை அழித்துவிட்டபடியினாலே போர்த்தொழில் அரிதாகிவிட்ட வாயிலையும், திருமகள் வீற்றிருக்கும் குற்றமற்ற கடை வீதியையும், மாடங்கள் மிக்க தெருக்களையுமுடைய மதுரைக்கு மேற்கேயுள்ளது இத் திருப்பரங்குன்றம். அழகிய சிறகுகளையுடைய வண்டின் அழகான திரள்கள், கருஞ் சேறு நிறைந்த அகன்ற வயல்களிலே முறுக்கு அவிழ்ந்து மலர்ந்த முள் செறிந்த தண்டுகளையுடைய தாமரைகளிலே இராப்போது உறங்கி, விடியற்காலத்திலே தேன் மணக்கின்ற நெய்தற் பூவை யூதி, சூரியன் தோன்றியவுடன் கண்களைப்போல மலரும அழகிய சுனைப் பூக்களிலே சென்று ரீங்காரம் செய்கின்ற வளத்தினையுடையது இது. முருகன் இங்கே இருப்பது மன்றி,

(124, 125, 78—88) நன் மக்கள் புகழ்ந்த நன்மை ஓங்கிய உயர்ந்த சிறப்பையும் புகழையுமுடைய திருச்செந்தூர் என்னும் பதியிலே எழுந்தருளி யிருத்தலையும் (முருகன்) தனது நிலை பெற்ற தன்மையாக உடையவன். தாழ்ந்து கிடக்கும் மணிகள் மாறிமாறி ஒலிக்கின்ற பக்கங்களையும், வேகமான நடையையும், கூற்றுவனது

*பகைவரை மகளிர்கோலம் பூணச்செய்து, வாயிலிலே இருத்தி, அங்கே அவர் விளையாடுதற்காக நூலால் செய்யப்பட்ட பந்தும் பொம்மையும் தொங்கவிட்டு வைப்பர். இப்போது பகைவரின்மையால் அப்பந்து முதலியன பயனற்றுக் கிடந்தன.

80 படு மணி இரட்டும் மருங்கின் கடு நடைக்
கூற்றத்து அன்ன மாற்றரும் மொய்ம்பின்
கால் கிளர்ந்து அன்ன வேழம் மேல் கொண்டு
ஐவேறு உருவின் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திரு மணி
85 மின் உறழ் இமைப்பில் சென்னிப் பொற்ப
நகை தாழ்பு துயல் வரூஉம் வகை அமை பொலம் குழை
சேண் விளங்கு இயற்கை வாண் மதி கவைஇ
அகலா மீனின் அவிர்வன இமைப்பத்
தாவு இல் கொள்கைத் தம் தொழில் முடிமார்
90 மனன் நேர்பு எழுதரு வாள் நிற முகனே
மா இருள் ஞாலம் மறு இன்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒரு முகம், ஒரு முகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது ஒழுகிக்
காதலின் உவந்து வரம் கொடுத்தன்றே, ஒரு முகம்
95 மந்திர விதியின் மரபுளி வழாஅ

---

வலியை ஒத்துப் பிறரால் தடுத்தற்கரிய வலியினையும், காற்று எழுந்ததைப் போலவுள்ள வேகத்தையுமுடைய யானையின் மேலே, கூரிய நுனியுடைய தோட்டி (=அங்குசம்) வெட்டின வடுவழுந்திய புள்ளியையுடைய அதன் மத்தகத்தே பொன்னரி மாலையும் பட்டமும் கிடந்து அசையும்படி, அவன் ஆங்கு ஏறி யிருப்பன். ஐந்து வகை யுறுப்புக்களையும் நிரம்பிய வேலைப்பாட்டையுமுடைய கிரீடத்திலே, வெவ்வேறு நிறங்களோடு விளங்குகின்ற அழகிய மணிகள் மின்னலைப் போல ஒளிவிட்டு அவனது சிரசை அழகு படுத்தும். நெடுந் தூரம் பிரகாசிக்கும் இயற்கையையுடைய வெண்மதியைச் சூழ்ந்து, அதை விட்டு நீங்காத நக்ஷத்திரங்களைப் போல, ஒளி நிரம்பி வகையாயமைந்த பொற் குண்டலங்கள் அவன் காதுகளில் அசைந்து விளங்கும்.

(89—103) வருத்தங்களைப் பொருட்படுத்தாத கொள்கையோடு தமது தவத் தொழிலை முடிக்கின்றவர்களுடைய மனத்திலே, காந்தி மிக்க அவனது திருமுகங்கள் தோன்றும். அம்முகங்களுள் ஒன்று, இருள் மிக்க இப்பேருலகானது மாசு சிறிது மில்லாது விளங்கும்படியாகப் பல கிரணங்களைத் தோற்றுவிக்கும்; ஒரு முகம், அன்பர்கள் துதிக்க, அவர்கட்கிணங்கி இனிதாகத் தோன்றி, மகிழ்ந்து, அன்போடு வரங் கொடுக்கும்; ஒரு முகம், மந்திரத்தையுடைய வேத

அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே, ஒரு முகம்
எஞ்சிய பொருள்களை ஏம் உற நாடித்
திங்கள் போலத் திசை விளக்கும்மே, ஒரு முகம்
செறுநர்த் தேய்த்துச் செல் சமம் முருக்கிக்
100 கறுவு கொள் நெஞ்சமொடு களம் வேட்டன்றே, ஒரு முகம்
குறவர் மடமகள் கொடி போல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகை அமர்ந்தன்றே, ஆங்கு அம்
மூவிரு முகனும் முறை நவின்று ஒழுகலின்
ஆரம் தாழ்ந்த அம் பகட்டு மார்பில்
105 செம் பொறி வாங்கிய மொய்ம்பில் சுடர் விடுபு
வண் புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர் தோள்
விண் செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது
ஒரு கை ; உக்கம் சேர்த்தியது ஒரு கை ;
நலம் பெறு கலிங்கத்துக் குறங்கின் மிசை அசைஇயது
110 அங்குசம் கடாவ ஒரு கை; இரு கை [ஒரு கை ;
ஐயிரு வட்டமொடு எஃகு வலம் திரிப்ப; ஒரு கை
மார்பொடு விளங்க; ஒரு கை
தாரொடு பொலிய; ஒரு கை
கீழ் வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப; ஒரு கை

---

முறையினின்றும் வழுவாத அந்தணர்களுடைய யாகங்களில் இடையூறு வாராதபடி நோக்கம் செலுத்தும்; ஒரு முகம், மக்கள் அறிவினுள் அகப்படாது எஞ்சி நின்ற பொருள்களை யெல்லாம் உலகம் இன்புறும்படியாக உணர்த்திக் கலை நிரம்பிய சந்திரன் போலத் திசைகளை யெல்லாம் விளக்கிக் கொண்டிருக்கும். ஒரு முகம், பகைவர்களை யழித்து அவர்கள் பிறர் மேற் செய்யும் போரைக் கெடுத்துத் தீராத கோபங் கொண்ட நெஞ்சத்தோடு போர்க்களத்தை விரும்பும்; ஒரு முகம் கொடி போன்ற இடையை யுடையவளாயும் குறவரது இளம் பெண்ணுயுமுள்ள வள்ளியோடு மகிழ்ச்சியை நாடி யிருக்கும். இப்படி அவனுடைய ஆறுமுகங்களும் அவ்வவற்றிற்குரிய தொழில்களை முறைப்படச் செய்துவருவன.

(104—118) மாலை தாழ்ந்து கிடக்கும் அழகிய பெருமை பொருந்திய அவனது மார்பிலுள்ள உத்தம லக்ஷணமாகிய ரேகைகள் அவனுடைய தோள்கள் வரை நீண்டிருக்கும். அந்தத் தோள்கள் மிக்க வலிமையுடையனவாய் ஒளி பொருந்திப் புகழ் நிறைந்து வளைந்தும் நிமிர்ந்து மிருக்கும். அவன் கைகளில் ஒன்று, ஆகாயத்

115 பாடு இன் படு மணி இரட்ட; ஒரு கை
நீல் நிற விசும்பின் மலி துளி பொழிய; ஒரு கை
வான் அர மகளிர்க்கு வதுவை சூட்ட; ஆங்கு அப்
பன்னிரு கையும் பாற்பட இயற்றி
அந்தரப் பல்லியம் கறங்கத் திண் காழ்
120 வயிர் எழுந்து இசைப்ப வால் வளை ஞரல
உரம் தலைக்கொண்ட உரும் இடி முரசமொடு
பல் பொறி மஞ்ஞை வெல் கொடி அகவ
விசும்பு ஆறாக விரை செலல் முன்னி
உலகம் புகழ்ந்த ஓங்கு உயிர் விழுச் சீர்
125 அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே; அதாஅன்று,

திலே செல்லுகின்ற ஒழுக்கத்தினையுடைய * தெய்வ இருடிகளுக்குப் பாதுகாவலாக ஏந்தியது; ஒரு கை, இடுப்பிலே வைத்தது; ஒரு கை, அழகிய ஆடை யணிந்த தொடையின் மேலே கிடப்பது; ஒரு கை, அங்குசத்தைப் பிடித்துச் செலுத்துவது; இரண்டு கைகள், அதிசயமான கரிய கேடகத்தையும் வேலாயுதத்தையும் சுழற்றிக் கொண்டிருப்பன; ஒரு கை, மார்பிலே தங்கி விளங்குவது; ஒரு கை, மாலையோடு அழகு பெறத் தோன்றுவது; ஒரு கை, உயர்த்தப்பட்டதால் நழுவித் தாழ்கின்ற தொடியோடு மேலே சுழன்று கொண்டிருப்பது; ஒரு கை, இனிய ஓசையையுடைய ஒலிக்கின்ற மணியை மாறி மாறி ஒலிக்கச் செய்வது; ஒரு கை, நீல நிறத்தையுடைய மேகத்திலிருந்து நிரம்பிய நீர்த்துளிகளைப் பொழியச் செய்வது; ஒரு கை, தெய்வப் பெண்களுக்கு மண மாலையைச் சூட்டுவது. இவ்வாறு பன்னிரண்டு கைகளும் தத்தமக்குரிய முறையிலே தொழில் செய்கின்றன.

(119—123, 125) ஆகாய துந்துபி ஒலித்துக் கொண்டிருக்க, திண்ணிய வைரம் பாய்ந்த ஊது கொம்புகள் சப்திக்க, வெண்மையான சங்குகள் முழங்க, வலிமையைத் தன்னிடத்திலே கொண்ட இடியேற்றினைப் போன்ற முரசத்தோடு, பல புள்ளிகளையுடைய மயிலானது அவனுடைய வெற்றிக் கொடியிலேயிருந்து ஒலித்துக் கொண்டிருக்க, ஆகாய வழியாக விரைவாய்ச் செல்லுதலை மேற்கொண்டு அவன் இங்கே (திருச்செந்தூரிலே) வந்து தங்குவான். அதுவுமன்றி,

* சூரியனது முழு வெப்பம் உயிர்களாற் பொறுக்க முடியாததெனக் கருதி, சூரியனோடு சுற்றி வந்து தமது அருளினால் அவ்வெப்பத்தைச் சில முனிவர்கள் குறைக்கின்றனரென்பது பழையவரலாறு.

## ௩. திரு ஆவினன்குடி

சீரை தைஇய உடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வால் நரை முடியினர்
மாசு அற இமைக்கும் உருவினர் மானின்
உரிவை தைஇய ஊன் கெடு மார்பின்
130 என்பு எழுந்து இயங்கும் யாக்கையர் நன்பகல்
பல உடன் கழிந்த உண்டியர் இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர் யாவதும்
கற்றோர் அறியா அறிவினர் கற்றோர்க்குத்
தாம் வரம்பு ஆகிய தலைமையர் காமமொடு
135 கடும் சினம் கடிந்த காட்சியர் இடும்பை
யாவதும் அறியா இயல்பினர் மேவரத்
துனி இல் காட்சி முனிவர் முன் புகப்

(175, 176, 164—168, 173, 174) முருகன், வருத்த மில்லாத அருட் கற்பினையுடைய தெய்வயானையுடன் ஆவினன்குடி என்னும் திருப்பதியிலே சிலநாள் இருத்தலும் உரியன். தாமரையிற் பிறந்தவனும், கேடில்லாத காலத்தை யுடையவனுமுள்ள *நான்முகன் காரணமாக, உற்ற குறையானது தீரும்பொருட்டு, திருமால் முதலியோர், பகல்போலத் தெளிவாக மயக்கமற்றிருக்கின்ற அறிவையுடையவராயும் நால்வகையான இயற்கையை யுடையராயும் உள்ள முப்பத்து மூன்று தேவர்களோடும், பதினெட்டு வகையான உயர் நிலையைப் பெற்ற கணங்களோடும் அந்தர மார்க்கமாக வந்தார்கள்.

(137, 126—136) அவர்களுள் வெறுப்பில்லாத அறிவையுடைய முனிவர்கள் விருப்பத்தோடு கூடி முன்னே சென்றார்கள். அவர்கள் மரவுரியைத் தைத்து உடையாக அணிந்தவர்கள்; வலம்புரிச் சங்கை ஒத்ததாய் அழகாய் முடிக்கப்பட்ட வெண்மையான நரை

*முருகக் கடவுள் அசுரரை யழித்து இந்திரன் மகள் தெய்வயானையை மணந்தபொழுது தம் கையிலுள்ள வேலாயுதத்தை நோக்கி "நமக்கு எல்லாம் தந்தது இவ்வேல்" என்று கூறினார். அப்போது அருகே யிருந்த பிரமன் "இவ்வேலுக்கு இப்பெருமை என்னால் வந்ததே" என்றான். உடனே முருகர் "நம் கை வேலுக்கு சக்தி கொடுப்பவன் நீயா?" என்று கோபித்து "இங்ஙனம் கூறிய நீ பூலோகத்துக்குப் போ" என்று சபித்தார். இச்சாபத்தை நீக்கும் பொருட்டுத் திருமால் முதலியோர் இவ்வுலகத்துக்கு வந்தனர் என்பது பழைய வரலாறு.

புகை முகந்து அன்ன மாசு இல் தூ உடை
முகை வாய் அவிழ்ந்த தகை சூழ் ஆகத்துச்
140 செவி நேர்பு வைத்த செய்வு உறு திவவின்
நல் யாழ் நவின்ற நயன் உடை நெஞ்சின்
மெல் மொழி மேவலர் இன் நரம்பு உளர
நோய் இன்று இயன்ற யாக்கையர் மாவின்
அவிர் தளிர் புரையும் மேனியர் அவிர்தொறும்
145 பொன் உரை கடுக்கும் திதலையர் இன் நகைப்
பருமம் தாங்கிய பணிந்து ஏந்து அல்குல்
மாசு இல் மகளிரொடு மறு இன்றி விளங்கக்
கடுவொடு ஒடுங்கிய தூம்பு உடை வால் எயிற்று
அழல் என உயிர்க்கும் அஞ்சு வரு கடுந் திறல்

---

முடியை யுடையவர்கள்; அழுக்கின்றி விளங்கும் மேனியை யுடைய வர்கள்; மான்தோலைப் போர்த்துக்கொண் டிருக்கிற தசையற்ற மார்பையுடையவர்கள்; எலும்புகள் மேலே எழுந்து தோன்றும் சரீ ரத்தையுடையவர்கள்; பல நாட்கள் கழிந்தபின் உண்ணும் இயல்பை யுடையவர்கள்; பகையும் கோபமும் நீங்கிய மனத்தையுடைவர்கள்; எல்லாவற்றையும் கற்றுணர்ந்தோருங்கூட அறிய முடியாதபடியுள்ள அறிவையுடையவர்கள்; கற்றவர்கட்கெல்லாம் எல்லையாயிருக்கின்ற தலைமையை யுடையவர்கள்; காமத்தையும் கடுஞ் சினத்தையும் நீக் கின அறிவாளர்கள்; மனவருத்தம் என்பதைச் சிறிதும் அறியாத தன்மையை யுடையவர்கள்.

(138—147) அப்போது, அன்புநிறைந்த நெஞ்சையும் மென்மை யான மொழியையுமுடைய கந்தருவர்கள் இனிய யாழை வாசித்துச் சென்றார்கள். புகையைப்போல நுண்ணியதாயும் மாசற்றதாயு முள்ள தூயவுடையை இவர்கள் தரித்தவர்கள்; அரும்பு மலர்ந்த மாலை யை மார்பிலே அணிந்தவர்கள். செவியினாலே அளந்து வைத்துக் கூட்டின நரம்புகளையுடையது அவர்களுடைய யாழ். இக் கந்தரு வர்களோடு இவர்களது பெண்டிரும் விளங்கித்தோன்றினார்கள். அவர்கள் நோயின்றி அமைந்த சரீரத்தை யுடையவர்கள் ; விளங்கு கின்ற மாந்தளிரைப் போன்ற நிறத்தை யுடையவர்கள் ; பொன் னுரை விளங்குவதைப் போன்ற அடிவயிற்று வரிகளை யுடையவர்கள்; கண்ணுக்கினிய ஒளியோடு கூடிய பதினெண்கோவை மேகலையை யணிந்த அரையை யுடையவர்கள் ; மாசற்றவர்கள்.

(160—163) இவ்வாறு இவர்கள் உடன் வர, திருமாலும், உருத்திரனும், இந்திரனும், நான்கு பெருந் தெய்வங்களாகிய திக்குப்

150 பாம்பு படப் புடைக்கும் பல் வரிக் கொடுஞ் சிறைப்
புள் அணி நீள் கொடிச் செல்வனும் வெள் ஏறு
வலவயின் உயரிய பலர் புகழ் திணிதோள்
உமை அமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூ எயில் முருக்கிய முரண் மிகு செல்வனும்
155 நூற்றுப் பத்து அடுக்கிய நாட்டத்து நூறு பல்
வேள்வி முற்றிய வென்று அடு கொற்றத்து
ஈர் இரண்டு ஏந்திய மருப்பின் எழில் நடைத்
தாழ் பெருந் தடக் கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக் கிளர் செல்வனும்
160 நாற் பெருந் தெய்வத்து நல் நகர் நிலைஇய
உலகம் காக்கும் ஒன்று புரி கொள்கைப்
பலர் புகழ் மூவரும் தலைவர் ஆக
ஏமுறும் ஞாலம் தன்னில் தோன்றித்
தாமரை பயந்த தாவு இல் ஊழி

---

பாலகர்களை யுடையதும், பல நன்னகர்களை நிலையாக வுடையதும், உயிர்களைக் காக்கும் ஒரே கொள்கையையுடைய பலரும் புகழ்கின்ற திரிமூர்த்திகளும் தலைவராக இருத்தலினாலே இன்புறுகின்றதும், ஆன இப்பூமியிலே தோன்றினார்கள்.

(148—159) அவர்களுள், விஷம் தங்கியிருக்கிற துளையை யுடைய வெண்மையான நச்சுப் பற்களையும், நெருப்புப்போல மூச்சு விட்டு யாவருக்கும் பயமுண்டாகும்படி வருகின்ற கொடிய வலிமையினையும் உடைய பாம்புகள் அழியும்படி, புடைக்கின்ற பல வரிகளை யுடைய வளைந்த சிறகுகளோடு கூடிய கருடனை, நீண்ட கொடியாகக் கொண்டவன் திருமால். வெண்ணிறமான ரிஷபத்தை வலப்பக்கத்திலே கொடியாக உயர்த்தியவனும், பலரும் புகழ்கின்ற வலிமை மிக்க தோளை யுடையவனும், உமாதேவி ஒரு பக்கத்திலே வீற்றிருக்க விளங்குபவனும், இமையாத முக்கண்களை யுடையவனும், திரிபுரங்களையும் அழித்த மிகுந்த வலிமையை யுடையவனும் இருப்பவன் உருத்திரன். ஆயிரம் கண்களை யுடையவனும், நூறு யாகங்களைச் செய்து முடித்தவனும், அதனால் பகைவர்களை வென்று கொல்கின்ற வெற்றியை யுடையவனும், நான்கு கொம்புகளோடும் பெருந் தோற்றத்தோடு கூடிய நடையோடும் உயரத் தூக்கிய நீண்ட பெரிய தும்பிக்கையோடுங் கூடிய (ஐராவதம் என்னும்) யானையின் பிடரியிலே ஏறியவனும், செல்வம் மிகுந்தவனும் இருப்பவன் இந்திரன்.

165 நான்முக் ஒருவற் சுட்டிக் காண் வரப்
பகலில் தோன்றும் இகல் இல் காட்சி
நால் வேறு இயற்கைப் பதினொரு மூவரோடு
ஒன்பதிற்று இரட்டி உயர் நிலை பெறீஇயர்
மீன் பூத்து அன்ன தோன்றலர் மீன் சேர்பு
170 வளி கிளர்ந்து அன்ன செலவினர் வளி இடைத்
தீ எழுந்து அன்ன திறலினர் தீப் பட
உரும் இடித்து அன்ன குரலினர் விழுமிய
உறு குறை மருங்கில் தம் பெறு முறை கொண்மார்
அந்தரக் கொட்பினர் வந்து உடன் காணத்
175 தாவு இல் கொள்கை மடந்தையொடு சில் நாள்
ஆவினன் குடி அசைதலும் உரியன்; அதாஅன்று,

## ச. திருவேரகம்

இரு மூன்று எய்திய இயல்பினின் வழாஅது
இருவர்ச் சுட்டிய பல் வேறு தொல்குடி
அறு நான்கு இரட்டி இளமை நல் யாண்டு
180 ஆறினிற் கழிப்பிய அறன் நவில் கொள்கை
மூன்று வகைக் குறித்த முத்தீச் செல்வத்து
இரு பிறப்பாளர் பொழுது அறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்று புரி நுண் ஞாண்
புலராக் காழகம் புலர உடீஇ

---

(169—172) நக்ஷத்திரங்கள் வானத்தில் பூத்ததுபோன்ற தோற்றத்தை யுடையவராயும், அவை உலாவுகின்ற விண்ணிடத்தைச் சேர்ந்து காற்று எழுந்தாலொத்த வேகத்தை யுடையவராயும் காற்றிலே நெருப்பு எழுந்தாலொத்த வலிமையையுடையவராயும், நெருப்புப் பிறக்கும்படி இடியேறு இடித்தாற்போன்ற குரலை உடையவராயும் இவர்கள் சென்றார்கள்.

(176) இவர்கள் யாவரும் இங்ஙனமாக வந்து காணும்படி இங்கே (திருஆவினன் குடியில்) தங்கி யிருப்பான். அதுவு மன்றி,

(177—189) ஏரகம் என்னும் திருப்பதியிலே முருகன் எழுந்தருளி யிருத்தலும் உரியன். இங்கே அவனை இருபிறப் பாளராகிய அந்தணர் உரிய காலத்தைத் தெரிந்து துதிப்பர். இவர்கள் தாய் வழியிலும் தந்தை வழியிலும் நன்கு மதிக்கப்பட்ட பழைய குடி

185 உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து
ஆறெழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி
நா இயல் மருங்கில் நவிலப் பாடி
விரை உறு நறுமலர் ஏந்திப் பெரிது உவந்து
ஏரகத்து உறைதலும் உரியன், அதாஅன்று ;

## ரு. குன்றுதோறாடல்

190 பைங்கொடி நறைக்காய் இடை இடுபு வேலன்
அம் பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண் கூதாளம் தொடுத்த கண்ணியன்
நறும் சாந்து அணிந்த கேழ் கிளர் மார்பின்
கொடுந் தொழில் வல்வில் கொலைஇய கானவர்
195 நீடு அமை விளைந்த தேக் கள் தேறல்

களிலே தோன்றியவர்கள்; தங்களுக்குரிய *ஆறு தொழில்களிலும் இலக்கணம் வழாது நடப்பவர்கள்; தங்கள் இளமையில் நாற்பத்தெட்டு வருடங்களைப் பிரமசரியத்திற் கழித்தவர்கள் ; அறத்தைச் சொல்லும் கொள்கையுடையவர்கள்; மூன்று வடிவாக அமைத்து வளர்க்கும் †முத்தீயாகிய செல்வத்தை யுடையவர்கள் ; ஒன்பது இழைகளைக் கொண்டு முப்புரிகளாக அமைந்த நுண்ணிய பூணூலையுடையவர்கள்; இவர்கள் ஈரமான ஆடை உடம்பிலே கிடந்துலரும்படியுடுத்து, கைகளை உச்சியிற் குவித்து, முருகனைப் புகழ்ந்து, ஆறெழுத்தாகிய மந்திரத்தை வாய்க்குள்ளே உச்சரித்து, மணம்பொருந்திய நல்ல புஷ்பங்களை ஏந்தி வழிபடுவார்கள். இவ்வழிபாட்டுக்கு மிகவும் மகிழ்ந்துமுருகன் இங்கே (திருவேரகத்தில்) தங்கியிருப்பான். அதுவுமன்றி,

(217, 193—205) குன்றுதோறும் ‡வேலனாக நின்று ஆடலையும் முருகன் தனது நிலைபெற்ற குணமாக உடையவன். குன்றுகளிலே கொலைத்தொழிலைச் செய்யும் வலிமை பொருந்திய வளை

* ஆறு தொழில்கள்—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.

† முத்தீ—ஆகவனீயம், தக்கிணாக்கினி, காருக பத்தியம்.

‡ வேலன் = படிமத்தான் = தேவராளன் = கோயிலிற் பூசை செய்பவன். இவன் ஆவேசம் பெற்று ஆடிக் குறிமுதலியன சொல்லுதல் பண்டைக்கால வழக்கு. வேலைக் கையிற் பிடித்து ஆடுவதால் இவனுக்கு வேலன் என்பது பெயராயிற்று. மலைநாட்டில் வேலன் என்ற பெயரோடு இப் பூசகன் இன்றும் வழங்கப்படுகிறான்.

குன்றகச் சிறு குடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறு பறைக் குரவை அயர
விரல் உளர்ப்ப அவிழ்ந்த வேறு படு நறுங் கால்
குண்டு சுனை பூத்த வண்டுபடு கண்ணி
200 இணைத்த கோதை அணைத்த கூந்தல்
முடித்த குல்லை இலை உடை நறும் பூச்
செங் கால் மராஅத்த வால் இணர் இடை இடுபு
சுரும்பு உணத் தொடுத்த பெருந் தண் மாத் தழை
திருந்து காழ் அல்குல் திளைப்ப உடீஇ
205 மயில் கண்டு அன்ன மடநடை மகளிரொடு
செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்
செயலைத் தண் தளிர் துயல் வரும் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும் பல் இயத்தன்
210 தகரன் மஞ்ஞையன் புகர் இல் சேவல் அம்

கின்ற வில்லையுடைய வேடர்கள் மணமுள்ள சந்தனத்தைப்பூசி, நிறம் விளங்கும் மார்பினராய், நெடுங்காலமாக மூங்கிலிலே விளைந்த இனிய கள்ளின் தெளிவை அங்கே சிற்றூர்களிலுள்ள தங்கள் சுற்றத்தாருடன் கூடி உண்டு மகிழ்ந்து, தொண்டகம் என்னும் பறையைக் கொட்டி, குரவைக் கூத்தாடுவார்கள். இவர்களுடைய பெண்மக்கள், விரலால் வலிந்து மலரச் செய்ததாயும் ஆழமான சுனையிலே பூத்ததாயும் வண்டுகள் நெருங்கி மொய்த்ததாயுமுள்ள கண்ணியை (தலை மாலையை) உடையவர்கள்; இதழ்பறித்துக் கட்டிய மாலையைச் சூடியவர்கள்; சேர்த்துக்கட்டின கூந்தலையுடையவர்கள்; இலைகள் செறிந்ததாயும், சிவந்த தண்டினையுடையதாயுமுள்ள மராமரத்தின் வாசனை மிக்க பல வெண்மையான பூங்கொத்துகளையும், கஞ்சங் குல்லையையும், இடையிடையே விரவிக்கட்டின வண்டுண்ணும் பெரிய குளிர்ந்த தழையாடையை மணிவடங்கள் பூண்ட அரையிலே அசையும்படி உடுத்தவர்கள். மட நடையை யுடையவர்கள். மயிலினங்களைப் போன்ற இவர்களும் குரவைக் கூத்தாடுவார்கள்.

(216, 215, 217, 190—192, 206—214, 217) மெல்லிய தோள்களையுடையவர்களாயும் மான்பிணைகளைப் போன்றவர்களாயும் உள்ள இப்பெண்களைத் தன்னுடைய முழவை யொத்த பெரிய கையினாலே தழுவி எடுத்து வேலனும் ஆடுவான். இவன் பச்சிலைக் கொடியிலே சாதிக்காயை இடையே யிட்டுத் தக்கோலக்காயைக் கலந்து காட்டுமல்லிகையுடனே வெண்தாளியைக் கட்டின கண்

கொடியன் நெடியன் தொடி அணி தோளன்
நரம்பு ஆர்த்து அன்ன இன் குரல் தொகுதியொடு
குறும் பொறிக் கொண்ட நறும் தண் சாயல்
மருங்கில் கட்டிய நிலன் நேர்பு துகிலினன்
215 முழவு உறழ் தடக் கையின் இயல ஏந்தி
மென் தோள் பல் பிணை தழீஇத் தலைத்தந்து
குன்று தோறாடலும் நின்றதன் பண்பே; அதாஅன்று,

## ௬. பழமுதிர் சோலை

சிறு தினை மலரொடு விரைஇ மறி அறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
220 ஊர் ஊர் கொண்ட சீர் கெழு விழவினும்
ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்
வேலன் தைஇய வெறி அயர் களனும்
காடும் காவும் கவின் பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறு பல் வைப்பும்
225 சதுக்கமும் சந்தியும் புதுப் பூம் கடம்பும்
மன்றமும் பொதியிலும் கந்து உடை நிலையினும்

---

-ணியையுடையவன்; சிவந்த மேனியையுடையவன்; செவ்வாடை யணிந்தவன்; சிவந்த அடிப்புறத்தையுடைய அசோக மரத்தின் குளிர்ந்த தளிரானது அசைகின்ற காதையுடையவன்; கச்சைக் கட்டிக் கழலணிந்து வெட்சி மாலை சூடியவன்; குழலையும் கொம்பையும் ஊதிச் சிறிய இசைகளை உண்டாக்குபவன்; ஆட்டுக்கிடாவையும் மயிலையுமுடையவன்; குற்றமற்ற கோழிக்கொடியுடையவன்; உயரமான வடிவத்தை யுடையவன்; தோளிலே கடகத்தை யணிந்தவன்; இடுப்பிலே இறுகக்கட்டிய கச்சையின் மேலே உடுத்ததாயும் நிலத்தின் வரை தாழ்ந்து புரளுவதாயுமுள்ள ஆடையையுடையவன்; நரம்பு ஒலித்தது போன்ற இனிய குரலிலே பாடும் பெண்களோடு ஆடுபவன். இவ்வாறு குன்று தோறும் ஆடுதலுமன்றி,

(218—226) சிறிய தினை யரிசியைப் பூக்களோடு கலந்து பிரப்பரிசியாக* வைத்து, ஆட்டை யறுத்து, கோழிக் கொடியை நிறுத்தி, ஊர்கள் தோறும் எடுத்த சிறப்புடைய திருவிழாக்களிலும் அவன் (முருகன்) இருப்பான். அன்பர்கள் தன்னை ஏத்துதலினாலே

* தெய்வத்தின் முன்பு குறுணி வீதம் கொள்கலன்களில் நிவேதனமாகப் பரப்பி வைக்கும் அரிசி (முதலிய தானியங்கள்.)

மாண் தலைக் கொடியொடும் மண்ணி அமைவர
நெய்யோடு ஐயவி அப்பி ஐது உரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழு மலர் சிதறி
230 முரண் கொள் உருவின் இரண்டு உடன் உடீஇச்
செந் நூல் யாத்து வெண் பொரி சிதறி
மத வலி நிலைஇய மாத் தாள் கொழு விடைக்
குருதியொடு விரைஇத் தூ வெள் அரிசி
சில் பலிச் செய்து பல் பிரப்பு இரீஇச்
235 சிறு பசு மஞ்சளொடு நறு விரை தெளித்துப்
பெரும் தண் கணவீர நறுந் தண் மாலை
துணை அற அறுத்துத் தூங்க நாற்றி
நளி மலைச் சிலம்பின் நல் நகர் வாழ்த்தி
நறும் புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி
240 இமிழ் இசை அருவியொடு இன் இயம் கறங்க
உருவப் பல் பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந் தினை பரப்பிக் குறமகள்
முருகு இயம் நிறுத்து முரணினர் உட்க
முருகு ஆற்றுப் படுத்த உரு கெழு வியன் நகர்

---

தான் மனமுவந்த இடங்களிலும் அவன் வசிப்பான். படிமத்தானாகிய வேலன் செய்த வெறியாடு களத்திலும், காட்டிலும், சோலையிலும், ஆற்றின் நடுவிலுள்ள அழகு வாய்ந்த திட்டுக்களிலும், ஆறுகளிலும், குளங்களிலும், இன்னும் பல்வேறிடங்களிலும், நாற் சந்தி முதலிய சந்திகளிலும், புதுப் பூக்களையுடைய கடம்ப மரத்திலும், ஊர் நடுவிலுள்ள மரத்தின் அடியிலும், அம்பலத்திலும், பசுக்கள் உராய்ந்து கொள்ளும் தறிகள் உள்ள இடங்களிலும் அவன் இருத்தற்குரியன்.

(243, 244, 227—248) அன்றியும், பகைவர்களஞ்சுமாறு தான் வந்து தோன்றும்படி வழிப்படுத்தின அச்சத்தைத் தருகின்ற மலைக் கோயில்களிலும் முருகன் உறைவான். ஆங்கே குறப் பெண்கள் மாட்சிமை தங்கிய சிறப்புள்ள கோழிக் கொடியை அமைப்பர்; நெய்யோடு வெண் சிறு கடுகை அப்புவர்; வெளியே கேட்காதபடி மந்திரத்தை உச்சரிப்பர்; வணங்கி அழகிய மலர்களைத் தூவுவர்; வெவ்வேறு நிறங்களையுடைய இரண்டு உடைகளை உடுத்துவர்; சிவப்பு நூலைக் காப்பாகக் கட்டி, வெண் பொரியைத் தூவி, மிக்க வலிமை பொருந்திய பெரிய கால்களையுடைய கொழுத்த மாடுகளின் இரத்தம் கலந்த வெண்மையான அரிசியைச் சிறு பலியாகக்

245 ஆடு களம் சிலம்பப் பாடிப் பல உடன்
கோடு வாய் வைத்துக் கொடு மணி இயக்கி
ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட
ஆண்டு ஆண்டு உறைதலும் அறிந்த ஆறே
250 ஆண்டு ஆண்டு ஆயினும் ஆகக் காண் தக
முந்து நீ கண்டுழி முகன் அமர்ந்து ஏத்திக்
கை தொழூஉப் பரவிக் கால் உற வணங்கி
நெடும் பெரும் சிமையத்து நீலப் பைஞ் சுனை

---

கொடுத்துப் பிரப்பு வைப்பர்; அக்கோயிலில் பசு மஞ்சள் நீரையும் வாசனை நீரையும் தெளித்து, பெரிய குளிர்ந்த செவ்வலரி மாலைகளை ஒரே அளவாகத் துண்டித்துத் தொங்க விடுவர்; தூபம் காட்டுவர்; குறிஞ்சிப் பண்களைப் பாடுவர்; இனிய அருவி யொலியும் வாத்திய ஒலியும் ஒன்றாக முழங்க, பல நிறப் பூக்களைத் தூவுவர்; இரத்தங் கலந்த செந்தினையைப் பரப்புவர்; முருகன் விரும்புகின்ற வாத்தியங் களை வாசிக்கச் செய்வர்; 'மலையிலுள்ள சிற்றூர்களெல்லாம் வாழ்க' வென்று வாழ்த்துவர்; வெறியாடும் களம் முழுவதும் ஆரவாரிக்கும் படி பாடுவர்; கொம்புகள் பலவற்றையும் ஊதி, வளைந்த மணிகளை ஒலிப்பித்து, கெடாத வலிமையையுடைய பிணிமுகம் என்னும் யானையை வாழ்த்துவர். அப்பெண்கள் இங்ஙனம் சாந்தி செய்ய, முருகனை வேண்டிக் கொண்டவர்கள் தாங்கள் வேண்டினவெல்லாம் பெற்றதால் அவனை வழிபட்டு நிற்பர்.

(249—252) முருகன் இவ்வாறு ஆங்காங்கே உறைந்திருத்தலும் உரியன். நான் அறிந்த அளவு இது. மேற்கூறிய இடங்களில் அவன் உறைந்தாலும் சரி, அல்லது வேறிடங்களில் உறைந்தாலும் சரி, நீ அவனை நேரிற் காணும்பொழுது இனிய முகத்தோடு அவனைத் துதித்துக் கையினால் தொழுது வாழ்த்தி, அவன் திருவடிகள் உனது தலையிற் பொருந்தும்படி வணங்கிப் புகழ்வாயாக.

(253—281) "நெடிய பெரிய இமயத்தின் சரவணப் பொய்கை யில், கார்த்திகைப் பெண்கள் * அறுவரும் பெற்று, அக்கினி தன்

---

* இறைவனிடத்திருந்து இந்திரன் வாங்கிய கருவினைச் சப்த ரிஷிகள் தாங்க முடியாது முத்தீக் குண்டத்திலிட்டுப் பிறகு அருந் ததி நீங்கலாக மற்ற ஆறு ரிஷி பத்தினிகட்கும் (இவர்களே கார்த்தி கைப் பெண்கள்) தர, அவர்கள் அதனை விழுங்கிக் கருவுற்று சரவணப் பொய்கையிலே பதுமப் பாயலிலே ஆறு வடிவாக ஈன்றனர் என்பது வரலாறு.

ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
225 அறுவர் பயந்த ஆறு அமர் செல்வ
ஆல் கெழு கடவுள் புதல்வ மால் வரை
மலை மகள் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல் போர்க் கொற்றவை சிறுவ
இழை அணி சிறப்பிற் பழையோள் குழவி
260 வானோர் வணங்கு வில் தானைத் தலைவ
மாலை மார்ப நூல் அறி புலவ
செருவில் ஒருவ பொரு விறல் மள்ள
அந்தணர் வெறுக்கை அறிந்தோர் சொல் மலை
மங்கையர் கணவ மைந்தர் ஏறே
265 வேல் கெழு தடக் கைச் சால் பெரும் செல்வ
குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண் பொரு நெடு வரைக் குறிஞ்சிக் கிழவ
பலர் புகழ் நன் மொழிப் புலவர் ஏறே
அரும் பெறல் மரபிற் பெரும் பெயர் முருக
270 நசையுநர்க்கு ஆர்த்தும் இசை பேர் ஆள

---

கையிலே தாங்கிய ஆறு வடிவு பொருந்திய செல்வனே! கல்லாலின் கீழிருந்த கடவுளின் புதல்வனே! பெரிய பர்வத ராஜனது புத்திரியின் மகனே! பகைவர்கட்குக் கூற்றம் போன்றவனே! வெற்றியைத் தரும் போரைச் செய்யவல்ல துர்க்கையின் புதல்வனே! ஆபரணங்களணிந்த சிறப்புடைய காடுகிழாளின் புதல்வனே! வளைந்த வில்லுடைய வானவர் படைக்குத் தலைவனே! கடம்பமாலை யணிந்த மார்பினனே! நூல்களை யுணர்ந்த அறிஞனே! போரில் ஒப்பற்றவனே! பொருகின்ற வெற்றியுடைய வீரர்வீரனே! அந்தணர்க்குச் செல்வமாயிருப்பவனே! அறிவாளர்கள் புகழ்ச்சிச் சொற்களெல்லாம் ஒன்றாகக் குவிந்த மலையே! (வள்ளி தெய்வயானை யென்ற) மங்கையரின் கணவனே! வீரருட் சிறந்தவனே! வேல் தரித்த அகன்ற கையினையுடைய பெருஞ் செல்வனே! கிரவுஞ்ச கிரியை அழித்ததனால் குன்றாத வெற்றியை யுடையவனே! ஆகாயத்தை யளாவும் பெரிய மலைகளிருக்கும் குறிஞ்சி நிலத் தலைவனே! பலரும் புகிழ்கின்ற நன்மொழிப் புலவர்களுட் சிறந்தவனே! பெறுதற்கரிய தன்மையுடைய முத்தி தரும் முருகனே! முத்தியை விரும்பினோர்க்கு அதைக் கொடுக்கும் பெரும் புகழாளனே! பிறரால் வருந்துவோர்க்கு அருள் புரியும் பொற்பணி பூண்ட சேயே! செருங்

அலந்தோர்க்கு அளிக்கும் பொலம் பூண் சேஎய்
மண்டு அமர் கடந்த நின் வென்று ஆடு அகலத்துப்
பரிசிலர்த் தாங்கும் உரு கெழு நெடு வேஎள்
பெரியோர் ஏத்தும் பெரும் பெயர் இயவுள்
275 சூர் மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி
போர் மிகு பொருந குரிசில் எனப் பல
யான் அறி அளவையின் ஏத்தி ஆனாது
நின் அளந்து அறிதல் மன் உயிர்க்கு அருமையின்
நின் அடி உள்ளி வந்தனன் நின்னொடு
280 புரையுநர் இல்லாப் புலமையோய் எனக்
குறித்தது மொழியா அளவையில் குறித்து உடன்
வேறு பல் உருவிற் குறும் பல் கூளியர்
சாறு அயர் களத்து வீறு பெறத் தோன்றி
அளியன் தானே முது வாய் இரவலன்
285 வந்தோன் பெரும நின் வண் புகழ் நயந்து என

---

கிய போர்களிலே வெற்றிகொண்ட தனது மார்பினாலே பரிசில் வேண்டுவோரைப் பாதுகாக்கும் நெடுவேளே! பயத்தைத் தருபவனே! கற்றறிந்த பெரியோர் துதிக்கும் பெரும் புகழ்பெற்ற கடவுளே! சூரபன்மாவின் குலத்தை வேரோடறுத்த வலிமை மிக்கவனே! மதவலி யென்ற பெயருடையோனே! போரில் வல்ல வீரனே! தலைவனே!" என்று நீ பலவாறாக நான் கூறிய முறைமையிலே விடாது அவனைப் புகழ்ந்து "உனது பெருமையை அளந்தறிதல் உயிர்கட்கு அரிதான காரியம், ஆகவே என்னால் உனது புகழை முழுதுங் கூறுதல் இயலாது, உன் திருவடியை நினைந்து இங்கு வந்தேன், ஒப்பற்ற புலமையுடையோனே!" என்று உனது விண்ணப்பத்தைத் தெரிவித்துக்கொள்.

(281—295, 317) உனது விண்ணப்பத்தைச் சொல்லி முடித்தவுடனே, பல்வேறு வடிவங்கொண்ட சிறு பூதங்கள் பல, திருவிழா நிகழும் அவ்விடத்தே பெருமை மிகத் தோன்றி "இவன் தேவரீர் கிருபைக்குப் பாத்திரமானவன், அறிவு முதிர்ந்த சொல்வளமுடைய புலவன், தேவரீரது செழும்புகழை நாடி இங்கே வந்திருக்கின்றான். பெருமானே!" என்று இனிய நல்ல சொற்களால் பலவாறாக ஏத்தும். அப்போது தெய்வத்தன்மை நிரம்பியதாயும், வலிமை மிக்கதாயும், ஆகாயத்தை யளாவுகின்றதாயுமுள்ள உயர்ந்த வடிவோடு அவன் (முருகன்) தோன்றுவான். தோன்றி, அச்சம் தரவல்ல தனது பெரு நிலையை உள்ளடக்கி, மணங்கமழும் தெய்வத் தன்மை

இனியவும் நல்லவும் நனி பல ஏத்தித்
தெய்வம் சான்ற திறல் விளங்கு உருவின்
வான் தோய் நிவப்பின் தான் வந்து எய்தி
அணங்கு சால் உயர் நிலை தழீஇப் பண்டைத் தன்
290 மணங் கமழ் தெய்வத்து இள நலம் காட்டி
அஞ்சல் ஓம்புமதி அறிவல் நின் வரவு என
அன்பு உடை நன் மொழி அளைஇ விளிவு இன்று
இருள் நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒரு நீ ஆகித் தோன்ற விழுமிய
295 பெறல் அரும் பரிசில் நல்கும் மதி பலவுடன்
வேறு பல் துகிலின் நுடங்கி அகில் சுமந்து
ஆரம் முழு முதல் உருட்டி வேரல்
பூ உடை அலங்கு சினை புலம்ப வேர் கீண்டு
விண் பொரு நெடு வரைப் பரிதியில் தொடுத்த
300 தண் கமழ் அலர் இறால் சிதைய நன்பல

யுடைய, பழமையான தனது இளமை நலங் காட்டி, "உனது வரவை நான் அறிவேன், பயத்தை விட்டுவிடு" என்று அன்புள்ள நல்ல மொழிகளைப் பல காலும் அருள்வான். கெடாத நீல நிறமுடைய கடல் சூழ்ந்த உலகத்தில் உனக் கொப்பாக ஒருவருமில்லை யென்று கூறும்படி, பெறுதற்கரிய சிறந்த பரிசிலையும் அறிவுகள் பலவுடன் பழமுதிர் சோலை மலை கிழவோனாகிய அவன் கொடுத்தருள்வான்.

(296—317) அவனுடைய மலையிலுள்ள அருவி பல நிறம் பொருந்திய ஆடைகளைப் போல ஒடுங்கி அசைந்து வரும்; அகில் மரங்களைச் சுமந்து வரும்; சந்தன மரத்தின் அடித்தூர்களை உருட்டும்; பூக்கள் நிறைந்த மூங்கிற் கிளைகள் அசைந்து புலம்ப வேரைப் பறிக்கும்; தேவருலகை யளாவும் நெடிய மலையில் தொடுக்கப்பட்டு, சூரிய பிம்பம் போலத் தோன்றுவதாயும் குளிர்ந்ததாயும் மணம் வீசுவதாயு முள்ள தேன் கூடுகளைச் சிதைக்கும்; நல்ல ஆசினிப் பலாவின் முதிர்ந்த சுளைகள் பலவும், மலையுச்சியிலுள்ள சுரபுன்னை மரத்துப் பூக்களும் அவ்வருவிமேல் உதிர்ந்து விழ, கருங் குரங்கும் கருமுகக் கடுவனும் நடுங்க, அழகிய நெற்றியுடைய கரிய பெண் யானை குளிரால் ஒடுங்க, அவ்வருவி அலைவீசிச் செல்லும். பெரிய ஆண் யானையினது முத்துடைய வெண் கொம்புகளை வாரி யெடுத்து, பொன்னிறமும் மணி நிறமும் விளங்கப் பொன்னைக் கொழித்துக் கொண்டு குதித்துச் செல்லும்; வாழையின் அடித்தூரைச் சாய்க்கும்; தெங்கின் பெரிய இளநீர்க்குலை உதிரும்படி தாக்கும்; மிளகுக் கொடியின்

ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமலர் உதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று
305 முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறம் கிளரப் பொன்கொழியா
வாழை முழுமுதல் துமியத் தாழை
இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
310 மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை இரியக் கேழலொடு
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குரூஉமயிர் யாக்கைக் குடாஅடி உளியம்
பெருங்கல் விடர் அளைச் செறியக் கருங்கோட்டு
315 ஆமா நல்லேறு சிலைப்பச் சேண்நின்று
இழுமென இழிதரும் அருவிப்
பழம்முதிர் சோலை மலைகிழவோனே.

---

## வினைமுடிபு.

கணவன் (6) மார்பினன் (11) சென்னியனாகிய (44) சேயுடைய (61) சேவடிபடரும் உள்ளத்தோடே (65) செல்லுஞ் செலவை நீ நயந்தனையாயின் (64) நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப (65) இன்னே பெறுதி (66) அது பெறுதற்கு அவன் யாண்டுறையுமென்னில், குன்றமர்ந்துறைதலு முரியன்; (77), அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பு; (125) ஆவினன்குடி அசைதலு முரியன்; (176) ஏரகத்

---

கரிய கொத்துக்களைச் சாய்த்துக் கவிழ்க்கும்; புள்ளியுடைய பீலியும் மடநடையுமுள்ள பல மயில்களை மருட்டும்; பெட்டைக் கோழிகளை வெருட்டும்; பனஞ் செறும்பின் புல்லிய கருநிறத்தைப்போன்ற மயிர் செறிந்த உடலையும் வளைந்த அடியையும் உடைய கரடியும், ஆண் பன்றியும் பெரிய கற்பிளவாகிய குகையிலே அஞ்சி ஒடுங்கும்படி செய்யும்; கரிய கொம்பினையுடைய காட்டெருமைக் கிடாக்கள் கதறும்படி மிக உயரத்திலிருந்து இழும் என்ற ஓசை யுண்டாகும்படி அருவியானது விழுந்து செல்லும். இவ்வாறு அருவி விழுந்தோடும் மலைக்குத் தலைவனாகிய முருகன் உனக்கருள் புரிவான்.

துறைதலு முரியன் ; (189) குன்றுதோ றாடலும் நின்றதன் பண்பு ; (217) விழவு, நிலை, களன், காடு, கா, துருத்தி, யாறு, குளன், வேறு பல்வைப்பு, சதுக்கம், சந்தி, கடம்பு, மன்றம், பொதியில், கந்துடை நிலை, வியனகர் (220—244) முதலிய இடங்களில் ஆண்டாண்டுறை தலு முரியன் ; இதை யானறிந்தவாறே கூறினேன்; (249) முந்து நீ கண்டுழி ஏத்தி (251) பரவி வணங்கி (252) பல யானறி அளவையின் னேத்தி (277) நின்னடியுள்ளி வந்தனனென (279) குறித்தது மொழியா வளவையில் (281) கூளியர் (282) தோன்றி (283) வந் தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென (285) மலைகிழவோன் (317) வந்தெய்தி (288) தழீஇ (289) இளநலங்காட்டி (290) அஞ்சல் அறி வன் நின்வரவென (291) நன்மொழி யளைஇ (292) பரிசில் நல்கும் (295) என வீடு பெறக்கருதிய இரவலனை நோக்கி வீடுபெற்றானொரு வன் ஆற்றுப்படுத்தியதாக வினைமுடிபு செய்க.

---

## தனி வெண்பாக்கள்

குன்றம் எறிந்தாய் குரைகடலில் சூர்தடிந்தாய்
புன்தலைய பூதப் பொருபடையாய்—என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாய்என் உள்ளத் துறை. க

---

[குறிப்பு :—இவ்வெண்பாக்கள் சங்க நூல்களுள் ஒன்றாகிய பத்துப்பாட்டு மட்டுமுள்ள பழைய ஏட்டுப் பிரதிகளிலில்லை ; பத்துப் பாட்டில் ஒன்றாகிய திருமுருகாற்றுப்படை மட்டுமுள்ள புதிய ஏட்டுப் பிரதிகளிலும் அச்சுப் பிரதிகளிலும் உள்ளன. இவற்றுள் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரது பதினொராந் திருமுறைப் பதிப்பில் முதல் ஏழு வெண்பாக்களும், திரு. சுப்பராய செட்டியாரது ஷை திருமுறைப் பதிப்பில் முதல் இரண்டு வெண்பாக்களும் மட்டும் அச்சிடப்பட்டுள்ளன. டாக்டர். உ. வே. சாமிநாதையரவர்கள் தமது பத்துப் பாட்டுப் பதிப்பில் இவ்வெண்பாக்கள் அனைத்தையும் வெளியிட்டிருக்கிறார்கள். திருவாலவா யுடையார் திருவிளையாடற் புராணம் 44-ஆம்திருவிளையாடல் 27-ம் விருத்தம் "குன்ற மெறிந்தாய்" என்ற வெண்பா அக்காலத்தில் வழங்கியதை ஒருவாறு தெரிவிக்கிறது. இவ்வெண்பாக்களின் மோனை எதுகை செய்யுட் போக்கு பொருட் போக்கு முதலியவற்றை ஆராய்ந்த ஆராய்ச்சியாளர் இவை நக்கீரர் வாக்கல்ல வென்கின்றனர். இவ்வெண்பாக்கள் 11-ம் திருமுறையின் மொத்த பாடற்றொகை எண்ணிக்கையிற் சேர்க்கப்படவில்லை.]

குன்றம் எறிந்ததுவும் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங்கு அமரரிடர் தீர்த்ததுவும்—இன்றென்னைக்
கைவிடா நின்றதுவும் கற்பொதும்பில் காத்ததுவும்
மெய்விடா வீரன்கை வேல். உ

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை. ந

இன்னம் ஒருகால் எனதிடும்பைக் குன்றுக்கும்
கொன்னவில்வேல் சூர்தடிந்த கொற்றவா—முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும். ச

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தி வாழ்வே. ரு

அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்—நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலும் தோன்றும்
முருகாஎன் றோதுவார் முன். சு

முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான். எ

காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா—பூக்கும்

கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்காய் இனி. ௮

பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்தன் பாதம்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு—சுருங்காமல்
ஆசையால் நெஞ்சே அணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல். ௯

நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறும் சாற்றினால்—முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளி
தான்நினைத்த எல்லாம் தரும். ௧௦

நக்கீரதேவ நாயனார் அருளிய

## திருக்கண்ணப்பதேவர் திருமறம்

திருச்சிற்றம்பலம்

திருக்கண் ணப்பன் செய்தவத் திறத்து
விருப்புடைத் தம்ம விரிகடல் உலகே பிறந்தது
தேனழித் தூனுண் கானவர் குலத்தே திரிவது
பொருபுலி குமுறும் பொருப்பிடைக் காடே வளர்ப்பது
5 செங்கண் நாயொடு தீவகம் பலவே பயில்வது
வெந்திறற் சிலையொடு வேல்வாள் முதலிய
அந்தமில் படைக்கலம் அவையே யுறைவது
குறைதசை பயின்று குடம்பல நிறைத்துக்
கறைமலி படைக்கலங் கலந்த புல்லொடு
10 பீலி மேய்ந்தவை பிரிந்த வெள்ளிடை
வாலிய புலித்தோல் மறைப்ப வெள்வார்
இரவும் பகலும் இகழா முயற்சியொடு
மடைத்த தேனும் வன்னாய் விட்டுஞ்
சிலைவிடு கணையிலுந் திண்சுரி கையிலும்
15 பலகிளை யவையொடும் பதைப்பப் படுத்துத்
தொல்லுயிர் கொல்லுந் தொழிலே வடிவே
மறப்புலி கடித்த வன்திரள் முன்கைத்
திறற்படை கிழித்த திண்வரை அகலம்
எயிற்றெண்கு கவர்ந்த இருந்தண் நெற்றி
20 அயிற்கோட் டென்ன பெடுத்தெழு குறங்கு
செடித்தெழு குஞ்சி செந்நிறத் துறுகண்
கடுத்தெழும் வெவ்வுரை யவ்வாய்க் கருநிறத்
தடுபடை பிரியாக் கொடுவிற லதுவே மனமே
மிகக்கொலை புரியும் வேட்டையில் உயிர்கள்
25 அகப்படு துயருக் ககனமர்ந் ததுவே யிதுவக்
கானத் தலைவன் தன்மை கண்ணுதல்
வானத் தலைவன் மலைமகள் பங்கன்

எண்ணரும் பெருமை இமையவர் இறைஞ்சும்
புண்ணிய பாதப் பொற்பார் மலரிணை
30 தாய்க்கட் கன்றெனச் சென்றுகண் டல்லது
வாய்க்கிடும் உண்டி வழக்கறி யானே அதாஅன்று
கட்டறல் விரிந்த கனற்கதிர் உச்சியிற்
சுட்டடி யிடுந்தொறுஞ் சுறுக்கொளுஞ் சுரத்து
முதுமரம் நிரந்தம் உட்பயில் வளாகத்
35 தெதிரினங் கடவிய வேட்டையில் விரும்பி
எழுப்பிய விருகத் தினங்களை மறுக்குறத்
தன்நாய் கடித்திரித் திடவடிக் கணைதொடுத்
தெய்து துணித்திடுந் துணித்த விடக்கினை
விறகினிற் கடைந்த வெங்கனற் காய்ச்சி
40 நறுவிய இறைச்சி நல்லது சுவைகண்
டுண்ணற் கமிர்தென் றதுவே றமைத்துத்
தண்ணறுஞ் சுனைநீர் தன்வாய்க் குடத்தான்
மஞ்சன மாக முகந்து மலரெனக்
குஞ்சியில் துவர்க்குலை சொருகிக் குனிசிலை
45 கடுங்கணை யதனொடும் ஏந்திக் கனல்விழிக்
கருங்குரல் நாயின் தொடர யாவரும்
வெருக்கோ ளுற்ற வெங்கடும் பகலில்
திருக்கா ளத்தி எய்திய சிவற்கு
வழிபடக் கடவ மறையோன் முன்னந்
50 துகிலிடைச் சுற்றியில் தூநீ ராட்டி
நல்லன விரைமலர் நறும்புகை விளக்கவி
சொல்லின பரிசிற் சுருங்கலன் பூவும்
பட்ட மாலையுந் தூக்கமும் அலங்கரித்
தர்ச்சனை செய்தாங் கவனடி இறைஞ்சித்
55 திருந்த முத்திரை சிறப்பொடுங் காட்டி
மந்திரம் எண்ணி வலம்இடம் வந்து
விடைகொண் டேகின பின்தொழிற்
பூசனை தன்னைப் புக்கொரு காலில்
தொடுசெருப் படியால் நீக்கி வாயில்
60 இடுபுனல் மேனியி லாட்டித் தன்தலை

தங்கிய துவர்ப்பூ ஏற்றி இறைச்சியில்
பெரிதும் போனகம் படைத்துப் பிரானைக்
கண்டுகண் டுள்ளங் கசிந்து காதலில்
கொண்டதோர் கூத்துமுன் னாடிக் குரைகழல்
65 அன்பொடும் இறுக இறைஞ்சி யாரு
அன்பொடு கானகம் அடையும் அடைந்த
அற்றை அயலினிற் கழித்தாங் கிரவியும்
உதித்த போழ்தத் துள்நீர் மூழ்கி
ஆதரிக்கும் அந்தணன் வந்து
70 சீரார் சிவற்குத் தான்முன் செய்வதோர்
பொற்புடைப் பூசனை காணான் முடிமிசை
ஏற்றிய துவர்க்கண் டொழியான் மறித்தும்
இவ்வா றர்ச்சனை செய்பவர் யாவர்கொல் என்று
கரந்திருந் தவண்அக் கானவன் வரவினைப்
75 பரந்த காட்டிடைப் பார்த்து நடுக்குற்று
வந்தவன் செய்து போயின வண்ணஞ்
சிந்தையிற் பொறாது சேர்விடம் புக்கு
மற்றை நாளும்அவ் வழிபட் டிறைவ
உற்றது கேட்டருள் உன்றனக் கழகா
80 நாள்தொறும் நான்செய் பூசனை தன்னை
ஈங்கொரு வேடுவன்
நாயொடும் புகுந்து மிதித்துழக்கித்
தொடுசெருப் படியால் நீக்கி வாயில்
இடுபுனல் மேனியில் ஆட்டித் தன்தலை
85 தங்கிய சருகிலை யுதிர்த்தோர் இறைச்சியை
நின்திருக் கோயிலில் இட்டுப் போமது
என்றும் உன்றனக் கினிதே எனையுருக்
காணிற் கொன்றிடும் யாவ ராலும்
விலக்குறுங் குணத்தன் அல்லன் என்னுந்
90 திருக்குறிப் பென்றீவன் சென்ற அல்லிடைக்
கனவில் ஆதரிக்கும் அந்தணன் தனக்குச்
சீரார் திருக்கா ளத்தியுள் அப்பன்
பிறையணி யிலங்கு பின்னுபுன் சடைமுடிக்

கறையணி மிடற்றுக் கனல்மழுத் தடக்கை
95 நெற்றி நாட்டத்து நிறைநீற் ருக
ஒற்றை மால்விடை உமையொடு மருங்கில்
திருவுருக் காட்டி யருளிப் புரிவொடு
பூசனை செய்யுங் குனிசிலை வேடன்
குணமவை யாவன உரிமையிற் சிறந்தநன்
100 மாதவன் என்றுணர் அவனுகந்
தியங்கிய இடம்முனி வனம்அது வேஅவன்
செருப்படி யாவன விருப்புறு துவலே
எழிலவன் வாயது தூய பொற்குடமே
அதனில் தங்குநீர் கங்கையின் புனலே
105 புனற்கிடு மாமணி யவனிரைப் பல்லே
அதற்கிடு தூமலர் அவனது நாவே
உப்புனல் விடும்பொழு தரிஞ்சிய மீசைப்
புன்மயிர் குசையினும் நம்மடிக் கினிதே
அவன்தலை தங்கிய சருகிலை தருப்பையில்
110 பொதிந்த அங்குலி கற்பகத் தலரே
அவனுகந் திட்ட இறைச்சி எனக்குநன்
மாதவர் இட்ட நெய்பால் அவியே
இதுவெனக் குனக்கவன்
கலந்ததோர் அன்பு காட்டுவன் நாளை
115 நலந்திகழ் அருச்சனை செய்தாங் கிருஎன்
றிறையவன் எழுந் தருளினன்
அருளலும் மறையவன் அறிவுற் றெழுந்து
மனமிகக் கூசி வைகறைக் குளித்துத்
தான்முன் செய்வதோர்
120 பொற்புடைப் பூசனை புகழ்தரச் செய்து
தோன்ற வண்ணம் இருந்தன னாக இரவியும்
வான்தனி முகட்டில் வந்தழல் சிந்தக்
கடும்பகல் வேட்டையிற் காதலித் தடித்த
உடும்பொடு சிலைகணை யுடைத்தோல் செருப்புத்
125 தொடர்ந்த நாயொடு தோன்றினன் தோன்றலுஞ்
செல்வன் திருக்கா ளத்தியுள் அப்பன்

திருமேனியின் மூன்று கண்ணாய்
ஆங்கொரு கண்ணிலும் உதிரம்
ஒழியா தொழுக இருந்தனன் ஆகப்
130 பார்த்து நடுக்குற்றுப் பதைத்து மனஞ்சுழன்று
வாய்ப்புனல் சிந்தக் கண்ணீர் அருவக்
கையில் ஊனொடு கணைசிலை சிந்த
நிலம்படப் புரண்டு நெடிதினில் தேறிச்
சிலைக்கொடும் படைகடி தெடுத்துப் படுத்தவர்
135 அடுத்தவிவ் வனத்துளர் எனத்திரிந் தாஅங்
கின்மை கண்டு நன்மையில்
தக்கன மருந்துகள் பிழியவும் பிழிதொறும்
நெக்கிழி குருதியைக் கண்டு நிலைதளர்ந்தென்
அத்தனுக் கடுத்ததென் அத்தனுக் கடுத்ததென்என்
140 றன்பொடுங் கனற்றி
இத்தனை தரிக்கிலன் இதுதனைக் கண்டஎன்
கண்தனை யிடந்து கடவுள்தன் கண்ணுறு
புண்ணில் அப்பியுங் காண்பன்என் றொரு கண்ணிடைக்
கணையது மடுத்துக் கையில் வாங்கி
145 அணைதர அப்பினன் அப்பலுங் குருதி
நிற்பதொத் துருப்பெறக் கண்டுநெஞ் சுகந்து
மற்றைக் கண்ணிலும் வடிக்கணை மடுத்தனன் மடுத்தலும்
நில்லு கண்ணப்ப நில்லுகண் ணப்பஎன்
அன்புடைத் தோன்றல் நில்லுகண் ணப்பஎன்
150 றின்னுரை யதனொடும் எழிற்சிவ லிங்கந்
தன்னிடைப் பிறந்த தடமலர்க் கையால்
அன்னவன் தன்கை யம்பொடும் அகப்படப்
பிடித் தருளினன் அருளலும்
விண்மிசை வானவர்
155 மலர்மழை பொழிந்தனர் வளையொலி படகந்
துந்துபி கறங்கின தொல்சீர் முனிவரும்
ஏத்தினர் இன்னிசை வல்லே
சிவகதி பெற்றனன் திருக்கண் ணப்பனே.

பதி. ௬

தத்தையாந் தாய்தந்தை நாகனாந் தன்பிறப்புப்
பொத்தப்பி நாட்டுடுப்பூர் வேடுவனாந்—தித்திக்குந்
திண்ணப்ப னாஞ்சிறுபேர் செய்தவத்தாற் காளத்திக்
கண்ணப்ப னாய்நின்றான் காண். ௨

திருச்சிற்றம்பலம்

கல்லாடதேவ நாயனார் அருளிய

## திருக்கண்ணப்ப தேவர் திருமறம்

திருச்சிற்றம்பலம்

பரிவின் தன்மை யுருவுகொண் டனையவன்
போழ்வார் போர்த்த தாழுகச் செருப்பினன்
குருதி புலராச் சுரிகை யெஃகம்
அரையிற் கட்டிய வுடைதோற் கச்சையன்
5 தோல்நெடும் பையிற் குறுமயிர் திணித்து
வாரில் வீக்கிய வரிக்கை கட்டியன்
உழுவைக் கூனுகிர் கேழல்வெண் மருப்பு
மாறுபடத் தொடுத்த மாலையுந் தரியன்
நீலப் பீலி நெற்றி சூழ்ந்த
10 கானக் குஞ்சிக் கவடி புல்லினன்
முடுகு நாறு குடிலை யாக்கையன்
வேங்கை வென்று வாகை சூடிய
சங்கரன் தன்னினத் தலைவன் ஓங்கிய
வில்லும் அம்பும் நல்லன தாங்கி
15 ஏற்றுக் கல்வனங் காற்றினில் இயங்கிக்
கணையில் வீழ்த்துக் கருமா வறுத்துக்
கோலின் ஏற்றிக் கொழுந்தீக் காய்ச்சி
நாவில் வைத்த நாட்போ னகமுந்
தன்றலைச் சொருகிய தண்பளித் தாமமும்
20 வாய்க்கல சத்து மஞ்சன நீருங்

கொண்டு கானப் பேருறை கண்ணுதல்
முடியிற் பூசை யடியால் நீக்கி
நீங்காக் குணத்துக்
கோசரிக் கன்றவன் நேசங் காட்ட
25 முக்கண் அப்பனுக் கொருகணில் உதிரந்
தக்கி ணத்திடை யிழிதர அக்கணம்
அழுது விழுந்து தொழுதெழுந் தாற்றிப்
புன்மருந் தாற்றப் போகா தென்று
தன்னை மருந்தென்று மலர்க்கண் அப்ப
30 ஒழிந்தது மற்றை யொண்டிரு நயனம்
பொழிந்த கண்ணீர்க் கலுழி பொங்க
அற்ற தென்று மற்றக் கண்ணையும்
பகழித் தலையால் அகழ ஆண்டகை
ஒருகை யாலும் இருகை பிடித்து
35 ஒல்லை நம்புண் ணொழிந்தது பாராய்
நல்லை நல்லை எனப்பெறுந்
திருவேட் டுவர்தந் திருவடி கைதொழக்
கருவேட் டுழல்வினைக் காரியங் கெடுமே.

திருச்சிற்றம்பலம்

---

கபிலதேவ நாயனார் அருளிய

# மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை*

திருச்சிற்றம்பலம்

திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனைமுகத் தானைக்
காதலால் கூப்புவர்தங் கை. க

கைக்கும் பிணியொடு காலன் தலைப்படு மேல்வையினில்
எய்க்குங் கவலைக் கிடைந்தடைந் தேன்வெம்மை நாவளைக்கும்

*வெண்பாவும் கலித்துறையும் மாறிமாறி வருவது.

பைக்கு மரவரை யான்தந்த பாய்மத யானைபத்துத்
திக்கும் பணிநுதற் கண்திருவாளன் திருவடியே. உ

அடியமர்ந்து கொள்வாயே நெஞ்சமே அப்பம்
இடியவலோ டெள்ளுண்டை கன்னல்—வடிசுவையில்
தாழ்வானை யாழ்வானைத் தன்னடியார் உள்ளத்தே
வாழ்வானை வாழ்த்தியே வாழ். ங

வாழைக் கனிபல வின்கனி மாங்கனி தாஞ்சிறந்த
கூழைச் சுருள்குழை யப்பமெள் ளுண்டையெல் லாந்துறுத்தும்
பேழைப் பெருவயிற் றேடும் புகுந்தென் உளம்பிரியான்
வேழத் திருமுகத் துச்செக்கர் மேனி விநாயகனே. ச

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்—விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாந் தன்மையினாற்
கண்ணிற் பணிமின் கனிந்து. ரு

கனிய நினைவொடு நாடொறுங் காதற் படுமடியார்க்
கினியன் இனியொரு வின்னுங் கிலமெவ ரும்வணங்கும்
பணிவெண் பிறைநறுங் கொன்றைச் சடைப்பலி தேரியற்கை
முனிவன் சிறுவன் பெருவெங்கொல் யானை முகத்தவனே.

யானை முகத்தான் பொருவிடையான் சேயமுகார்
மான மணிவண்ணன் மாமருகன்—மேல்நிகழும்
வெள்ளக் குமிழி மதத்து விநாயகனென்
உள்ளக் கருத்தின் உளன். எ

உளதள வில்லதோர் காதலென் னெஞ்சில்வன் நஞ்சமுண்ட
வளரிள மாமணி கண்டன்வண் டாடுவண் கோதைபங்கத்
திளவளர் மாமதிக் கண்ணியெம் மான்மகன் கைம்முகத்துக்
களகள மாமதஞ் சேர்களி யானைக் கணபதியே. அ

கணங்கொண்ட வல்வினைகள் கண்கொண்ட நெற்றிப்
பணங்கொண்ட பாந்தட் சடைமேல்—மணங்கொண்ட
தாதகத்த தேன்முரலுங் கொன்றையான் தந்தளித்த
போதகத்தின் தாள்பணியப் போம். கூ

போகபந் தத்தந்த மின்றிநிற் பீர்புனை தார்முடிமேல்
நாகபந் தத்தந்த நாளம் பிறையிறை யான்பயந்த
மாகபந் தத்தந்த மாமழை போன்மதத் துக்கதப்போர்
ஏகதந் தத்தெந்தை செந்தா ளிணைபணிந் தேத்துமினே. ௧0

ஏத்தியே என்னுள்ளம் நிற்குமால் எப்பொழுதும்
மாத்தனி வெண்கோட்டு மதமுகத்துத்—தூத்தழல்போல்
செக்கர்த் திருமேனிச் செம்பொற் கழலங்கை
முக்கட் கடாயானை முன். ௧௧

முன்னிளங் காலத்தி லேபற்றி னேன்வெற்றி மீனுயர்த்த
மன்னிளங் காமன்தன் மைத்துன னேமணி நீலகண்டத்
தென்னிளங் காய்களி றேஇமை யோர்சிங்க மேஉமையாள்
தன்னிளங் காதல னேசர ணாவுன் சரணங்களே. ௧௨

சரணுடை யேன்என்று தலைதொட் டிருக்க
முரணுடையேன் அல்லேன்நான் முன்னந்—திரள்நெடுங்கோட்
டண்டத்தான் அப்புறத்தான் ஆனைமுகத் தான்அமரர்
பண்டத்தான் தாள்பணியாப் பண்டு. ௧௩

பண்டந்த மாதரைத் தாமென் றினியன வேபலவுங்
கொண்டந்த நாள்குறு காமைக் குறுகுவர் கூருணர்வில்
கண்டந்து நீள்முடிக் கார்மத வார்சடைக் கற்றையொற்றை
வெண்தந்த வேழ முகத்தெம் பிரானடி வேட்கையரே. ௧௪

வேட்கை வினைமுடித்து மெய்யடியார்க் கின்பஞ்செய்
தாட்கொண் டருளும் அரன்சேயை—வாட்கதிர்கொள்
காந்தார மார்பிற் கமழ்தார்க் கணபதியை
வேந்தா வுடைத்தமரர் விண். ௧௫

விண்ணுதல் நுங்கிய விண்ணுமண் ணுஞ்செய் வினைப்பயனும்
பண்ணுதல் நுங்கடன் என்பர்மெய் அன்பர்கள் பாய்மதமா
கண்ணுதல் நுங்கிய நஞ்சமுண் டார்கரு மாமிடற்றுப்
பெண்ணுதல் நும்பிரி யாவொரு பாகன் பெருமகனே. ௧௬

பெருங்காதல் என்னொடு பொன்னோடை நெற்றி
மருங்கார வார்செவிகள் வீசி—ஒருங்கே

திருவார்ந்த செம்முகத்துக் கார்மதங்கள் சோர
வருவான்தன் நாமம் வரும். கஎ

வருகோட் டருபெருந் தீமையுங் காலன் தமரவர்கள்
அருகோட் டருமவ ராண்மையுங் காய்பவன் கூர்ந்தஅன்பு
தருகோட் டருமர பிறபத்தர் சித்தத் தறியணையும்
ஒருகோட் டிருசெவி முக்கட்செம் மேனிய ஒண்களிறே. கஅ

களியானைக் கன்றைக் கணபதியைச் செம்பொன்
ஒளியானைப் பாரோர்க் குதவும்—அளியானைக்
கண்ணுவதுங் கைத்தலங்கள் கூப்புவதும் மற்றவன்தாள்
நண்ணுவதும் நல்லார் கடன். கசு

நல்லார் பழிப்பில் எழிற்செம் பவளத்தை நாணநின்று
பொல்லா முகத்தெங்கள் போதக மேபுர மூன்றெரித்த
வில்லான் அளித்த விநாயக னேஎன்று மெய்ம்மகிழ
வல்லார் மனத்தன்றி மாட்டாள் இருக்க மலர்த்திருவே. உ0

திருச்சிற்றம்பலம்

கபிலதேவ நாயனார் அருளிய

## சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை

திருச்சிற்றம்பலம்

அந்தி மதிமுகிழான் அந்தியஞ் செந்நிறத்தான்
அந்தியே போலும் அவிர்சடையான்—அந்தியில்
தூங்கிருள்சேர் யாமமே போலுஞ் சுடுநீற்றான்
வீங்கிருள்சேர் நீல மிடறு.

மிடற்றுழ் கடல்நஞ்சம் வைக்கின்ற ஞான்றுமெல் லோதிநல்லாள்
மடற்று மரைக்கைகள் காத்தில வேமழு வாளதனால்
அடற்று தையயன் று தாளெறிந் தாற்கருள் செய்தகொள்கைக்
கடற்றுழ் வயற்செந்நெல் ஏறும்வெண் காட்டெங் கரும்பினையே.

கருப்புச் சிலையநங்கன் கட்டழகு சுட்ட
நெருப்புத் திருநெற்றி நாட்டந்—திருச்சடையில்
திங்கள் புரையுந் திரள்பொற் றிருமேனி
எங்கள் இமையோர் இறைக்கு. ௩

இறைக்கோ குறைவில்லை யுண்டிறை யேயெழி லாரெருக்கு
நறைக்கோ மளக்கொன்றை துன்றுஞ் சடைமுடி நக்கர்சென்னிப்
பிறைக்கோர் பிளவும் பெறுவிளிக் கொண்டெம் பிரானுடைக்குங்
குறைக்கோ வணமொழிந் தாற்பின்னை யேதுங் குறைவில்லையே. ௪

இல்லை பிறவிக் கடலேற இன்புறவின்
முல்லை கமழும் முதுகுன்றில்—கொல்லை
விடையானை வேதியனை வெண்மதிசேர் செம்பொற்
சடையானைச் சாரா தார் தாம். ௫

தாமரைக் கோவும்நன் மாலும் வணங்கத் தலையிடத்துத்
தாமரைக் கோவணத் தோடிரந் துண்ணினுஞ் சார்ந்தவர்க்குத்
தாமரைக் கோமளத் தோடில காளத் தருவர்கண்டீர்
தாமரைக் கோமளக் கைத்தவ ளப்பொடிச் சங்கரரே. ௬

சங்குகோள் எண்ணுவரே பாவையரைத் தம்மங்கம்
பங்குபோய் நின்றாலும் பாய்கலுழிக்—கங்கை
வரியராப் போதும் வளர்சடையாய் நின்போற்
பெரியரா வாரோ பிறர். ௭

பிறப்பாழ் குழியிடை வீழ்ந்துநை வேற்குநின் பேரருளின்
சிறப்பார் திருக்கை தரக்கிற்றி யேதிரி யும்புரமூன்
றறப்பா யெரியுற வான்வரை வில்வளைத் தாயிரவாய்
மறப்பா வரியர நாணிடைக் கோத்தகை வானவனே. ௮

வானம் மணிமுகடா மால்வரையே தூணாக
ஆன பெரும்பார் அரங்காகக்—கானகத்தில்
அம்மா முழவதிர ஆடும் பொழுதாரூர்
எம்மானுக் கெய்தா திடம். ௯

இடப்பா கமும்உடை யாள்வரை யீனிள வஞ்சியன்ன
மடப்பான் மொழிஎன்பர் நின்வலப் பாகத்து மான்மழுவும்

விடப்பா சனக்கச்சு மிச்சைப் படநீ றணிந்துமிக்க
கடப்பார் களிற்றுரி கொண்டெங்கும் மூடுமெங் கண்ணுதலே.

கண்ணி இளம்பிறையுங் காய்சினத்த மாசுணமும்
நண்ணி யிருந்தால் நலமில்லை—தண்ணலங்கல்
பூங்கொன்றை யின்தேன் பொதியுஞ் சடைப்புனிதா
வாங்கொன்றை யின்றே மதித்து. கக

மதிமயங் கப்பொங்கு கோழிருட் கண்டவ விண்டவர்தம்
பதிமயங் கச்செற்ற கொற்றவில் வானவ நற்றவர்சூழ்
அதிகைமங் கைத்திரு வீரட்ட வாரிட்ட தேனும்உண்டு
கதிமயங் கச்செல்வ தேசெல்வ மாகக் கருதுவதே. கஉ

கருதுங் கருத்துடையேன் கையுடையேன் கூப்பப்
பெரிதும் பிறதிறத்துப் பேசேன்—அரிதன்றே
யாகப் பிறையான் இனியென் அகம்புகுந்து
போகப் பெறுமோ புறம். கங

புறமறை யப்புரி புன்சடை விட்டெரி பொன்திகழும்
நிறமறை யத்திரு நீறு துதைந்தது நீள்கடல்நஞ்
சுறமறை யக்கொண்ட கண்டமுஞ் சால உறைப்புடைத்தால்
அறமறை யச்சொல்லி வைத்தையம் வேண்டும் அடிகளுக்கே.

அடியோமைத் தாங்கியோ ஆடை யுடுத்தோ
குடியோம்ப மாநிதியங் கொண்டோ—பொடியாடும்
நெற்றியூர் வாளரவ நீள்சடையாய் நின்னூரை
ஒற்றியூ ராக்கிற் றாரை. கரு

உரைவந் துறும்பதத் தேயுரை மின்கள்அன் றாயின்இப்பால்
நரைவந் துறும்பின்னை வந்துறுங் காலன்நன் றூந்திடறித்
திரைவந் துறுங்கரைக் கேகலம் வந்துறத் திண்கைவன் றாள்
வரைவந் துறுங்கடல் மாமறைக் காட்டெம் மணியினையே. கசு

மணியமரும் மாமாட வாய்மூரான் தன்னை
அணியமரா ரோடயனும் மாலுந்—துணிசினத்த
செஞ்சூட்ட சேவற் கொடியானு மாய்நின்று
நஞ்சூட்ட எண்ணியவா நன்று. கஎ

நன்றைக் குறும்இரு மல்பெரு மூச்சுநண் ணாதமுன்னங்
குன்றைக் குறுவது கொண்டழி யாதறி வீர்செறிமின்
கொன்றைக் குறுநறுங் கண்ணியி னான்தன்கொய் பூங்கயிலைக்
குன்றைக் குறுகரி தேனுமுள் ளத்திடைக் கொள்மின்களே.

கொண்ட பலிநுமக்குங் கொய்தார்க் குமரர்க்கும்
புண்டரிக மாதினுக்கும் போதுமே—மண்டி
உயிரிழந்தார் சேர்புறங்காட் டோரிவா யீர்ப்ப
மயிரிழந்த வெண்டலைவாய் வந்து. ௧௯

வந்தா றலைக்கும் வலஞ்சுழி வானவ வானவர்தம்
அந்தார் மகுடத் தடுத்தபைம் போதிலந் தேனுழக்கிச்
செந்தா மரைச்செவ்வி காட்டுந் திருவடிக் குஞ்செல்லுமே
எந்தா யடித்தொண்ட ரோடிப் பிடித்திட்ட இன்மலரே. ௨௦

மலர்ந்த மலர்தூவி மாமனத்தைக் கூப்பிப்
புலர்ந்தும் புலராத போதுங்—கலந்திருந்து
கண்ணீர் அரும்பக் கசிவார்க்குக் காண்பெளியன்
தெண்ணீர் சடைக்கரந்த தே. ௨௧

தேவனைப் பூதப் படையனைக் கோதைத் திருஇதழிப்
பூவனைக் காய்சினப் போர்விடை தன்னொடும் போற்றநின்ற
மூவனை யீருரு வாயமுக் கண்ணனை முன்னுமறை
நாவனை நான்மற வேன்இவை நான்வல்ல ஞானங்களே. ௨௨

நானும்என் நல்குரவும் நல்காதார் பல்கடையிற்
கானிமிர்த்து நின்றிரப்பக் கண்டிருக்கும்—வானவர்கள்
தம்பெருமான் மூவெயிலும் வேவச் சரந்துரந்த
எம்பெருமான் என்னை இயல்பு. ௨௩

இயலிசை நாடக மாயெழு வேலைக ளாய்வழுவாப்
புயலியல் விண்ணொடு மண்முழு தாய்ப்பொழு தாகிநின்ற
மயிலியன் மாமறைக் காடர்வெண் காடர்வண் தில்லைமல்கு
கயலியல் கண்ணிபங் காரன்பர் சித்தத் தடங்குவரே. ௨௪

அடங்காதா ராரொருவர் அங்கொன்றை துன்று
மடங்காத லென்வளைகொள் வார்த்தை—நுடங்கிடையீர்

ஊரூரன் சென்றக்கால் உண்பலிக்கென் றங்கனே
ஆரூரன் செல்லுமா றங்கு. உரு

அங்கை மறித்தவ ரால்அவி யுண்ணும்அவ் வானவர்கள்
தங்கை மறித்தறி யார்தொழு தேநிற்பர் தாழ்சடையின்
கங்கை மறித்தண வப்பண மாசுணக் கங்கணத்தின்
செங்கை மறித்திர விற்சிவ னாடுந் திருநட்டமே. உசு

நட்டநீ யாடும் பொழுதத்து நல்லிலயங்
கொட்டக் குழித்தொழிந்த வாகொல்லோ—வட்டுக்
கடுங்குன்ற மால்யானைக் காருரிவை போர்த்த
கொடுங்குன்ற பேயின் கொடிறு. உஎ

கொடிறு முரித்தனன் கூருளன் நல்லன் குருகினஞ்சென்
றிடறுங் கழனிப் பழனத் தரசை எழில்இமையோர்
படிறு மொழிந்து பருகக் கொடுத்துப் பரவைநஞ்சம்
மிடறு தடுத்ததும் மடியேங்கள் விதிவசமே. உஅ

விதிகரந்த செய்வினையேன் மென்குழற்கே வாளா
மதுகரமே எத்துக்கு வந்தாய்—நதிகரந்த
கொட்டுக்காட் டான்சடைமேற் கொன்றைக் குறுந்தெரியல்
தொட்டுக்காட் டாய்சுழல்வாய் தொக்கு. உகூ

தொக்கு வருங்கணம் பாடத்தொல் நீறணிந் தேநிலவும்
நக்கு வருங்கண்ணி சூடிவந் தார்நறும் புன்னைமுன்ன
மக்கு வருங்கழிக் கானலை யாறரைக் காணஅன்பு
மிக்கு வருமரும் போதரைக் காண்டலும் வெள்குவனே. ௩௦

வெள்காதே உண்பலிக்கு வெண்டலைகொண் டூர்திரிந்தால்
எள்காரே வானவர்கள் எம்பெருமான்—வள்கூர்
வடதிருவீ ரட்டானத் தென்னதிகை மங்கைக்
குடதிருவீ ரட்டானங் கூறு. ௩க

கூறு பெறுங்கண்ணி சேர்கருங் கூந்தல்சுண் ணாந்துதைந்து
நீறு பெறுந்திரு மேனி நெருப்புப் புரைபொருப்போத்
தாறு பெறுஞ்சடை யங்கொன்றை யந்தேன் துவலைசிந்த
வீறு பெறுஞ்சென்று சென்றெம் பிரானுக்கு வெண்ணிறமே.

நிறம்பிறி தாயுள் மெலிந்துநெஞ் சுருகிவாளா
புறம்புறமே நாள்போக்கு வாளோ—நறுந்தேன்
படுமுடியாய் பாய்நீர் பரந்தொழுகு பாண்டிக்
கொடுமுடியாய் என்றன் கொடி. ௩௩.

கொடிக்குல வும்மதிற் கோவலூர் வீரட்ட கோளரவம்
பிடிக்கில அம்முடிப் பூணலை யத்தொடு மால்விடையின்
இடிக்குரல் கேட்டிடி யென்றிறு கக்கடி வாளெயிற்றுற்
கடிக்க லுறுமஞ்சி நஞ்ச மிருந்தநின் கண்டத்தையே. ௩௪

கண்ட நிறங்கறுப்பக் கவ்வைக் கருங்கடல்நஞ்
சுண்டல் புரிந்துகந்த உத்தமற்குத்—தொண்டடைந்தார்
கூசுவரோ கூற்றைக் குறுகுவரோ தீக்கொடுமை
பேசுவரோ மற்றொருவர் பேச்சு. ௩௫.

பேய்ச்சுற்றம் வந்திசை பாடப் பிணநிடு காட்டயலே
தீச்சுற்ற வந்துநின் றுடலென் னுஞ்செப்பு முப்பொழுதுங்
கோச்சுற்ற மாக்குடை வானவர் கோன்அயன் மால்முதலா
மாச்சுற்றம் வந்திறைஞ் சுந்திருப் பொற்சடை மன்னவனே.

மன்னும் பிறப்பறுக்கும் மாமருந்து வாளரக்கன்
துன்னுஞ் சுடர்முடிகள் தோள்நெரியத்—தன்னைத்
திருச்சத்தி முற்றத்தான் சித்தத்துள் வைத்தான்
திருச்சத்தி முற்றத்தான் தேசு. ௩௭.

திருச்சிற்றம்பலம்



### கபிலதேவ நாயனார் அருளிய

# சிவபெருமான் திருவந்தாதி

திருச்சிற்றம்பலம்

ஒன்று முதலாக நூறளவும் ஆண்டுகள்வாழ்ந்
தொன்று மனிதர் உயிரையுண்—டொன்றும்
மதியாத கூற்றுதைத்த சேவடியான் வாய்ந்த
மதியான் இடப்பக்க மால். ௧

மாலை யொருபால் மகிழ்ந்தானை வண்கொன்றை
மாலை யொருபால் முடியானை—மாலை
ஒளியானை உத்தமனை உண்ணுநஞ் சுண்டற்
கொளியானை ஏத்தி உளம். ௨

உளம்மால்கொண் டோடி ஒழியாது யாமும்
உளமாகி லேத்தாவா றுண்டே—உளம்மாசற்
றங்க மலமில்லா அடல்வெள்ளே றூர்ந்துழலும்
அங்கமல வண்ணன் அடி. ௩

அடியார்தம் ஆருயிரை அட்டழிக்குங் கூற்றை
அடியால் அருவாகச் செற்றான் அடியார்தம்
மந்திரத்தால் ஏத்தி அகங்குழைந்து மெய்யரும்பி
அந்தரத்தார் சூடும் அலர். ௪

அலராளுங் கொன்றை அணியலா ரூரற்
கலராகி யானும் அணிவன்—அலராகி
ஓதத்தான் ஓட்டினேன் ஓதுவன்யான் பூங்கொலிநீர்
ஓதத்தான் நஞ்சுண்டான் ஊர். ௫

ஊரும தொற்றியூர் உண்கலனும் வெண்டலையே
ஊரும் விடையொன் றுடைதோலே—ஊரும்
படநாக மட்டார் பணமாலை யீதோ
படநாக மட்டார் பரிசு. ௬

பரியானை ஊராது பைங்கண் ஏறூரும்
பரியானைப் பாவிக்க லாகா—பரியானைக்
கட்டங்கம் ஏந்தியாக் கண்டுவாழ் நன்னெஞ்சே
கட்டங்கம் ஏந்தியாக் கண்டு. எ

கண்டங் கரியன் உமைபாலுந் தன்பாலுங்
கண்டங் கரியன் கரிகாடன்—கண்டங்கள்
பாடியாட் டாடும் பரஞ்சோதிக் கென்னுள்ளம்
பாடியாக் கொண்ட பதி. அ

பதியார் பழிதீராப் பைங்கொன்றை தாவென்
பதியான் பலநாள் இரக்கப்—பதியாய
அம்மானார் கையார் வளைகவர்ந்தார் அஃதேகொல்
அம்மானார் கையார் அறம். கூ

அறமான நோக்கா நரங்களையுஞ் செற்றங்
கறமா நஞ்சுண்ட அமுதன்—அறமான
ஓதியாள் பாகம் அமர்ந்தான் உயர்புகழே
ஓதியான் தோற்றேன் ஒளி. க0

ஒளியார் சுடர்மூன்றுங் கண்மூன்றாக் கோடற்
கொளியான் உலகெல்லாம் ஏத்தற்—கொளியாய
கள்ளேற்றான் கொன்றையான் காப்பிகந்தான் நன்னெஞ்சே
கள்ளேற்றான் கொன்றை கடிது. கக

கடியரவர் அக்கர் இனிதாடு கோயில்
கடியரவர் கையதுமோர் சூலங்—கடியரவர்
ஆனேற்றார்க் காட்பட்ட நெஞ்சமே அஞ்சல்நீ
ஆனேற்றார்க் காட்பட்டேம் யாம். கஉ

யாமான நோக்கா தலர்கொன்றைத் தார்வேண்ட
யாமானங் கொண்டங் கலர்தந்தார்—யாமாவா
ஆரூரா ஆரூம் அழகா அனலாடி
ஆரூரார்க் கென்னுரைக்கோம் யாம். கஙு

யானென்றங் கண்ணுமலையான் அகம்புகுந்து
யானென்றங் கையறிவுங் குன்றுவித்து—யானென்றங்

கார்த்தானே யாயிடினும் அம்பரன்மேல் அங்கொன்றை
யார்த்தானேல் உய்வ தரிது. கச

அரியாரும் பூம்பொழில்சூழ் ஆமாத்தூர் அம்மான்
அரியாரும் பாகத் தமுதன்—அரியாரும்
வேங்கடத்து மேயானை மேவா வுயிரெல்லாம்
வேங்கடத்து நோயால் வியந்து. கரு

வியந்தாழி நன்னெஞ்சே மெல்லியலார்க் காளாய்
வியந்தாசை யுள்மெலிய வேண்டா—வியந்தாய
கண்ணுதலான் எந்தைகா பாலி கழலடிப்பூக்
கண்ணுதலா நம்பாற் கடன். கசா

கடனாகம் ஊராத காரணமுங் கங்கை
கடனாக நீகவர்ந்த வாறுங்—கடனாகப்
பாரிடந்தான் மேவிப் பயிலும் பரஞ்சோதி
பாரிடந்தான் மேயாய் பணி. கஎ

பணியாய் மடநெஞ்சே பல்சடையான் பாதம்
பணியாத பத்தர்க்குஞ் சேயன்—பணியாய
ஆகத்தான் செய்துமேல் நம்மை அமரர்கோ
னாகத்தான் செய்யும் அரன். கஅ

அரன்காய நைவேற் கநங்கவேள் அம்பும்
அரன்காயு மந்தியு மற்றந்தோ—அரங்காய
வெள்ளில்சேர் காட்டாடி வேண்டான் களிறுண்ட
வெள்ளில்போன் றுள்ளம் வெறிது. கசு

வெறியானை யூர்வேந்தர் பின்செல்லும் வேட்கை
வெறியார்பூந் தாரான் விமலன்—வெறியார்தம்
அல்லல்நோய் தீர்க்கும் அருமருந்தாம் ஆரூர்க்கோன்
அல்லனோ நெஞ்சே அயன். உ0

அயமாலூண் ஆடரவ நாணதள தாடை
அயமாவ தானேறார் ஆரூர்—அயமாய
வென்னக்கன் தாழ்சடையன் நீற்றன் எரியாடி
என்னக்கன் றாழு மிவள். உக

ஆழு மிவளையுங் கையலவாற் றேனென்
றழு மிவளை அயராதே—ஆழுஞ்
சலமுடியாய் சங்கரனே சங்கக் குழையாய்
சலமுடியா தின்றருள்வாய் தார். உஉ

தாராய தண்கொன்றை யானிரப்பத் தானிதனைத்
தாராதே சங்கஞ் சரிவித்தான்—தாராவல்
லானைமேல் வைகு மணிவயலா ரூர்க்கோனல்
லானையும் வானோர்க் கரசு. உங

அரசுமாய் ஆள்விக்கும் ஆட்பட்டார்க் கம்மான்
அரசுமா மங்கொன்று மாலுக்—கரசுமான்
ஊர்தி யெரித்தான் உணருஞ் செவிக்கின்பன்
ஊர்தி எரித்தான் உரு. உச

உருவேஎன் சொற்கள் ஒளிவளைநின் உள்ளத்
துருவேதீ யுற்றனக ளெல்லாம்—உருவேபோய்க்
காவாலி தார்நினைந்து கைசோர்ந்து மெய்மறந்தாள்
காவாலி தாநின் கலை. உரு

கலைகாமி னேர்காமின் கைவளைகள் காமின்
கலைசேர் நுதலீர்நாண் காமின்—கலையாய
பான்மதியன் பண்டரங்கன் பாரோம்பு நான்மறையன்
பான்மதியன் போந்தான் பலிக்கு. உசா

பலிக்குத் தலைஏந்திப் பாரிடங்கள் சூழப்
பலிக்கு மனைப்புகுந்து பாவாய்—பலிக்குநீ
ஐயம்பெய் என்றானுக் கையம்பெய் கின்றேன்மேல்
ஐயம்பெய் தான்அநங்கன் ஆய்ந்து. உஎ

ஆய மழியவலர் கொன்றைத்தார் வேண்டி
ஆய மழிய அயர்வேன்மேல்—ஆயன்வாய்த்
தீங்குழலுந் தென்றலுந் தேய்கோட் டிளம்பிறையுந்
தீங்குழலும் என்னையே தேர்ந்து. உஅ

தேரோன் கதிரென்னுஞ் செந்தழலால் வெந்தெழுபேய்த்
தேரோன் கதிரென்னுஞ் செய்பொருள்நீ—தேராதே

கூடற்கா வாலி குழைகழற்கா நன்னெஞ்சே
கூடற்கா வாலிதரக் கூர். உகூ

கூரால மேயாக் குருகோடு நைவேற்குக்
கூரார்வேற் கையார்க்காய் கொல்லாமே—கூரார்
பனிச்சங்காட் டார்சடைமேல் பான்மதியைப் பாம்பே
பனிச்சங்காட் டாய்கடிக்கப் பாய்ந்து. ௩0

பாயும் விடையூர்தி பாசுபதன் வந்தெனது
பாயில் புகுதப் பணைமுலைமேல்—பாயிலனாற்
கொன்றாய் குளிர்சடையாற் கென்னிலைமை கூறாதே
கொன்றாய் இதுவோ குணம். ௩க

குணக்கோடி கோடாக் குளிர்சடையான் வில்லின்
குணக்கோடிக் குன்றஞ்சூழ் போகிக்—குணக்கோடித்
தேரிரவில் வாரான் சிவற்காளாஞ் சிந்தனையே
தேரிரவில் வாழுந் திறம். ௩உ

திறங்காட்டுஞ் சேயாள் சிறுகிளியைத் தான்றன்
திறங்காட்டுந் தீவண்ணன் என்னுந்—திறங்காட்டின்
ஊரரவ மார்த்தானே டென்னை யுடன்கூட்டின்
ஊரரவஞ் சால வுடைத்து. ௩௩

உடையோடு காடாடி ஊரையம் உண்ணி
உடையாடை தோல்பொடிசந் தென்னை—உடையானை
உன்மத் தகமுடிமேல் உய்த்தானை நன்னெஞ்சே
உன்மத் தகமுடிமேல் உய். ௩௪

உய்யா தென்னாவி ஒளிவளையும் மேகலையும்
உய்யா துடம்பழிக்கும் ஒண்திதலை—உய்யா
மிறையானே ஈசனே எம்மானே நின்னை
இறையானுங் காண்கிடாய் இன்று. ௩௫

இன்றியாம் உற்ற இடரும் இருந்துயரும்
இன்றியாந் தீர்தும் எழில்நெஞ்சே—இன்றியாங்
காட்டாநஞ் சேற்றான் காமருவெண் காட்டான்
காட்டான்அஞ் சேற்றான் கலந்து. ௩௬

கலம்பெரியார்க் காஞ்சிரங்காய் வின்மேரு வென்னுங்
கலம்பெரிய ஆற்கீழ் இருக்கை—கலம்பிரியா
மாக்கடல் நஞ்சுண்டார் கழல்தொழார்க் குண்டாமோ
மாக்கடனஞ் சேரும் வகை. ௩எ

கையாற வாவெகுளி அச்சங் கழிகாமங்
கையாறு செஞ்சடையான் காப்பென்னுங்—கையாறு
மற்றிரண்ட தோளானைச் சேர்நெஞ்சே சேரப்போய்
மற்றிரண்ட தோளான் மனை. ௩அ

மனையாய் பலிக்கென்று வந்தான்வண் காமன்
மனையா சுறச்செற்ற வாறேன்—மனையாய
என்பாவாய் என்றேனுக் கியானல்லேன் நீதிருவே
என்பாவாய் என்றான் இறை. ௩௯

இறையாய வெண்சங் கிவைதருவேன் என்னும்
இறையாகம் இன்றருளாய் என்னும்—இறையாய்
மறைக்காட்டாய் மாதவனே நின்னுருவம் இங்கே
மறைக்காட்டாய் என்னும்இம் மாது. ௪0

மாதரங்கத் தன்னரங்கஞ் சேர்த்தி வளர்சடைமேல்
மாதரங்கக் கங்கைநீர் மன்னுவித்து—மாதரங்கத்
தேரானை யூரான் சிலைக்காளாஞ் சிந்தனையே
தேரானை யூரானைத் தேர். ௪௧

தெருளிலா ரென்னுவார் காவிரி வந்தேறும்
அருகிற் சிராமலை யெங்கோமான்—விரியுலகில்
செல்லுமதில் மூன்றெரித்தான் சேவடியே யாம்பரவிச்
செல்லும்எழில் நெஞ்சே தெளி. ௪௨

தெளியாய் மடநெஞ்சே செஞ்சடையான் பாதந்
தெளியாதார் தீநெறிக்கட் செல்வர்—தெளியாய
பூவார் சடைமுடியான் பொன்னடிக்கே ஏத்துவன்நற்
பூவாய வாசம் புனைந்து. ௪௩

புனைகடற்குப் பொன்கொடுக்கும் பூம்புகார் மேயான்
புனைகடுக்கை மாலைப் புராணன்—புனைகடத்து

நட்டங்கம் ஆட்டயரும் நம்பன் திருநாமம்
நட்டங்க மாட்டினேன் நக்கு. ௪௪

நக்கரை சாரு நடுநாளை நாரையூர்
நக்கரை வக்கரையோ நாமென்ன—நக்குரையாம்
வண்டாழங் கொன்றையான் மால்பணித்தான் மற்றவர்க்காய்
வண்டாழங் கொண்டான் மதி. ௪௫

மதியால் அடுகின்ற தென்னுமால் கூரும்
மதியாதே வைதுரப்பர் என்னும்—மதியாதே
மாதெய்வம் ஏத்தும் மறைக்காடா ஈதேகொல்
மாதெய்வங் கொண்ட வனப்பு. ௪௬

வனப்பார் நிறமும் வரிவளையும் நாணும்
வனப்பார் வளர்சடையான் கொள்ள—வனப்பாற்
கடற்றிரைய மீருமிக் கங்குல்வா யான்கட்
கடற்றிரைய மீருங் கனன்று. ௪௭

கனன்றாழி நன்னெஞ்சே கண்ணுதலார்க் காளாய்க்
கனன்றார் களிற்றுரிமால் காட்டக்—கனன்றோர்
உடம்பட்ட நாட்டத்தள் என்னையுந் தன்னுளா
உடம்பட்ட நாட்டன் உரு. ௪௮

உருவியலுஞ் செம்பவளம் ஒன்றார் உடம்பில்
உருவியலுஞ் சூலம் உடையன்—உருவியலும்
மாலேற்றான் நான்முகனும் மண்ணோடு விண்ணும்போய்
மாலேற்றாற் கீதோ வடிவு. ௪௯

வடிவார் அறப்பொங்கி வண்ணக்கச் சுந்தி
வடிவார் வடம்புனைந்தும் பொல்லா—வடிவார்வேல்
முக்கூடல் அம்மா முருகமருங் கொன்றையந்தார்
முக்கூட மாட்டா முலை. ௫௦

முலைநலஞ்சேர் கானப்பேர் முக்கணன் என்னும்
முலைநலஞ்சேர் மொய்சடையன் என்னும்—முலைநலஞ்சேர்
மாதேவா என்று வளர்கொன்றை வாய்சோர
மாதேவா சோரல் வளை. ௫௧

வளையாழி யோடகல மால்தந்தான் என்னும்
வளையாழி நன்னெஞ்சே காணில்—வளையாழி
வன்னஞ்சைக் கண்டமரர் வாய்சோர வந்தெதிர்ந்த
வன்னஞ்சக் கண்டன் வரில். ருஉ

வரிநீல வண்டலம்பு மாமறைக்காட் டங்கேழ்
வரிநீர் வலம்புரிகள் உந்தி—வரிநீர்
இடுமணல்மேல் அந்நலங்கொண் டின்றுநோய் செய்தான்
இடுமணல்மேல் ஈசன் எமக்கு. ருங

அக்கார மாடரவம் நாணறுவை தோல்பொடிசாந்
தக்காரந் தீர்ந்தேன் அடியேனுக்—கக்காரம்
பண்டரங்கன் எந்தை படுபிணஞ்சேர் வெங்காட்டுப்
பண்டரங்கன் எங்கள் பவன். ருச

பவனடிபார் விண்நீர் பகலோன் மதிதீப்
பவனஞ்சேர் ஆரமுதம் பெண்ஆண்—பவனஞ்சேர்
காலங்கள் ஊழி யவனே கரிகாட்டிற்
காலங்கை ஏந்தினன் காண். ருரு

காணங்கை யின்மை கருதிக் கவலாதே
காணங்கை யால்தொழுது நன்னெஞ்சே—காணங்கை
பாவனையாய் நின்றான் பயிலும் பரஞ்சோதி
பாவனையாய் நின்ற பதம். ருசு

பதங்க வரையுயர்ந்தான் பான்மகிழ்ந்தான் பண்டு
பதங்கன் எயிறு பறித்தான்—பதங்கையால்
அஞ்சலிகள் அன்பாலும் ஆக்குதிகாண் நெஞ்சேகூர்ந்
தஞ்சலிகள் என்பாலும் ஆக்கு. ருஎ

ஆக்கூர் பனிவாடா வாவிசோர்ந் தாழ்கின்றேன்
ஆக்கூர் அலர்தான் அழகிதா—ஆக்கூர்
மறையோம்பு மாடத்து மாமறையோ நான்கு
மறையோம்பும் மாதவர்க்காய் வந்து. ருஅ

வந்தியான் சிறினும் ஆழி மடநெஞ்சே
வந்தியா உள்ளத்து வைத்திராய்—வந்தியாய்

நம்ப ரனையாடு நளிர்புன் சடையானை
நம்பரனை நாள்தோறும் நட்டு. ருக

நட்டமா கின்றன வொண்சங்க நான்அவன்பால்
நட்டமா நன்னீர்மை வாடினேன்—நட்டமா
டியான் எரியாடி எம்மான் இருங்கொன்றை
ஈயானேல் உய்வ திலம். சுo

இலமலர்அஞ் சேவடியார் ஏகப் பெருமே
இலமலரே யாயினும் ஆக—இலமலரும்
ஆம்பல்சேர் செவ்வாயார்க் காடாதே ஆடினேன்
ஆம்பல்சேர் வெண்தலையர்க் காள். சுக

ஆளானஞ் சேர்களிறுந் தேரும் அடல்மாவும்
ஆளானூர் ஊரத்தான் ஏறாரும்—தாளான்பொய்
நாடகங்க ளாட்டயரும் நம்பன் திருநாமம்
நாடகங்க ளாடி நயந்து. சுஉ

நயந்தநாள் யாணிரப்ப நற்சடையான் கொன்றை
நயந்தநாள் நன்னீர்மை வாட—நயந்தநாள்
அம்பகலஞ் செற்றான் அருளான் அநங்கவேள்
அம்பகலம் பாயும் அலர்ந்து. சுங

அலங்காரம் ஆடரவம் என்புதோல் ஆடை
அலங்கார வண்ணற் கழகார்—அலங்கார
மெய்காட்டு வார்குழலார் என்னுவார் வெள்ளேற்றான்
மெய்காட்டும் வீடாம் விரைந்து. சுச

விரையார் புனற்கங்கை சேர்சடையான் பொன்னூர்
விரையார் பொழிற்புறந்தை மேயான்—விரையாரீ
றென்பணிந்தான் ஈசன் இறையான் எரியாடி
என்பணிந்தான் ஈசன் எனக்கு. சுரு

எனக்குவளை நில்லா எழில்இழந்தேன் என்னும்
எனக்குவளை நில்லாநோய் செய்தான்—நினக்குவளைக்
கண்டத்தான் நால்வேதன் காரோணத் தெம்மானைக்
கண்டத்தான் நெஞ்சேகாக் கை. சுசு

காக்கைவளை யென்பார்ப்பார்க் கன்பாப்பா ணையாதே
காக்கைவளை யென்பார்ப்பான் ஊர்குரக்குக்—காக்கைவளை
ஆடானை யீருரியன் ஆண்பெண் அவிர்சடையன்
ஆடானை யான தனைமவு. சுஎ

அமையாமென் தோள்மெலிவித் தம்மாமை கொண்டிந
கமையாநோய் செய்தாள் அணங்கே—எமையாளுஞ்
சாமத்த கண்டன் சடைசேர் இளம்பிறையன்
சாமத்தன் இந்நோய்செய் தான். சுஅ

தானக் கனக்க பிறையன் பிறைக்கோட்டுத்
தானக் களிற்றுரியன் தண்பழனன்—தானத்
தரையன் அரவரையன் ஆயிழைக்கும் மாற்கும்
அரையன் உடையான் அருள். சுகூ

அருள்நம்பாற் செஞ்சடையன் ஆமாத்தூர் அம்மான்
அருள்நம்பால் நல்கும் அமுதன்—அருள்நம்பால்
ஓராழித் தேரான் எயிறட்ட உத்தமனை
ஓராழி நெஞ்சே உவ. எ0

உவவா நறுமலர்கொண் டுத்தமனை யுள்கி
உவவா மனமகிழும் வேட்கை—உவவா
தெழுமதிபோல் வாள்முகத் தீசனுக் கென்னே
எழுமதிபோல் ஈசன் இடம். எக

இடமால் வலமாலை வண்ணமே தம்பம்
இடமால் வலமானஞ் சேர்த்தி—இடமாய
மூவா மதிபுரையும் முன்னிலங்கு மொய்சடையான்
மூவா மதியான் முனி. எஉ

முனிவன்மால் செஞ்சடையான் முக்கணான் என்னும்
முனிவன்மால் செய்துமுன் நிற்கும்—முனிவன்மால்
போற்றார் புரமெரித்த புண்ணியன்தன் பொன்னடிகள்
போற்றாநாள் இன்று புலர்ந்து. எங

புலர்ந்தால்யான் ஆற்றேன் புறனுரையும் அஃதே
புலர்ந்தானூர் புன்கூரான் என்னும்—புலர்ந்தாய

மண்டலியன் அம்மான் அவர்தம் அடியார்தம்
மண்டலியன் பின்போம் மனம். எச

மனமாய நோய்செய்தான் வண்கொன்றை தாரான்
மனமாய வுள்ளார வாரான்—மனமாயப்
பொன்மாலை சேரப் புனைந்தான் புனைதருப்பைப்
பொன்மாலை சேர்சடையான் போந்து. எரு

போந்தார் புகஅணைந்தார் பொன்னேர்ந்தார் பொன்னுமை
போந்தார் ஒழியார் புரம்எரித்தார்—போந்தார்
இலங்கோல வாள்முகத் தீசனூற் கெல்லே
இலங்கோலந் தோற்ப தினி. எசு

இனியாரும் ஆளாக எண்ணுவர்கொல் எண்ணார்
இனியானஞ் சூண்இருக்கைக் குள்ளான்—இனியானைத்
தாளங்கை யாற்பாடித் தாழ்சடையான் தாளுடைய
தாளங்கை யால்தொழுவார் தாம். எஎ

தாமரைசேர் நான்முகற்கும் மாற்கும் அறிவரியார்
தாமரைசேர் பாம்பர் சடாமகுடர்—தாமரைசேர்
பாணியார் தீர்ந்தளிப்பர் பாரோம்பு நான்மறையார்
பாணியார் தீர்ந்தளிப்பர் பார். எஅ

பார்கால்வான் நீர்தீப் பகலோன் பனிமதியன்
பார்கோல மேனிப் பரனடிக்கே—பார்கோலக்
கோகரணத் தான்அறியக் கூறுதியே நன்னெஞ்சே
கோகரணத் தானைய கோ. எகூ

கோப்பாடி யோடாதே நெஞ்சமொழிகூத்தன்
கோப்பாடிக் கோகரணங் குற்றுலங்—கோப்பாடிப்
பின்னைக்காய் நின்றார்க் கிடங்கொடுக்கும் பேரருளான்
பின்னைக்காம் எம்பெருமான் பேர். அo

பேரானை ஈருரிவை போர்த்தானை ஆயிரத்தெண்
பேரானை ஈருருவம் பெற்றானைப்—பேராநஞ்
சுண்டானை உத்தமனை உள்காதார்க் கெஞ்ஞான்றும்
உண்டாநா எல்ல உயிர். அக

உயிராய மூன்றொடுக்கி ஐந்தடக்கி உள்ளத்
துயிராய ஒண்மலர்த்தாள் ஊடே—உயிரான்
பகர்மனத்தான் பாசுபதன் பாதம் பணியப்
பகர்மனமே ஆசைக்கட் பட்டு. அஉ

பட்டாரண் பட்டாரங்கள் அம்மான் பரஞ்சோதி
பட்டார் எலும்பணியும் பாசுபதன்—பட்டார்ந்த
கோவணத்தான் கொல்லேற்றன் என்றென்று நெஞ்சமே
கோவணத்து நம்பனையே கூறு. அங

கூற்றும் பொருளும்போற் காட்டியென் கோல்வளையைக்
கூற்றின் பொருள்முயன்ற குற்றாலன்—கூற்றின்
செருக்கழியச் செற்ற சிவற்கடிமை நெஞ்சே
செருக்கழியா முன்னமே செய். அச

செய்யான் கருமிடற்றான் செஞ்சடையான் தேன்பொழில்சூழ்
செய்யான் பழனத்தான் மூவுலகுஞ்—செய்யாமுன்
நாட்டுணாய் நின்றானை நாடுதும்போய் நன்னெஞ்சே
நாட்டுணாய் நின்றானை நாம். அரு

நாவாய் அகத்துளதே நாமுளமே நம்மீசன்
நாவாய்போல் நன்னெறிக்கண் உய்க்குமே—நாவாயால்
துய்க்கப் படும்பொருளைக் கூட்டுதும் மற்றவர்க்காட்
டுய்க்கப் படுவதொன் றூது. அசு

ஊதொன் றுனக்கறியச் சொல்லினேன் நன்னெஞ்சே
சூதன் சொலற்கரிய சோதியான்—சூதின்
கொழுந்தேன் கமழ்ச்சோலைக் குற்றாலம் பாடிக்
கொழுந்தே இழந்தேன் குருகு. அஎ

குருகிளவேய்த் தோள்மெலியக் கொங்கைமார் புல்கிக்
குருகிளையார் கோடு கொடாமே—குருகிளரும்
போதார் கழனிப் புகலூர் அமர்ந்துறையும்
போதாநின் பொன்முடிக்கட் போது. அஅ

போதரங்க வார்குழலார் என்னுவார் நன்னெஞ்சே
போதரங்க நீர்கரந்த புண்ணியனைப்—போதரங்கக்

கானகஞ்சேர் சோதியே கைவிளக்கா நின்றாடுங்
கானகஞ்சேர் வாற்கடிமை கல். அக

கற்றானஞ் சாடு காவாலி களந்தைக்கோன்
கற்றானைக் கல்லாத நாளெல்லாங்—கற்றான்
அமரர்க் கமரர் அரர்க்கடிமை பூண்டார்
அமரர்க் கமரர்ஆ வார். கூ0

ஆவா மனிதர் அறிவிலரே யாதொன்றும்
ஆவார்போற் காட்டி அழிகின்றார்—ஆ! ஆ!
பகனடிப் பாடிப் படர்சடைக்குப் பல்பூப்
பகனடி ஏத்தார் பகர்ந்து. கூக

பகனட்டம் பாட்டயரும் பாட்டோடாட் டெல்லி
பகனட்டம் பாழ்படுக்கும் உச்சி—பகனட்டந்
தாங்கா றெழுதெழுவார் தாழ்சடையார் தம்முடைய
தாங்கா றெழுதல் தலை. கூஉ

தலையாலங் காட்டிற் பலிதிரிவர் என்னுந்
தலையாலங் காடர்தாம் என்னுந்—தலையாய
பாகீ ரதிவளரும் பல்சடையீர் வல்விடையீர்
பாகீ ரதிவளரும் பண்பு. கூக

பண்பாய நான்மறையான் சென்னிப் பலிதேர்ந்தான்
பண்பாய பைங்கொன்றைத் தார்அருளான்—பண்பால்
திருமாலு மங்கைச் சிவற்கடிமை செய்வான்
திருமாலு மங்கைச் சிவன். கூச

சிவன்மாட் டுகவெழுதும் நாளும் நகுமென்னுஞ்
சிவன்மேய செங்குன்றார் என்னுஞ்—சிவன்மாட்டங்
காலிங் கனநினையும் ஆயிழையீர் அங்கொன்றை
ஆலிங் கனநினையும் ஆறு. கூரு

ஆறுவெங் கூற்றுதைத் தானைத்தோல் போர்த்துகந்தங்
காறார் சடையீர்க் கமையாதே—ஆறாத
வானினத்தார் தாந்தம் அணியிழையி னார்க்கடிமை
ஆனினத்தார் தாந்தவிர்ந்த தாட்டு. கூகா

ஆட்டும் அரவர் அழிந்தார் எலும்பணிவார்
ஆட்டும் இடுபலிகொண் டார்அமரர்—ஆட்டுமோர்
போரேற்றான் கொன்றையான் போந்தான் பலிக்கென்று
போரேற்றான் போந்தான் புறம். கூஎ

புறந்தாழ் குழலார் புறனுரைஅஞ் சாதே
புறந்தாழ் புலிப்பொதுவு ளாடி—புறந்தாழ்பொன்
மேற்றளிக்கோன் வெண்பிறையான் வெண்சுடர்போல் மேனியான்
மேற்றளிக்கோன் என்றுரையான் மெய். கூஅ

மெய்யன் அகலாத வேதியன் வெண்புரிநூல்
மெய்யன் விரும்புவார்க் கெஞ்ஞான்றும்—வெய்ய
துணையகலா நோக்ககலா போற்றி கலாநெஞ்சே
துணையிகலா கூறுவான் நூறு. கூகூ

நூற்றான் பயனுட்டி நூறு மலர்சொரிந்து
நூறு நொடிவதனின் மிக்கதே—நூறு
உடையான் பரித்தவெரி யுத்தமனை வெள்ளே
றுடையானைப் பாடலால் ஒன்று. க00

திருச்சிற்றம்பலம்



பரணதேவ நாயனுர் அருளிய

## சிவபெருமான் திருவந்தாதி



திருச்சிற்றம்பலம்

ஒன்றுரைப்பீர் போலப் பலவுரைத்திட் டோயாதே
ஒன்றுரைப்பீ ராயின் உறுதுணையாம்—ஒன்றுரைத்துப்
பேரரவம் பூண்டு பெருந்தலையில் உண்டுழலும்
பேரரவம் பூணும் பிரான். க

பிரானிடப மால்பெரிய மந்தாரம் வில்லுப்
பிரானிடபம் பேரொலிநா ணகம்—பிரானிடபம்

பேணும் உமைபெரிய புன்சடையின் மேல்அமர்ந்து
பேணும் உமையிடவம் பெற்று. ௨

பெற்றும் பிறவி பிறந்திட் டொழியாதே
பெற்றும் பிறவி பிறந்தொழிமின்—பெற்றுங்
குழையணிந்த கோளரவக் கூற்றுதைத்தான் தன்னைக்
குழையணிந்த கோளரவ நீ. ௩

நீயேயா ளாவாயும் நின்மலற்கு நன்னெஞ்சே
நீயேயா ளாவாயும் நீள்வாளின்—நீயே
ஏறார் புனற்சடையா எங்கள் இடைமருதா
ஏறார் புனற்சடையா என்று. ௪

என்றும் மலர்தூவி யீசன் திருநாமம்
என்றும் அலர்தூற்றி யேயிருந்தும்—என்றும்

* * *

புகலூரா புண்ணியனே என். ௫

என்னே இவள்உற்ற மாலென்கொல் இன்கொன்றை
என்னே யிவள்ஒற்றி யூரென்னும்—என்னே
தவளப் பொடியணிந்த சங்கரனே என்னுந்
தவளப் பொடியானைச் சார்ந்து. ௬

சார்ந்துரைப்ப தொன்றுண்டு சாவாமூ வாப்பெருமை
சார்ந்துரைத்த தத்துவத்தின் உட்பொருளைச்—சார்ந்துரைத்த
ஆதியே அம்பலவா அண்டத்தை ஆட்கொள்ளும்
ஆதியேன் என்பால் அருள். ௭

அருள்சேரா தாரூர்தீ யாறுமல் எய்தாய்
அருள்சேரா தாரூர்தீ யாடி—அருள்சேரப்
பிச்சையேற் றுண்டு பிறர்கடையிற் கால்நிமிர்த்துப்
பிச்சையேற் றுண்டுழல்வாய் பேச்சு. ௮

பேச்சுப் பெருகுவதென் பெண்ணாண் அலியென்று
பேச்சுக் கடந்த பெருவெளியைப்—பேச்சுக்
குரையானை யூனுக் குயிரானை ஒன்றற்
குரியானை நன்னெஞ்சே உற்று. ௯

உற்றுரையாய் நன்னெஞ்சே யோதக் கடல்வண்ணன்
உற்றுரையா வண்ணம்ஒன் றானானை—உற்றுரையா
யானை உரித்தானை அப்பனை எப்பொழுதும்
ஆனை உரித்தானை அடைந்து. க௦

அடைந்துன்பால் அன்பாய் அணிமணிகொண் டர்ச்சித்
தடைந்துன்பான் மேலுகுத்த மாணிக்—கடைந்துன்பால்
அவ்வமுதம் ஊட்டி அணிமலருஞ் சூழ்ந்தன்
றவ்வமுத மாக்கினாய் காண். கக

காணாய் கபாலி கதிர்முடிமேற் கங்கைதனைக்
காணாயக் காருருவிற் சேருமையைக்—காணா
உடைதலைகொண் டூரூர் திரிவானை நச்சி
உடைதலைகொண் டூரூர் திரி. கஉ

திரியும் புரமெரித்த சேவகனார் செவ்வே
திரியும் புரமெரியச் செய்தார்—திரியும்
மரியான் திருக்கயிலை என்னாதார் மேனி
அரியான் திருக்கயிலை யாம். கங

* * *

ஆம்பரிசே செய்தங் கழியாக்கை—ஆம்பரிசே
ஏத்தித் திரிந்தானை எம்மானை அம்மானை
ஏத்தித் திரிந்தானை ஏத்து. கச

ஏத்துற்றுப் பார்த்தன் எழில்வான் அடைவான்போல்
ஏத்துற்றுப் பார்த்தன் இறைஞ்சுதலும்—ஏத்துற்றுப்
பாசுபதம் அன்றளித்த பாசூரான் பால்நீற்றான்
பாசுபதம் இன்றளியென் பால். கரு

பாலார் புனல்பாய் சடையானுக் கன்பாகிப்
பாலார் புனல்பாய் சடையானாள்—பாலாடி
ஆடுவான் பைங்கண் அரவூர்வான் மேனிதீ
ஆடுவான் என்றென்றே ஆங்கு. கசா

ஆங்குரைக்க லாம்பொன் மலர்ப்பாதம் அஃதன்றே
ஆங்குரைக்க லாம்பொன் அணிதில்லை—ஆங்குரைத்த

அம்பலத்தும் அண்டத்தும் அப்பாலு மாய்நின்ற
அம்பரத்தும் அண்டத்து மாம்.          கஎ

மாயனையோர் பாகம் அமர்ந்தானை வானவரும்
மாயவரு மால்கடல்நஞ் சுண்டானை—மாய
வருவானை மாலை யொளியானை வானின்
உருவானை ஏத்தி உணர்.          கஅ

உணரா வளைகழலா உற்றுன்பாற் சங்கம்
உணரா வளைகழல வொட்டி—உணரா
வளர்ந்தான மேனி அணியாரு மேசென்
றளர்ந்தானை யாமாறு கண்டு.          கக

கண்டிறந்து காயெரியின் வீழ்ந்து கடிதோடிக்
கண்டிறந்து காமன் பொடியாகக்—கண்டிறந்து
கானின் உகந்தாடுங் கருத்தர்க்குக் காட்டினான்
கானின் உகந்தாடுங் கருத்து.          உ0

கருத்துடைய ஆதி கறைமிடற்றெம் மீசன்
கருத்துடைய கங்காள வேடன்—கருத்துடைய
வானேற்றான் நீற்றான் அனலாடி ஆமாத்தூர்
ஆனேற்றான் ஏற்றான் எரி.          உக

எரியாடி ஏகம்பம் என்னுதார் மேனி
எரியாடி ஏகம்ப மாகும்—எரியாடி
ஈமத் திடுங்காடு தேரும் இறைபணிப்ப
வீமத் திடுங்காடு தான்.          உஉ

தானயன் மாலாகி நின்றான் தனித்துலகில்
தானயன் மாலாய தன்மையான்—தானக்
கரைப்படுத்தான் நான்மறையைக் காய்புலித்தோல் ஆடைக்
கரைப்படுத்தான் தன்பாதஞ் சார்.          உங

சாராவார் தாமுளரேல் சங்கரன்தன் மேனிமேல்
சாராவார் கங்கை உமைநங்கை—சார்வாய்
அரவமது செஞ்சடைமேல் அக்கொன்றை யொற்றி
அரவமது செஞ்சடையின் மேல்.          உச

மேலாய தேவர் வெருவ எழுநஞ்சம்
மேலாய மின்றிவே றுண்பொழுதின்—மேலாய
மங்கை உமைவந் தடுத்திலளே வானொரு
மங்கை உமைவந் தடுத்து. உரு

அடுத்தபொன் னம்பலமே சார்வு மதனுள்
அடுத்த திருநட்டம் அஃதே—அடுத்ததிரு
வானைக்கா வாடுவதும் மேலெலும்பு பூண்பதுவும்
ஆனைக்கா வான்தன் அமைவு. உசு

அமைவும் பிறப்பும் இறப்புமாம் மற்றுங்
கமைவும் பரமான ஆதி—அமையுந்
திருவால வாய்சென்று சேராது மாக்கள்
திருவால வாய்சென்று சேர். உஎ

சென்று செருப்புக்கா லாற்செல்ல மலர்நீக்கிச்
சென்று திருமுடிவாய் நீர்வார்த்துச்—சென்றுதன்
கண்ணிடந்தன் றப்புங் கருத்தற்குக் காட்டினான்
கண்ணிடந்தன் றப்பாமைப் பார்த்து. உஅ

பார்த்துப் பரியாதே பால்நீறு பூசாதே
பார்த்துப் பரிந்தங்கம் பூணாதே—பார்த்திட்
டுடையான்அஞ் சோதாதே ஊணுரைக் கைவிட்
டுடையான்அஞ் சோதாதார் ஊண். உகூ

ஊணொன்று மில்லை யுறக்கில்லை யுன்மாலின்
ஊணொன்று பேசவோர் சங்கிழந்தாள்—ஊணொன்றும்
விட்டானே வேள்வி துரந்தானே வெள்ளநீர்
விட்டானே புன்சடைமேல் வேறு. ங0

வேறுரைப்பன் கேட்டருளும் வேதநான் காறங்கம்
வேறுரைத்த மேனி விரிசடையான்—வேறுரைத்த
பாதத்தாய் பைங்கண் அரவூர்வாய் பாரூரும்
பாதத்தாய் என்னும் மலர். ஙக

மலரணைந்து கொண்டு மகிழ்வாயுன் பாதம்
மலரணைந்து மானயன மாகும்—மலரணைந்து

மன்சக் கரம்வேண்ட வாளா அளித்தனையால்
வன்சக் கரம்பரனே வாய்த்து. ௩௨

வாய்த்த அடியார் வணங்க மலரோன்மால்
வாய்த்த அடிமுடி புங்காளுர்—வாய்த்த
சலந்தரனைக் கொன்றிட்டுச் சங்கரனுர் என்றே
சலந்தரனுய் நின்றவா தாம். ௩௩

தாமென்ன நாமென்ன வேறில்லை தத்துறவில்
தாமென்னை வேறுத் தனித்திருந்து—தாமென்
கழிப்பாலை சேருங் கறைமிடற்றுர் என்றே
கழிப்பாலை சேருங் கடன். ௩௪

கடனுகக் கைதொழுமின் கைதொழவல் லீரேல்
கடல்நாகைக் காரோணம் மேயார்—கடநாகம்
மாளவுரித் தாடுவார் நம்மேலை வல்வினைநோய்
மாளவிரித் தாடுமால் வந்து. ௩௫

வந்தார் வளைகழல்வார் வாடித் துகில்சோர்வார்
வந்தார் முலைமெலிவார் வார்குழல்கள்—வந்தார்
சுரிதருவார் ஐங்கொன்றைத் தாராரைக் கண்டு
சுரிதருவார் ஐங்கொன்றைத் தார். ௩௬

தாரான் எனினுஞ் சடைமுடியான் சங்கரனந்
தாரான் தசமுகனைத் தோள்நெரித்துத்—தாராய
நாளுங் கொடுத்தந்த வானவர்கள் தம்முன்னே
வாளுங் கொடுத்தான் மதித்து. ௩௭

மதியாருஞ் செஞ்சடையான் வண்கொன்றைத் தாரான்
மதியாரும் மாலுடைய பாகன்—மதியாரும்
அண்ணு மலைசேரார் ஆரோடுங் கூடாகி
அண்ணு மலைசேர்வ ரால். ௩௮

ஆல நிழற்கீழ் இருப்பதுவும் ஆய்வதறம்
ஆலம் அமுதுசெய்வ தாடுவதீ—ஆலந்
துறையுடையான் ஆனை உரியுடையான் சோற்றுத்
துறையுடையான் சோராத சொல்லு. ௩௯

சொல்லாய மின்றித் தொலைவின்றி தூநெறிக்கட்
சொல்லாய்ப் பெருத்த சுடரொளியாய்ச்—சொல்லாய
வீரட்டத் தானை விரவார் புரம்அட்ட
வீரட்டத் தானை விரை. ௪0

விரையாரும் மத்தம் விரகாகச் சூடி
விரையாரும் வெள்ளெலும்பு பூண்டு—விரையாரும்
நஞ்சுண்ட ஆதி நலங்கழல்கள் சேராதார்
நஞ்சுண்ட ஆதி நலம். ௪க

நலம்பாயு மாக்க நலங்கொண்டல் என்றல்
நலம்பாயு மானன் குருவ—நலம்பாய்செய்
தார்த்தார்க்கும் அண்ணு மலையானிடந்
தார்த்தார்க்கும் அண்ணு மலை. ௪உ

மலையார் கலையோட வாரோடக் கொங்கை
மலையார் கலைபோய் மாலானுன்—மலையார்
கலையுடையான் வானின் மதியுடையான் காவாத்
தலையுடையான் என்றுதொழு தாள். ௪௩

தாளார் கமல மலரோடு தண்மலருந்
தாளார வேசொரிந்து தாமிருந்து—தாளார்
சிராமலையாய் சேமத் துணையேயென் றேத்துஞ்
சிராமலையார் சேமத்து ளார். ௪௪

ஆர்துணையா ஆங்கிருப்ப தம்பலவா அஞ்சனுமை
யார்துணையா ஆனையுரி மூடி—யார்துணையாம்
பூவணத்தாய் பூதப் படையாளி பொங்கொளியாய்
பூவணத்தாய் என்னின் புகல். ௪௫

புகலூர் உடையாய் பொறியரவம் பூணி
புகலூர்ப் புனற்சடையெம் பொன்னே—புகலூராய்
வெண்காடா வேலை விடமுண்டாய் வெள்ளேற்றுய்
வெண்காடா என்பேனே நான். ௪௬

நானுடைய மாடேயென் ஞானச் சுடர்விளக்கே
நானுடைய குன்றமே நான்மறையாய்—நானுடைய

காடுறையாய் காலங்க ளானுய் கனலாடுங்
காடுடையாய் காலமா னுய். சஎ

ஆயன் றமரார் அழியா வகைசெய்தாய்
ஆயன் றமரார் அழியாமை—யாயன்
றிருத்தினுன் செங்கண் விடையூர்வான் மேனி
திருத்தினுன் சேதுக் கரை. சஅ

கரையேனு மாதர் கருவான சேருக்
கரையேனு மாது கரையாங்—கரையேனுங்
கோளிலியெம் மாதி குறிபரவ வல்லேயே
கோளிலியெம் மாதி குறி. சகூ

குறியார் மணிமிடற்றுக் கோலஞ்சேர் ஞானக்
குறியாகி நின்ற குணமே—குறியாகும்
ஆலங்கா டெய்தா அடைவேன்மேல் ஆடரவம்
ஆலங்கா டெய்தா அடை. ருO

அடையும் படைமழுவுஞ் சூலமிலம் பங்கி
அடையும் இறப்பறுப்ப தானுல்—அடைய
மறைக்காடு சேரும் மணுளரென் பாற்சேரா
மறைக்காடு சேர்மக்கள் தாம். ருக

தாமேய வாறு சமய முதற்பரமுந்
தாமேய வாறு தழைக்கின்ருர்—தாமேற்
றழலுருவர் சங்கரவர் பொங்கரவம் பூண்ட
தழலுருவர் சங்கரர்என் பார். ருஉ

பார்மேவு கின்ற பலருருவர் பண்டரங்கர்
பார்மேவு கின்ற படுதலேயர்—பார்மேல்
வலஞ்சுழியைச் சேர்வர் மலரடிகள் சேர்வார்
வலஞ்சுழியைச் சேர்வாரு வார். ருந

வாரணிந்த கொங்கை உமையாள் மணவாளா
வாரணிந்த கொன்றை மலர்சூடு—வாரணிந்த
செஞ்சடையாய் சீர்கொள் சிவலோகா சேயொளியாய்
செஞ்சடையாய் செல்ல நிலே. ருச

நினைமால்கொண் டோடி நெறியான தேடி
நினைமாலே நெஞ்ச நினைய—நினைமால்கொண்
டோர்தேடி யும்பரால் அம்பர்மா காளாவென்
றார்தேடி யென்றுரைப்பான் ஊர். ருரு

ஊர்வதுவும் ஆனே றுடைதலையில் உண்பதுவும்
ஊர்வதுவு மெல்லுரக மூடுவர்கொல்—ஊர்வதுவும்
ஏகம்ப மென்று மிடைமருதை நேசத்தார்க்
கேகம்ப மாய்நின்ற ஏறு. ருசு

ஏறேய வாண்முதலே ஏகம்பா எம்பெருமான்
ஏறேறி யூரும் எரியாடி— ஏறேய
ஆதிவிடங் காகாறை அண்டத்தாய் அம்மானே
ஆதிவிடங் காவுமைநன் மாட்டு. ருஎ

மாட்டும் பொருளே யுருவை வருகாலம்
வாட்டும் பொருளாய் மறையானை—வாட்டும்
உருவானைச் சோதி உமைபங்கா பங்கா
உருவான சோதி உரை. ருஅ

உரையா இருப்பதுவும் உன்னையே ஊனின்
உரையாய் உயிராய்ப் பொலிந்தாய்—உரையாய
அம்பொனே சோதி அணியாரூர் சேர்கின்ற
அம்பொனே சோதியே ஆய்ந்து. ருகூ

ஆய்ந்துன்றன் பாதம் அடையவரும் என்மேல்
ஆய்ந்தென்றன் பாச மலம்அறுத்—தாய்ந்துன்றன்
பாலணையச் செய்த பரமா பரமேட்டி
பாலணையச் செய்த பரம். சூ0

பரமாய பைங்கட் சிரமேயப் பூண்ட
பரமாய பைங்கட் சிரமே—பரமாய
வாறடைந்த செஞ்சடையாய் ஐந்தடைந்த மேனியாய்
ஆறடைந்த செஞ்சடையாய் அன்பு. சூக

அன்பே யுடைய் அரனே யணையாத
அன்பே யுடைய அனலாடி—அன்பே

கழுமலத்து ளாடுங் கரியுரிபோர்த் தானே
கழுமலத்து ளாடுங் கரி. ௬௨

கரியார்தாஞ் சேருங் கலைமறிகைக் கொண்டே
கரியார்தாஞ் சேருங் கவாலி—கரியாகி
நின்ற கழிப்பாலை சேரும் பிரான்நாமம்
நின்ற கழிப்பாலை சேர். ௬௩

சேரும் பிரான்நாமஞ் சிந்திக்க வல்லீரேல்
சேரும் பிரான்நாமஞ் சிந்திக்கச்—சேரும்
மலையான் மகளை மகிழ்ந்தாரூர் நின்றான்
மலையான் மகளை மகிழ்ந்து. ௬௪

மகிழ்ந்தம்பர் மாகாளஞ் செய்யும் மகளிர்
மகிழ்ந்தம் பரமாகி நின்றார்—மகிழ்ந்தங்கம்
ஒன்றாகி நின்ற உமைபங்கன் ஒற்றியூர்
ஒன்றாகி நின்ற உமை. ௬௫

உமைகங்கை என்றிருவர் உற்ற உணர்வும்
உமைகங்கை என்றிருவர் காணார்—உமைகங்கை
கார்மிடற்றம் மேனிக் கதிர்முடியான் கண்மூன்று
கார்மிடற்றம் மேனிக் கினி. ௬௬

இனியவா காணீர்கள் இப்பிறவி எல்லாம்
இனியவா ஆகாமை யற்றும்—இனியவா
றாக்கை பலசெய்த ஆமாத்தூர் அம்மானை
ஆக்கை பலசெய்த அன்று. ௬௭

அன்றமரர் உய்ய அமிர்தம் அவர்க்கருளி
அன்றவுணர் வீட அருள்செய்தோன்—அன்றவுணர்
சேராமல் நின்ற அடிகள் அடியார்க்குச்
சேராமல் நின்ற சிவம். ௬௮

சிவனந்தஞ் செல்கதிக்கோர் கண்சேர்வ தாக்குஞ்
சிவனந்தஞ் செல்கதிக்கோர் கண்ணாஞ்—சிவனந்தஞ்
சேரும் உருவுடையீர் செங்காட்டங் குடிமேற்
சேரும் உருவுடையீர் செல். ௬௯

செல்லும் அளவுஞ் சிதையாமற் சிந்திமின்
செல்லும் அளவுஞ் சிவனும்மைச்—செல்லுந்
திருமீச்சூர்க் கேறவே செங்கண் ஏறூருந்
திருமீச்சூர் ஈசன் திறம். எ0

திறமென்னுஞ் சிந்தை தெரிந்தும்மைக் காணுந்
திறமென்னுஞ் சிந்தைக்கு மாமே—திறமென்னுஞ்
சித்தத்தீர் செல்வத் திருக்கடவூர் சேர்கின்ற
சித்தத்தீ ரேசெல்லும் நீர். எக

நீரே எருதேறு நின்மலனு ராவீரும்
நீரே நெடுவானில் நின்றீரும்—நீரே
நெருப்பாய தோற்றத்து நீளாறும் பூண்டு
நெருப்பாய தோற்ற நிலைத்து. எ௨

நிலைத்திவ் வுலகனைத்தும் நீரேயாய் நின்றீர்
நிலைத்திவ் வுலகனைத்தும் நீரே—நிலைத்தீரக்
கானப்பே ரீர்கங்கை சூடினீர் கங்காளீர்
கானப்பே ரீர்கங்கை யீர். எங

ஈரம் உடைய இளமதியஞ் சூடினீர்
ஈரம் உடைய சடையினீர்—ஈர
வருங்கால மாயினீர் இவ்வுலகம் எல்லாம்
வருங்கால மாயினீர் வாழ்வு. எச

வாழ்வார் மலரணைவார் வந்த வருநாகம்
வாழ்வார் மலரணைவார் வண்கங்கை—வாழ்வாய
தீயாட வாளுள்வான் வான்கழல்கள் சேராதார்
தீயாட வாளுரு மாறு. எரு

மாறுத ஆனையின்தோல் போர்த்து வளர்சடைமேல்
மாறுத நீருடைய மாகாளர்—மாறு
விடுங்கையர் சேரும் எழிலவாய் முன்னே
இடுங்கையர் சேர்வாக ஈ. எசு

ஈயும் பொருளே எமக்குச் சிவலோகம்
ஈயும் பொருளே இடுகாட்டில்—ஈயும்

படநாகம் பூணும் பரலோகீர் என்னீர்
படநாகம் பூணும் படி. எஎ

படியேறும் பார்த்துப் பரத்தோடுங் கூட்டிப்
படியேறும் பார்த்துப் பரனைப்—படியேனைப்
பாருடையாய் பைங்கண் புலியதளாய் பால்நீற்றாய்
பாருடையாய் யானுன் பரம். எஅ

பரமாய விட்டுநின் பாதம் பணிந்தேன்
பரமாய ஆதிப் பரனே—பரமாய
நீதியே நின்மலனே நேரார் புரமூன்றும்
நீதியே செய்தாய் நினை. எகூ

நினையடைந்தேன் சித்த நிலையாகும் வண்ணம்
நினையடைந்தேன் சித்த நிமலா—நினையடைந்தேன்
கண்டத்தாய் காளத்தி யானே கனலாருங்
கண்டத்தாய் காவாலி கா. அ0

காவார் பொழிற்கயிலை யாதீ கருவேயெங்
காவாய்ப் பொலிந்த கடுவெளியே—காவாய
ஏறுடையாய் என்னை இடைமருதி லேயென்றும்
ஏறுடையாய் நீயே கரி. அக

கரியானும் நான்முகனு மாய்நின்ற கண்ணன்
கரியாருங் கூற்றங் கனியே—கரியாருங்
காடுடையாய் காலங்க ளானாய் கனலாடுங்
காடுடையாய் காலமா னாய். அஉ

ஆனாயன் ஆய அடலேறே ஆரூர்க்கோன்
ஆனாய னமுத மேயானாய்—ஆனாய்
கவரெலும்போ டேந்தி கதநாகம் பூணி
கவரெலும்பு தார்கை வளை. அங

வளைகொண்டாய் என்னை மடவார்கள் முன்னே
வளைகொண்டாய் மாசற்ற சோதி—வளைகொண்டாய்
மாற்றார் கதுவ மதிலாரூர் சேர்கின்ற
மாற்றாரூர் கின்ற மயல். அச

மயலான தீரும் மருந்தாகும் மற்றும்
மயலானார் ஆரூர் மயரார்—மயலான
கண்ணியர்தம் பாகா கனியே கடிக்கொன்றைக்
கண்ணியலான் பாதமே கல். அரு

கலைமான்கை யேனப்பூண் காண்கயிலை மானின்
கலைமான் கறைகாண் கவாலி—கலைமானே
ஆடுவதும் பாடுவதுங் காலனைப்பொன் அம்பலத்துள்
ஆடுவதும் ஆடான் அரன். அசு

அரனே அணியாரூர் மூலட்டத் தானே
அரனே அடைந்தார்தம் பாவம்—அரனே
அயனார்தம் அங்கம் அடையாகக் கொண்டாய்
அயனாக மாக அடை. அஎ

அடையுந் திசையீசன் திண்டோள் ஆகாசம்
அடையுந் திருமேனி அண்டம்—அடையுந்
திருமுடிகால் பாதாளம் ஆடை கடல்அங்கி
திருமுடிநீர் கண்கள்சுடர் மூன்று. அஅ

மூன்றரணம் எய்தானே மூலத் தனிச்சுடரே
மூன்றரண மாய்நின்ற முக்கணனே—மூன்றரண
மாய்நின்ற சோதி அணியாரூர் சேர்கின்ற
வாய்நின்ற சோதி அறம். அகூ

அறமாய்வ ரேனும் அடுகாடு சேர
அறமானார் அங்கம் அணிவர்—அறமாய
வல்வினைகள் வாரா வெனுமருக லாரென்ன
வல்வினைகள் வாராத வாறு. கூ0

ஆறுடையர் நஞ்சுடைய ராடும் அரவுடையர்
ஆறுடையர் காலம் அமைவுடையர்—ஆறுடைய
சித்தத்தீர் செல்வத் திருக்கயிலை சேர்கின்ற
சித்தத்தீர் எல்லார்க்குஞ் சேர்வு. கூக

சேர்வு முடையர் செழுங்கொன்றைத் தாரார்நஞ்
சேர்வு முடையர் அரவுடையர்—சேருந்

திருச்சாய்க்காட் டாடுவரேல் செய்தக்க என்றுந்
திருச்சாக்காட் டேநின் னுருவு.   கஉ

உருவுபல கொண்டொருவ ராய்நின்றார்
உருவுபல வாமொருவர்—உருவு
பலவல்ல வொன்றல்ல பைஞ்ஞீலி மேயார்
பலவல்ல ஒன்றாப் பகர்.   கங

பகரப் பரியானை மேலூரா தானைப்
பகரப் பரிசடைமேல் வைத்த—பகரப்
பரியானைச் சேருலகம் பல்லுயிர்கள் எல்லாம்
பரியானைச் சேருலகம் பண்.   கச

பண்ணாகப் பாடிப் பலிகொண்டாய் பாரேழும்
பண்ணாகச் செய்த பரஞ்சோதீ—பண்ணா
எருதேறி யூர்வாய் எழில்வஞ்சி எங்கள்
எருதேறி யூர்வாய் இடம்.   கரு

இடமாய எவ்வுயிர்க்கும் ஏகம்பம் மேயார்
இடமானார்க் கீந்த இறைவர்—இடமாய
ஈங்கோய் மலையார் எழிலார் சிராமலையார்
ஈங்கோய் மலையார் எமை.   கசு

எமையாள வந்தார் இடரான தீர
எமையாளும் எம்மை இமையோர்—எமையாளும்
வீதிவிடங்கர் விடமதுண்ட கண்டர் விடையூர்
வீதிவிடங் கர்விடை யூர்தி.   கஎ

தீயான மேனியனே செம்பவளக் குன்றமே
தீயான சேராமற் செய்வானே—தீயான
செம்பொற் புரிசைத் திருவாரூ ராய்என்னைச்
செம்பொற் சிவலோகஞ் சேர்.   கஅ

சேர்கின்ற சிந்தை சிதையாமற் செய்வானே
சேர்கின்ற சிந்தை சிதையாமற்—சேர்கின்றோம்
ஒற்றியூ ரானே யுறவாரும் இல்லையினி
ஒற்றியூ ரானே யுறும்.   ககூ

உறுமுந்த முன்னே யுடையாமல் இன்னம்
உறுமுந்த முன்னே யுடையாமல்—உறுமுந்தம்
ஓரைந் துரைத்துற் றுணர்வோ டிருந்தொன்றை
ஓரைந் துரைக்கவல்லார்க் கொன்று. கOO

ஒன்றைப் பரணர் உரைத்தஅந் தாதிபல
ஒன்றைப் பகரில் ஒருகோடி—ஒன்றைத்
தவிரா துரைப்பார் தளரார் உலகில்
தவிரார் சிவலோகந் தான். கOக

திருச்சிற்றம்பலம்



இளம்பெருமானடிகள் அருளிய

# சிவபெருமான் திருமும்மணிக்கோவை*



திருச்சிற்றம்பலம்

முதல்வன் வகுத்த மதலை மாடத்
திடவரை யூன்றிய கடவுட் பாண்டிற்
பள்ளிச் செம்புய லுள்விழு துறீஇப்
புத்தேள் நிவந்த மூத்த மாச்சுடர்
எறிவளி எடுப்பினுஞ் சிறுநடுக் குறுநின்
அடிநிழல் அளியவோ வைத்த முடிமிசை
இலங்கு வளைத்தனிப் போது விரித்த
அலங்கு கதிரொளியல்நீ யணிந்ததென் மாறே. க

மாறு தடுத்த மணிக்கங்கை திங்களின்
கீறு தடுப்பக் கிடக்குமே—நீறடுத்த
செந்தாழ் வரையின் திரள்போல் திருமேனி
எந்தாய்நின் சென்னி இடை. உ

இடைதரில் யாமொன் றுணர்த்துவ துண்டிடை யோர்சிமையத்
தடைதரு மூரிமந் தாரம் விராய்நதி வெண்ணிலவின்

* மும்மணிகள் : அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை.

துடைதரு துண்டங் கிடத்தினுந் தொண்டர் ஒதுக்கியிட்ட
புடைதரு புல்லெருக் குஞ்செல்லு மோநின் புரிசடைக்கே.

சடையே, நீரகந் ததும்பி நெருப்புக் கலிக்குமே
மிடறே, நஞ்சகந் துவன்றி யமிர்து பிலிற்றுமே
வடிவே, முளியெரி கவைஇத் தளிர்தயங் கும்மே
அடியே, மடங்கன் மதஞ்சீறி மலர்பழிக் கும்மே
அஃதான்று, இனையவென் றறிகிலம் யாமே முனைதவத்
தலைமூன்று வகுத்த தனித்தாட்
கொலையூன்று குடுமி நெடுவே லோயே. ச

வேலை முகடும் விசும்பகடுங் கைகலந்த
காலைநீர் எங்கே கரந்தனையான்—மாலைப்
பிறைக்கீற்று கண்ணுதலா பெண்பாகா ஐயோ
இறைக்கூற்றாய் எங்கட் கிது. ரு

இதுநீ ரொழிமின் இடைதந் துமையிமை யத்தரசி
புதுநீர் மணத்தும் புலியத ளேயுடை பொங்குகங்கை
முதுநீர் கொழித்த இளமணல் முன்றின்மென் றேற்றிங்கள்
செதுநீர் ததும்பத் திவளஞ்செய் செஞ்சடைத் தீவண்ணரே.

வண்ண, மைஞ்சுதலை கவைஇப் பவள மால்வரை
மஞ்சுமி விலகிப் பகல்செருக் கும்மே
என்னைப், பழமுடைச் சிறுகலத் திடுபலி பெய்வோள்
நெஞ்சகம் பிணிக்கும் வஞ்சமோ வுடைத்தே
அஃதான்று, முளையெயிற் றக்குருளை யின்துயில் எடுப்ப
நடுங்குதலைச் சிறுநிலா விதிர்க்குங் கொடும்பிறைத்
தேழுறு முதிர்ச்சடை இறைவ
மாமுறு கொள்கை மாயமோ உடைத்தே. எ

உடைதலையின் கோவை ஒருவடமோ கொங்கை
புடைமலிந்த வெள்ளெருக்கம் போதோ—சடைமுடிமேல்
முன்னநாள் பூத்த முகிழ்நிலவோ முக்கணு
இன்னநாள் கண்ட திவள். அ

இவளப் பனிமால் இமையத் தணங்குகற் றைச்சடைமேல்
அவளப்புத் தேளி ருலகிற் கரசி யதுகொண்டென்னை

எவனுக்கு நீநல்ல தியாரைமுன் னெய்திற்றெறற் றேயிது கா
தவளப் பொடிச்செக்கர் மேனிமுக் கண்ணுடைச் சங்கரனே.

கரதலம் நுழைத்த மரகதக் கபாடத்
தயில்வழங்கு குடுமிக் கயிலை நாடநின்
அணங்குதுயி லெடுப்பிற் பிணங்குநிலாப் பிணையல்
யாமே கண்டது மிலமே தாமா
மூவா வெஃகமு முராணும்
ஓவாது பயிற்றும் உலகமால் உளதே. க0

உளரொளிய கங்கை யொலிதிரைகள் மோத
வளரொளிதேய்ந் துள்வளைந்த தொக்கும்—கிளரொளிய
பேதைக் கருங்கட் பிணுவின் மணாளனார்
கோதைப் பிறையின் கொழுந்து. கக

கொழுந்திரட் டெண்ணில வஞ்சிநின் கூரிருள் வார்பனிங்கின்
செழுந்திரட் குன்றகஞ் சென்றடைந் தாலொக்குந் தெவ்வர்நெஞ்சத்
தழுந்திரட் கண்டத் தவளப் பொடிச்செக்கர் மேனி நின்றோர்
எழுந்திரட் சோதிப் பிழம்பும்என் னுள்ளத் திடங்கொண்டவே.

கொண்டற் காரெயிற் றுச் செம்மருப் பிறவின்
புண்படு சிமையத்துப் புலவுநாறு குடுமி
வரையோன் மருக புனலாள் கொழுந
இளையோன் தாதை முதுகாட்டுப் பொருநநின்
நீறுடு பொலங்கழல் பரவ
வேறுங்கு கவர்க்குமோ வீடுதரு நெறியே. கங

நெறிவிரவு கொன்றை நெடும்படற்கீழ்க் கங்கை
எறிதிரைகள் ஈர்த்தெற்ற ஏறிப்—பொறிபிதிர
வீற்றராக் கண்படுக்கும் இண்டைச் சடைச்செங்கண்
ஏற்றரால் தீரும் இடர். கச

இடர்தரு தீவினைக் கெள்கிநை வார்க்குநின் னீரடியின்
புடைதரு தாமரைப் போதுகொ லாஞ்சரண் போழருவிப்
படர்தரு கொம்பைப் பவளவண் ணபரு மாமுதையங்
கடைதரு செஞ்சுடர்க் கற்றையொக் குஞ்சடை யந்தணனே.

அந்த ணாளர் செந்தொடை ஒழுக்கமும்
மடலோர் பயிற்றுநின் சுடர்மொழி யாண்மையும்
அவுணர் நன்னாட் டிறைவ னாகிக்
குறுநெடுந் தானை பரப்பித் தறுகண்
மால்விடை யடரத் தாள்நிமிர்ந் துக்க
காய்சின அரவுநாண் பற்றி நீயோர்
நெடுவரை நெளிய வாங்கிச்
சுடுகணை எரிநிமிர்த்துத் துரந்த ஞான்றே. கசு

ஞான்ற புனமாலை தோளலைப்ப நாண்மதியம்
ஈன்ற நிலவோடும் இவ்வருவான்—மூன்றியங்கு
மூதூர் வியன்மாடம் முன்னொருகால் துன்னருந்தீ
மீதூரக் கண்சிவந்த வேந்து. கஎ

வேந்துக்க மாக்கடற் சூரன்முன் னாள்பட வென்றிகொண்ட
சேந்தற்குத் தாதையிவ் வையம் அளந்ததெய் வத்திகிரி
ஏந்தற்கு மைத்துனத் தோழனின் தேன்மொழி வள்ளியென்னுங்
கூந்தற் கொடிச்சிதன் மாமன்வெம் மால்விடைக் கொற்றவனே. ()

கொற்றத் துப்பில் ஒற்றை யீன்ற
சுணங்கையஞ் செல்வத் தணங்குதரு முதுகாட்டுப்
பேய்முதி ராயத்துப் பிணவின் கொழுநநின்
தேர்கழல் கவைஇ யிலங்கிதழ்த் தாமம்
தவழ்தரு புனல்தலைப் படுநர்
அவல மாக்கடல் அழுந்தலோ இலரே. க௯

இலர்கொலாம் என்றிளைஞர் ஏசப் பலிக்கென்
றுலகெலாஞ் சென்றுழல்வ ரேனும்—மலர்குலாந்
திங்கட் குறுந்தெரியல் தேவர்க்காட் செய்வதே
எங்கட் குறுந்தெரியின் ஈண்டு. உ0

ஈண்டுமுற் றத்தொற்றை மால்விடை யேறியை யம்முனைநாள்
வேண்டிமுற் றத்திரிந் தெங்கும் பெறாது வெறுங்கைவந்தார்
பூண்டவொற் றைச்செங்க ணாமுங் கற்றைச் சடைப்புனலும்
நீண்டவொற் றைப்பிறைக் கீளுமெப் போதும்என் நெஞ்சத்தவே.

நெஞ்சிற் கொண்ட வஞ்சமோ வுடைத்தே
மடவோர் விரும்புநின் விளையாட் டியல்போ
மருள்புரி கொள்கைநின் றெருளா மையோ
யாதா கியதோ எந்தை நீ தியென்
றுடைதலை நெடுநிலா வெறியல்
கடைதலென் றருளிச் சூடிய பொருளே. உஉ.

பொருளாக யானிரந்தாற் புல்லெருக்கின் போது
மருளான்மற் றல்லாதார் வேண்டில்—தெருளாத
பான்மறு மான்மறிக்கைப் பைங்கட் பகடுரியான்
தான்மறுன் பைங்கொன்றைத் தார். உங.

தாரிளங் கொன்றைநல் லேறு கடாவித் தலைமைமிக்க
வேரிள மென்முலைப் பொன்மலை யாட்டிக்கெற் றேயிவனேர்
பேரிளங் கொங்கைப் பிணைவொடுங் கூடிப் பிறைக்கொழுந்தின்
ஓரிளந் துண்டஞ் சுமந்தையம் வேண்டி யுழிதருமே. உச.

உழிதரன் மடிந்து கழுதுகண் படுக்கும்
மிடருறு முதுகாட் டுச்சீ ரியல்பெரும்
புகர்முகத் துளைக்கை யுரவோன் தாதை
நெடியோன் பாகநின் சுடர்மொழி யாண்மை
பயிற்று நாவலர்க்
கிடர்தரு தீவினை கெடுத்தலோ எளிதே. உரு.

எளியமென் றெள்கி யிகழாது நாளும்
அளியமாட் செய்தாலும் ஐயோ—தெளிவரிய
வள்கயிலை நீள்பொருப்ப வான்தோய் மதிச்சடையாய்
கொள்கையிலை எம்மாற் குறை. உசு.

குறையாப் பலியிவை கொள்கவென் கோல்வளை யுங்கலையுந்
திறையாக்கொண் டாயினிச் செய்வதென் தெய்வக் கங்கைப்புனலி
பொறைபா யொருகடல்நஞ் சுண்டகண்டா பொடியணிந்த [ற்
விறையா இடுபிணக் காடசெம் மேனிஎம் வேதியனே. உஎ.

வேதியர் பெரும விண்ணோர் தலைவ
நான்முகத் தண்ட வாண
செக்கர் நான்மறைப் புத்தேள் நாட

காய்சின மழவிடைப் பாகநின்
மூவிலை நெடுவேல் பாடுது
நாவலம் பெருமை நல்குவோய் எனவே. ௨அ

எனவே யுலகெலாம் என்றிளைஞர் ஏச
நனவே பலிதிரிதி நாளுஞ்—சினவேங்கைக்
கார்க்கயிலை நாட களிற்றீர் உரியலாற்
போர்க்கயிலை பேசல்நீ பொய். ௨௯

பொய்நீ ருரைசெய்தீர் பொய்யோம் பலியெனப் போனபின்னை
இந்நீள் கடைக்கென்று வந்தறி யீரினிச் செய்வதென்னே
செந்நீர் வளர்சடைத் திங்கட் பிளவொடு கங்கைவைத்த
முந்நீர்ப் பவளத் திரட்செக்கர் ஒக்கு முதலவனே. ௩0

திருச்சிற்றம்பலம்

அதிராவடிகள் அருளிய

# மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை

திருச்சிற்றம்பலம்

ஒருநெடுங் கங்கை யிருங்குறும் பைம்புகர்
மும்முகச் செந்நுதி நாவிணர் வெள்நிணக்
குடற்புலவு கமழும் அடற்கழுப் படையவன்
மதலை மாமதந் துவன்றிய கதனுடைக்
கடதடக் கபோலத் தோரிட மருப்பிற்
கரண்டக வுதரத்து முரண்டரு குழவிதன்
சேவடி யுகள மல்லது
யாவையும் இலமினி யிருநிலத் திடையே. க

நிலந்துளங்க மேருத் துளங்க நெடுவான்
தலந்துளங்கச் சப்பாணி கொட்டுங்—கலந்துளங்கொள்
காமாரி யீன்ற கருங்கைக் கடதடத்து
மாமாரி யீன்ற மணி. ௨

மணிசிந்து கங்கைதன் மானக் குருளையை வாளரக்கர்
அணிசிந்த வென்றஎம் மையர்க் கிளங்கன்றை யங்கரும்பின்
துணிசிந்த வாய்ப்பெய்த போதகத் தைத்தொடர்ந் தோர்பிறவிப்
பிணிசிந்து கார்முளை யைப்பிடித் தோர்க்கில்லை பேதுறலே.

பேதுறு தகைய மல்லது தீதுறச்
செக்கர்க் குஞ்சிக் கருநிறத் தொக்க ணுப்பண்
புக்கவ ணிரும்பொறித் தடக்கையும்
முரணிய பெருந்தோட்
கொட்ட நாவி தேவிதன்
மட்டுகு தெரியல் அடிமணந் தனமே. ௪

மேய வுருமிடற்றர் வெள்ளெயிற்றர் திண்சேனை
ஓய மணியூச லாடின்றே—பாய
மழைசெவிக்காற் றுந்திய வாளமர்க்கண் எந்தை
தழைசெவிக்காற் றுந்தத் தளர்ந்து. ௫

உந்தத் தளரா வளைத்தன முன்னமின் ஞெடைநெற்றிச்
சந்தத் தளரா வொருதனித் தெவ்வர்தந் தாளிரியூர்
விந்தத் தளரா மருங்கிற் கிளிபெற்ற வேழக்கன்றின்
மந்தத் தளரா மலர்ச்சர ணங்கள் வழுத்துமினே. ௬

மின்னெடுங் கொண்டல் அந்நெடு முழக்கத்
தோவற விளங்கிய துளைக்கைக் கடவுளை
யாம்பிக வழுத்துவ தெவனோ அவனேற்
பிறந்ததிவ் வுலகின் பெருமூ தாதை
உரந்தரு சிரமரிந் தவற்கே வரைந்தது
மேருச் சிமையத்து மீமிசை
வாரிச் செல்வன் மகண்மகன் மொழியே. ௭

மொழியின் மறைமுதலே முன்னயனத் தேறே
கழிய வருபொருளே கண்ணே—செழிய
கலாலயனே எங்கள் கணபதியே நின்னை
அலாதையனே சூழாதென் அன்பு. ௮

அன்புதவச் சுற்ற காரழல் கொண்டெயின் மூன்றெரிய
வன்பு தவத்துந்தை மாட்டுகின் றுன்மதஞ் சூழ்மருப்பிற்

கன்பு தவக்கரத் தாளமிட் டோடிக் கடுநடையிட்
டின்புத வச்சென்று நீயன்று காத்த தியம்புகவே. கூ

கவவுமணிக் கேடகக் கங்கணக்க வைவணு
அறைகழல் அவுணரொடு பொருத ஞான்றுநீர்
புழைக்கரம் உயிர்த்த அழற்பே ருதை
விரைநனி கீறி மூரி
அஞ்சேறு புலர்த்தும் என்பர்
மஞ்சேறு கயிலை மலைகிழ வோயே. கய

மலைசூழ்ந் திழிகின்ற மாசுணப் பொற்பாறை
தலைசூழ்ந்து தானினைப்ப தொக்குங்—கலைசூழ்
திரண்டகங்கொள் பேரறிவன் திண்வயிற்றின் உம்பர்க்
கரண்டகங்கொள் காலுயிர்க்குங் கை. கக

காலது கையது கண்ணது தீயது கார்மதநீர்
மேலது கீழது நூலது வெற்பது பொற்பமைதீம்
பாலது தேனது தானது மென்மொழிப் பாவைமுப்பூண்
வேலது வாளது நான்மறைக் கின்ற விடுசுடர்க்கே. கஉ

சுடர்ப்பிழம்பு தழைத்த அழற்றனி நெடுவேல்
சேய்மூ வுலகம் வலம்வர வேயக்
கொன்றையம் படலை துன்றுசடைக் கடந்த
ஓங்கிருந் தாதை யைவளாய் மாங்கனி
அள்ளல் தீஞ்சுவை அருந்திய
வள்ளற் கிங்கென் மனங்கனிந் திடுமே. கந

இக்கயங்கொண் மூவலயஞ் சூழேழ் தடவரைகள்
திக்கயங்கள் போர்ந்தாடச் செங்கீரை—புக்கியங்கு
தேனுடை வண்டாடச் செங்கீரை யாடின்றே
வானுடன் பெற்ற வரை. கச

பெற்றமெல் லோதி சிலம்பின் மகள்பெறப் பிச்சுகந்த
மற்றவள் பிச்சன் மயங்கன்முன் னோன்பின் னிணைமைமிகக்
கற்றவன் ஐயன் புறங்காட் டிடைநட மாட்டுகந்தோ
செற்றவெண் தந்தத் தவன்நம்மை யாட்கொண்டு செய்தனவே.

செய்தரு பொலம்படை மொய்தரு பரூஉக்குருளை
வெள்ளெயிறு பொதிந்த வள்ளுகிர்த் திரள்வாய்ப்
பெருந்திரட் புழைக்கை
மண்முழை வழங்குந் திண்முரண் ஏற்றின்
பணையடர்ப் பாகன் தனதிணையடி
நெடும்பொற் சரணம் ஏத்த
இடும்பைப் பௌவம் இனிநீங் கலமே. கசு

அலங்கன் மணிகனக முந்தி யருவி
விலங்கன் மிசையிழிவ தொக்கும்—பலன்கனிகள்
உண்டளைந்த கோன்மகுடத் தொண்கடுக்கைத் தாதளைந்து
வண்டணைந்து சோரும் மதம். கஎ

மதந்தந்த மென்மொழி மாமலை யாட்டி மடங்கல்கொன்ற
மதந்தந்த முக்கண் ணரற்குமுன் னீன்றவம் மாமலைபோல்
மதந்தந்த கும்பக் குழவிமந் தாரப்பொன் னூட்டிருந்து
மதந்தந்த செம்மலன் றேவையம் உய்ய வளர்கின்றதே. கஅ

வளர்தரு கவட்டின் கிளரொளிக் கற்பகப்
பொதும்பர்த் தும்பி யொழிகின் றேச்சும்
பாரிடைக் குறுநடைத் தோடி ஞாங்கர்
இட்ட மாங்கனி
முழுவதும் விழுங்கிய முளைப்பணைத் தடக்கை
எந்தை யல்லது மற்று யாவுள
சிந்தை செய்யுந் தேவதை நமக்கே. கக

கேளுற்றி யான்தளர வொட்டுமே கிம்புரிப்பூண்
வாளுற்ற கேயூர வாளரக்கர்—தோளுற்
றிறுத்தெறிந்து கொன்றழித்த அங்கயங்கண் மீண்டே
இறுத்தெறிந்து கொன்றழித்த ஏறு. உ0

ஏறு தழீஇயவெம் புத்தேள் மருகவெங் குந்தவளை
நீறு தழீஇயவெண் தோளவன் செல்வவண் டுண்ணநெக்க
வாறு தழீஇய கரதலத் தையநின் தன்னையல்லால்
வேறு தழீஇத் தொழுமோ வணங்காத வியன்சிரமே. உக

சிரமே, விசும்பு போத வுயரி யிரண்டசம்பு பொழியும்மே
கரமே, வரைத்திரண் முரணிய விரைத்து விழும்மே
புயமே, திசைவிளிம்பு கிழியச் சென்று செறிக்கும்மே
அடியே, இடுந்தொறும் இவ்வுலகம் பெயரும்மே
ஆயினும், அஞ்சுடர்ப் பிழம்பு தழீஇ
நெஞ்சகத் தொடுங்குமோ நெடும்பனைச் சூரே. ௨௨

சூர்தந்த பொற்குவட்டின் சூளிகையின் வானயிர்த்து
வார்தந் தெழுமதியம் மன்னுமே—சீர்தந்த
மாமதலை வான்மதியங் கொம்பு வயிறுதித்த
கோமதலை வாண்மதியங் கொம்பு. ௨௩

(௨௪ முதல் ௩௦ வரையுள்ள பாக்கள் கிடைத்தில)

திருச்சிற்றம்பலம்



## பட்டணத்துப் பிள்ளையார் அருளிய

## கோயில் நான்மணிமாலை*



திருச்சிற்றம்பலம்

பூமேல் அயன்அறியா மோலிப் புறத்ததே
நாமே புகழ்ந்தளவை நாட்டுவோம்—பாமேவும்
ஏத்துகந்தான் தில்லை இடத்துகந்தான் அம்பலத்தே
கூத்துகந்தான் கொற்றக் குடை.

குடைகொண்டிவ் வையமெலாங்
குளிர்வித் தெரிபொற் றிகிரிப்
படைகொண் டிகல்தெறும் பார்த்திவராவதிற்
பைம்பொற் கொன்றைத்

* நான்மணிமாலை : வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா நான்கும் முறையே விரவிவரும் மாலை.

தொடைகொண்ட வார்சடை அம்பலத்தான்
　　தொண்டர்க் கேவல்செய்து
கடைகொண்ட பிச்சைகொண் டுண்டிங்கு
　　வாழ்தல் களிப்புடைத்தே. உ

களிவந் தமுதூறிக் கல்மனத்தை எல்லாங்
　　கசியும் படிசெய்து கண்டறிவார் இல்லா
வெளிவந் தடியேன் மனம்புகுந்த தென்றால்
　　விரிசடையும் வெண்ணீறுஞ் செவ்வானம் என்ன
ஒளிவந்த பொன்னிறமுந் தொல்நடமும் காட்டும்
　　உடையான் உயர்தில்லை அம்பலமொன் றல்லால்
எளிவந் தினிப்பிறர்பாற் சென்றவர்க்குப் பொய்கொண்
　　டிடைமிடைந்த புன்மொழியால் இச்சையுரை யோமே.

உரையின் வரையும் பொருளின் அளவும்
இருவகைப் பட்ட எல்லையுங் கடந்து
தம்மை மறந்து நின்னை நினைப்பவர்
செம்மை மனத்தினுந் தில்லைமன் றினும்நடம்
5 ஆடும் அம்பல வாண நீடு
குன்றக் கோமான் றன்திருப் பாவையை
நீல மேனி மால்திருத் தங்கையைத்
திருமணம் புணர்ந்த ஞான்று பெருமநின்
தாதவிழ் கொன்றைத் தாரும் ஏதமில்
10 வீர வெள்விடைக் கொடியும் போரில்
தழங்குந் தமருகப் பறையும் முழங்கொலித்
தெய்வக் கங்கை யாறும் பொய்தீர்
விரையாக் கலியெனும் ஆணையும் நிரைநிரை
ஆயிரம் வகுத்த மாயிரு மருப்பின்
15 வெண்ணிறச் செங்கண் வேழமும் பண்ணியல்
வைதிகப் புரவியும் வான நாடும்
மையறு கனக மேருமால் வரையுஞ்
செய்வயல் தில்லை யாகிய தொல்பெரும் பதியுமென்
றொருபதி னுயிரந் திருநெடு நாமமும்
20 உரிமையிற் பாடித் திருமணப் பந்தருள்

அமரர் முன்புகுந் தறுகு சாத்திநின்
தமர்பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத்
தென்னையும் எழுத வேண்டுவன் நின்னருள்
ஆணை வைப்பிற் காணுறு அணுவும்
25 வானுற நிமிர்ந்து காட்டுங்
கானில்வால் நுளம்புங் கருடனா கலினே.

ஆதரித்த மாலும் அறிந்திலனென் றஃதறிந்தே
காதலித்த நாயேற்குங் காட்டுமே—போதகத்தோல்
கம்பலத்தான் நீள்நாக கங்கணத்தான் தென்புலியூர்
அம்பலத்தான் செம்பொன் அடி. ௬

அடியொன்று பாதலம் ஏழிற்கும் அப்புறம் பட்டதிப்பால்
முடியொன்றிவ் வண்டங்கள் எல்லாங் கடந்தது முற்றும்வெள்ளைப்
பொடியொன்று தோளெட்டுத் திக்கின் புறத்தன பூங்கரும்பின்
செடியொன்று தில்லைச்சிற் றம்பலத் தான்தன் திருநடமே.

நடமாடி ஏழுலகும் உய்யக் கொண்ட
நாயகரே நான்மறையோர் தங்களோடுந்
திடமாட மதில்தில்லைக் கோயில் கொண்ட
செல்வரே உமதருமை தேரா விட்டீர்
இடமாடி இருந்தவளும் விலக்கா விட்டால்
என்போல்வார்க் குடன்நிற்க இயல்வ தன்று
தடமாலை முடிசாய்த்துப் பணிந்த வானோர்
தஞ்சுண்டா அம்கருநீர் நஞ்சுண் டீரே. ௭

நஞ்சுமிழ் பகுவாய் வெஞ்சின மாசுணந்
தன்முதன் முருக்க நென்முதற் சூழ்ந்த
நீர்ச்சிறு பாம்புதன் வாய்க்கெதிர் வந்த
தேரையை வவ்வி யாங்கி யான்முன்
5 கருவிடை வந்த வொருநாள் தொடங்கி
மறவா மறலி முறைபிறழ் பேழ்வாய்
அயிற்றலை யன்ன வெற்றிடைக் கிடந்தாங்
கருள்நனி யின்றி யொருவழி றேம்பற்குப்
பல்லுயிர் செகுத்து வல்லிதின் அருந்தி

10 அயர்த்தனன் இருந்தும் போலும் பெயர்த்துநின்(று)
எண்டோள் வீசிக் கண்டோர் உருகத்
தொல்லெயில் உடுத்த தில்லை மூதூர்
ஆடும் அம்பலக் கூத்தனைப்
பாடுதல் பரவுதல் பணிதலோ இலமே. அ

இலவிதழ்வாய் வீழ்வார் இகழ்வார் அவர்தங்
கலவி கடைக்கணித்தும் காணேன்—இலகுமொளி
ஆடகஞ்சேர் அம்பலத்தே ஆருடையார் நின்றாடும்
நாடகங்கண் டன்பான நான். கூ

நானே பிறந்த பயன்படைத் தேன்அயன் நாரணன்எங்
கோனே எனத்தில்லை அம்பலத்தே நின்று கூத்துகந்த
தேனே திருவுள்ள மாகிஎன் தீமைஎல் லாமறுத்துத்
தானே புகுந்தடி யேன்மனத் தேவந்து சந்திக்கவே. கO

சந்து புனைய வெதும்பி மலரணை
தங்க வெருவி இலங்கு கலையொடு
சங்கு கழல நிறைந்த அயலவர்
தஞ்சொல் நலிய மெலிந்து கிளியொடு
பந்து கழல்கள் மறந்து தளிர்புரை
பண்டை நிறமும் இழந்து நிறையொடு
பண்பு தவிர அனங்க னவனொடு
நண்பு பெருக விளைந்த வினையன
நந்தி முழவு தழங்க மலைபெறு
நங்கை மகிழ அணிந்த அரவுகள்
நஞ்சு பிழிய முரன்று முயலகன்
நைந்து நரல அலைந்த பகிரதி
அந்தி மதியொ டணிந்து தி(ல்)லைநகர்
அம்பொன் அணியும் அரங்கில் நடநவில்
அங்கண் அரசை யடைந்து தொழுதிவள்
அன்று முதலெதிர் இன்று வரையுமே. கக

வரையொன்று நிறுவி அரவொன்று பிணித்துக்
கடல்தட வாக மிடலொடும் வாங்கித்

திண்டோள் ஆண்ட தண்டா அமரர்க்
கமிர்துணா அளித்த முதுபெருங் கடவுள்
5 கடையுகஞ் சென்ற காலத்து நெடுநிலம்
ஆழிப் பரப்பில் ஆழ்வது பொறாஅ
தஞ்சேல் என்று செஞ்சே லாகித்தன்
தெய்வ உதரத்துச் சிறுசெலுப் புரையிற்
பௌவம் ஏழே பட்டது பௌவத்தோ
10 டுலகு குழைத் தொருநாள் உண்டதும்
உலக மூன்றும் அளந்துழி ஆங்கவன்
ஈரடி நிரம்பிற்று மிலவே தேரில்
உரைப்போர்க் கல்ல தவன்குறை வின்றே
இனைய னாகிய தனிமுதல் வானவன்
15 கேழல் திருவுரு வாகி யாழத்
தடுக்கிய ஏழும் எடுத்தனன் எடுத்தெடுத்
தாழி யூழி கீழுறக் கிளைந்தும்
காண்பதற் கரியநின் கழலும் வேண்டுபு
நிகில லோகமும் நெடுமறைத் தொகுதியும்
20 அகில சராசரம் அனைத்தும் உதவிய
பொன்னிறக் கடவுள் அன்ன மாகிக்
காண்டி லாதநின் கதிர்நெடு முடியும்
ஈங்கிவை கொண்டு நீங்காது விரும்பிச்
சிறிய பொதுவின் மறுவின்றி விளங்கி
25 எவருங் காண ஆடுதி அதுவெனக்
கதிசயம் விளைக்கும் அன்றே அதிசயம்
விளையாது மொழிந்த தெந்தை வளையாது
கல்லினும் வலிதது நல்லிதிற் செல்லாது
தான்சிறி தாயினும் உள்ளிடை நிரம்ப
30 வான்பொ யச்ச மாயா வாசை
மிடைந்தன கிடப்ப இடம்பெறல் அருமையில்
ஐவர் கள்வர் வல்லிதிற் புகுந்து
மண்மகன் திகிரியில் எண்மடங்கு சுழற்ற
ஆடுபு கிடந்த பீடில் நெஞ்சத்து
35 நுழைந்தனை புகுந்து தழைந்தநின் சடையுஞ்

செய்ய வாயும் மையமர் கண்டமும்
நெற்றியில் திகழ்ந்த ஒற்றை நாட்டமும்
எடுத்த பாதமுந் தடுத்தசெங் கையும்
புள்ளி யாடையும் ஒள்ளிதின் விளங்க
40 நாடகம் ஆடுதி நம்ப கூடும்
வேத நான்கும் விழுப்பெரு முனிவரும்
ஆதி நின்திற மாதலின் மொழிவது
பெரியதிற் பெரியை யென்றும் அன்றே
சிறியதிற் சிறியை யென்றும் அன்றே
45 நிறைபொருள் மறைகள் நான்குநின் அறைகழல்
இரண்டொடும் அறிவினில் ஆர்த்து வைத்த
மறையவர் தில்லை மன்றுள்கிழ வோனே. கஉ

கிழவருமாய் நோய்மூப்புக் கீழ்ப்பட்டுக் காமத்
துழவரும்போய் ஓயுமா கண்டோம்—மொழிதெரிய
வாயினால் இப்போதே மன்றில் நடமாடும்
நாயனா ரென்றுரைப்போம் நாம். கங

நாமத்தி னால்என்றன் நாத்திருத் தேன்நறை மாமலர்சேர்
தாமத்தி னால்உன் சரண்பணி யேன்சார்வ தென்கொடுநான்
வாமத்தி லேயொரு மானைத் தரித்தொரு மானைவைத்தாய்
சேமத்தி னால்உன் திருத்தில்லை சேர்வதோர் செந்நெறியே.

நெறிதரு குழலை யறலென்பர்கள்
நிழலெழு மதியம் நுதலென்பர்கள்
நிலவினும் வெளிது நகையென்பர்கள்
நிறம்வரு கலசம் முலையென்பர்கள்
அறிகுவ தரிதிவ் விடையென்பர்கள்
அடியிணை கமல மலரென்பர்கள்
அவயவம் இனைய மடமங்கையர்
அழகியர் அமையும் அவரென்செய
மறிமழு வுடைய கரனென்கிலர்
மறலியை முனியும் அரனென்கிலர்
மதிபொதி சடில தரனென்கிலர்
மலைமகள் மருவு புயனென்கிலர்

செறிபொழில் நிலவு தி(ல்)லையென்கிலர்
திருநடம் நவிலும் இறையென்கிலர்
சிவகதி யருளும் அரசென்கிலர்
சிலர்நர குறுவர் அறிவின்றியே. கரு

அறிவில் ஒழுக்கமும் பிறிதுபடு பொய்யுங்
கடும்பிணித் தொகையும் இடும்பை ஈட்டமும்
இனையன பலசரக் கேற்றி வினையெனுந்
தொன்மீ காமன் உய்ப்ப அந்நிலைக்
5 கருவெனும் நெடுநகர் ஒருதுறை நீத்தத்துப்
புலனெனுங் கோண்மீன் அலமந்து தொடரப்
பிறப்பெனும் பெருங்கடல் உறப்புகுந் தலைக்குந்
துயர்த்திரை யுவட்டிற் பெயர்ப்பிடம் அயர்த்துக்
குடும்பம் என்னும் நெடுங்கல் வீழ்த்து
10 நிறையெனுங் கூம்பு முரிந்து குறையா
உணர்வெனும் நெடும்பாய் கீறிப் புணரும்
மாயப் பெயர்ப்படு காயச் சிறைக்கலங்
கலங்குபு கவிழா முன்னம் அலங்கல்
மதியுடன் அணிந்த பொதியவிழ் சடிலத்துப்
15 பையர வணிந்த தெய்வ நாயக
தொல்லெயில் உடுத்த தில்லை காவல
வம்பலர் தும்பை அம்பல வாணநின்
அருளெனும் நலத்தார் பூட்டித்
திருவடி நெடுங்கரை சேர்த்துமா செய்யே. கசு

செய்ய திருமேனிச் சிற்றம் பலவருக்கென்
தையல் வளைகொடுத்தல் சாலுமே—ஐயன்தேர்
சேயே வருமளவிற் சிந்தாத மாத்திரமே
தாயே நமதுகையிற் சங்கு. கஎ

சங்கிடத் தான்இடத் தான்தன தாகச் சமைந்தொருத்தி
அங்கிடத் தாள்தில்லை அம்பலக் கூத்தற் கவிர்சடைமேல்
கொங்கிடத் தார்மலர்க் கொன்றையென் றுயெங்கை நீயும்ஒரு
பங்கிடத்தான் வல்லையேல் இல்லையேல்உன் பசப்பொழியே.

ஒழிந்த தெங்கள்உற வென்கொலோ எரியில்
ஒன்ன லார்கள்புரம் முன்னொர்நாள்
விழுந்தெ ரிந்துதுக ளாக வென்றிசெய்த
வில்லி தில்லைநகர் போலியார்
சுழிந்த வுந்தியில் அழுந்தி மேகலை
தொடக்க நின்றவர் நடக்கநொந்
தழிந்த சிந்தையினும் வந்த தாகிலுமோர்
சிந்தை யாயொழிவ தல்லவே. கக

அல்லல் வாழ்க்கை வல்லிதிற் செலுத்தற்குக்
கைத்தேர் உழந்து கார்வரும் என்று
வித்து விதைத்தும் விண்பார்த் திருந்துங்
கிளையுடன் தவிரப் பொருளுடன் கொண்டு
5 முளைமுதிர் பருவத்துப் பதியென வழங்கியும்
அருளா வயவ ரம்பிடை நடந்தும்
இருளுறு பவ்வத் தெந்திரங் கடாஅய்த்
துன்றுதிரைப் பரப்பிற் குன்றுபார்த் தியங்கியும்
ஆற்றல் வேந்தற்குச் சோற்றுக் கடன்பூண்டுந்
10 தாளுழுந் தோடியும் வாளுழுந் துண்டும்
அறியா வொருவனைச் செறிவந்து தெருட்டியுஞ்
சொற்பல புனைந்துங் கற்றன கழறியுங்
குடும்பப் பாசம் நெடுந்தொடர்ப் பூட்டி
ஐவர் ஐந்திடத் தீர்ப்ப நொய்திற்
15 பிறந்தாங் கிறந்தும் இறந்தாங்கு பிறந்துங்
கணத்திடைத் தோன்றிக் கணத்திடைக் கரக்குங்
கொப்புட் செய்கை ஒப்பின் மின்போல்
உலப்பில் யோனிக் கலக்கத்து மயங்கியும்
நெய்யெரி வளர்த்துப் பெய்முகிற் பெயல்தருந்
20 தெய்வ வேதியர் தில்லை மூதூர்
ஆடகப் பொதுவில் நாடகம் நவிற்றுங்
கடவுட் கண்ணுதல் நடமுயன் றெடுத்த
பாதப் போதும் பாய்புலிப் பட்டும்
மீதியாத் தசைத்த வெள்ளெயிற் றரவுஞ்
25 சேயுயர் அகலத் தாயிரங் குடுமி

மணிகிடந் திமைக்கும் ஒருபே ராரமும்
அருள்பொதிந் தலர்ந்த திருவாய் மலரும்
நெற்றியில் திகழ்ந்த வொற்றை நாட்டமுங்
கங்கை வழங்குந் திங்கள் வேணியுங்
30 கண்ணிடைப் பொறித்து மனத்திடை யழுத்தியாங்
குள்மகிழ்ந் துரைக்க வுறுதவஞ் செய்தனன்
நான்முகன் பதத்தின் மேல்நிகழ் பதந்தான்
உறுதற் கரியதும் உண்டோ
பெறுதற் கரியதோர் பேறுபெற் றேற்கே. உ0

பெற்றோர் பிடிக்கப் பிழைத்துச் செவிலியர்கள்
சுற்றோட வோடித் தொழுதநிற்கும்—ஒற்றைக்கைம்
மாமறுகச் சீறியசிற் றம்பலத்தான் மான்றேர்போங்
கோமறுகிற் பேதைக் குழாம். உக

பேதையெங் கேயினித் தேறியுய் வாள்பிர மன்றனக்குத்
தாதைதன் தாதையென் றேத்தும் பிரான்தண் புலிசைப்பிரான்
கோதையந் தாமத்தண் கொன்றைகொடாளின்று கொல்லவெண்ணி
ஊதையுங் காருந் துளியொடுங் கூடி உலாவியவே. உஉ

உலவு சலதி வாழ்விடம் அமரர் தொழவு ணுவென
நுகரு மொருவ ரூழியின் இறுதி யொருவ ராழிய
புலவு கமழ்க ரோடிகை யுடைய புனிதர் பூசுரர்
புலிசை யலர்செய் போதணி பொழிலின் நிழலின் வாழ்வதோர்
கலவ மயில னார்சுருள் கரிய குழலி னார்குயில்
கருது மொழியி னார்கடை நெடிய விழியி னாரிதழ்
இலவில் அழகி யாரிடை கொடியின் வடிவி னார்வடி
வெழுது மருமை யாரென திதய முழுதும் ஆள்வரே. உங

ஆளெனப் புகுதின்வந் தடைந்திலம் அத்தநின்
தாளின் ஏவல் தலையின் இயற்றி
வழிவழி வந்த மரபினம் மொழிவதுன்
ஐந்தெழுத் தவையெஞ் சிந்தையிற் கிடத்தி
5 நனவே போல நாள்தொறும் பழகிக்
கனவிலும் நவிற்றுங் காதலேம் வினைகெடக்
கேட்பதும் நின்பெருங் கீர்த்தி மீட்பதும்

நின்னெறி யல்லாப் புன்னெறி படர்ந்த
மதியில் நெஞ்சத்தை வரைந்து நிதியென
10 வருத்தி செய்திடுவ துருத்திர சாதனங்
காலையும் மாலையுங் கால்பெயர்த் திடுவதுன்
ஆலயம் வலம்வரு தற்கே சால்பினிற்
கைகொடு குயிற்றுவ தைய நின்னது
கோயிற் பல்பணி குறித்தே ஓயா
15 துருகி நின்னினைந் தருவி சோரக்
கண்ணிற் காண்பதெவ் வுலகினுங் காண்பனவெல்லாம்
நீயே யாகி நின்றதோர் நிலையே நாயேன்
தலைகொடு சார்வதுன் சரண்வழி யல்லால்
அலைகடல் பிறழினும் அடாதே அதனாற்
20 பொய்த்தவ வேடர் கைத்தகப் படுத்தற்கு
வஞ்சச் சொல்லின் வார்வலை போக்கிச்
சமயப் படுகுழி சமைத்தாங் கமைவயின்
மானுட மாக்களை வலியப் புகுத்தும்
ஆறு விரதத் தகப்படுத் தாழ்த்து
25 வளைவுணர் வெனக்கு வருமோ வளர்தரும்
நுரையுந் திரையும் நொப்புறு கொட்பும்
வரையில் சீகர வாரியுங் குரைகடற்
பெருத்துஞ் சிறுத்தும் பிறங்குவ தோன்றி
எண்ணில வாகி யிருங்கடல் அடங்குந்
30 தன்மை போலச் சராசரம் அனைத்தும்
நின்னிடைத் தோன்றி நின்னிடை யடங்கும்நீ
ஒன்றினுந் தோன்றாய் ஒன்றினும் அடங்காய்
வானோர்க் கரியாய் மறைகளுக் கெட்டாய்
நான்மறை யாளர் நடுவுபுக் கடங்கிச்
35 செம்பொற் றில்லை மூதூர்
அம்பலத் தாடும் உம்பர்நா யகனே. ௨௪

நாயனைய என்னைப் பொருட்படுத்தி நன்களித்துத்
தாயனைய னாயருளுந் தம்பிரான்—தூயவிரை
மென்துழாய் மாலொடயன் தேட வியன்தில்லை
மன்றுளே யாடும் மணி. ௨௫

மணிவாய் முகிழ்ப்பத் திருமுகம் வேர்ப்பவும் மன்றுக்கெல்லாம்
அணியாய் அருள்நடம் ஆடும் பிரானை அடைந்துருகிப்
பணியாய் புலன்வழி போநெஞ்ச மேஇனிப் பையப்பையப்
பிணியாய்க் கடைவழி சாதியெல் லோரும் பிணமென்னவே.

என்னாம் இனிமட வரலாய் செய்குவ
தினமாய் வண்டுகள் மலர்கிண்டித்
தென்னா வெனமுரல் பொழில்சூழ் தில்லையுள்
அரனார் திருமுடி யணிதாமந்
தன்னால் அல்லது தீரா தென்னிடர்
தகையா துயிர்கரு முகிலேறி
மின்னா நின்றது துளிவா டையும்வர
வீசா நின்றது பேசாயே. உஎ

பேசு வாழி பேசு வாழி
ஆசையொடு மயங்கி மாசுறு மனமே
பேசு வாழி பேசு வாழி
கண்டன மறையும் உண்டன மலமாம்
5 பூசின மாசாம் புணர்ந்தன பிரியும்
நிறைந்தன குறையும் உயர்ந்தன பணியும்
பிறந்தன இறக்கும் பெரியன சிறுக்கும்
ஒன்றொன் றொருவழி நில்லா அன்றியுஞ்
செல்வமொடு பிறந்தோர் தேசொடு திகழ்ந்தோர்
10 கல்வியிற் சிறந்தோர் கடுந்திறன் மிகுந்தோர்
கொடையிற் பொலிந்தோர் படையிற் பயின்றோர்
குலத்தின் உயர்ந்தோர் நலத்தினின் வந்தோர்
எனையர் எங்குலத்தினர் இறந்தோர் அனையவர்
பேரு நின்றில போலுந் தேரின்
15 நீயும் அஃதறிதி யன்றே மாயப்
பேய்த்தேர் போன்று நீப்பரும் உறக்கத்துக்
கனவே போன்று நனவு பெயர்பெற்ற
மாய வாழ்க்கையை மதித்துக் காயத்தைக்
கல்லினும் வலிதாக் கருதிப் பொல்லாத்
20 தன்மையர் இழிவு சார்ந்தனை நீயும்

நன்மையில் திரிந்த புன்மையை யாதலின்
அழுக்குடைப் புலன்வழி இழுக்கத்தின் ஒழுகி
வளைவாய்த் தூண்டிலின் உள்ளிரை விழுங்கும்
பன்மீன் போலவும்
25 மின்னுபு விளக்கத்து விட்டில் போலவும்
ஆசையாம் பரிசத்தி யானை போலவும்
ஓசையின் விளிந்த புள்ளுப் போலவும்
வீசிய மணத்தின் வண்டு போலவும்
உறுவ துணராச் செறுவுழிச் சேர்ந்தனை
30 நுண்ணூல் நூற்றுத் தன்னகப் படுக்கும்
அறிவில் கீடத்து நந்துழி போல
ஆசைச் சங்கிலிப் பாசத் தொடர்ப்பட்
டிடர்கெழு மனத்தினோ டியற்றுவ தறியாது
குடர்கெழு சிறையறைக் குறங்குபு கிடத்தி
35 கறவை நினைந்த கன்றெனை இரங்கி
மறவா மனத்து மாசறும் அடியார்க்
கருள்சுரந் தளிக்கும் அற்புதக் கூத்தனை
மறையவர் தில்லை மன்று ளாடும்
இறையவன் என்கிலை என்னினைந் தனையே. உஅ

நினையார் மெலியார் நிறையழியார் வாளாப்
புனைவார்க்குக் கொன்றை பொதுவோ—அனைவீரும்
மெச்சியே காண வியன்தில்லை யானருளென்
பிச்சியே நாளைப் பெறும். உகூ

பெறுகின்ற எண்ணிலி தாயரும் பேறும் யானும்என்னை
உறுகின்ற துன்பங்க ளாயிர கோடியும் ஒய்வொடுஞ்சென்
றிறுகின்ற நாள்களு மாகிக் கிடந்த இடுக்கண்எல்லாம்
அறுகின் றனதில்லை ஆளுடை யான்செம்பொன் அம்பலத்தே.

அம்பலவர் அங்கணர் அடைந்தவர் தமக்கே
அன்புடையர் என்னுமிதென் ஆனையை உரித்துக்
கம்பலம் உவந்தருளு வீர்மதனன் வேவக்
கண்டருளு வீர்பெரிய காதலறி யாதே

வம்பலர் நிரைந்துவசை பேசவொரு மாடே
வாடையுயி ரீரமணி மாமையும் இழந்தென்
கொம்பல மருந்தகைமை கண்டுதக வின்றிக்
கொன்றையரு ளீர்கொடியிர் என்றருளு வீரே. ௩௧

அருளு வாழி அருளு வாழி
புரிசடைக் கடவுள் அருளு வாழி
தோன்றுழித் தோன்றி நிலைதவக் கறங்கும்
புற்புதச் செவ்வியின் மக்கள் யாக்கைக்கு
5 நினைப்பினுங் கடிதே இளமை நீக்கம்
அதனினுங் கடிதே மூப்பின் தொடர்ச்சி
அதனினுங் கடிதே கதுமென மரணம்
வாணாள் பருகி யுடம்பை வறிதாக்கி
நாணாள் பயின்ற நல்காக் கூற்றம்
10 இனைய தன்மைய திதுவே இதனை
எனதெனக் கருதி இதற்கென்று தொடங்கிச்
செய்தன சிலவே செய்வன சிலவே
செய்யா நிற்பன சிலவே யவற்றிடை
நன்றென்ப சிலவே தீதென்ப சிலவே
15 ஒன்றினும் படாதன சிலவே என்றிவை
கணத்திடை நினைந்து களிப்பவுங் கலுழ்பவுங்
கணக்கில் கோடித் தொகுதி யவைதாம்
ஒன்றொன் றுணர்வுழி வருமோ அனைத்தும்
ஒன்று வுணர்வுழி வருமோஎன் றொன்று
20 தெளிவுழித் தேறல் செல்லேம் அளிய
மனத்தின் செய்கை மற்றிதுவே நீயே
அரியை சாலஎம் பெரும தெரிவுறில்
உண்டாய்த் தோன்றுவ யாவையும் நீயே
கண்டனை யவைநினைக் காணா அதுதான்
25 நின்வயின் மறைத்தோ யல்லை யுன்னை
மாயாய் மன்னினை நீயே வாழி
மன்னியுஞ் சிறுமையிற் கரந்தோ யல்லை
பெருமையிற் பெரியோய் பெயர்த்தும் நீயே
பெருகியுஞ் சேணிடை நின்றோ யல்லை

30 தேர்வோர்க்குத் தம்மினும் அணியை நீயே
நண்ணியும் இடையொன்றின் மறைந்தோ யல்லை
இடையிட்டு நின்னை மறைப்பது மில்லை
மறைப்பினும் அதுவும்
நீயே யாகி நின்றதொர் நிலையே, அஃதான்று
35 நினைப்பருங் காட்சி நின்நிலை யிதுவே
நினைப்புறுங் காட்சி என்நிலை யதுவே
இனிநனி யிரப்ப தொன்றுடைய மனம்மருண்டு
புன்மையில் நினைத்துப் புலன்வழி படரினும்
நின்வயின் நினைந்தே னுகுதல் நின்வயின்
40 நினைக்குமா நினைக்கப் பெறுதல் அனைத்தொன்று
நீயே யருளல் வேண்டும் வெய்முதிர்
கயிலை புல்லென எறிவிசும்பு வறிதாக
இம்பர் உய்ய அம்பலம் பொலியத்
திருவளர் தில்லை மூதூர்
45 அருநடங் குயிற்றும் ஆதிவா னவனே. நஉ

வானோர் பணிய மணியா சனத்திருக்கும்
ஆனாத செல்வத் தரசன்றே—மாநகம்
பந்திப்பார் நின்றாடும் பைம்பொன்னின் அம்பலத்தே
வந்திப்பார் வேண்டாத வாழ்வு. நந

வாழ்வாக வுந்தங்கள் வைப்பா கவும்மறை யோர்வணங்க
ஆள்வாய் திருத்தில்லை யம்பலத் தாயுன்னை யன்றியொன்றைத்
தாழ்வார் அறியாச் சடிலநஞ் சுண்டிலை யாகிலன்றே
மாள்வார் சிலரையன் றேதெய்வ மாக வணங்குவதே. நச

வணங்குமிடை யீர்வறிது வல்லியிடை யாள்மேல்
மாரசர மாரிபொழி யப்பெறு மனத்தோ
டிணங்கியிவள் தானுமெலி யப்பெறும் இடர்க்கே
ஊதையெரி தூவியுல வப்பெறு மடுத்தே
பிணங்கியர வோடுசடை யாடநட மாடும்
பித்தரென வும்இதயம் இத்தனையும் ஓரீர்
அணங்குவெறி யாடுமறி யாடுமது வீரு
மையலையும் அல்லலையும் அல்லதறி யீரே. நரு

ஈரவே ரித்தார் வழங்கு சடிலத்துக்
குதிகொள் கங்கை மதியின்மீ தசைய
வண்டியங்கு வரைப்பின் எண்டோள் செல்வ
ஒருபால் தோடும் ஒருபால் குழையும்
5 இருபாற் பட்ட மேனி எந்தை
ஒல்லொலிப் பழனத் தில்லை மூதூர்
ஆடகப் பொதுவில் நாடகம் நவிற்றும்
இமையா நாட்டத் தொருபெருங் கடவுள்
வானவர் வணங்குந் தாதை யானை
10 மதுமழை பொழியும் புதுமந் தாரத்துத்
தேனியங் கொருசிறைக் கானகத் தியற்றிய
தெய்வ மண்டபத் தைவகை யமளிச்
சிங்கஞ் சுமப்ப வேறி மங்கையர்
இமையா நாட்டத் தமையா நோக்கத்
15 தம்மார்பு பருகச் செம்மாந் திருக்கும்
ஆனாச் செல்வத்து வானோர் இன்பம்
அதுவே எய்தினும் எய்துக கதுமெனத்
தெறுசொ லாளர் உறுசினந் திருகி
எற்றியும் ஈர்த்துங் குற்றங் கொளீஇ
20 ஈர்ந்தும் போழ்ந்தும் எற்றுபு குடைந்தும்
வார்ந்துங் குறைத்தும் மதநாய்க் கீந்துஞ்
செக்குரற் பெய்துந் தீநீர் வாக்கியும்
புழுக்குடை யழுவத் தழுக்கியல் சேற்றுப்
பன்னெடுங் காலம் அழுத்தி யின்னா
25 வரையில் தண்டத்து மாறாக் கடுந்துயர்
நிரயஞ் சேரினுஞ் சேர்க வுரையிடை
ஏனோ ரென்னை யானாது விரும்பி
நல்லன் எனினும் என்க அவரே
அல்லன் எனினும் என்க நில்லாத்
30 திருவொடு திளைத்துப் பெருவளஞ் சிதையா
தின்பத் தழுந்தினும் அழுந்துக அல்லாத்
துன்பந் துதையினுந் துதைக முன்பில்
இளமையொடு பழகிக் கழிமூப்புக் குறுகா
தென்றும் இருக்கினும் இருக்க அன்றி

35 இன்றே இறக்கினும் இறக்க ஒன்றினும்
வேண்டலும் இலனே வெறுத்தலும் இலனே
ஆண்டகைக் குரிசில்நின் அடியரொடுங் குழுமித்
தெய்வக் கூத்தநின் செய்ய பாதமும்
அடையவும் அணுகவும் பெற்ற
40 கிடையாச் செல்வங் கிடைத்த லானே. ௩௬

ஆனேறே போந்தால் அழிவுண்டே அன்புடைய
நானேதான் வாழ்ந்திடினும் நன்றன்றே—வானோங்கு
வாமாண் பொழிற்றில்லை மன்றைப் பொலிவித்த
கோமானை இத்தெருவே கொண்டு. ௩௭

கொண்டல்வண் ணத்தவன் நான்முகன் இந்திரன் கோமகுடத்
தண்டர்மிண் டித்தொழும் அம்பலக் கூத்தனுக் கன்புசெய்யா
மிண்டர்மிண் டித்திரி வாரெனக் கென்னினி நானவன்றன்
தொண்டர்தொண் டர்க்குத் தொழும்பாய்த் திரியத் தொடங்கினனே.

தொடர நரைத்தங்க முன்புள வாயின
தொழில்கண் மருத்தொன்று மொன்றி யிடாதொரு
சுளிவு தலைக்கொண்டு புன்புலை வாரிகள்
துளையொழு கக்கண்டு சிந்தனை யோய்வொடு
நடைகெட முற்கொண்ட பெண்டிர் பொருவொரு
நடலை நமக்கென்று வந்தன பேசிட
நலியிரு மற்கஞ்சி யுண்டி வெறுவிழு
நரக வுடற்கன்பு கொண்டலை வேன்இனி
மிடலொடி யப்பண் டிலங்கையர் கோனொரு
விரலின முக்குண்டு பண்பல பாடிய
விரகு செவிக்கொண்டு முன்புள தாகிய
வெகுளி தவிர்த்தன்று பொன்றி யிடாவகை
திடமருள் வைக்குஞ் செழுஞ்சுடர் ஊறிய
தெளியமு தத்தின் கொழுஞ்சுவை நீடிய
தில்லைநக ரிற்செம்பொன் அம்பலம் மேவிய
சிவனை நினைக்குந் தவஞ்சது ராவதே. ௩௯

சதுர்முகன் தந்தைக்குக் கதிர்விடு கடவுள்
ஆழி கொடுத்த பேரருள் போற்றி

முயற்சியொடு பணிந்த இயக்கர் கோனுக்கு
மாநிதி இரண்டும் ஆளுப் பெருவளத்
5 தளகை யொன்றுந் தளர்வின்றி நிறுவிய
செல்வங் கொடுத்த செல்வம் போற்றி
தாள்நிழல் அடைந்த மாணிக் காக
நாண்முறை பிறழாது கோண்முறை வலித்துப்
பதைத்துவருங் கூற்றைப் படிமிசைத் தெறிக்க
10 உதைத்துயிர் அளித்த உதவி போற்றி
குலைகுலை குலைந்த நிலையாத் தேவர்
படுபேர் அவலம் இடையின்றி விலக்கிக்
கடல்விடம் அருந்தின கருணை போற்றி
தவிராச் சீற்றத் தவுணர் மூவெயில்
15 ஒல்லனல் கொளுவி ஒருநொடி பொடிபட
வில்லொன்று வளைத்த வீரம் போற்றி
பூமென் கரும்பொடு பொடிபட நிலத்துக்
காமனைப் பார்த்த கண்ணுதல் போற்றி
தெய்வ யாளி கைமுயன் றுகிழித் தெனக்
20 கரியொன் றுரித்த பெருவிறல் போற்றி
பண்டு பெரும்போர்ப் பார்த்தனுக் காகக்
கொண்டு நடந்த கோலம் போற்றி
விறப்பதம் ஒன்றில் வெள்ளிமலை யெடுத்த
அரக்கனை நெரித்த ஆண்மை போற்றி
25 விலங்கல் விண்டு விழுந்தெ தன முன்னாள்
சலந்தரற் றடிந்த தண்டம் போற்றி
தாதையை எறிந்த வேதியச் சிறுவற்குப்
பரிகலங் கொடுத்த திருவுளம் போற்றி
நின்முதல் வழிபடத் தன்மகற் றடிந்த
30 தொண்டர் மனையில் உண்டல் போற்றி
வெண்ணெ யுண்ண எண்ணுபு வந்து
நந்தா விளக்கை நூந்துபு பெயர்த்த
தாவுபுல் எலிக்கு மூவுல காள
நொய்தினில் அளித்த கைவளம் போற்றி
35 பொங்குளை யழல்வாய்ப் புகைவிழி யொருதனிச்

சிங்கங் கொன்ற சேவகம் போற்றி
வரிமிடற் றெறுழ்வலி மணியுகு பகுவாய்
உரகம் பூண்ட வொப்பனை போற்றி
கங்கையுங் கடுக்கையுங் கலந்துழி ஒருபால்
40 திங்கள் சூடிய செஞ்சடை போற்றி
கடவுள் இருவர் அடியும் முடியுங்
காண்டல் வேண்டக் கனற்பிழம் பாகி
நீண்டு நின்ற நீளம் போற்றி
ஆலம் பில்குநின் சூலம் போற்றி
45 கூறுதற் கரியநின் னேறு போற்றி
ஏக வெற்பன் மகிழு மகட்கிடப்
பாகங் கொடுத்த பண்பு போற்றி
தில்லை மாநகர் போற்றி தில்லையுட்
செம்பொன் அம்பலம் போற்றி அம்பலத்
50 தாடு நாடகம் போற்றி யென்றுங்
கென்றும் போற்றினும் என்றனக் கிறைவ
ஆற்றல் இல்லை யாயினும்
போற்றி போற்றிநின் பொலம்பூ அடிக்கே. ௪0

திருச்சிற்றம்பலம்

பட்டணத்துப் பிள்ளையார் அருளிய

## திருக்கழுமல மும்மணிக்கோவை*

திருச்சிற்றம்பலம்

திருவளர் பவளப் பெருவரை மணந்த
மரகத வல்லி போல வொருகூ
றிமையச் செல்வி பிரியாது விளங்கப்
பாய்திரைப் பரவை மீமிசை முகிழ்த்த

* மும்மணிக்கோவை : ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை முறையே விரவிவரும் கோவை.

5 அலைகதிர்ப் பரிதி ஆயிரந் தொகுத்த
வரன்முறை திரியாது மலர்மிசை யிருந்தெனக்
கதிர்விடு நின்முகங் காண்டொறுங் காண்டொறும்
முதிரா இளமுலை முற்றாக் கொழுந்தின்
திருமுகத் தாமரை செவ்வியின் மலரநின்
10 தையல் வாணுதல் தெய்வச் சிறுபிறை
இளநிலாக் காண்டொறும் ஒளியொடும் புணர்ந்தநின்
செவ்வாய்க் குமுதஞ் செவ்வி செய்யநின்
செங்கைக் கமல மங்கை வனமுலை
அமிர்த கலசம் அமைவின் ஏந்த
15 மலைமகள் தனது நயனக் குவளைநின்
பொலிவினொடு மலர மறையோர்
கழுமல நெறிநின்று பொலிய
நாகர் நாடு மீமிசை மிதந்து
மீமிசை யுலகங் கீழ்முதல் தாழ்ந்திங்
கொன்றா வந்த குன்றா வெள்ளத்
துலகமூன் றுக்குங் கலைக ளாகி
முதலில் காலம் இனிதுவீற் றிருந்துழித்
தாதையொ டுவந்த வேதியச் சிறுவன்
தளர்நடைப் பருவத்து வளர்பசி வருத்த
அன்னா யோவென் றழைப்பமுன் நின்று
ஞான போனகத் தருளட்டிக் குழைத்த
ஆனாத் திரளை யவன்வயின் அருள
அந்தணன் முனிந்து தந்தார் யாரென
அவனைக் காட்டுவன் அப்ப வானார்
தோஒடுடைய செவியன் என்றும்
பீஇடுடைய பெம்மான் என்றுங்
கையிற் சுட்டிக் காட்ட
ஐயநீ வெளிப்பட் டருளினை ஆங்கே. க

அருளின் கடல்அடியேன் அன்பென்னு மாறு
பொருளின் திரள்புகலி நாதன்—இருள்புகுதுங்
கண்டத்தான் என்பாரைக் காதலித்துக் கைதொழுவார்க்
கண்டத்தார் தாமார் அதற்கு. உ

ஆரண நான்கிற்கும் அப்பாலவன் அறியத்துணிந்த
நாரணன் நான்முக னுக்கரி யான்நடு வாய்நிறைந்த
பூரணன் எந்தை புகலிப் பிரான்பொழில் அத்தனைக்குங்
காரணன் அந்தக் கரணங் கடந்த கருப்பொருளே. ௩

கருமுதல் தொடங்கிப் பெருநாள் எல்லாங்
காமம் வெகுளி கழிபெரும் பொய்யெனுந்
தூய்மையில் குப்பை தொலைவின்றிக் கிடந்ததை
அரிதின் இகழ்ந்து போக்கிப் பொருதிறன்
5 மையிருள் நிறத்து மதனுடை யடுசினத்
தைவகைக் கடாவும் யாப்பவிழ்த் தகற்றி
அன்புகொடு மெழுகி யருள்விளக் கேற்றித்
துன்ப இருளைத் துரந்து முன்புற
மெய்யெனும் விதானம் விரித்து நொய்ய
10 கீழ்மையில் தொடர்ந்து கிடந்தஎன் சிந்தைப்
பாழறை உனக்குப் பள்ளியறை யாக்கிச்
சிந்தைத் தாமரைச் செழுமலர்ப் பூந்தவி(சு)
எந்தை நீயிருக்க விட்டனன் இந்த
நெடுநில வளாகமும் அடுகதிர் வானமும்
15 அடையப் பரந்த ஆதிவெள் ளத்து
நுரையெனச் சிதறி இருசுடர் மிதப்ப
வரைபறித் தியங்கும் மாருதங் கடுப்ப
மாலும் பிரமனும் முதலிய வானவர்
காலம் இதுவெனக் கலங்கா நின்றுழி
20 மற்றவர் உய்யப் பற்றிய புணையாய்
அருள்நனி சுரக்கும் பிரளய விடங்கநின்
செல்வச் சிலம்பு மெல்லென மிழற்ற
அமையாக் காட்சி இமையக்
25 கொழுந்தையும் உடனே கொண்டிங்
கெழுந்தரு ளத்தகும் எம்பெரு மானே. ௪

மானும் மழுவுந் திருமிடற்றில் வாழும்இருள்
தானும் பிறையுந் தரித்திருக்கும்—வானவர்க்கு
வெள்ளத்தே தோன்றிக் கழுமலத்தே வீற்றிருந்தென்
உள்ளத்தே நின்ற ஒளி. ௫

ஒளிவந்த வாபோய் மனத்திருள் நீங்கஎன் னுள்ளவெள்ளந்
தெளிவந்த வாவந்து தித்தித்த வாசிந்தி யாதகொரு
களிவந்த வாஅன்பு கைவந்த வாகடை சாரமையத்
தெளிவந்த வாநங் கழுமல வாணர்தம் இன்னருளே.

அருள்பழுத் தளிந்த கருணை வான்கனி
ஆரா இன்பத் தீராக் காதல்
அடியவர்க் கமிர்த வாரி நெடுநிலை
மாடக் கோபுரத் தாடகக் குடுமி
5 மழைவயிறு கிழிக்குங் கழுமல வாணநின்
வழுவாக் காட்சி முதிரா இளமுலைப்
பாவை யுடன்இருந்த பரம யோகி
யாஎன் றுணர்த்துவன் எந்தை மேஎனள்
அகில லோகமும் அனந்த யோனியும்
10 நிகிலமுந் தோன்றநீ நினைந்தநாள் தொடங்கி
எனைப்பல யோனியும் நினைப்பரும் பேதத்(து)
யாரும் யாவையும் எனக்குத் தனித்தனித்
தாய ராகியுந் தந்தைய ராகியும்
வந்தி லாதவர் இல்லை யான்அவர்
15 தந்தைய ராகியுந் தாய ராகியும்
வந்தி ராததும் இல்லை முந்து
பிறவா நிலனும் இல்லை அவ்வயின்
இறவா நிலனும் இல்லை பிறிதில்
என்னைத் தின்னு உயிர்களும் இல்லை யான்அவை
20 தம்மைத் தின்னு தொழிந்ததும் இல்லைஅனைத்தே
காலமுஞ் சென்றது யான்இதன் மேலினி
இளைக்குமா றிலனே நாயேன்
நந்தாச் சோதிநின் அஞ்செழுத்து நவிலுந்
தந்திரம் பயின்றதும் இலனே தந்திரம்
25 பயின்றவர்ப் பயின்றதும் இலனே யாயினும்
இயன்றதோர் பொழுதின் இட்டது மலராச்
சொன்னது மந்திர மாக என்னையும்
இடர்ப்பிறப் பிறப்பெனும் இரண்டின்
கடற்ப டாவகை காத்தல்நின் கடனே. எ

கடலான காமத்தே கால்தாழ்வர் துன்பம்
அடலாம் உபாயம் அறியார்—உடலாம்
முழுமலத்தை ஓர்கிலார் முக்கட் பெருமான்
கழுமலத்தைக் கைதொழா தார். அ

தொழுவாள் இவள்வளை தோற்பாள் இவளிடர்க் கேயலர்கொண்
டெழுவாள் எழுகின்ற தென்செய வோஎன் மனத்திருந்துங்
கழுவா மணியைக் கழுமல வாணனைக் கையிற்கொண்ட
மழுவா ளனைக்கண்டு வந்ததென் றலோர் வசையில்லையே. கூ

வசையில் காட்சி இசைநனி விளங்க
முன்னாள் நிகழ்ந்த பன்னீ ருகத்து
வேறு வேறுபெயரின் ஊறின் றியன்ற
மையறு சிறப்பில் தெய்வத் தன்மைப்
5 புகலி நாயக இகல்விடைப் பாக
அமைநாண் மென்தோள் உமையாள் கொழுந
குன்று குனிவித்து வன்தோள் அவுணர்
மூவெயில் எரித்த சேவகத் தேவ
இளநிலா முகிழ்க்கும் வளர்சடைக் கடவுள்நின்
10 நெற்றியிற் சிறந்த வொற்றை நாட்டத்துக்
காமனை விழித்த மாமுது தலைவ
வானவர் அறியா ஆதி யானே
கல்லா உளத்திற் புல்லறிவு தொடர
மறந்து நோக்கும் வெறுந்தண்நா ட்டத்துக்
15 காண்டொறுங் காண்டொறும் எல்லா மியாண்டை
யாயினும் பிறவும் என்னதும் பிறரதும்
ஆவன பலவும் அழிவன பலவும்
போவதும் வருவதும் நிகழ்வது மாகித்
தெண்ணீர் ஞாலத்துத் திரண்ட மணலினும்
20 எண்ணில் கோடி எனப்பல வாகி
இல்லன வுளவா யுள்ள காணுப்
பன்னாள் இருள்வயிற் பட்டேன் அன்னதும்
அன்ன தாதலின் அடுக்கும தென்னெனிற்
கட்புலன் தெரியாது கொட்புறும் ஒருவற்குக்
25 குழிவழி யாகி வழிகுழி யாகி

ஒழிவின் றொன்றின் ஒன்று தடுமாற
வந்தாற் போல வந்த தெந்தைநின்
திருவருள் நாட்டங் கருணையிற் பெறலும்
யாவையும் எனக்குப் பொய்யெனத் தோன்றி
30 மேவரும் நீயே மெய்யெனத் தோன்றினை
ஓவியப் புலவன் சாயல்பெற எழுதிய
சிற்ப விகற்பம் எல்லாம் ஒன்றித்
தவிராது தடவினர் தமக்குச்
சுவராய்த் தோன்றுந் துணிவுபோன் றனவே. க0

எனவே எழுந்திருந்தாள் என்செய்வாள் இன்னஞ்
சினவேறு காட்டுதிரேல் தீரும்—இனவேகப்
பாம்புகலி யானிமிரும் பன்னுச் சடைமுடிநம்
பூம்புகலி யான்இதழிப் போது. கக

போதும் பெறுவிடிற் பச்சிலை யுண்டு புனலுண்டெங்கும்
ஏதும் பெறுவிடில் நெஞ்சுண்டன் றேயிணை யாகச்செப்புஞ்
சூதும் பெருமுலைப் பங்கர்தென் தோணிபு ரேசர்வண்டின்
தாதும் பெறாத அடித்தா மரைசென்று சார்வதற்கே. கஉ

சார்ந்தவர்ப் புரக்கும் ஈர்ஞ்சடைப் பெரும
கருணைமுது வெள்ளம் பெருகு திருநயன
கைவல நெல்லியங் கனியது போலச்
சைவசித் தாந்தத் தெய்வ ஆகமத்தை
5 வரன்முறை பகர்ந்த திருமலர் வாய
பவளவரை மீதில் தவளமின் என்னச்
செப்பரு மார்பணி முப்புரி நூல
பேரிகல் ஆணவக் காரிரு ளினுக்கும்
மின்தொடர் வல்வினை வன்றொட ரினுக்கும்
10 மாயைமா மாயை ஆயபே யினுக்கும்
அஞ்சலென் றமைத்த கஞ்சமென் கரதல
அருமறைச் சிரத்தும் பெருமை மெய்யன்பர்
துங்க இதயத்துந் தங்குபொற் பாதம்
துன்னிய பயோதர மின்னின மிடைதலின்
15 அளப்பரும் பெருமை வளத்தினை விளைத்தலின்

சந்திர திலகஞ் சிந்துற மருவலின்
உறுகண் தீரவந் துறுமுறை யுறுதலின்
சாதமுறை சுழீஇச் சோதிமீ தமர்தலின்
பணையெழும் அரவம் பிணையொடு மேவலின்
20 காமரஞ் செவ்வழி காமரின் எய்தலின்
அளகையெதி ரென்னும் ஆசையுற் றுறைதலின்
ஆடக மருவி நீடறை பெறுதலின்
நாட்டியத் தோகை ஈட்டமங் கணைதலின்
அகத்தியன் மன்னு மகத்துவஞ் சிவணலின்
25 மலையா சலமென நிலைசேர் மாட
மாளிகை சூழ்ந்த சூளிகைப் புரிசை
நேமிமால் வரையெனப் பூமிமீ திலங்கும்
காழிமா நகரத் தூழிதோ றமர்ந்த
அமையா அன்பின் உமையாள் கொழுந
30 தெரியநான் முகன்பணி பெரிய நாயகநின்
பொன்மலர்ப் பாதஞ் சென்னிவைத் திறைஞ்சுதும்
மேற்படு மிதயப் பாற்கடல் நடுவுள்
பரம்பரை தவறு வரம்பெறு குரவன்
மருளற இரங்கி அருளிய குறியெனும்
35 நிந்தையில் கனக மந்தரம் நிறுவி
மாணறி வென்னுந் தூணிடைப் பிணித்த
நேசம் என்னும் வாசுகி கொளுவி
மதித்தல் என்னும் மதித்தலை யுஞற்றிய
பேரா இன்பச் சீரா னந்தப்
40 பெறலரும் அமுதந் திறனொடும் பெற்று
ஞானவாய் கொண்டு மோனமாய் உண்டு
பிறப்பிறப் பென்னு மறப்பெரும் பயத்தாற்
பன்னாட் பட்ட வின்னுங் ககற்றி
என்னையுந் தன்னையும் மறந்திட்
45 டின்ப மேலீ டெய்துதற் பொருட்டே. ௧௩

பொருளாசை பெண்ணாசை பூவாசை என்னும்
மருளாசை யாமாசை மாற்றித்—தெருள்ஞான

வேந்தராய் வாழலாம் மெய்யன்பால் நன்னெஞ்சே
பூந்தராய் நாதரைநீ போற்று. கச

போற்றும் பழமறை வாசிப் புனிதர் புகலிவெற்பன்
ஆற்றுந் தவத்தினைக் கண்டே நகைத்த தனிக்கொண்முல்லை
தூற்றும் புயல்வட காற்றேறு அடிக்கத் தொடங்குமதிக்
கீற்றிங் கெனது மனங்குழம் பாகக் கிடைத்ததின்றே. கரு

இன்றென உளதென அன்றென ஆமென
உரைதரு நூலையும் பொருளையுந் தனித்தனி
பல்வித மாகச் சொல்வகைச் சமய
மாகிய பயம்பிற் போகுதல் குறித்த
5 நிலையில் துறைபல நிலையுள துறைசில
பொருந்திடும் உலகப் பெருங்கட லிடத்தின்
மயிர்நூல் கிடத்திப் பயில்வுறு தோலெனும்
வன்புறு பலகையின் என்பெனு மாணியின்
நரம்பெனப் பெயரிய உரம்பெறு கயிற்றின்
10 வெரிநுறும் என்பெனும் பரிய கூம்பின்
ஐம்பொறி யாகிய மொய்ம்புறு வாய்தலிற்
காயமென அமைத்த மாய நாவாயில்
இருவினை என்ன வருசரக் கேற்றிக்
காமமு லோப மேமமா மோகம்
15 மிதமறு குரோத மதமாற் சரியமென்
றுரைபெறு பவனர் நிறையுற விருத்தி
நெடுநீ ரென்னப் படுநெடு நாணில்
தங்கிய மடியெனும் நங்குரஞ் சேர்த்தி
அற்றமின் மனமெனப் பெற்றபாய் விரித்துத்
20 தடைபடா ஆசைக் கடுவளி தூரப்பத்
தான மாதி யானதீ வுகளிற்
செல்வழிச் சென்று புல்வழிப் புல்லி
இவ்வா றியங்கு மவ்வா றதனுள்
முன்பார் கால வன்பார் தாக்கத்
25 தொக்குறு மரக்கலம் பக்குவிட் டம்ம

அக்கடல் நீருட் புக்கறி வழியுழி
மறலி என்னுஞ் சுறவுபிடித் தீர்ப்பக்
கடுநர கென்னும் படுகுழி யழுந்தி
உளதுய ரினுக்கோர் அளவிலை யதனால்
30 இம்முறை இயங்குதல் செம்மையன் றென்று
முற்றுணர் பெரியோய் அற்றமில் வலியோய்
ஓதா துணர்ந்த நாதா நீத
அருவுரு வென்னும் பொருள்முழு துடையோய்
யாவரும் நின்வயம் மேவரப் புரிவோய்
35 கரையறும் இன்பப் புரைதவிர் நிமல
சாந்தணி வனமுலை ஏந்திழை பாக
ஞானமாம் மணநிறை மோனமா மலரே
வித்தகம் பழுத்த முத்திவான் கனியே
பரைமுத லெம்பணை நிரைபெறக் கிளைத்த
40 திருத்தகு நீழல் அருட்பெருந் தருவே
பத்திகொள் நித்திலம் ஒத்துற நிரைத்த
பசும்பொனிற் செய்த தசும்புபல தொக்க
தோற்றம் போல வீற்றுவீற் றமைந்த
தீங்கனி பணைதொறுந் தாங்குமா தளையும்
45 வித்துரு மத்தினை யொத்தசெந் தளிரும்
ஒளிர்வயி டூரியக் குளிர்மது மலரும்
மேவிடு வண்டெனும் நீலமா மணியும்
மரகத மென்ன விரவுகாய்த் திரளும்
மறுவின்மா மணியெனும் நறியசெங் கனியுங்
50 கிடைத்தசீர் வணிகரிற் படைத்தமாந் தருவும்
எண்டிசை சூழ்ந்து விண்டொடும் புகலி
மேவிய பெரும வாலிநா யகனே
கணபணக் கச்சைப் பணஅர வசைத்த
மட்டலர் புழுகணி சட்டை நாயக
55 என்னுமீ காமன் மன்னினன் புரப்பஃ
வீற்றினி திருக்க ஏற்றமெய்ப் பிரணவத்
தோணியே பற்றெனத் துணிந்து
காணுறும் அறிவொடு கண்டுகொண் டேனே. ௧௬

கண்டேன் புகலிக் கருத்தனைத்தன் மெய்ஞ்ஞான
வண்டேனுண் டேமகிழும் வண்டானேன்—பண்டே
அளியனுமா னேன்மனமெய் யார்பதம்வே றின்றிக்
குளிர்சிவா னந்தபிலங் கும். கஎ

கும்பிட்ட பத்தர்க் கழியாத இன்பங் கொடுக்குமுத்தர்
வம்பிட்ட கொங்கை யுமைபாகர் சண்பையர் வந்திலரேல்
கொம்பிட்ட கோழிக் கொடிவேந்தன் கொச்சையைக் கொல்வதனால்
அம்பிட்ட கட்சிற் றிடைச்சிக்கென் னேபய னுருவதே. கஅ

ஆருவா கனனைத் தோகைவா கனனை
உற்றசீர் மகாரெனப் பெற்றசுந் தரனே
ஞானவா ரிதியில் ஆனஆ ரமுதே
கற்றவர் கருதும் நற்றவக் கரும்பே
5 இருட்குறும் பெறிந்த அருட்கலா மதியே
கதிர்த்தொகை குன்று துதித்தசெங் கதிரே
நிறைந்தஅன் பவரின் உறைந்தசெந் தேனே
துன்பமொன் றறியா இன்ப வாரிதியே
மறைமுடி விளக்குஞ் சுடர்விடு மணியே
10 விறலரி பிரமன் பெறலரும் பொருளே
சிற்பநூல் முழுதும் அற்பமின் றுணர்ந்த
ஓவியர் அற்புத மேவுகைத் தொழிலர்
சுத்தவெண் படிகப் பித்திகைத் தலத்தின்
நவமணி தெளித்துக் குவவின கூர்நுதித்
15 தூரியங் கொண்டு சீரிதிற் குயிற்றும்
இமைப்பிலா நாட்டத் தமைப்பருங் கலாப
நீலமே காரமுங் கோலமார் குயிலுந்
துப்பமர் வளைவாய் ஒப்பறு பச்சைத்
தகைசிறைக் கிளியும் புகைநிறப் புறவும்
20 மேல்நிமிர் தூவிப் பால்நில வனமும்
நன்மது நிகர்த்த இன்மொழிப் பூவையும்
இனமெனக் கருதி மனமுவந் தணைத்த
உயிர்நிலை பெற்ற மயில்முதற் பறவையுங்
கூறுபட நோக்கினர் வேறுபா டறியா
25 வளநெடு செறிந்த அளவிலா மாடத்

துறைதரு கற்பு நிறைகுல மடவார்
அளிமுரல் குழலும் களிகிளர் முகமுங்
குலாவிய புருவமும் நிலாவிரி குழையும்
நறியமென் சொல்லுஞ் சிறியநுண் ணிடையுந்
30 தத்துநீர் உவரி முத்தமா லிகையும்
பிரளய வெள்ளத் திரளினும் அழியாத்
திருநகர் இதுவெனக் கருதிவான் முகிலுஞ்
சந்திர விம்பமும் இந்திர தனுவும்
இலங்குசெங் கதிருந் துலங்குவான் அமுதும்
35 வாரா மின்னுந் தாரா கணமும்
ஒருங்குவந் திருந்த பெருந்திறன் ஏய்ப்பக்
காட்சியிற் பொலிந்த மாட்சிமை சிறந்த
காழி நாயகனே வாழி பூரணனே
ஏர்தரும் பொற்கிரி சேர்தருங் கொடியும்
40 பொன்னிற மாமெனச் சொன்னதொன் மொழியும்
ஏதமில் நிறைமதிச் சீதள நிலவால்
ஆருமெய் யுருப்பந் தீருமென் பது
மொழிதரு மிரத குளிகைதற் சேர்ந்த
காளிமச் சீருண நீளியற் கனக
45 மாமெனக் கூறுந் தோமறு மொழியுங்
கருட தியான மருட பவந்தோர்
நோக்கினில் தவிருந் தீக்கடு வென்றலும்
ஆயிரங் கிரணத் தலர்கதிர் முன்னம்
பாயிருள் கெடுமெனப் பகர்பழ மொழியும்
50 அங்கண்மா ஞாலத் தெங்கணும் ஒப்ப
இயலும் பட்டாங் கயலல என்னல்
சரதமெய்ஞ் ஞான வரதநிற் சேர்ந்த
பேதையேன் பாசத் தீவினை யகற்றித்
திருவருட் செல்வம் பெருகுமா றுதவி
55 அளித்தருள் பேரின் பாகும்
களித்திடு முத்திக் காழிவான் கனியே. கக.

காழிக்கு வேந்தர் கருணை லயர்முனம்நீ
காழிக் குமாரன் கவிகையினை—ஆழிக்கட்

கண்டமட்டிற் சூடகமுங் கார்விழியிற் கங்கணமுங்
கொண்டனளென் றன்னமே கூறு. உ0

கூறுஞ் செனனக் குடினெடு நாணுமைழ கூன்முழுதும்
மாறும் படிக்கு மருந்துளதோ சண்மை வாணர்கொண்ட
நீறுந் திருவெழுத் தோரைந்துங் கண்டியும் நித்தநித்தந்
தேறும் பொருளென் றுணராத மாயச் செருக்கினர்க்கே.

செருக்குடன் இகலித் தருக்கமே தேற்றி
எம்ம ளோரின் இறந்துபிறந் துழலும்
மம்மரிற் பெரிய வானவர் குழுவை
மெய்ப்பொருள் என்று கைப்பொருள் உதவியும்
5 வழுத்தியும் நெஞ்சத் தழுத்தியும் வறிதே
புறவார் பசும்புற் கறவாக் கற்பசு
வாயிடைச் செருகித் தூயநீர் உதவி
அருஞ்சுவைப் பால்கொளப் பெருஞ்சுவை வருடும்
பேதையர் போலவும் ஓதுநஞ் சமரும்
10 எட்டியை விரும்பி மட்டுநீர்த் தேக்கி
ஈறுமை கல்லா மேல்நிமிர் வேலி
உறும்படி யமைத்து நறுங்கனி கொள்ளக்
கருதி முயலுந் திருவிலி போலவும்
இலகு வாலரிசி உலைபெய எண்ணி
15 வெற்றுமி குற்றும் பற்றிலர் போலவும்
அருநிலம் உழுதநில் எருமிகப் பெய்து
வித்திட் டாங்கே விளைபயன் கொள்ளச்
சித்தத் துன்னும் மத்தர் போலவும்
வாழ்நாள் அனைத்தும் வீண்நாள் ஆக்கி
20 இம்மையும் மறுமையுஞ் செம்மையிற் பொருந்தா
திடருறு மாந்தர் புடவியிற் பலரால்
அன்னவா றௌியனும் உன்னிமதி மயங்கா
தெய்ப்பினில் உதவும் மெய்ப்பொரு ளாகி
என்றுமோ ரியல்பொடு நின்ற காரணநின்
25 சேவடித் தாமரைப் பூவிணைப் புனைந்து
நாத்தழும் பேற ஏத்தியுள் ளுருகிப்
பெருகிய அன்பென வருநீர் நிறைந்த

இதய வாவிப் பதுமமா மலரின்
குணனெனப் பொருந்து மணமாம் நின்னைக்
30 கண்டிறு மாந்து பண்டைவா தனைதீர்ந்
தறைகடல் அழுந்தும் நிறைகுட மதுபோன்
றசைவற் றிருக்க இசையத் தருதி
நிலைமிகப் பொருந்திப் பலமுறை சாரலால்
உந்திய வன்ன வுருமரு வுதலான்
35 மந்திரத் துறுசுடர் மகத்துயர் தலினால்
இதம்பயில் இசைகொள் பதங்கலந் துறுதலால்
வேதமே ஒப்பென வோதுகோ புரமும்
ஒழுங்குநெறி சிறிதும் வழுக்கில அதனால்
நாற்பதப் பிரிவில்நின் மேற்பதம் அதனால்
40 பலகலை ஒளிர்மதி நிலவிய அதனால்
முத்தரை வியக்கும் பத்திமை அதனால்
சிவாகம மெனவொளிர் தவாமணி மேடையும்
வெள்ளைவா ரணமேற் கொள்ளுமாங் கதனால்
கட்டா மறைபல மட்டார் தலினால்
45 அஞ்சு மந்தாரம் விஞ்சியோங் குதலால்
இந்திர னெனப்பொலி யந்திர வாவியும்
எங்கணும் நிறைந்த வெங்குரு நாதா
கருவலி தொலைக்கும் பெருமலை மருந்தே
கருணைகூற் கொண்ட பெரியவான் முகிலே
50 சிற்றிடைக் கருங்கட் பொற்றொடிக் கரத்தாள்
ஆகமார் வனமுலை யணையும்
போகமார் இதழிப் பூங்கண் ணியனே. உஉ

கண்ணின் றொளிருங் கருமணியின் உள்ளொளிபோல்
உண்ணின் றொளிரும் ஒளிவிளக்கென் — றெண்ணிப்
புகலிப் பெருமானைப் புண்ணியனைப் போற்றில்
அகலுமே பாசஇருள் அன்று. உ௩

இருளார் தகன்வரின் ஈரெயி றேபிறை யேய்ந்தசெவ்வான்
சுருள்குஞ்சி பாச மெனஅந்தி வந்தது தோகைசொற்றேன்
பருகும் புகலிப் பிரானெனும் பாநுப் பலகிரணம்
பெருகும் படிவந் துதித்தான் மின்னுவி பெறுகுவளே. உ௪

பெறுவது பெற்ற உறுதி உத்தமர்கட்
காயினுஞ் சிறந்த நேயநெஞ் சினனே
யாகக் கழனியின் யோகத் தபோதனர்
ஆன பேருழவர் மானமோ டாக்கிய
5 முயலகன் என்னும் இயல்பெருங் கரும்பை
உதிர மென்னும் முதிர்சா றொழுக
நகையெனும் முத்தந் தொகையுறத் தோன்றச்
சுந்தரப் பதமெனும் எந்திர ஆலையிட்
டரைத்தக வைரங் கரைத்தவித் தகனே
10 குங்குமக் கொங்கை அங்கயற் செங்கட்
பெண்ணரசி பிரியா வண்ணமெய்ப் பாக
பாடலம் புன்னை ஏடவிழ் இலஞ்சி
வெளிய கற்பூரங் களிகொள் கத்தூரி
நறுமணம் எவையும் உறுமுறை பொருந்தி
15 உண்ணீர் பெற்ற தண்ணீர்ப் பந்தரும்
நெய்கமழ் கருணையுங் குய்கமழ் கறியும்
மதிதரு நிலவெனப் புதியவெண் டயிரும்
வருக்கையின் கனியுஞ் சருக்கரைக் கட்டியும்
முதலுப கரணம் பதனொடு மரீஇத்
20 தளவரும் பென்ன வளமலி போனக
மாதவர் எவர்க்கும் ஆதுலர் எவர்க்கும்
நன்னயத் துடன்அருள் அன்னசத் திரமும்
பாடகச் சீறடிப் பால்மொழி மடவார்
நாடகத் தொழில்பயில் நீடரங் கவையுங்
25 கலைபயில் கழகமும் பலர்பயில் மன்றமும்
உள்ளன கரவா துவந்தெதிர்ந் தளிக்கும்
வள்ளியோர் வாழும் மணிநெடு வீதியும்
பூமகள் உறையு ளாமென விளங்கும்
பெரும்புகழ்க் காழி விரும்புசங் கரனே
30 ஏந்தெழிற் புவன வேந்தநீ யாதலின்
வளமலி நான்முகக் களமரு னேவலின்
உரம்பெறு குலவரைக் குறும்பகப் பட்ட
மண்டலம் என்னுங் கண்டநீள் வயலுட்

சராசரத் தொகுதி விராயவித் திட்டுப்
35 பாதவ மிருகம் பறவை மானிடர்
ஆதிப் பைங்கூழ் அமைத்தனர் நிற்ப
மாவுறை மருமக் காவ லாளர்
வளமையின் ஓம்ப விளைவு முற்றியபின்
புரிபயன் பெறுவா னரிதர வியற்றி
40 மெய்வலிக் கூற்றுவக் கைவினை மாக்களிற்
புலாலுடை யாக்கைப் பலாலம தகற்றி
அற்றமில் உயிரெனப் பெற்றநெல் திரளைப்
பூதசா ரத்தநுப் பூதமா காதநு
பூதபரி ணமம் புகலுறு யாக்கை
45 மூவகைப் பண்டியின் மேவர ஏற்றிப்
பொன்னிலம் நிரயம் இந்நிலம் என்னும்
இடந்தொறும் ஆங்கவை அடங்கவைத் தவற்றுள்
ஒருசில வற்றைநின் திருவடி வீட்டிற்
சேர்த்தனை யன்னது கூர்த்து நோக்கில்
50 அரசுகொள் கடமை ஆறிலொன் றென்னும்
புரைதீர் முறைமை புதுக்கினை போலும் அதனால்
மாசுக நீயுறும் வண்மை
பேசுக கருணைப் பெரிய நாயகனே. உரு

பெருமானே கூடிப் பிரிந்தாலும் அங்கைக்
கொருவா தருள்வரமென் றுண்டே—திருமால்
விடையாய் புகலி விமலா மவுன
விடையாய் பிரியா விடை. உசு

விடையம் பொருளென் றுணராத மார்க்கம் விரும்புமழுப்
படையம் புயக்கரத் தெந்தாதை ஞான பரமனென்றெண்
சடையம் புனலணி வேணுபு ரேசனந் தாள்மலர்தூ
விடையம் பொருளென் றிருநீயென் றுண்மை விளம்பினனே.

விளம்புவன் யாமென் றுளம்புகு நெறியால்
எழுத்தின் உறழாது வழுத்துபொருள் இன்றிக்
குறிப்பொடு படாது வெறித்தபுன் சொல்லே
யாயினும் பயந்தம் சேயவர் சொலுமொழி

5 குழலினும் யாழினும் அழகிதாம் அதுபோல்
நற்றா யாகியெற் பெற்றாய் என்சொல்
திருச்செவிக் கேறும் பொருத்தமுண் டதனாற்
கேட்டி கேட்டி வாட்டமில் பெரியோய்
மதுமழை பிலிற்றிப் புதுமணம் விரித்துப்
10 பற்பல வுதவுங் கற்பகத் தருவும்
நந்தா வளனருட் சிந்தா மணியும்
வாமமா மேனிய காம தேனுவும்
அருளிய ஏவல் வரன்முறை கேட்பக்
கடவுளர் அணிமணித் தடமகு டங்கள்
15 காற்றுணை வருடப் போற்றினர் இறைஞ்சி
முனிவ ராசி நனிபல மொழியக்
கரம்பயில் கவரி அரம்பையர் இரட்டக்
கின்னரர் விபஞ்சி நன்னரம் புளரா
விசைய முதிருஞ் செவிமிசை யெடுத்தூற்ற
20 முடங்குளைச் செங்கண் மடங்கலணை நாப்பண்
அமுதுகு மென்சொற் குமுதமென் செவ்வாய்
இந்தி ராணிவந் தருகி ருப்பக்
கருமுகி லாயிரந் திருமலர் பூத்துச்
செங்கதிர்ச் சேகரந் தங்கவீற் றிருந்த
25 பெருந்திறன் கடுப்ப இருந்து விண்புரக்கும்
அண்ணல் புரந்தரப் பண்ணவன் அரசும்
பழமறை கனிந்து மழலைபெற் றிருந்த
செந்நாத் தவிசின் முன்னாள் தங்கிப்
பனுவ லாட்டி இனிதுவந் திருப்ப
30 வண்டுபாண் முரன்று கிண்டுபு ததைந்து
பொற்றா துண்ணு முற்றா இன்பப்
பிரசமுற் றிருந்த வரசரோ ருகத்தன்
நெருக்கியப் புவனப் பெருக்கினைத் தனது
திண்ணிய மனத்திடை எண்ணியாங் கியற்றி
35 எம்மால் எவையும் இயன்றன என்னச்
செம்மாந் திருக்குஞ் சிறிய வாழ்க்கையும்
திதலைபூத் தலர்ந்து மதகளி றிகலி

வருமுலை சுமந்த திருமகள் பச்சைப்
பசுந்துழாய் அலங்கல் அசும்புதேன் துளித்துக்
40 கடிகமழ் மார்பிற் குடிபுகுந் திருப்பத்
தண்ணில வெனவிரி வெண்ணிறப் பாற்கடல்
ஒல்லொலித் தரங்கம் மெல்லடி வருடக்
காமர்தென் கால்எனுஞ் சாமரை அசையத்
துத்திநெய்ப் பரந்து பைத்தலை அகலில்
45 அணிகிளர் பலகதிர் மணிவிளக் கொளிரச்
சுடிகைவா ளரவம் நெடியபூ வணைமேல்
மறுஇலா நீல வரைகிடந் தென்ன
அறிதுயில் அமர்ந்த அச்சுதன் வாழ்க்கையும்
அழியா இன்பமென் றொழியா துரைப்பினுங்
50 கற்றவர் கருத்தின் உற்று நோக்குழி
இந்திர சாலம் முந்துநீள் கனவு
வெண்தேர் போல உண்டெனத் தோன்றி
இலவாம் ஆதலின் நலமல ஆங்கவை
நிலைபே றுடையது நின்னருட் செல்வம்
55 அன்னதே பெறுதற்(கு) உன்னினன் தமியேன்
அதனால்
எளிதினில் இரங்கி அளிசுரந் தருளுதி
மரகதத் திடையிடை தரளமிட் டிழைத்த
அரமியம் அதனை விரிகுழை பொதுளி
60 அரும்பிய புன்னைப் பொரும்பொழில் எனவும்
ஆடக அலங்கல் அணியணி நிரைத்த
சேடியர் நீல்நிறச் செய்குன் றதனைத்
துணர்த்தபூங் கொன்றை மணத்த காஎனவும்
மொய்க்கும் வண்சிறை அளிமைக்கரு நிறங்கள்
65 பளிங்கரிந் தியற்றிய துளங்கொளி மாடப்
பித்திகைத் தலத்திடைப் பத்திபாய் தலின்ால்
வந்ததிங் கிரவெனச் சந்தகம் மடவார்
வார்முலை ஆடவர் மார்பிடைக் குளிப்பப்
புல்லிய கலவிப் புதிய தேன்நுகரும்
70 மல்லலங் காழி வளநகர் வாண
குறிகுணங் கடந்த மறுவில்மா மணியே

பதி. கஎ

உறைபொருள் எங்கணும் நிறைபரி பூரண
அந்தம் ஆதி முந்தையே தவிர்த்த
அறுதி முத்த என்ஆதி நித்த
75 அருவுரு இல்லா ஒருபெரும் பொருளே
அளவையின் அடங்கா தொளிர்சுக நேய
உருகுமெய் யன்பர் பருகுமா ரமுதே
நலங்கனி பெரிய நாயகி
கலந்தபே ரின்பிற் களித்தபண் ணவனே. உஅ

பணம்அஞ் சரையிருக்கப் பாவையரைச் சும்மா
புணர்கின் றீர் என்று புகலப்—புணர்வார்க்
கரைக்காசு தந்தனமென் றூர்புகலி யார்மா
அரைக்காசென் றுளதற்கு மான். உகூ

மானைக் கலந்த மணவாளன் காழி வரதன்செங்க
ணானைப் புரந்தவன் பத்தர்க்கு முத்தி யளித்தருளும்
வனைப் பெரும்பொருள் கல்விமெய்ச் செல்வம் இருந்தளிப்பார்
தேனைத் தருஞ்செழுந் தாமரை நாமகள் செந்திருவே. ௩௦

திருச்சிற்றம்பலம்

குறிப்பு:—இம் மும்மணிக்கோவையின் ஆறுமுக நாவலர் பதிப்பிலும் சோடசாவதானம் சுப்பராய செட்டியார் பதிப்பிலும் பன்னிரண்டு பாக்கள் காணப்படுகின்றன. ஆனூர் - சிங்காரவேல் முதலியார் வெளியிட்ட உரைப் பதிப்பிலும், கா. சுப்பிரமணியம் பிள்ளை, எம். ஏ., எம். எல். இயற்றிய "பட்டினத்தடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும்" என்னும் நூலிலும் முப்பது பாக்கள் பதிக்கப்பட்டுள்ளன. எனவே, இந்நூலிலும் பின்னிருவர் வெளியிட்ட நூல்களில் உள்ளபடியே முப்பது பாக்களும் பதிக்கப்பட்டன.

பட்டணத்துப்பிள்ளையார் அருளிய

# திருவிடைமருதூர் மும்மணிக்கோவை*

திருச்சிற்றம்பலம்

தெய்வத் தாமரைச் செவ்வியின் மலர்ந்து
வாடாப் புதுமலர்த் தோடெனச் சிவந்து
சிலம்புங் கழலும் அலம்பப் புனைந்து
கூற்றின் ஆற்றல் மாற்றிப் போற்றுது
5 வலம்புரி நெடுமால் ஏனமாகி நிலம்புக்
காற்றலின் அகழ்த் தோற்றுது நிமிர்ந்து
பத்தி அடியவர் பச்சிலை இடினும்
முத்தி கொடுத்து முன்னின் றருளித்
திகழ்ந்துள தொருபால் திருவடி யகஞ்சேர்ந்து
10 மழுவில் கற்பகத் துறுதளிர் வாங்கி
நெய்யில் தோய்த்த செவ்வித் தாகி
நூபுரங் கிடப்பினும் நொந்து தேவர்
மடவரல் மகளிர் வணங்குபு வீழ்த்த
சின்னப் பன்மலர் தீண்டிடச் சிவந்து
15 பஞ்சியும் அனிச்சமும் எஞ்ச எஞ்சாத்
திருவொடும் பொலியும் ஒருபால் திருவடி
நீலப் புள்ளி வாள்உகிர் வேங்கைத்
தோலின் கலிங்கம் மேல்விரித் தசைத்து
நச்செயிற் றரவக் கச்சையாப் புறுத்துப்
20 பொலிந்துள தொருபால் திருவிடை இலங்கொளி
அரத்த ஆடை விரித்துமீ தூஇ
இரங்குமணி மேகலை ஒருங்குடன் சாத்திய
மருங்கிற் றாகும் ஒருபால் திருஇடை
செங்கண் அரவும் பைங்கண் ஆமையுங்
25 கேழற் கோடும் வீழ்திரள் அக்கும்

*இதற்கு மேலுள்ள கோவையைப் போலவே மூன்று வகைப் பாக்களையுடையது.

நுடங்கு நூலும் இடங்கொண்டு புனைந்து
தவளநீ றணிந்ததோர் பவளவெற் பென்ன
ஒளியுடன் திகழும் ஒருபால் ஆகம்
30 செஞ்சாந் தணிந்து குங்குமம் எழுதிப்
பொற்றா மரையின் முற்றா முகிழென
உலகே ழீன்றும் நிலையில் தளரா
முலையுடன் பொலியும் ஒருபால் ஆகம்
அயில்வாய் அரவம் வயின்வயின் அணிந்து
35 மூவிலை வேலும் பூவாய் மழுவுந்
தமருகப் பறையும் அமர்தரத் தாங்கிச்
சிறந்துள தொருபால் திருக்கரஞ் செறிந்த
சூடகம் விளங்கிய ஆடகக் கழங்குடன்
ஒம்மென் பந்தும் அம்மென் கிள்ளையுந்
40 தரித்தே திகழும் ஒருபால் திருக்கரம்
இரவியும் எரியும் விரவிய வெம்மையின்
ஒருபால் விளங்குந் திருநெடு நாட்டம்
நவ்வி மானின் செவ்வித் தாகிப்
பாலிற் கிடந்த நீலம் போன்று
45 குண்டுநீர்க் குவளையிற் குளிர்ந்து நிறம்பயின்(று)
எம்மனோர்க் கடுத்த வெம்மைநோய்க் கிரங்கி
உலகேழ் புரக்கும் ஒருபால் நாட்டம்
நொச்சிப் பூவும் பச்சை மத்தமுங்
கொன்றைப் போதும் மென்றுணர்த் தும்பையுங்
50 கங்கை யாறும் பைங்கண் தலையும்
அரவும் மதியமும் விரவித் தொடுத்த
சூடா மாலை சூடிப் பீடுகெழு
நெருப்பில் திரித்தனைய உருக்கிளர் சடிலமொடு
நான்முகங் கரந்த பால்நிற அன்னங்
55 காணா வண்ணங் கருத்தையுங் கடந்து
சேணிகந் துளதே ஒருபால் திருமுடி பேணிய
கடவுள் கற்பின் மடவரல் மகளிர்
கற்பக வனத்துப் பொற்பூ வாங்கிக்
கைவைத்துப் புனைந்த தெய்வ மாலை
60 நீலக் குழல்மிசை வளைஇமேல் நிவந்து

வண்டுந் தேனுங் கிண்டுபு திளைப்பத்
திருவொடு பொலியும் ஒருபால் திருமுடி
இனைய வண்ணத்து நினைவருங் காட்சி
இருவயின் உருவும் ஒருவயிற் றாகி
65 வலப்பால் நாட்டம் இடப்பால் நோக்க
வாணுதல் பாகம் நாணுதல் செய்ய
வலப்பால் திருக்கரம் இடப்பால் வனமுலை
தைவந்து வருட மெய்ம்மயிர் பொடித்தாங்
குலகம் ஏழும் பன்முறை யீன்று
70 மருதிடங் கொண்ட ஒருதனிக் கடவுள்நின்
திருவடி பரவுதும் யாமே நெடுநாள்
இறந்தும் பிறந்தும் இளைத்தனம் மறந்துஞ்
சிறைக்கருப் பாசயஞ் சேரா
மறித்தும் புகாஅ வாழ்வுபெறற் பொருட்டே. க

பொருளுங் குலனும் புகழுந் திறனும்
அருளும் அறிவும் அனைத்தும்—ஒருவர்
கருதா என்பார்க்குங் கறைமிடற்றாய் தொல்லை
மருதாஎன் பார்க்கு வரும். உ

வருந்தேன் இறந்தும் பிறந்தும் மயக்கும் புலன்வழிபோய்ப்
பொருந்தேன் நரகிற் புகுகின்றி லேன்புகழ் மாமருதிற்
பெருந்தேன் முகந்துகொண் டுண்டு பிறிதொன்றில் ஆசையின்றி
இருந்தேன் இனிச்சென் றிரவேன் ஒருவரை யாதொன்றுமே.

ஒன்றினொ டொன்று சென்றுமுகில் தடவி
ஆடுகொடி நுடங்கும் பீடுகெழு மாளிகை
தெய்வக் கம்மியர் கைம்முயன் று வகுத்த
ஓவநூல் செம்மைப் பூவியல் வீதி
5 குயிலென மொழியும் மயிலியல் சாயல்
மான்மாற விழிக்கும் மானூர் செல்வத்(து)
இடைமரு திடங்கொண் டிருந்த எந்தை
சுடர்மழு வலங்கொண் டிருந்த தோன்றல்
ஆரணந் தொடராப் பூரண புராண
10 நாரணன் அறியாக் காரணக் கடவுள்

சோதிச் சுடரொளி ஆகித் தனிப்பொருள்
ஏக நாயக யோக நாயக
யானொன் றுணர்த்துவ துளதே யான்முன்
னனந்தலை யுலகத்(து) அனந்த யோனியிற்
15 பிறந்துழிப் பிறவாது கறங்கெனச் சுழன் றுழிஇத்
தோற்றும் பொழுதின் ஈற்றுத் துன்பத்
தியாயுறு துயரமும் யானுறு துயரமும்
இறக்கும் பொழுதின் அறப்பெருந் துன்பமும்
நீயல தறிகுநர் யாரே அதனால்
20 யான்இனிப் பிறத்தல் ஆற்றேன் அஃதான்(று)
உற்பவம் துடைத்தல் நிற்பிடித் தல்லது
பிறிதொரு நெறியின் இல்லைஅந் நெறிக்கு
வேண்டலும் வெறுத்தலும் ஆண்டொன் றிற் படரா
உள்ளமொன் றுடைமை வேண்டும் அஃதன்றி
25 ஐம்புலன் ஏவல் ஆணைவழி நின்று
தானல தொன்றைத் தானென நினையும்
இதுவென துள்ளம் ஆதலின் இதுகொடு
நின்னை நினைப்ப தெங்ஙனம் முன்னங்
கற்புணை யாகக் கடல்நீர் நீந்தினர்
30 எற்பிற ருளரோ இறைவ கற்பங்
கடத்தல்யான் பெறவும் வேண்டுங் கடத்தற்கு
நினைத்தல்யான் பெறவும் வேண்டும் நினைத்தற்கு
நெஞ்சுநெறி நிற்கவும் வேண்டும் நஞ்சுபொதி
உறையெயிற் றுரகம் பூண்ட
35 கறைகெழு மிடற்றெங் கண்ணுத லோயே. ச

கண்ணொன் றும் நந்தமக்கோர் காப்பென்றுங் கற்றிருக்கும்
எண்ணொன் றும் மூல எழுத்தென் றும்—ஒண்ணை
மருதஅப்பா என் றும்உனை வாழ்த்தாரேல் மற்றுங்
கருதஅப்பால் உண்டோ கதி. ரு

கதியா வதுபிறி தியாதொன்றும் இல்லை களேபரத்தின்
பொதியா வதுசுமந் தால்விழப் போம்இது போனபின்னர்
விதியா மெனச்சிலர் நோவதல் லால்இதை வேண்டுநர்யார்
மதியா வதுமரு தன்கழ லேசென் று வாழ்த்துவதே. சு

வாழ்ந்தனம் என்று தாழ்ந்தவர்க் குதவாது
தன்னுயிர்க் கிரங்கி மன்னுயிர்க் கிரங்கா
துண்டிப் பொருட்டாற் கண்டன வெஃகி
அவியடு நர்க்குச் சுவைபல பகர்ந்தே
5 ஆரா உண்டி அயின்றன ராகித்
தூராக் குழியைத் தூர்த்துப் பாரா
விழுப்பமுங் குலனும் ஒழுக்கமுங் கல்வியுந்
தன்னிற் சிறந்த நன்மூ தாளரைக்
கூஉய்முன் நின்றுதன் ஏவல் கேட்குஞ்
10 சிறுஅர்த் தொகுதியின் உறுஅப் பேசியும்
பொய்யொடு புன்மைதன் புல்லர்க்குப் புகன்றும்
மெய்யும் மானமும் மேன்மையும் ஒரீஇத்
தன்னைத் தேறி முன்னையோர் கொடுத்த
நன்மனைக் கிழத்தி யாகிய அந்நிலைச்
15 சாவுழிச் சாஅந் தகைமையள் ஆயினும்
மேவுழி மேவல் செல்லாது காவலொடு
கொண்டோள் ஒருத்தி யுண்டிவேட் டிருப்ப
எள்ளுக் கெண்ணெய் போலத் தள்ளாது
பொருளின் அளவைக்குப் போகம்விற் றுண்ணும்
20 அருளில் மடந்தையர் ஆகம் தோய்ந்தும்
ஆற்றல்செல் லாது வேற்றோர் மனைவயிற்
கற்புடை மடந்தையர் பொற்பு நனிகேட்டுப்
பிழைவழி பாராது நுழைவழி நோக்கியும்
நச்சி வந்த நல்கூர் மாந்தர்தம்
25 விச்சையிற் படைத்த வெவ்வேறு காட்சியின்
அகமலர்ந் திவார் போல முகமலர்ந்
தினிது மொழிந்தாங் குதவுதல் இன்றி
நாளும் நாளும் நாள்பல குறித்தவர்
தாளின் ஆற்றலுந் தவிர்த்துக் கேளிகழ்ந்(து)
30 இகமும் பரமும் இல்லை என்று
பயமின் றொழுகிப் பட்டிமை பயிற்றி
மின்னின் அனையதன் செல்வத்தை விரும்பித்
தன்னையும் ஒருவ ராக உன்னும்
ஏனையோர் வாழும் வாழ்க்கையும் நனைமலர்ந்(து)

35 யோசனை கமழும் உற்பல வாவியில்
பாசடைப் பரப்பிற் பால்நிற அன்னம்
பார்ப்புடன் வெருவப் பகுவாய் வாளைகள்
போர்த்தொழில் புரியும் பொருகா விரியும்
மருதமுஞ் சூழ்ந்த மருத வாண
40 சுருதியுந் தொடராச் சுருதி நாயக
பத்தருக் கெய்ப்பினில் வைப்பென உதவும்
முத்தித் தாள மூவா முதல்வநின்
திருவடி பிடித்து வெருவரல் விட்டு
மக்களும் மனைவியும் ஒக்கலுந் திருவும்
45 பொருளென நினையாதுன் அருளினை நினைந்(து)
இந்திரச் செல்வமும் எட்டுச் சித்தியும்
வந்துழி வந்துழி மறுத்தனர் ஒதுங்கிச்
சின்னச் சீரை துன்னற் கோவணம்
அறுதற் கீளொடு பெறுவது புனைந்து
50 சிதவலோ டொன்(று) உதவுழி எடுத்தாங்
கிடுவோர் உளரெனில் நிலையில்நின் றயின்று
படுதரைப் பாயலிற் பள்ளிமேவி யோவாத்
தகவெனும் அரிவையைத் தழீஇ மகவெனப்
பல்லுயிர் அனைத்தையும் ஒக்கப் பார்க்குநின்
55 செல்வக் கடவுள் தொண்டர் வாழ்வும்
பற்றிப் பார்க்கின் உற்றநா யேற்குக்
குளப்படி நீரும் அளப்பருந் தன்மைப்
பிரளய சலதியும் இருவகைப் பொருளும்
ஒப்பினும் ஒவ்வாத் துப்பிற் றாதலின்
60 நின்சீ ரடியார் தஞ்சீ ரடியார்க்
கடிமை பூண்டு நெடுநாட் பழகி
முடலை யாக்கையொடு புடைபட் டொழுகியவர்
காற்றலை ஏவல்என் நாய்த்தலை ஏற்றுக்
கண்டது காணின் அல்லதொன்
65 றுண்டோ மற்றெனக் குள்ளது பிறிதே.

பிறிந்தேன் நரகம் பிறவாத வண்ணம்
அறிந்தேன் அநங்கவேள் அம்பிற்—செறிந்த

பொருதவட்ட விற்பிழைத்துப் போந்தேன் புராணன்
மருதவட்டந் தன்னுள்ளே வந்து. ௮

வந்திக்கண் டாய்அடி யாரைக்கண் டால்மற வாதுநெஞ்சே
சிந்திக்கண் டாய்அரன் செம்பொற் கழல்திரு மாமருதைச்
சந்திக்கண் டாய்இல்லை யாயின் நமன்தமர் தாங்கொடுபோய்
உந்திக்கண் டாய்நிர யத்துன்னை வீழ்த்தி உழக்குவரே. ௯

உழப்பின் வாரா உறுதிகள் உளவோ
கழப்பின் வாராக் கையற வுளவோ அதனால்
நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேரற அகழ்ந்து போக்கித் தூர்வைசெய்(து)
5 அன்பென் பாத்தி கோலி முன்புற
மெய்யெனும் எருவை விரித்தாங் கையமில்
பத்தித் தனிவித் திட்டு நித்தலும்
ஆர்வத் தெண்ணீர் பாய்ச்சிநேர் நின்று
தடுக்குநர்க் கடங்கா திடுக்கண் செய்யும்
10 பட்டி அஞ்சினுக் கஞ்சியுட் சென்று
சாந்த வேலி கோலி வாய்ந்தபின்
ஞானப் பெருமுளை நந்தாது முளைத்துக்
கருணை இளந்தளிர் காட்ட அருகாக்
காமக் குரோதக் களையறக் களைந்து
15 சேமப் படுத்துழிச் செம்மையின் ஓங்கி
மெய்ம்மயிர்ப் புளகம் முகிழ்த்திட் டம்மெனக்
கண்ணீர் அரும்பிக் கடிமலர் மலர்ந்து புண்ணிய
அஞ்செழுத் தருங்காய் தோன்றி நஞ்சுபொதி
காள கண்டமுங் கண்ணொரு மூன்றுந்
20 தோளொரு நான்குஞ் சுடர்முகம் ஐந்தும்
பவள நிறம்பெற்றுத் தவளநீறு பூசி
அறுசுவை அதனினும் உறுசுவை யுடைத்தாய்க்
காணினுங் கேட்பினுங் கருதினுங் களிதருஞ்
சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி
25 பையப் பையப் பழுத்துக் கைவர
எம்மனோர்கள் இனிதினி தருந்திச்
செம்மாந் திருப்பச் சிலர்இதின் வாராது

மனமெனும் புனத்தை வறும்பா ழாக்கிக்
காமக் காடு மூடித் தீமைசெய்
30 ஐம்புல வேடர் ஆறலைத் தொழுக
இன்பப் பேய்த்தேர் எட்டா தோடக்
கல்லா வுணர்வெனும் புல்வாய் அலமர
விச்சைவித் திதிர்த்துழி யானெனப் பெயரிய
நச்சு மாமரம் நனிமிக முளைத்துப்
35 பொய்யென் கவடுகள் போக்கிச் செய்யும்
பாவப் பல்தழை பரப்பிப் பூவெனக்
கொடுமை யரும்பிக் கடுமை மலர்ந்து
துன்பப் பல்காய் தூக்கிப் பின்பு
மரணம் பழுத்து நரகிடை வீழ்ந்து
40 தமக்கும் பிறர்க்கும் உதவா(து)
இமைப்பிற் கழியும் இயற்கையோர் உடைத்தே. ௧0

உடைமணியின் ஓசைக் கொதுங்கி அரவம்
படம்ஒடுங்கப் பையவே சென்றங்—கிடைமருதர்
ஐயம் புகுவ தணியிழையார் மேலனங்கன்
கையம் புகவேண்டிக் காண். ௧௧

காணீர் கதியொன் றுங் கல்லீர் எழுத்தஞ்சும் வல்லவண்ணம்
பேணீர் திருப்பணி பேசீர் அவன்புகழ் ஆசைப்பட்டுப்
பூணீர் உருத்திர சாதனம் நீறெங்கும் பூசுகிலீர்
வீணீர் எளிதோ மருதப் பிரான்கழல் மேவுதற்கே. ௧௨

மேவிய புன்மயிர்த் தொகையோ அம்மயிர்
பாவிய தோலின் பரப்போ தோலிடைப்
புகவிட்டுப் பொதிந்த புண்ணோ புண்ணிடை
ஊறும் உதிரப் புனலோ கூறுசெய்(து)
5 இடையிடை நிற்கும் எலும்போ எலும்பிடை
முடைகெழு மூளை விழுதோ வழுவழுத்
துள்ளிடை ஒழுகும் வழும்போ மெள்ளநின்(று)
ஊறும் புழுவின் ஒழுங்கோ நீரிடை
வைத்த மலத்தின் குவையோ வைத்துக்
10 கட்டிய நரம்பின் கயிறோ உடம்பிற்குள்

பிரியா தொறுக்கும் பிணியோ தெரியா
தின்ன தியானென் றறியேன் என்னை
ஏதினுந் தேடினன் யாதினுங் காணேன் முன்னம்
வரைத்தனி வில்லாற் புரத்தை அழல்ஊட்டிக்
15 கண்படை யாகக் காமனை யொருநாள்
நுண்பொடி யாக நோக்கியண் டத்து
வீயா அமரர் வியவந் தெழுந்த
தீவாய் நஞ்சைத் திருஅமு தாக்கி
இருவர் தேடி வெருவர நிமிர்ந்து
20 பாலனுக் காகக் காலனைக் காய்ந்து
சந்தன சரள சண்பக வகுள
நந்தன வனத்திடை ஞாயிறு வழங்காது
நவமணி முகிழ்த்த புதுவெயில் எறிப்ப
எண்ணருங் கோடி இருடி கணங்கட்குப்
25 புண்ணியம் புரக்கும் பொன்னி சூழ்ந்த
திருவிடை மருத பொருவிடைப் பாக
மங்கை பங்க கங்கைநா யகநின்
தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயப் படலங் கீறித் தூய
30 ஞான நாட்டம் பெற்றபின் யானும்
நின்பெருந் தன்மையுங் கண்டேன் காண்டலும்
என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன்
நின்னிலை யனைத்தையுங் கண்டேன் என்னை
நின்னைக் காணு மாந்தர்
35 தன்னையுங் காணுந் தன்மை யோரே. கங

ஓராதே அஞ்செழுத்தும் உன்னாதே பச்சிலையும்
நேராதே நீரும் நிரப்பாதே—யாராயோ
எண்ணுவார் உள்ளத் திடைமருதர் பொற்பாதம்
நண்ணுவாம் என்னுமது நாம். கச

நாமே இடையுள்ள வாறறி வாம்இனி நாங்கள்சொல்லல்
ஆமே மருதன் மருத வனத்தன்ன மன்னவரைப்
பூமேல் அணிந்து பிழைக்கச்செய் தார்ஒரு பொட்டும்இட்டார்
தாமே தளர்பவ ரைப்பாரம் ஏற்றுதல் தக்கதன்றே. கரு

அன்றினர் புரங்கள் அழலிடை அவியக்
குன்று வளைத்தெய்த குன்றாக் கொற்றத்து
நுண்பொடி அணிந்த எண்டோள் செல்வ
கயிலை நடந்தனைய உயர்நிலை நோன்றாட்
5 பிறைசெறிந் தன்ன இருகோட் டொருதிமிற்
பால்நிறச் செங்கண் மால்விடைப் பாக
இமையச் செங்கோட் டிமையச் செல்வன்
மணியெனப் பெற்ற அணியியல் அன்னம்
வெள்ளைச் சிறுநகைக் கிள்ளைப் பிள்ளை
10 குயிலெனப் பேசும் மயிலிளம் பேடை
கதிரொளி நீலங் கமலத்து மலர்ந்தன
மதரரி நெடுங்கண் மானின் கன்று
வருமுலை தாங்குந் திருமார்பு வல்லி
வையம் ஏழும் பன்முறை ஈன்ற
15 ஐய திருவயிற் றம்மைப் பிராட்டி
மறப்பருஞ் செய்கை அறப்பெருஞ் செல்வி
எமையாள் உடைய உமையாள் நங்கை
கடவுட் கற்பின் மடவரல் கொழுந
பவள மால்வரைப் பணைக்கைபோந் தனைய
20 தழைசெவி எண்டோள் தலைவன் தந்தை
பூவலர் குடுமிச் சேவலம் பதாகை
மலைதுளை படுத்த கொலைகெழு கூர்வேல்
அமரர்த் தாங்கும் குமரன் தாதை
பொருதிடங் கொண்ட பொன்னி புரக்கும்
25 மருதிடங் கொண்ட மருத வாண
நின்னது குற்றம் உளதோ நின்னினைந்
தெண்ணருங் கோடி இடர்ப்பகை களைந்து
கண்ணுறு சீற்றத்துக் காலனை வதையா
இறப்பையும் பிறப்பையும் இகந்து சிறப்பொடு
30 தேவ ராவின் கன்றெனத் திரியாப்
பாவிகள் தமதே பாவம் யாதெனின்
முறியாப் புழுக்கல் முப்பழங் கலந்த
அறுசுவை யடிசில் அட்டினி திருப்பப்
புசியா தொருவன் பசியால் வருந்துதல்

35 அயினியின் குற்றம் அன்று வெயிலின்வைத்
தாற்றிய தெண்ணீர் நாற்றமிட் டிருப்ப
மடாஅ வொருவன் விடாஅ வேட்கை
தெண்ணீர்க் குற்ற மன்றுகண் ணகன்று
தேந்துளி சிதறிப் பூந்துணர் துறுமி
40 வாலுகங் கிடந்த சோலை கிடப்ப
வெள்ளிடை வெயிலிற் புள்ளிவெயர் பொடிப்ப
அடிபெயர்த் திடுவான் ஒருவன்
நெடிது வருந்துதல் நிழல்தீங் கன்றே. ௧௬

அன்றென்றும் ஆமென்றும் ஆறு சமயங்கள்
ஒன்றொன்றொ டொவ்வா துரைத்தாலும்—என்றும்
ஒருதனையே நோக்குவார் உள்ளத் திருக்கும்
மருதனையே நோக்கி வரும். ௧௭

நோக்கிற்றுக் காமன் உடல்பொடி யாக நுதிவிரலால்
தாக்கிற் றரக்கன் தலைகீழ்ப் படத்தன் சுடர்வடிவாள்
ஓக்கிற்றுத் தக்கன் தலையுருண் டோடச் சலந்தரனைப்
போக்கிற் றுயிர்பொன்னி சூழ்மரு தாளுடைப் புண்ணியமே.

புண்ணிய புராதன புதுப்பூங் கொன்றைக்
கண்ணி வேய்ந்த கைலைநாயக
காள கண்ட கந்தனைப் பயந்த
வாளரி நெடுங்கண் மலையாள் கொழுந
5 பூத நாத பொருவிடைப் பாக
வேத கீத விண்ணோர் தலைவ
முத்தி நாயக மூவா முதல்வ
பத்தி யாகிப் பணைத்தமெய் யன்பொடு
நொச்சி யாயினுங் கரந்தை யாயினும்
10 பச்சிலை யிட்டுப் பரவுந் தொண்டர்
கருவிடைப் புகாமற் காத்தருள் புரியுந்
திருவிடை மருத திரிபு ராந்தக
மலர்தலை யுலகத்துப் பலபல மாக்கள்
மக்களை மனைவியை ஒக்கலை ஒரீஇ
15 மனையும் பிறவுந் துறந்து நினைவருங்

காடும் மலையும் புக்குக் கோடையிற்
கைம்மேல் நிமிர்த்துக் காலொன் று முடக்கி
ஐவகை நெருப்பின் அழுவத்து நின்று
மாரி நாளிலும் வார்பனி நாளிலும்
20 நீரிடை மூழ்கி நெடிது கிடந்துஞ்
சடையைப் புனைந்துந் தலையைப் பறித்தும்
உடையைத் துறந்தும் உண்ணு துழன்றுங்
காயுங் கிழங்குங் காற்றுதிர் சருகும்
வாயுவும் நீரும் வந்தன அருந்தியுங்
25 களரிலும் கல்லிலுங் கண்படை கொண்டுந்
தளர்வுறும் யாக்கையைத் தளர்வித் தாங்கவர்
அம்மை முத்தி அடைவதற் காகத்
தம்மைத் தாமே சாலவும் ஒறுப்பர்
ஈங்கிவை செய்யாது யாங்கள் எல்லாம்
30 பழுதின் றுயர்ந்த எழுநிலை மாடத்துஞ்
செந்தா துதிர்ந்த நந்தன வனத்துந்
தென்றல் இயங்கும் முன்றில் அகத்துந்
தண்டாச் சித்திர மண்டப மருங்கிலும்
பூவிரி கரங்க வாவிக் கரையிலும்
35 மயிற்பெடை ஆலக் குயிற்றிய குன்றிலும்
வேண்டுழி வேண்டுழி ஆண்டாண் டிட்ட
மருப்பின் இயன்ற வாளரி சுமந்த
விருப்புறு கட்டில் மீமிசைப் படுத்த
ஐவகை அமளி அணைமேற் பொங்கத்
40 தண்மலர் கமழும் வெண்மடி விரித்துப்
பட்டினுட் பெய்த பதநுண் பஞ்சின்
நெட்டணை யருகாக் கொட்டைகள் பரப்பிப்
பாயல் மீது பரிபுரம் மிழற்றச்
சாயல் அன்னத்தின் தளர்நடை பயிற்றிப்
45 பொற்றேு ரணத்தைச் சுற்றிய துகிலென
அம்மென் குறங்கின் ஒம்மென் கலிங்கங்
கண்ணும் மனமுங் கவற்றப் பண்வர
இரங்குமணி மேகலை மருங்கிற் கிடப்ப
ஆடர(வு) அல்குல் அரும்பெறல் நுசுப்பு

50 வாட வீங்கிய வனமுலை கதிர்ப்ப
அணியியல் கழுத்தை அலங்கரித் ததுபோல்
மணியிய லாரங் கதிர்விரித் தொளிர்தர
மணிவளை தாங்கும் அணிகெழு மென்றோள்
வரித்த சாந்தின் மிசைவிரித்து மீதிட்ட
55 உத்த ரீயப்பட் டொருபால் ஒளிர்தர
வள்ளை வாட்டிய ஒள்ளிரு காதொடு
பவளத் தருகாத் தரளம் நிரைத்தாங்
கொழுகி நீண்ட குமிழொன் றுபதித்துக்
காலன் வேலுங் காம பாணமும்
60 ஆல காலமும் அனைத்துமிட் டமைத்த
இரண்டு நாட்டமும் புரண்டுகடை மிளிர்தர
மதியென மாசறு வதனம் விளங்கப்
புதுவிரை யலங்கல் குழல்மிசைப் பொலியும்
அஞ்சொல் மடந்தையர் ஆகந் தோய்ந்துஞ்
65 சின்னம் பரப்பிய பொன்னின் கலத்து
அறுசுவை யடிசில் வறிதினி(து) அருந்தா(து)
ஆடினர்க் கென்றும் பாடினர்க் கென்றும்
வாடினர்க் கென்றும் வரையாது கொடுத்தும்
பூசுவன பூசியும் புனைவன புனைந்துந்
70 தூசின் நல்லன தொடையிற் சேர்த்தியும்
ஐந்து புலன்களும் ஆர ஆர்ந்து
மைந்தரும் ஒக்கலும் மனமகிழ்ந் தோங்கி
இவ்வகை இருந்தோ மாயினும் அவ்வகை
மந்திர எழுத்தைந்தும் வாயிடை மறவாது
75 சிந்தை நின்வழி செலுத்தலின் அந்த
முத்தியும் இழந்திலம் முதல்வ அத்திறம்
நின்னது பெருமை யன்றோ என்னெனின்
வல்லான் ஒருவன் கைம்முயன் றெறியினும்
மாட்டா ஒருவன் வாளா எறியினும்
80 நிலத்தின் வழாஅக் கல்லேபோல்
நலத்தின் வழாஅர்நின் நாம(ம்)நவின் றோரே. கக

நாமநவிற் றுய்மனனே நாரியர்கள் தோள்தோய்ந்து
காம நவிற்றிக் கழிந்தொழிய—லாமோ
பொருதவனத் தானையுரி போர்த்தருளும் எங்கள்
மருதவனத் தானை வளைந்து. உ0

வளையார் பசியின் வருந்தார் பிணியின் மதனன்அம்புக்
கிளையார் தனங்கண் டிரங்கிநில் லார்இப் பிறப்பினில்வந்
தளையார் நரகினுக் கென்கட வார்பொன் னலர்ந்த கொன்றைத்
தளையான் இடைமரு தன்னடி யாரடி சார்ந்தவரே. உக

அடிசார்ந் தவர்க்கு முடியா இன்பம்
நிறையக் கொடுப்பினுங் குறையாச் செல்வம்
மூலமும் நடுவும் முடிவும் இகந்து
காலம் மூன்றையுங் கடந்த கடவுள்
5 உளக்கணுக் கல்லா தூன்கணுக் கொளித்துத்
துளக்கற நிமிர்ந்த சோதித் தனிச்சுடர்
எறும்புத் துளையின் இருசெவிக் கெட்டா
துறுப்பில்நின் றெழுதரும் உள்ளத் தோசை
வைத்த நாவின் வழிமறுத் தகத்தே
10 தித்தித் தூறுந் தெய்வத் தேறல்
துண்டத் துளையிற் பண்டை வழியன்றி
அறிவில் நாறும் நறிய நாற்றம்
ஏனைய தன்மையும் எய்தா தெவற்றையுந்
தானே யாகி நின்ற தத்துவ
15 தோற்றுவ தெல்லாந் தன்னிடைத் தோற்றித்
தோற்றம் பிறிதில் தோற்றாச் சுடர்முளை
விரிசடை மிமிசை வெண்மதி கிடப்பினும்
இருள்விரி கண்டத் தேக நாயக
சுருதியும் இருவருந் தொடர்ந்துநின் றலமர
20 மருதிடங் கொண்ட மருத மாணிக்க
உமையாள் கொழுந ஒருமுதல் றுகிய
இமையா நாட்டத் தென்றனி நாயக
அடியேன் உறுகுறை முனியாது கேண்மதி
நின்னடி பணியாக் கன்மனக் கயவரொடு
25 நெடுநாள் பழகிய கொடுவினை ஈர்ப்பக்

கருப்பா சயமெனும் இருட்சிறை யறையிற்
குடரென் சங்கிலி பூண்டு தொடர்ப்பட்டுக்
கூட்டுச் சிறைப்புழுவின் ஈட்டுமலத் தழுந்தி
உடனே வருந்தி நெடுநாட் கிடந்து
30 பல்பிணிப் பெயர்பெற் றல்லற் படுத்துந்
தண்ட லாளர் மிண்டிவந் தலைப்ப
உதர நெருப்பிற் பதைபதை பதைத்தும்
வாதமத் திகையின் மோதமொத் துண்டுங்
கிடத்தல் நிற்றல் நடத்தல் செல்லா
35 திடங்குறை வாயிலின் முடங்கி இருந்துழிப்
பாவப் பகுதியில் இட்டுக் காவற்
கொடியோர் ஐவரை ஏவி நெடிய
ஆசைத் தளையில் என்னையும் உடலையும்
பாசப் படுத்திப் பையென விட்டபின்
40 யானும் போந்து தீநினுக் குழன்றும்
பெரியோர்ப் பிழைத்தும் பிறர்பொருள் வௌவியும்
பரியா தொழிந்தும் பல்லுயிர் செகுத்தும்
வேற்றோர் மனைவியர் தோற்றம் புகழ்ந்தும்
பொய்பல கூறியும் புல்லினம் புல்லியும்
45 ஐவருங் கடுப்ப அவாவது கூட்டி
ஈண்டின கொண்டு மீண்டு வந்துழி
இட்டுழி யிடாது பட்டுழிப் படாஅ
திந்நாள் இடுக்கண் எய்திப் பன்னாள்
வாடுபு கிடப்பேன் வீடுநெறி காணேன்
50 நின்னை யடைந்த அடியார் அடியார்க்
கென்னையும் அடிமை யாகக் கொண்டே
இட்ட பச்சிலைகொண் டொட்டி யறிவித்
திச்சிறை பிழைப்பித் தினிச்சிறை புகாமற்
காத்தருள் செய்ய வேண்டுந்
55 தீத்திரண் டன்ன செஞ்சடை யோனே. உஉ

சடைமேல் ஒருத்தி சமைந்திருப்ப மேனிப்
புடைமேல் ஒருத்தி பொலிய—இடையேயோய்ச்
பதி. கரு

சங்கே கலையே மருதற்குத் தான்கொடுப்ப
தெங்கே யிருக்க இவள். உரு

இருக்கும் மருதினுக் குள்ளிமை யோர்களும் நான்மறையும்
நெருக்கும் நெருக்கத்தும் நீளகத் துச்சென்று மீளவொட்டாத்
திருக்கும் அறுத்தைவர் தீமையுந் தீர்த்துச் செவ்வேமனத்தை
ஒருக்கும் ஒருக்கத்தின் உள்ளே முளைக்கின்ற ஒண்சுடரே.

சுடர்விடு சூலப் படையினை என்றும்
விடையுகந் தேறிய விமல வென்றும்
உண்ணு நஞ்சம் உண்டனை என்றுங்
கண்ணுற் காமனைக் காய்ந்தனை என்றுந்
5 திரிபுரம் எரித்த சேவக என்றுங்
கரியுரி போர்த்த கடவுள் என்றும்
உரகம் பூண்ட உரவோய் என்றுஞ்
சிரகஞ் செந்தழல் ஏந்தினை என்றும்
வலந்தரு காலனை வதைத்தனை என்றுஞ்
10 சலந்தரன் உடலந் தடிந்தனை என்றும்
அயன்சிரம் ஒருநாள் அரிந்தனை என்றும்
வியந்தவாள் அரக்கனை மிதித்தனை என்றுந்
தக்கன் வேள்வி தகர்த்தனை என்றும்
உக்கிரப் புலியுரி உடுத்தனை என்றும்
15 ஏனமும் அன்னமும் எட்டா தலமர
வானங் கீழ்ப்பட வளர்ந்தனை என்றுஞ்
செழுநீர் ஞாலஞ் செகுத்துயிர் உண்ணும்
அழல்விழிக் குறளை அழுக்கினை என்றும்
இனையன இனையன எண்ணில் கோடி
20 நினைவருங் கீர்த்தி நின்வயிற் புகழ்தல்
துளக்குறு சிந்தையேன் சொல்லள வாதலின்
அளப்பரும் பெருமைநின் அளவல தாயினும்
என்றன் வாயிற் புன்மொழி கொண்டு
நின்னை நோக்குவன் ஆதலின் என்னை
25 இடுக்கண் களையா அல்லற் படுத்தா(து)
எழுநிலை மாடத்துச் செழுமுகில் உறங்க

அடித்துத் தட்டி எழுப்புவ போல
நுண்துகிற் பதாகை கொண்டுகொண் டிகைப்பத்
துயிலின் நீங்கிப் பயிலும் வீதித்
திருமரு தமர்ந்த தெய்வச் செழுஞ்சுடர்
அருள்சுரந் தளிக்கும் அற்புதக் கூத்த
கல்லால் எறிந்த பொல்லாப் புத்தன்
நின்நினைந் தெறிந்த அதனால்
அன்னவன் தனக்கும் அருள்பிழைத் தின்றே. உரு

இன்றிருந்து நாளை இறக்குந் தொழிலுடைய
புன்றலைய மாக்கள் புகழ்வரோ—வென்றிமழு
வாளுடையான் தெய்வ மருதுடையான் நாயேனை
ஆளுடையான் செம்பொன் அடி. உசு

அடிஆ யிரந்தொழில் ஆயிரம் ஆயிரம் ஆயிரம்பேர்
முடிஆ யிரங்கள்கண் மூவா யிரம்முற்று நீறணிந்த [சே
தொடிஆ யிரங்கொண்ட தோளிரண் டாயிரம் என்றுநெஞ்
படியாய் இராப்பகல் தென்மரு தாளியைப் பற்றிக்கொண்டே.

கொண்டலின் இருண்ட கண்டத் தெண்தோள்
செவ்வான் உருவிற் பையர வார்த்துச்
சிறுபிறை கிடந்த நெறிதரு புன்சடை
மூவா முதல்வ முக்கட் செல்வ
5 தேவ தேவ திருவிடை மருத
மாசறு சிறப்பின் வானவ ராடும்
பூசத் தீர்த்தம் புரக்கும் பொன்னி
அயிரா வணத்துறை ஆடும் அப்ப
கைலாய வாண கௌரி நாயக
10 நின்னை வணங்கிப் பொன்னடி புகழ்ந்து
பெரும்பதம் பிழையா வரம்பல பெற்றோர்
இமையா நெடுங்கண் உமையாள் நங்கையும்
மழைக்கட் கடத்துப் புழைக்கைப் பிள்ளையும்
அமரர்த் தாங்குங் குமர வேளுஞ்
15 சுரிசங் கேந்திய திருநெடு மாலும்
வான்முறை படைத்த நான்முகத் தொருவனுங்

தாருகற் செற்ற வீரக் கன்னியும்
நாவின் கிழத்தியும் பூவின் மடந்தையும்
பீடுயர் தோற்றத்துக் கோடி உருத்திரரும்
20 ஆனைப் பெருந்திறல் வானோர் தலைவனுஞ்
செயிர்தீர் நாற்கோட் டயிரா வதமும்
வாம்பரி அருக்கர் தாம்பன் னிருவருஞ்
சந்திரன் ஒருவனுஞ் செந்தீக் கடவுளும்
நிருதியுஞ் சமனுஞ் சுருதிகள் நான்கும்
25 வருணனும் வாயுவும் இருநிதிக் கிழவனும்
எட்டு நாகமும் அட்ட வசுக்களும்
மூன்று கோடி ஆன்ற முனிவரும்
வசிட்டனுங் கபிலனும் அகத்தியன் தானுந்
தும்புரு நாரதர் என்றிரு திறத்தரும்
30 வித்தகப் பாடல் முத்திறத் தடியரும்
திருந்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளையும்
அத்தகு செல்வத் தவமதித் தருளிய
சித்த மார்சிவ வாக்கிய தேவரும்
வெள்ளை நீறு மெய்யிற் கண்டு
35 கள்ளன் கையிற் கட்டவிழ்ப் பித்தும்
ஓடும் பல்நரி ஊளைகேட் டரனைப்
பாடின என்று படாம்பல அளித்துங்
குவளைப் புனலில் தவளை அரற்ற
ஈசன் தன்னை ஏத்தின என்று
40 காசும் பொன்னுங் கலந்து தூவியும்
வழிபடும் ஒருவன் மஞ்சனத் தியற்றிய
செழுவிதை எள்ளைத் தின்னக் கண்டு
பிடித்தலும் அவன்இப் பிறப்புக் கென்ன
இடித்துக் கொண்டவன் எச்சிலை நுகர்ந்தும்
45 மருத வட்டத் தொருதனிக் கிடந்த
தலையைக் கண்டு தலையுற வணங்கி
உம்மைப் போல எம்இத் தலையுங்
கிடத்தல் வேண்டுமென் றடுத்தடுத் திரந்துங்
கோயில் முற்றத்து மீமிசைக் கிடப்ப
50 வாய்த்த தென்று நாய்க்கட்டம் எடுத்துங்

காம்பவிழ்த் துதிர்ந்த கனியுருக் கண்டு
வேம்புகட் கெல்லாம் விதானம் அமைத்தும்
விரும்பின கொடுக்கை பரம்பரற் கென்று
புரிகுழல் தேவியைப் பரிவுடன் கொடுத்த
55 பெரிய அன்பின் வரகுண தேவரும்
இனைய தன்மையர் எண்ணிறந் தோரே
அனையவர் நிற்க யானும் ஒருவன்
பத்தி யென்பதோர் பாடும் இன்றிச்
சுத்த னாயினுந் தோன்றாக் கடையேன் நின்னை
60 இறைஞ்சில னாயினும் ஏத்தில னாயினும்
வருந்தில னாயினும் வாழ்த்தில னாயினுங்
கருதி யிருப்பன் கண்டாய் பெரும
நின்னுல கனைத்தும் நன்மை தீமை
யானவை நின்செய லாதலின்
65 நானே யமையும் நலமில் வழிக்கே. உ௮

வழிபிழைத்து நாமெல்லாம் வந்தவா செய்து
பழிபிழைத்த பாவங்கள் எல்லாம்—பொழில்சூழ்
மருதிடத்தான் என்றொருகால் வாய்கூப்ப வேண்டா
கருதிடத்தாம் நில்லா கரந்து. உ௯

காத்திரில் மாலவன் கண்கொண்டு நின்கழல் போற்றநல்ல
வரத்தினை ஈயும் மருதஅப் பாமதி யொன்றுமில்லேன்
சிரத்தினு மாய்என்றன் சிந்தையு ளாகிவெண் காடன்என்னுந்
தரத்தினு மாயது நின்னடி யாந்தெய்வத் தாமரையே. ௩0

திருச்சிற்றம்பலம்



பட்டணத்துப் பிள்ளையார் அருளிய

# திருஏகம்பமுடையார் திருவந்தாதி

திருச்சிற்றம்பலம்

மெய்த்தொண்டர் செல்லும் நெறியறி யேன்மிக நற்பணிசெய்
கைத்தொண்டர் தம்மிலும் நற்றொண்(டு) உவந்திலன் உண்பதற்கே
பொய்த்தொண்டு பேசிப் புறம்புற மேயுன்னைப் போற்றுகின்ற
இத்தொண்ட னேன்பணி கொள்ளுதி யோகச்சி ஏகம்பனே.

ஏகம்ப னேஎன்னை ஆள்பவ னேஇமை யோர்க்கிரங்கிப்
போகம்பன் னாளுங் கொடுக்கின்ற நாயக பொங்கும்ஐவாய்
நாகம்பொன் ஆரம் எனப்பொலி வுற்றுநன் னீறணியும்
ஆகம்பொன் மாமலை ஒப்பவ னேஎன்பன் ஆதரித்தே. ௨

தரித்தேன் மனத்துன் திகழ்தரு நாமந் தடம்பொழில்வாய்
வரித்தேன் முரல்கச்சி ஏகம்ப னேஎன்றன் வல்வினையை
அரித்தேன் உனைப்பணி யாதவர் ஏழைமை கண்டவரைச்
சிரித்தேன் உனக்கடி யாரடி பூணத் தெளிந்தனனே. ௩

தெளிதரு கின்றது சென்றென் மனம்நின் திருவடிவம்
அளிதரு நின்னருட் கையம் இனியில்லை அந்திச்செக்கர்
ஒளிதரு மேனிஎம் ஏகம்ப னேஎன் றுகந்தவர்தாள்
தளிதரு தூளிஎன் றன்தலை மேல்வைத்த தன்மைபெற்றே.

பெற்றுகந் தேனென்றும் அர்ச்சனை செய்யப் பெருகுநின்சீர்
கற்றுகந் தேன்என் கருத்தினி தாக்கச்சி ஏகம்பத்தின்
பற்றுகந் தேறும் உகந்தவ னேபட நாகக்கச்சின்
சுற்றுகந் தேர்விடை மேல்வரு வாய்நின் துணையடியே. ௫

அடிநின்ற சூழல் அகோசரம் மாலுக் கயற்கலரின்
முடிநின்ற சூழ்முடி காண்பரி தாயிற்றுக் கார்முகிலின்
இடிநின்ற சூழ்குரல் ஏறுடை ஏகம்ப யாமெங்ஙனே
வடிநின்ற சூலப் படையுடை யானை வணங்குவதே. ௬

வணக்கந் தலைநின் திருவடிக் கேசெய்யும் மையல்கொண்டோர்
இணக்கன்றி மற்றோர் இணக்கறி வோம்அல்லம் வல்லரவின்
குணக்குன்ற வில்லி குளிர்கச்சி ஏகம்பம் பாடின்அல்லாற்
கணக்கன்று மற்றொரு தேவரைப் பாடுங் கவிநலமே. ௭

நலந்தர நானொன்று சொல்லுவன் கேண்மின் நல்லீர்கள் அன்பு
கலந்தர னூர்கச்சி ஏகம்பங் கண்டு கனல்திகிரி
சலந்தரன் ஆகம் ஒழிக்கவைத் தாய்தக்கன் வேள்வியெல்லாம்
நிரந்தர மாகச்செய் தாயென்று பூசித்து நின்மின்களே. ௮

மின்களென் றார்சடை கொண்டலென் றார்கண்ட மேனிவண்ணம்
பொன்களென் றார்வெளிப் பாடுதம் பொன்னடி பூண்டுகொண்ட
வென்களென் றாலும் பிரிந்தறி யார்கச்சி ஏகம்பத்தான்
றன்களென் றாருல கெல்லாம் நிலைபெற்ற தன்மைகளே. ௯

தன்மையிற் குன்றாத் தவத்தோர் இமையவர் தாம்வணங்கும்
வன்மையிற் குன்றா மதிற்கச்சி ஏகம்பர் வண்கயிலைப்
பொன்மயிற் சாயலுஞ் சேயரிக் கண்ணும் புரிகுழலும்
மென்மையிற் சாயும் மருங்குலுங் காதல் விளைத்தனவே. ௧௦

தனமிட்(டு) உமைதழு வத்தழும் புற்றவர் தம்அடியார்
மனம்விட் டகலா மதிற்கச்சி ஏகம்பர் வான்கயிலைச்
சினம்விட் டகலாக் களிறு வினவியோர் சேயனையார்
புனம்விட் டகலார் பகலாம் பொழுதுநம் பூங்கொடியே. ௧௧

பூங்கொத் திருந்தழை யார்பொழிற் கச்சிஏ கம்பர்பொற்பார்
கோங்கத் திருந்த குடுமிக் கயிலையெம் பொன்னொருத்தி
பாங்கொத் திருந்தனை ஆரணங் கேபடர் கல்அருவி
ஆங்கத் திருந்திழை யாடிவந் தாற்கண் டடிவருத்தே. ௧௨

வருத்தந் தரும்மெய்யுங் கையில் தழையும்வன் மாவினவுங்
கருத்தந் தரிக்கும் நடக்கஇன் றைய கழல்நினையத்
திருத்தந் தருளுந் திகழ்கச்சி ஏகம்பர் சீர்க்கயிலைத்
துருத்தந் திருப்பதன் றிப்புனங் காக்குந் தொழில்எமக்கே.

எம்மையும் எம்மைப் பணிகொள்ளுங் கம்பர் எழிற்கயிலை
உம்மையும் மானிடம் இப்புனத் தேவிட்டு வந்தமைந்தர்

தம்மையும் மானையுஞ் சிந்தையும் நோக்கங் கவர்வனென்றே
அம்மையும் அம்மலர்க் கண்ணும் பெரியீர் அருளுமினே. கச

அருளைத் தருகம் பரம்பொற் கயிலையுள் எம்ஐயர்அம்(பு)
இருளைக் கரிமறிக் கும்இவர் ஐயர் உறுத்திஎய்ய
வெருள்அக் கலைகணை தன்னொடும் போயின வில்லிமைக்கு
மருளைத் தருசொல்லி எங்கோ விலையுண்டிவ் வையகத்தே.

வையார் மழுப்படை ஏகம்பர் ஈங்கோய் மலைப்புனத்துள்
அய்யார் வருகலை ஏனங் கரிதொடர் வேட்டையெல்லாம்
பொய்யான ஐயர் மனத்ததெம் பூங்கொடி கொங்கைபொருப்
பையார் அரவிடை ஆயிற்று வந்து பரிணமித்தே. கசு

பருமுத் துதிர்த்திடுஞ் சீர்மத்த யானை நுதல்பருந்திட்
டுருமொத்த திண்குரற் சீயந் திரிநெறி ஓங்கு வைவாய்ப்
பொருமுத் தலைவேற் படைக்கம்பர் பூங்கயி லைப்புனத்துள்
தருமுத் தனநகைத் தன்நகை யால்வெற்ப சார்வரிதே. கஎ

அரிதன் றிருக்கண் ணிடநிரம் பாயிரம் போதணிய
அரிதன் திருவடிக் கர்ச்சித்த கண்ணுக் கருளேகம்பர்
அரிதன் திருக்கங் குலியால் அழிந்த கயிலைஅல்இங்
கரிதென் றிருப்பதெம் பால்வெற்ப எம்மையர்க் கஞ்சுதுமே.

அஞ்சரத் தான்பொடி யாய்விழத் தீவிழித் தன்புசெய்வோர்
நெஞ்சரத் தாழ்வுகந் தோர்கச்சி ஏகம்பர் நீள்கயிலைக்
குஞ்சரத் தாழ்வரை வீழநுங் கொம்புய்யக் கும்பம்மூழ்கும்
வெஞ்சரத் தார்அன வோஅல்ல வோஇவ் வியன்முரசே.

சேய்தந்த கைம்மை உமைகண வன்திரு ஏகம்பத்தான்
தாய்தந்தை யாய்உயிர் காப்போன் கயிலைத் தயங்கிருள்வாய்
வேய்தந்த தோளிநம் ஊசலொ டும்விரை வேங்கைதன்னைப்
பாய்தந்து பூசலுண் டாங்கொண்ட தோசை பகடுவந்தே. உ௦

வந்தும் மணம்பெறிற் பொன்அனை யீர்மன்னும் ஏகம்பர்தம்
முந்தும் அருவிக் கயிலை மலையுயர் தேன்இழிச்சித்
தந்தும் மலர்கொய்துந் தண்தினை மேயுங் கிளிகடிந்துஞ்
சிந்தும் புகர்மலைக் கைச்சும்இச் சாரல் திரிகுவனே. உக

திரியப் புரமெய்த ஏகம்ப னார்திக ழுங்கயிலைக்
கிரியக் குறவர் பருவத் திடுதா ளம்வினையோம்
விரியச் சுருள்முத லானும் அடைந்தோம் விரைவிரைந்து
பிரியக் கதிர்முத்தி னீர்பெற்ற தென்அங்குப் பேசுமினே.

பேசுக யாவ ருமைக்கணி யாரென்று பித்தர்எங்கும்
பூசுகை யார்திரு நீற்றெழில் ஏகம்பர் பொற்கயிலைத்
தேசுகை யார்சிலை வெற்பன் பிரியும் பரிசிலர்அக்
கூசுகை யாதுமில் லாக்குலை வேங்கைப் பெயர்நம்மையே.

பெயரா நலத்தெழில் ஏகம்ப னார்பிறை தோய்கயிலைப்
பெயரா திருக்கப் பெறுகிளி காள்புன மேபிரிவின்
துயரால் வருத்தி மனமும்இங் கோடித் தொழுதுசென்ற
தயரா துரையும் வெற்பற்கடி யேற்கும் விடைதம்மினே. உ௪

தம்மைப் பிறவிக் கடல்கடப் பிப்பவர் தாம்வணங்கும்
மும்மைத் திருக்கண் முகத்தெழில் ஏகம்பர் மொய்கயிலை
அம்மைக் கருங்கண்ணி தன்னொடின் பந்தருந் தண்புனமே
எம்மைக் கவலைசெ யச்சொல்லி யோவல்லி எய்தியதே. உ௫

இயங்குந் திரிபுரம் எய்தஏ கம்பர் எழிற்கயிலைத்
தயங்கும் மலர்ப்பொழில் காள்தையல் ஆடரு வித்தடங்காள்
முயங்கு மணியறை காள்மொழி யீர்ஒழி யாதுநெஞ்சம்
மயங்கும் பரிசுபொன் னார்சென்ற சூழல் வகுத்தெமக்கே.

வகுப்பார் இவர்போல் மணத்துக்கு நாள்மணந் தன்னொடின்பம்
மிகுப்பார்க ளாருயிர் ஒன்றாம் இருவரை விள்ளக்கள்வாய்
நெகுப்பால் மலர்கொண்டு நின்றார் கிடக்க நிலாவுகம்பர்
தொகுப்பால் மணிசிந் தருவிக் கயிலைஇச் சூழ்புனத்தே. உ௭

புனங்குழை யாதென்று மெல்தினை கொய்ததும் போகலுற்ற
கனங்குழை யாள்தற் பிரிய நமக்குறுங் கையறவால்
மனங்குழை யாவருங் கண்கனி பண்பல பாடுந்தொண்டர்
இனங்குழை யாத்தொழும் ஏகம்பர் இக்கயி லாயத்துள்ளே.

உள்ளம் பெரியரல் லாச்சிறு மானுடர் உற்றசெல்வங்
கள்ளம் பெரிய சிறுமனத் தார்க்கன்றிக் கங்கைஎன்னும்

வெள்ளம் பெரிய சடைத்திரு ஏகம்பர் விண்அரணம்
தள்ளம் பெரிகொண் டமைத்தார் அடியவர் சார்வதன்றே.

அன்றும் பகைஅடர்க் கும்பரி மாவும் மதஅருவிக்
குன்றும் பதாதியுந் தேருங் குலவிக் குடைநிழற்கீழ்
நின்றும் பொலியினுங் கம்பர்நன் னீறு நுதற்கிலரேல்
என்றும் அரசும் முரசும் பொலியா திருநிலத்தே. ௫௦

நிலத்திமை யோரில் தலையாய்ப் பிறந்து மறையொடங்கம்
வலத்திமைப் போதும் பிரியார் எரிவளர்த் தாலும்வெற்பன்
குலத்துமை யோர்பங்கர் கச்சியுள் ஏகம்பங் கூடித்தொழும்
நலத்தமை யாதவர் வேட்டுவர் தம்மின் நடுப்படையே. ௫௧

படையால் உயிர்கொன்று தின்று பசுக்களைப் போலச்செல்லும்
நடையால் அறிவின்றி நாண்சிறி தின்றி நருங்குலத்திற்
கடையாய்ப் பிறக்கினுங் கச்சியுள் ஏகம்பத் தெங்களையாள்
உடையான் கழற்கன்ப ரேல்அவர் யாவர்க்கும் உத்தமரே.

உத்துங்க யானை உரியார் விரலால் அரக்கன்சென்னி
பத்துங்கை யான இருபதுஞ் சோர்தர வைத்திலயம
ஒத்துங்கை யால்அவன் பாடக் கயிலையின் ஊடுகைவாள்
எத்துங்கை யானென் றுகந்தளித் தார்கச்சி ஏகம்பரே. ௫௩

அம்பரங் கால்அனல் நீர்நிலந் திங்கள் அருக்கன்அணு
வம்பரங் கொள்வதொர் வேழத் துரியவன் றன்னுருவாம்
எம்பரன் கச்சியுள் ஏகம்பத் தான்இடை யாதடைவான்
நம்பரன் தன்னடி யார்அறி வார்க்கு நறுந்துணையே. ௫௪

துணைத்தா மரைஅடி யும்பவ ளத்திரள் நல்குறங்கும்
பணைத்தோள் அகலமுங் கண்டத்து நீலமும் அண்டத்துமின்
பிணைத்தா லனசடை யுந்திரு முக்கணும் பெண்ணொர்பக்கத்
தணைத்தார் எழிற்கம்பர் எங்கள் பிரானார்க் கழகியவே. ௫௫

அழகறி விற்பெரி தாகிய ஏகம்பர் அத்தர்கொற்றம்
பழகறி விற்பெரி யோர்தமைப் பற்றலர் பற்றும்அன்பின்
குழகறி வேற்பினுள் ஒன்றறி யார்அறி யாமைதெய்வங்
கிழகெறி யப்பட் டலந்தார் உலகிற் கிடந்தனரே. ௫௬

கிடக்கும் ஒருபால் இரைக்கின்ற பாம்பொரு பால்மதியந்
தொடக்குண் டிலங்கும் அலங்குந் திரைக்கங்கை சூடுங்கொன்றை
வடக்குண்டு கட்டத் தலைமாலை வாளால் மலைந்தவெம்போர்
கடக்கும் விடைத்திரு ஏகம்பர் கற்றைச் சடைமுடியே. ௩௭

கற்றைப் பவளச் சடைவலம் பூக்கமழ் கொன்றையந்தார்
முற்றாற் றிலாமதி யின்கொழுந் தேகம்பர் மொய்குழலாம்
மற்றைத் திசையின் மணிப்பொற் கொழுந்தத் தரங்கழுநீர்
தெற்றிப் பொலிகின்ற சூட்டழ காகித் திகழ்தருமே. ௩௮

தருமருட் டன்மை வலப்பாற் கமலக்கண் நெற்றியின்மேல்
திருமலர்க் கண்பிள வின்திக ழுந்தழல் செல்வக்கம்பர்
கருமலர்க் கண்ணிடப் பாலது நீலங் கனிமதத்து
வருநுதற் பொட்டணங் குக்குயர்ந் தோங்கு மலர்க்குழலே.

மலர்ந்த படத்துச்சி ஐந்தினுஞ் செஞ்சுடர் மாமணிவிட்
டலர்ந்த மணிக்குண் டலம்வலக் காதினில் ஆடிவரும்
நலந்திரு நீள்வயி ரம்வெயிற் பாய நகுமணிகள்
கலந்தசெம் பொன்மக ரக்குழை ஏகம்பர் காதிடமே. ௪௦

காதலைக் கும்வலத் தோள்பவ ளக்குன்றம் அங்குயர்ந்து
போதலைக் கும்பனிப் பொன்மலை நீற்றின் பொலியகலந்
தாதலைக் குங்குழல் சேர்பணைத் தோள்நறுஞ் சாந்தணிந்து
சூதலைக் கும்முலை மார்பிடம் ஏகம்பர் சுந்தரமே. ௪௧

தரம்பொற் பழியும் உலகட்டி எய்த்துத் தரந்தளரா
உரம்பொற் புடைய திருவயி றும்வலம் உம்பர்மும்மைப்
புரம்பொற் பழித்தகம் பர்க்குத் தரத்திடு பூண்முலையும்
நிரம்பப் பொருது தளரிள வஞ்சியும் நேர்வுடைத்தே. ௪௨

உடைப்புலி யாடையின் மேல்உர கக்கச்சு வீக்கிமுஞ்சி
வடத்தொரு கோவணந் தோன்றும் அரைவலம் மற்றைஅல்குல்
தொடக்குறு காஞ்சித் தொடுத்த அரசிலை தூநுண் துகில்
அடல்பொலி ஏறுடை ஏகம்ப மேய அடிகளுக்கே. ௪௩

அடிவலப் பாலது செந்தா மரையொத் ததிர்கழல்சூழ்ந்
திடிகுரற் கூற்றின் எருத்திற வைத்த இளந்தளிரின்

அடியிடப் பாலது பஞ்சுற அஞ்சுஞ் சிலம்பணிந்த
வடிவுடைத் தார்கச்சி ஏகம்ப மேய வரதருக்கே. சச

தருக்கவற் றான்மிக்க முப்புரம் எய்தயன் றன்தலையை
நெருக்கவற் றோட மழுவாள் விசைத்தது நெற்களென்றும்
பருக்கவற் றாங்கச்சி ஏகம்பர் அத்தர்தம் பாம்புகளின்
திருக்கவற் றாலிட் டருளுங் கடகத் திருக்கரமே. சரு

கரத்தத் தமருகத் தோசை கடுத்தண்ட மீபிளப்ப
அரத்தத்த பாதம் நெரித்திட் டவனி தலநெரியத்
தரத்தத் திசைகளுக் கப்புறம் போர்ப்பச் சடைவிரித்து
வரத்தைத் தருகம்பர் ஆடுவர் எல்லியும் மாநடமே. சசு

நடனம் பிரான்உகந் துய்யக்கொண் டான்என்று நன்மறையோர்
உடன்வந்து மூவா யிரவர் இறைஞ்சி நிறைந்தஅன்பின்
கடனன்றி மற்றறி யாத்தில்லை அம்பலங் காளத்தியாம்
இடம்எம் பிரான்கச்சி ஏகம்ப மேயாற் கினியனவே. சஎ

இனியவர் இன்னார் அவரையொப் பார்பிறர் என்னவொண்ணாத்
தனியவர் தையல் உடனாம் உருவர் அறம்பணித்த
முனியவர் ஏறும் உகந்தமுக் கண்ணவர் சண்டிஅன்புக்
கினியவர் காய்மழு வாட்படை யார்கச்சி ஏகம்பரே. சஅ

பரவித் தனைநினை யக்கச்சி ஏகம்பர் பண்ணும்மையல்
வரவித் தனையுள்ள தெங்கறிந் தேன்முன் அவர்மகனார்
புரவித் தனையடிக் கக்கொடி தாய்விடி யாஇரவில்
அரவித் தனையுங்கொண் டார்மட வார்முன்றில் ஆட்டிடவே.

இடவம் சுறுக்கெனப் பாயும்அஞ் சென்னி நகுதலைகண்
டிடஅஞ் சுவர்மட வார்இரி கின்றனர் ஏகம்பத்தீர்
படம்அஞ்சு வாயது நாகம் இரைக்கும் அதனுக்குமுற்
படஅஞ் சுவர்எங்ங னேபலி வந்திடும் பாங்குகளே. ருo

பாங்குடை கோள்புலி யின்அதள் கொண்டீர் நும் பாரிடங்கள்
தாங்குடை கொள்ளப் பலிகொள்ள வந்தீர் தடங்கமலம்
பூங்குடை கொள்ளப் புனற்கச்சி ஏகம்பங் கோயில்கொண்டீர்
ஈங்கிடை கொள்ளக் கலைகொள்ள வந்தீர் இடைக்குமின்றே.

இடைக்குமின் தோற்கும் இணைமுலை யாய்முதி யார்கள்தஞ்சொல்
கடைக்கண்நன் றுங்கச்சி ஏகம்பர் ஐயங் கொளக்கடவும்
விடைக்குமுன் தோற்றநில் லேநின் றினிஇந்த மொய்குழலார்
கிடைக்குமுன் தோற்றநஞ் சங்கிது ஓதங் கிறித்துவமே.

கிறிபல பேசிச் சதிரால் நடந்து விடங்குபடக்
குறிபல பாடிக் குளிர்கச்சி ஏகம்பர் ஐயங்கொள்ள
நெறிபல வார்குழ லார்மெலி வுற்ற நெடுந்தெருவிற்
செறிபல வெள்வளை போயின தாயர்கள் தேடுவரே. ருரு

தேடுற் றிலகள்ள நோக்கந் தெரிந்தில சொற்கள்முடி
கூடுற் றிலகுழல் கொங்கை பொடித்தில கூறும்இவள்
மாடுற் றிலமணி யின்மட அல்குலும் மற்றிவள்பால்
நாடுற் றிலஎழில் ஏகம்ப னூர்க்குள்ளம் நல்கிடத்தே. ருச

நல்கும் புகழ்க்கட வூர்நன் மறையவன் உய்யநண்ணிக்
கொல்கின்ற கூற்றைக் குமைத்தவெங் கூற்றங் குளிர்திரைகள்
மல்குந் திருமறைக் காட்டமிர் தென்றும் மலைமகள்தான்
புல்கும் பொழிற்கச்சி ஏகம்பம் மேவிய பொன்மலையே. ருரு

மலையத் தகத்தியன் அர்ச்சிக்க மன்னி வடகயிலை
நிலையத் தமரர் தொழஇருந் தான்நெடு மேருஎன்னுஞ்
சிலைஅத் தன் பைம்பொன் மதில்திரு ஏகம்பத் தான்திகழ்நீர்
அலையத் தடம்பொன்னி சூழ்திரு வையாற் றருமணியே.

மணியார் அருவித் தடவி மயங்குடக் கொல்லிகல்லின்
திணியார் அருவியின் ஆர்த்த சிராமலை ஐவனங்கள்
அணியார் அருவி கவர்கிளி ஓப்பும்இன் சாரல்விந்தம்
பணிவார் அருவினை தீர்க்கும் ஏகம்பர் பருப்பதமே. ருஎ

பருப்பதங் கார்தவழ் மந்தரம் இந்திர நீலம்வெள்ளை
மருப்பதங் கார்கருங் குன்றியங் கும்பரங் குன்றம்வில்லார்
நெருப்பதங் காருதி நாறும்ம கேந்திரம் என்றிவற்றில்
இருப்பதங் காஉகந் தான்கச்சி ஏகம்பத் தெம்இறையே. ருஅ

இறைத்தார் புரம்எய்த வில்இமை நல்இம வான்மகட்கு
மறைத்தார் கருங்குன் றம்வெண்குன் றஞ்செங்குன் றம்மன்னற்குன்றம்

நிறைத்தார் நெடுங்குன்றம் நீள்கழுக் குன்றம்என் தீவினைகள்
குறைத்தார் முதுகுன்றம் ஏகம்பர் குன்றென்று கூறுமினே.

கூறுமின் தொண்டர்குற் றாலம்நெய்த் தானந் துருத்திஅம்பேர்
தேறுமின் வேள்விக் குடிதிருத் தோணி புரம்பழனம்
ஆறுமின் போல்சடை வைத்தவன் ஆரூர் இடைமருதென்
றேறுமின் நீரெம் பிரான்கச்சி ஏகம்பம் முன்நினைந்தே. ௬௦

நினைவார்க் கருளும் பிரான்திருச் சோற்றுத் துறைநியமம்
புனைவார் சடையோன் புகலூர் புறம்பயம் பூவணம்நீர்
புனைவார் பொழில்திரு வெண்காடு பாச்சில் அதிகைஎன்று
நினைவார் தருநெஞ்சி னீர்கச்சி ஏகம்பம் நண்ணுமினே. ௬௧

நண்ணிப் பரவுந் திருவா வடுதுறை நல்லம்நல்லூர்
மண்ணிற் பொலிகடம் பூர்கடம் பந்துறை மன்னுபுன்கூர்
எண்ணற் கரிய பராய்த்துறை ஏர்கொள் எதிர்கொள்பாடி
கண்ணிப் பிறைச்சடை யோன்கச்சி ஏகம்பங் காண்மின்சென்றே.

சென்றேறி விண்ணுறும் அண்ணா மலைதிகழ் வல்லம்மென்பூ
வின்றேறல் பாய்திரு மாற்பேறு பாசூர் எழில்அழுந்தூர்
வன்தேர வன்திரு விற்பெரும் பேறு மதில்ஒற்றியூர்
நின்றோர் தருகச்சி ஏகம்பம் மேயார் நிலாவியவே. ௬௩

நிலாவு புகழ்த்திரு வோத்தூர் திருஆமாத் தூர்நிறைநீர்
சுலாவு சடையோன் புலிவலம் வில்வலங் கொச்சைதொண்டர்
குலாவுந் திருப்பனங் காடுநன் மாகறல் கூற்றம்வந்தால்
அலாயென் றடியார்க் கருள்புரி ஏகம்பர் ஆலயமே. ௬௪

ஆலயங் கார்கரு காவைகச் சூர்திருக் காரிகரை
வேலையங் கேறு திருவான்மி யூர்திரு ஊறல்மிக்க
சோலையங் கார்திருப் போந்தைமுக் கோணந் தொடர்கடுக்கை
மாலையன் வாழ்திரு ஆலங்கா டேகம்பம் வாழ்த்துமினே. ௬௫

வாழப் பெரிதெமக் கின்னருள் செய்யும் மலர்க்கழலோர்
தாழச் சடைத்திரு ஏகம்பர் தம்மைத் தொழாதவர்போய்
வாழப் பராச்சுரம் ஆற்று தளிரடி பூங்குழல்எம்
ஏழைக் கிடையிறுக் குங்குய பாரம் இயக்குறினே. ௬௬

உறுகின்ற வெவ்வழல் அக்கடம் இக்கொடிக் குன்பின்வரப்
பெறுகின்ற வண்மையி னல்லைய பேரருள் ஏகம்பனார்
துறுகின்ற மென்மலர்த் தண்பொழிற் கச்சியைச் சூழ்ந்திளையோர்
குறுகின்ற பூங்குவ ளைக்குறுந் தண்பணை என்றுகொளே.

கொள்ளுங் கடுங்கதி ரிற்கள்ளி தீச்சில வேய்உலறி
விள்ளும் வெடிபடும் பாலைஎன் பாவை விடலைபின்னே
தெள்ளும் புனற்கச்சி யுள்திரு ஏகம்பர் சேவடியை
உள்ளும் அதுமறந் தாரெனப் போவ துரைப்பரிதே. ௬௮

பரிப்பருந் திண்மைப் படையது கான ரெனிற்சிறகு
விரிப்பருந் துக்கிரை யாக்கும்வெய் யேன்அஞ்சல் செஞ்சடைமேல்
தரிப்பருந் திண்கங்கை யார்திரு ஏகம்பம் அன்னபொன்னே
வரிப்பருந் திண்சிலை யேயும ராபின் மறைகுவனே. ௬௯

வனவரித் திண்புலி யின்அதள் ஏகம்ப மன்அருளே
எனவருபொன்னணங் கென்னணங் கிற்கென் எழிற்கழங்குந்
தனவரிப் பந்துங் கொடுத்தெனைப் புல்லியும் இல்பிரிந்தே
இனவரிக் கல்லதர் செல்வதெங் கேஒல்கும் ஏழைநெஞ்சே.

நெஞ்சார் தரஇன்பஞ் செய்கழல் ஏகம்பர் கச்சியன்னாள்
பஞ்சார் அடிவைத்த பாங்கிவை யாங்கவள் பெற்றெடுத்த
வெஞ்சூர் வொழியத்தன் பின்செல முன்செல் வெடுவெடென்ற
அஞ்சா அடுதிறற் காளைதன் போக்கிவை அந்தத்திலே. ௭௧

இலவவெங் கானுனை அல்லால் தொழுஞ்சரண் ஏகம்பனார்
நிலவுஞ் சுடரொளி வெய்யவ னேதண் மலர்மிதித்துச்
செலவும் பருக்கை குளிரத் தளிரடி செல்சுரத்துன்
உலவுங் கதிர்தணி வித்தருள் செய்யுன் உறுதுணைக்கே. ௭௨

துணையொத்த கோவையும் போலெழிற் பேதையுந் தோன்றலும்முன்
இணையொத்த கொங்கையொ டேயொத்த காதலொ டேகினரே
அணையத்தர் ஏறெருத்த காளையைக் கண்டனம் மற்றவரேற்
பிணையொத்த நோக்குடைப் பெண்ணிவள் தன்னொடும் பேசுமினே.

மின்நலிக் கும்வணக் கத்திடை யாளையும் மீளியையும்
நென்னல்இப் பாக்கைவந் தெய்தின ரேல்எம் மனையிற்கண்டீர்

பின்னரிப் போக்கருங் குன்று கடந்தவர் இன்றுகம்பர்
மன்அரி தேர்ந்து தொழுங்கச்சி நாட்டிடை வைகுவரே. ௭௪

உவரச்சொல் வேடுடைக் காடுகந் தாடிய ஏகம்பனார்
அவரக்கன் போன விமானத்தை ஆயிரம் உண்மைசுற்றுந்
துவரச் சிகரச்சி வாலயஞ் சூலந்து லங்குவிண்மேற்
கவரக் கொடிதிளைக் குங்கச்சி காணினுங் கார்மயிலே. ௭௫

கார்மிக்க கண்டத் தெழில்திரு ஏகம்பர் கச்சியின்வாய்
ஏர்மிக்க சேற்றெழில் நெல்நடு வோர்ஒலி பொன்மலைபோற்
போர்மிக்க செந்நெல் குவிப்போர் ஒலிகருப் பாலைஒலி
நீர்மிக்க மாக்கட லின்ஒலி யேஒக்கும் நேரிழையே. ௭௬

நேர்த்தமை யாமை விறற்கொடு வேடர் நெடுஞ்சுரத்தைப்
பார்த்தமை யால்இமை நீந்தகண் பொன்னே பகட்டுரிவை
போர்த்தமை யால்உமை நோக்கருங் கம்பர்கச் சிப்பொழிலுள்
சேர்த்தமை யால்இமைப் போதணி சீதஞ் சிறந்தனவே. ௭௭

சிறைவண்டு பாடுங் கமலக் கிடங்கிவை செம்பழுக்காய்
நிறைகொண்ட பாளைக் கமுகின் பொழிலிவை தீங்கனியின்
பொறைகொண்ட வாழைப் பொதும்புவை புன்சடை ஏகம்பனார்
நறைகொண்ட பூங்கச்சி நாடெங்கும் இவ்வண்ணம் நன்னுதலே.

நன்னுத லார்கருங் கண்ணுஞ்செவ் வாயும்இவ் வாறெனப்போய்
மன்னித ழார்திரு நீலமும் ஆம்பலும் பூப்பவள்ளை
என்னள லாம்ஒப்புக் காதென்று வீற்றிடும் ஏகம்பனார்
பொன்னுத லார்விழி யார்கச்சி நாட்டுள்இப் பொய்கையுளே.

உள்வார் குளிர நெருங்கிக் கருங்கிடங் கிட்டநன்னீர்
வள்வா ளைகளொடு செங்கயல் மேய்கின்ற எங்களையாட்
கொள்வார் பிறவி கொடாத ஏகம்பர் குளிர்குவளை
கள்வார் தருகச்சி நாட்டெழில் ஏரி களப்பரப்பே. ௮௦

பரப்பார் விசும்பிற் படிந்த கருமுகி லன்னநன்னீர்
தரப்பா சிகள்மிகு பண்பொடு சேம்படர் தண்பணைவாய்ச்
சுரப்பார் எருமை மலர்தின்னத் துன்னுக ராஒருத்தல்
பொரப்பார் பொலிநுத லாய்செல்வக் கம்பர்தம் பூங்கச்சியே.

கச்சார் முலைமலை மங்கைகண் ணாரஎண் ணான்(கு)அறமும்
வைச்சார் மகிழ்திரு ஏகம்பர் தேவி மகிழவிண்ணோர்
விச்சா தரர்தொழு கின்ற விமானமுந் தன்மம்அறு
அச்சா லையும்பரப் பாங்கணி மாடங்கள் ஓங்கினவே. அஉ

ஓங்கின ஊரகம் உள்ளகம் உம்பர் உருகிடமாம்
பாங்கினில் நின்ற தரியுறை பாடகம் தெவ்இரிய
வாங்கின வாட்கண்ணி மற்றவர் மைத்துனி வான்கவிகள்
தாங்கின நாட்டிருந் தாளது தன்மனை ஆயிழையே. அங

இழையார் அரவணி ஏகம்பர் நெற்றி விழியின்வந்த
பிழையா அருள்நம் பிராட்டிய தின்ன பிறங்கல்உன்னும்
நுழையா வருதிரி சூலத்தள் நோக்கரும் பொன்கடுக்கைத்
தழையார் பொழில்உது பொன்னே நமக்குத் தளர்வில்லையே.

தளரா மிகுவெள்ளங் கண்டுமை யோடித் தமைத்தழுவக்
கிளையார் வளைக்கை வடுப்படும் ஈங்கோர் கிறிபடுத்தார்
வளமாப் பொழில்திரு ஏகம்பம் மற்றிது வந்திறைஞ்சி
உளரா வதுபடைத் தோம்மட வாய்இவ் வுலகத்துள்ளே.

உலவிய மின்வடம் வீசி உருமதிர் வுள்முழங்கி
வலவிய மாமதம் பாய்முகில் யானைகள் வானில்வந்தாற்
சுலவிய வார்குழல் பின்னரென் பாரிரெனநினைந்து
நிலவிய ஏகம்பர் கோயிற் கொடியன்ன நீர்மையனே. அசு

நீரென்னி லும்அழுங் கண்முகில் காள்நெஞ்சம் அஞ்சலையென்
றூரென்னி லுந்தம ராயுரைப் பார்அம ராவதிக்கு
நேரென்னி லுந்தகுங் கச்சியுள் ஏகம்பர் நீள்மதில்வாய்ச்
சேரென்னி லுந்தங்கும் வாட்கண்ணி தானன்பர் தேர்வரவே.

வரங்கொண் டிமையோர் நலங்கொள்ளும் ஏகம்பர் கச்சி
யன்னாய், பரங்கொங்கை தூவன்மின் நீர்முத்தம் அன்பர்தந்
தேரின்முன்னே, தரங்கொண்டு பூக்கொண்டு கொன்றை
பொன் னாகத்தண் காந்தள்கொத்தின், கரங்கொண்டு பொற்
சுண்ணம் ஏந்தவும் போந்தன கார்முகிலே. அஅ

கார்முகம் ஆரவண் கைக்கொண்ட கம்பர் கழல்தொழுது
போர்முக மாப்பகை வெல்லச்சென் றார்நினை யார்புணரி

நீர்முக மாக இருண்டு சுரந்தது நேரிழைநாம்
ஆர்முக மாக வினைக்கடல் நீந்தும் அயர்வுயிர்ப்பே. ௮௯

உயிரா யினஅன்பர் தேர்வரக் கேட்டுமுன் வாட்டம்உற்ற
பயிரார் புயல்பெற்ற தென்னநம் பல்வளை பான்மைகளாந்
தயிரார்பால் நெய்யொடும் ஆடிய ஏகம்பர் தம்அருள்போல்
கையிரா வளையமுந் தக்கச் சிறுத்தன கார்மயிலே. ௯0

கார்விடை வண்ணத்தன் அன்றேழ் தழுவினும் இன்றுதனிப்
போர்விடை பெற்றெதிர் மாண்டாரெனஅண்டர் போதவிட்டார்
தார்விடை ஏகம்பர் கச்சிப் புறவிடை தம்பொன்நன்பூண்
மார்விடை வைகல் பெறுவார் தழுவ மழவிடையே. ௯௧

விடைபாய் கொடுமைஎண் ணாதுமே லாங்கன்னி வேற்கருங்கட்
கடைபாய் மனத்தினங் காளையர் புல்கொலி கம்பர்கச்சி
மடைபாய் வயல்இள முல்லையின் மான்கன்றொ டான்கன்றினம்
கடைபாய் தொறும்பதி மன்றிற் கடல்போற் கலந்தெழுமே.

எழுமலர்த் தண்பொழில் ஏகம்பர் கச்சி இருங்கடல்வாய்க்
கொழுமணப் புன்னைத் துணர்மணற் குன்றிற் பரதர்கொம்பே
செழுமலர்ச் சேலல்ல வாளல்ல வேலல்ல நீலமல்ல
முழுமலர்க் கூரம்பின் ஓரிரண் டாலும் முகத்தனவே. ௯௩

முகம்பாகம் பண்டமும் பாகம்என் றேறிய மூதுரையை
உகம்பார்த் திரேல்என் நலம்உய ரேகம்பர் கச்சிமுன்நீர்
அகம்பாக ஆர்வின் அளவில்லை என்னின் பவளச்செவ்வாய்
நகம்பால் பொழில்பெற்ற நாமுற்ற வர்கொள்க நன்மயலே.

மயக்கத்த நல்லிருள் கொல்லுஞ் சுறவொ டெறிமகரம்
இயக்கத் திடுசுழி ஓதங் கழிகிளர் அக்கழித்தார்
துயக்கத் தவர்க்கரு ளாக்கம்பர் கச்சிக் கடலபொன்னூல்
முயக்கத் தகல்வு பொருள்கொண்க நீர்வரும் ஊர்க்கஞ்சுமே.

மேயிரை வைகக் குருகுணா ராமது உண்டுபுன்னை
மீயிரை வண்டோ தமர்பு கடிய விரிகடல்வாய்ப்
பாயிரை நாகங்கொண் டோன்தொழுங் கம்பர்கச் சிப்பவ்வநீர்
தூயிரை கானல்மற் றூரறி வார்நந் துறைவர்பொய்யே. ௯௬

பொய்வரு நெஞ்சினர் வஞ்சனை யாரையும் போகவிடா
மெய்வரும் பேரருள் ஏகம்பர் கச்சி விரையினவாய்க்
கைவரும் புள்ளொடு சங்கினம் ஆர்ப்பநம் சேர்ப்பர்திண்டேர்
அவ்வரு தாமங் களினம்வந் தார்ப்ப அணைகின்றதே. கூஎ

இன்றுசெய் வோம்இத னில்திரு ஏகம்பர்க் கெத்தனையும்
நன்றுசெய் வோம்பணி நாளைஎன் றுள்ளிநெஞ் சேயுடலிற்
சென்றுசெ யாரை விடுந்துணை நாளும் விடாதடிமை
நின்றுசெய் வாரவர் தங்களின் நீள்நெறி காட்டுவரே. கூஅ

காட்டிவைத் தார்தம்மை யாம்கடிப் பூப்பெய்யக் காதல்வெள்ளம்
ஈட்டிவைத் தார்தொழும் ஏகம்பர் ஏதம்இ லாதஎம்மைப்
பூட்டிவைத் தார்தமக் கன்பது பெற்றுப் பதிற்றுப்பத்துப்
பாட்டிவைத் தார்பர விக்தொழு தாமவர் பாதங்களே. கூகூ

பாதம் பரவியொர் பித்துப் பிதற்றிலும் பல்பணியும்
ஏதம் புகுதா வகையருள் ஏகம்பர் ஏத்தெனவே
போதம் பொருளாற் பொலியாத புன்சொற் பனுவல்களும்
வேதம் பொலியும் பொருளா மெனக்கொள்வர் மெய்த்தொண்டரே.

திருச்சிற்றம்பலம்



பட்டணத்துப்பிள்ளையார் அருளிய

# திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது



திருச்சிற்றம்பலம்

இருநில மடந்தை இயல்பினின் உடுத்த
பொருகடல் மேகலை முகமெனப் பொலிந்த
ஒற்றி மாநகர் உடையோய் உருவின்
பெற்றியொன் றாகப் பெற்றோர் யாரே
5 மின்னின் பிறக்கந் துன்னுநின் சடையே
மன்னிய அண்டம்நின் சென்னியின் வடிவே

பாவகன் பரிதி பனிமதி தன்னொடும்
மூவகைச் சுடரும்நின் நுதல்நேர் நாட்டம்
தண்ணொளி ஆரந் தாரா கணமே
10 விண்ணவர் முதலா வேறோர் இடமாக்
கொண்டுறை விசும்பே கோலநின் ஆகம்
எண்டிசை திண்டோள் இருங்கடல் உடையே
அணியுடை அல்குல் அவனிமண் டலமே
மணிமுடிப் பாந்தள்நின் தாளிணை வழக்கே
15 ஒழியா தோடிய மாருதம் உயிர்ப்பே
வழுவா ஓசை முழுதுநின் வாய்மொழி
வானவர் முதலா மன்னுயிர் பரந்த
ஊனமில் ஞானத் தொகுதிநின் உணர்வே
நெருங்கிய உலகினில் நீர்மையும் நிற்றலுஞ்
20 சுருங்கலும் விரிதலுந் தோற்றின தொழிலே
அமைத்தலும் அழித்தலும் ஆங்கதன் முயற்சியும்
இமைத்தலும் விழித்தலும் ஆகும்நின் இயல்பே
என்றிவை முதலா இயல்புடை வடிவினோ
டொன்றிய துப்புரு இருவகை யாகி
25 முத்திறக் குணத்து நால்வகைப் பிறவி
அத்திறத் தைம்பொறி அறுவகைச் சமயமோ
டேழுல காகி எண்வகை மூர்த்தியோ
டூழிதோ றூழி எண்ணிறந் தோங்கி
எவ்வகை யளவினிற் கூடிநின்
30 றவ்வகைப் பொருளுநீ யாகிய விடத்தே. க

இடத்துறை மாதரோ டீருடம் பென்றும்
நடத்தினை நள்ளிருள் நவிற்றினை என்றும்
புலியதள் என்பொடு புனைந்தோய் என்றும்
பலிதிரி வாழ்க்கை பயின்றோய் என்றும்
5 அருவமும் உருவமும் ஆனாய் என்றுந்
திருஅமர் மாலொடு திசைமுகன் என்றும்
உளனே என்றும் இலனே என்றுந்
தளரான் என்றுந் தளர்வோன் என்றும்
ஆதி என்றும் அசோகினன் என்றும்

10 போதியிற் பொலிந்த புராணன் என்றும்
இன்னவை முதலாத் தாமறி அளவையின்
மன்னிய நூலின் பன்மையுள் மயங்கிப்
பிணங்கு மாந்தர் பெற்றிமை நோக்கி
அணங்கிய அவ்வவர்க் கவ்வவை யாகி
15 அடை பற்றிய பளிங்கு போலும்
ஒற்றி மாநகர் உடையோய் உருவே. உ

உருவாம் உலகுக் கொருவ னாகிய
பெரியோய் வடிவின் பிறிதிங் கின்மையின்
எப்பொரு ளாயினும் இங்குள தாமெனின்
5 அப்பொரு ளுனக்கே அவயவ மாதலின்
முன்னிய மூவெயில் முழங்கெரி யூட்டித்
தொன்னீர் வையகந் துயர்கெடச் சூழ்ந்ததும்
வேள்வி மூர்த்திதன் தலையினை விடுத்ததும்
நீள்விசும் பாளிதன் தோளினை நெரித்ததும்
ஓங்கிய மறையோற்(கு) ஒருமுகம் ஒழித்ததும்
10 பூங்கணை வேளைப் பொடிபட விழித்ததுந்
திறல்கெட அரக்கனைத் திருவிரல் உறுத்ததுங்
குறைபடக் கூற்றினைக் குறிப்பினில் அடர்த்ததும்
என்றிவை முதலா ஆள்வினை எல்லாம்
நின்றுழிச் செறிந்தவை நின்செய லாதலின்
15 உலவாத் தொல்புகழ் ஒற்றியூர
பகர்வோர் நினக்கு வேறின்மை கண்டவர்
நிகழ்ச்சியின் நிகழின் அல்லது
புகழ்ச்சியிற் படுப்பரோ பொருளுணர்ந் தோரே. ௩

பொருளுணர்ந் தோங்கிய பூமகன் முதலா
இருள்துணை யாக்கையில் இயங்கு மன்னுயிர்
உருவினும் உணர்வினும் உயர்வினும் பணியினுந்
திருவினுந் திறலினுஞ் செய்தொழில் வகையினும்
5 வெவ்வே றாகி வினையொடும் பிரியா
தொவ்வாப் பன்மையுள் மற்றவர் ஒழுக்கம்
மன்னிய வேலையுள் வான்திரை போல

நின்னிடை எழுந்து நின்னிடை யாகியும்
பெருகியுஞ் சுருங்கியும் பெயர்ந்துந் தோன்றியும்
10 விரவியும் வேருய் நின்றனை விளக்கம்
ஓவாத் தொல்புகழ் ஒற்றி யூர
மூவா மேனி முதல்வ நின்னருள்
பெற்றவர் அறியின் அல்லது
மற்றவர் அறிவரோ நின்னிடை மயக்கே.

மயக்கம்இல் சொல்நீ யாயினும் மற்றவை
துயக்க நின்திறம் அறியாச் சூழலும்
உறைவிடம் உள்ளம் ஆயினும் மற்றது
கறைபட ஆங்கே கரந்த கள்ளமுஞ்
5 செய்வினை உலகினிற் செய்வோய் எனினும்
அவ்வினைப் பயன்நீ அணுகா அணிமையும்
இனத்திடை இன்பம் வேண்டி நிற்பணிவோர்
மனத்திடை வாரி யாகிய வனப்பும்
அன்பின் அடைந்தவர்க் கணிமையும் அலலவர்ச்
10 சேய்மையும் நாள்தொறும்
என்பினை உருக்கும் இயற்கைய ஆதலின்
கண்டவர் தமக்கே ஊனுடல் அழிதல்
உண்டென உணர்ந்தனம் ஒற்றி யூர
மன்னிய பெரும்புகழ் மாதவத்
15 துன்னிய செஞ்சடைத் தூமதி யோயே. ௫

தூமதி சடைமிசை சூடுதல் தூநெறி
யாமதி யானென அமைத்த வாறே
அறனுரு வாகிய ஆனே றேறுதல்
இறைவன் யானென இயற்று மாறே
5 அதுஅவள் அவன்என நின்றமை யார்க்கும்
பொதுநிலை யான்என உணர்த்திய பொருளே
முக்கணன் என்பது முத்தீ வேள்வியில்
தொக்க தென்னிடை என்பதோர் சுருக்கே
வேத மான்மறி ஏந்துதல் மற்றதன்
10 நாதன் நானென நவிற்று மாறே

மூவிலை ஒருதாள் சூலம் ஏந்துதல்
மூவரும் யானென மொழிந்த வாறே
எண்வகை மூர்த்தி என்பதிவ் வுலகினில்
உண்மை யானென உணர்த்திய வாறே
15 நிலநீர் தீவளி உயர்வான் என்றும்
உலவாத் தொல்புகழ் உடையோய் என்றும்
பொருளுநற் பூதப் படையோய் என்றுந்
தெருளநின் றுலகினில் தெருட்டு மாறே
ஈங்கிவை முதலாம் வெண்ணமும் வடிவும்
20 ஓங்குநின் பெருமை உணர்த்தவும் உணராத்
தற்கொலி மாந்தர் தம்மிடைப் பிறந்த
சொற்பொருள் வன்மையிற் சுழலு மாந்தர்க்
காதி யாகிய அறுதொழி லாளர்
ஓதல் ஓவா ஒற்றி யூர
25 சிறுவர் தஞ்செய் கையிற் படுத்து
முறுவலித் திருத்திநீ முகப்படும் அளவே. ௬

அளவினில் இறந்த பெருமையை யாயினும்
எனதுளம் அகலா தொடுங்கினின் றனையே
மெய்யினை இறந்த மெய்யினை யாயினும்
வையகம் முழுதும்நின் வடிவெனப் படுமே
5 கைவலத் தினைநீ எனினுங் காதல்
செய்வோர் வேண்டுஞ் சிறப்பொழி யாயே
சொல்லிய வகையால் துணையலை யாயினும்
நல்லுயிர்க் கூட்ட நாயகன் நீயே
எங்கும் உள்ளோய் எனினும் வஞ்சனை
10 தங்கிய அவரைச் சாராய் நீயே, அஃதான்று
பிறவாப் பிறவியை பெருகாப் பெருமையை
துறவாத் துறவியைத் தொடராத் தொடர்ச்சியை
நுகரா நுகர்ச்சியை நுணுகா நுணுக்கினை
அகலா அகற்சியை அணுகா அணிமையை
15 செய்யாச் செய்கையைச் சிறவாச் சிறப்பினை
வெய்யை தணியை விழுமியை நொய்யை
செய்யை பசியை வெளியை கரியை

ஆக்குதி அழித்தி ஆனபல் பொருள்
நீக்குதி தொகுத்தி நீங்குதி அடைதி
20 ஏனைய வாகிய எண்ணில் பல்குணம்
நினைதொறும் மயக்கும் நீர்மைய ஆதலின்
ஓங்கு கடலுடுத்த ஒற்றி யூர
ஈங்கிது மொழிவார் யாஅர் தாஅஞ்
சொன்னிலை சுருங்கின் அல்லது
25 நின்இயல் அறிவோர் யார்இரு நிலத்தே. எ

நிலத்திடைப் பொறையாய் அவாவினில் நீண்டு
சொலத்தகு பெருமைத் தூரா ஆக்கை
மெய்வளி ஐயொடு பித்தொன் றாக
ஐவகை நெடுங்காற் றுங்குடன் அடிப்ப
5 நரையெனும் நுரையே நாடொறும் வெளுப்ப
திரையுடைத் தோலே செழுந்திரை யாகக்
கூடிய குருதி நீரினுள் நிறைந்து
மூடிய இருமல் ஓசையின் முழங்கிச்
சுடுபசி வெகுளிச் சுறவினம் எறியக்
10 குடரெனும் அரவக் கூட்டம்வந் தொலிப்ப
ஊன்றடி எலும்பின் உள்திடல் அடைந்து
தோன்றிய பல்பிணிப் பின்னகஞ் சூழலக்
கால்கையின் நரம்பே கண்ட மாக
மேதகு நிணமே மெய்ச்சா லாக
15 முழக்குடைத் துளையே முகங்க ளாக
வழுக்குடை மூக்கா(று) ஓதம்வந் தொலிப்ப
இப்பரி சியற்றிய உடலிருங் கடலுள்
துப்புர(வு) என்னுஞ் சுழித்தலைப் பட்டுங்
காவா என்றுநின் அருளினைப் பெற்றவர்
20 நாவா யாகிய நாதநின் பாதம்
முந்திச் சென்று முறைமையின் வணங்கிச்
சிந்தைக் கூம்பினைச் செவ்விதின் நிறுத்தி
உருகிய ஆர்வப் பாய்விரித் தார்த்துப்
பெருகிய நிறையெனுங் கயிற்றிடைப் பிணித்துத்
25 துன்னிய சுற்றத் தொடர்க்கயி றறுத்து

மன்னிய ஒருமைப் பொறியினை முறுக்கிக்
காமப் பாரெனுங் கடுவெளி அற்ற
தூமச சோதுச சடாகுற ஙிறுததுச
சுருங்கா உணர்ச்சித் துடுப்பினைத் துழாவி
30 நெருங்கா அளவில் நீள்கரை ஏற்ற
வாங்க யாத்திரை போக்குதி போலும்
ஓங்கு கடலுடுத்த ஒற்றியூ ரோயே. ௮

ஒற்றி யூர உலவா நின்குணம்
பற்றி யாரப் பரவுதல் பொருட்டா
என்னிடைப் பிறந்த இன்னுப் புன்மொழி
நின்னிடை அணுகா நீர்மைய ஆதலின்
5 ஆவலித் தழுதலில் அகன்ற அம்மனை
கேவலஞ் செய்மையிற் கேளாள் ஆயினும்
பிறித்தற் கரிய பெற்றிய தாகிக்
குறைவினில் ஆர்த்துங் குழவிய தியல்பினை
அறியா தெண்ணில் ஊழிப் பிறவியின்
10 மயங்கிக் கண்ணிலர் கண்பெற் றுங்கே
தாய்தலைப் படநின் தாளிணை வணக்கம்
வாய்தலை அறியா மயக்குறும் வினையேன்
மல்கிய இன்பத் தோடுடன் கூடிய
எல்லையில் அவாவினில் இயற்றிய வாகக்
15 கட்டிய நீயே அவிழ்க்கின் அல்ல(து)
எட்டனை யாயினும் யான்அவிழ்க் கறியேன்
துன்னிடை இருளெனுந் தூற்றிடை ஒதுங்கி
வெள்ளிடை காண விருப்புறு வினையேன்
தந்தையுந் தாயுஞ் சாதியும் அறிவு(ம்)நம்
20 சிந்தையுந் திருவுஞ் செல்கதித் திறனுந்
துன்பமுந் துறவுந் தூய்மையும் அறிவும்
இன்பமும் புகழும் இவைபல பிறவுஞ்
சுவைஒளி ஊறோசை நாற்றந் தோற்றம்
என்றிவை முதலா விளங்குவ எல்லாம்
25 ஒன்றநின் அடிக்கே ஒருங்குடன் வைத்து
நின்றனன் தமியேன் நின்னடி அல்லது

சார்வுமற் றின்மையில் தளர்ந்தோர் காட்சிச்
சேர்விட மதனைத் திறப்பட நாடி
எய்துதற் கரியோய் யான்இனிச்
30 செய்வதும் அறிவனோ தெரியுங் காலே.

காலற் சீறிய கழலோய் போற்றி
மூலத் தொகுதி முதல்வ போற்றி
ஒற்றி மாநகர் உடையோய் போற்றி
முற்று மாகிய முதல்வ போற்றி
5 அணைதொறுஞ் சிறக்கும் அமிர்தே போற்றி
இணைபிறி தில்லா ஈச போற்றி
ஆர்வஞ் செய்பவர்க் கணியோய் போற்றி
தீர்வில் இன்சுவைத் தேனே போற்றி
வஞ்சனை மாந்தரை மறந்தோய் போற்றி
10 நஞ்சினை யமிர்தாய் நயந்தோய் போற்றி
விரிகடல் வையக வித்தே போற்றி
புரிவுடை வனமாய்ப் புணர்ந்தோய் போற்றி
காண முன்பொருள் கருத்துறை செம்மைக்
காணி யாகிய அரனே போற்றி
15 வெம்மை தண்மையென் றிவைகுணம் உடைமையிற்
பெண்ணொ டாண்எனும் பெயரோய் போற்றி
மேவிய அவர்தமை வீட்டினிற் படுக்குந்
தீப மாகிய சிவனே போற்றி
மாலோய் போற்றி மறையோய் போற்றி
20 மேலோய் போற்றி வேதிய போற்றி
சந்திர போற்றி தழலோய் போற்றி
இந்திர போற்றி இறைவ போற்றி
அமரா போற்றி அழகா போற்றி
குமரா போற்றி கூத்தா போற்றி
25 பொருளே போற்றி போற்றி என்றுனை
நாத்தழும் பிருக்க நவிற்றின் அல்ல(து)
ஏத்துதற் குரியோர் யார்இரு நிலத்தே. ௧0

திருச்சிற்றம்பலம்

நம்பியாண்டார்நம்பி அருளிய

## திருநாரையூர்

# விநாயகர் திருவிரட்டைமணிமாலை

---

திருச்சிற்றம்பலம்

என்னை நினைந்தடிமை கொண்டென் இடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான்—புன்னை
விரசுமகிழ் சோலை வியன்நாரை யூர்முக்கண்
அரசுமகிழ் அத்தி முகத் தான். க

முகத்தாற் கரியனென் றாலுந் தனையே முயன்றவர்க்கு
மிகத்தான் வெளியனென் றேமெய்ம்மை உன்னும் விரும்படியார்
அகத்தான் திகழ்திரு நாரையூர் அம்மான் பயந்தஎம்மான்
உகத்தா னவன்றன் உடலம் பிளந்த ஒருகொம்பனே. உ

கொம்பனைய வள்ளி கொழுநன் குறுகாமே
வம்பனைய மாங்கனியை நாரையூர்—நம்பனையே
தன்னவலஞ் செய்துகொளுந் தாழ்தடக்கை யாய்என்னோய்
பின்னவலஞ் செய்வதென்னோ பேசு. ௩

பேசத் தகாதெனப் பேயெரு தும்பெருச் சாளியும்என்
றேசத் தகும்படி ஏறுவ தேஇமை யாதமுக்கட்
கூசத் தருந்தொழில் நுங்கையும் நுந்தையும் நீயும்இந்தத்
தேசத் தவர்தொழு நாரைப் பதியுட் சிவக்களிறே. ௪

களிறு முகந்தவனாய்க் காயஞ்செந் தீயின்
ஒளிறும் உருக்கொண்ட தென்னோ—அளறுதொறும்
பின்நாரை ஊர்ஆரல் ஆரும் பெரும்படுகர்
மன்நாரை யூரான் மகன். ௫

மகத்தினில் வானவர் பல்கண் சிரந்தோள் நெரித்தருளுஞ்
சுகத்தினில் நீள்பொழில் நாரைப் பதியுட் சுரன்மகற்கு

முகத்தது கையந்தக் கையது மூக்கந்த மூக்கதனின்
அகத்தது வாயந்த வாயது போலும் அடுமருப்பே. ௬

மருப்பையொரு கைக்கொண்டு நாரையூர் மன்னும்
பொருப்பையடி போற்றத் துணிந்தால்—நெருப்பை
அருந்தஎண் ணுகின்ற எறும்பன்றே அவரை
வருந்தஎண் ணுகின்ற மலம். ௭

மலஞ்செய்த வல்வினை நோக்கி உலகை வலம்வரும்அப்
புலஞ்செய்த காட்சிக் குமரற்கு முன்னே புரிசடைமேற்
சலஞ்செய்த நாரைப் பதியரன் தன்னைக் கனிதரவே
வலஞ்செய்து கொண்ட மதக்களி றேயுன்னை வாழ்த்துவனே.

வனஞ்சாய வல்வினை நோய்நீக்கி வனசத்
தனஞ்சா யலைத்தவரு வானன்றே—இனஞ்சாயத்
தேரையூர் நம்பர்மகன் திண்டோள் நெரிந்தருளும்
நாரையூர் நம்பர்மக னும். ௯

நாரணன் முன்பணிந் தேத்தநின் றெல்லை நடாவியஅத்
தேரண வுந்திரு நாரையூர் மன்னு சிவன்மகனே
காரண னேஎங் கணபதி யேநற் கரிவதனா
ஆரண நுண்பொரு ளேஎன்ப வர்க்கில்லை அல்லல்களே. ௧௦

அல்லல் களைந்தான்றன் அம்பொன் உலகத்தின்
எல்லை புகுவிப்பான் ஈண்டுழவர்—நெல்லல்களைச்
செங்கழுநீர் கட்குந் திருநாரை யூர்ச்சிவன்சேய்
கொங்கெழுதார் ஐங்கரத்த கோ. ௧௧

கோவிற் கொடிய நமன்தமர் கூடா வகைவிடுவன்
காவில் திகழ்திரு நாரைப் பதியிற் கரும்பனைக்கை
மேவற் கரிய இருமதத் தொற்றை மருப்பின்முக்கண்
ஏவிற் புருவத் திமையவள் தான்பெற்ற யானையையே. ௧௨

யானேத் தியவெண்பா என்னை நினைந்தடிமை
தானே சரணத்தனற்கு நல்கினன்—தேனே
தொடுத்தபொழில் நாரையூர்ச் சூலம் வலனேந்தி
எடுத்த மதமுகத்த ஏறு. ௧௩

ஏறிய சீர்வீ ரணக்குடி ஏந்திழைக் கும்இருந்தேன்
நாறிய பூந்தார்க் குமரற்கு முன்னினை நண்ணலரைச்
சீறிய வெம்பணைச் சிங்கத்தி னுக்கினை யானைவிண்ணோர்
வேறியல் பால்தொழு நாரைப் பதியுள் விநாயகனே. கச

கனமதில்சூழ் நாரையூர் மேவிக் கசிந்தார்
மனமருவி னன்பயந்த வாய்ந்த—சினமருவு
கூசாரம் பூண்டமுகக் குஞ்சரக்கன் றென்றார்க்கு
மாசார மோசொல்லு வான். கரு

வானிற் பிறந்த மதிதவழ் பொழில் மாட்டளிசூழ்
தேனிற் பிறந்த மலர்த்திரு நாரைப் பதிதிகழுங்
கோனிற் பிறந்த கணபதி தன்னைக் குலமலையின்
மானிற் பிறந்த களிறென் றுரைப்பர்இவ் வையகத்தே. கசு

வையகத்தார் ஏத்த மதில்நாரை யூர்மகிழ்ந்து
பொய்யகத்தார் உள்ளம் புகலொழிந்து—கையகத்தோர்
மாங்கனிதன் கொம்பண்டம் பாசமழு மல்குவித்தான்
ஆங்கனிநஞ் சிந்தைஅமர் வான். கஎ

அமரா அமரர் தொழுஞ்சரண் நாரைப் பதியமர்ந்த
குமரா குமரற்கு முன்னவ னேகொடித் தேரவுணர்
தமரா சறுத்தவன் தன்னுழைத் தோன்றின னேஎனநின்
றமரா மனத்தவர் ஆழ்நர கத்தில் அழுந்துவரே. கஅ

அவமதி யாதுள்ளமே அல்லல் அறநல்ல
தவமதியால் ஏத்திச் சதுர்த்தோம்—நவமதியாங்
கொம்பன் விநாயகன்கொங் கார்பொழில்சூழ் நாரையூர்
நம்பன் சிறுவன்சீர் நாம். கசு

நாந்தன மாமனம் ஏத்துகண் டாய்என்று நாண்மலரால்
தாந்தன மாக இருந்தனள் நாரைப் பதிதன்னுளே
சேர்ந்தன னேஐந்து செங்கைய னேநின் திரள்மருப்பை
ஏந்தின னேஎன்னை ஆண்டவ னேஎனக் கென்னையனே. உ௦

திருச்சிற்றம்பலம்



நம்பியாண்டார் நம்பி அருளிய

# கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம்



திருச்சிற்றம்பலம்

நெஞ்சந் திருவடிக் கீழ்வைத்து நீர்மலர்க் கண்பனிப்ப
வஞ்சங் கடிந்துன்னை வந்தித்தி லேன்அன் றுவானருய்ய
நஞ்சங்(கு) அருந்து பெருந்தகை யேநல்ல தில்லைநின்ற
அஞ்செம் பவளவண் ணாஅருட்(கு) யானினி யாரென்பரே. ௧

என்புந் தழுவிய ஊனும் நெகஅக மேயெழுந்த
அன்பின் வழிவந்த ஆரமிர் தேஅடி யேன்உரைத்த
வன்புன் மொழிகள் பொறுத்திகொ லாம்வளர் தில்லைதன்னுள்
மின்புன் மிளிர்சடை வீசிநின் றாடிய விண்ணவனே. ௨

அவநெறிக் கேவிழப் புக்கவிந் நாயேனைத் தாள்வாங்கித்
தவநெறிக் கேயிட்ட தத்துவ னேஅத் தவப்பயனுஞ்
சிவநெறிக் கேஎன்னை உய்ப்பவ னேசென னந்தொறுஞ்செய்
பவமறுத் தாள்வதற் கோதில்லை நட்டம் பயில்கின்றதே. ௩

பயில்கின் றிலேன்நின் திறத்திரு நாமம் பனிமலர்த்தார்
முயல்கின் றிலேன்உன் திருவடிக் கேயப்ப முன்னுதில்லை
இயல்கின்ற நாடகச் சிற்றம் பலத்துள்எந் தாய்இங்ஙனே
அயர்கின்ற நான்எங்ங னேபெறு மாறுநின் னாருளே. ௪

அருதிக்கு விம்மி நிவந்ததோ வெள்ளிக் குன்றமஞ்சு
பருதிக் குழவி உமிழ்கின்ற தேயொக்கும் பற்றுவிட்டோர்
கருதித் தொழுகழற் பாதமுங் கைத்தலம் நான்குமெய்த்த
சுருதிப் பதமுழங் குந்தில்லை மேய சுடரினுக்கே. ௫

சுடலைப் பொடியும் படுதலை மாலையுஞ் சூழ்ந்தஎன்பும்
மடலைப் பொலிமலர் மாலைமென் தோள்மேல் மயிர்க்கயிறும்
அடலைப் பொலிஅயின் மூவிலை வேலும் அணிகொள்தில்லை
விடலைக்கென் றேனைக் கழகிது வேதவி னோதத்தையே. ௬

வேத முதல்வன் தலையுந் தலையாய வேள்விதன்னுள்
நாத னவன்எச்சன் நற்றலை யுந்தக்க ஞர்தலையுங்
காதிய தில்லைச்சிற் றம்பலத் தான்கழல் சூழ்ந்துநின்று
மாதவர் என்னே மறைமொழி யாலே வழுத்துவதே. எ

வழுத்திய சீர்த்திரு மாலுல குண்டுவன் பாம்புதன்னின்
கழுத்தரு கேதுயின் றுனுக்கப் பாந்தளைக் கங்கணமாச்
செழுத்திரள் நீர்த்திருச் சிற்றம் பலத்தான் திருக்கையிட
வழுத்திய கல்லொத் தனுய ஞகிய மாயவனே. அ

மாயவன் முந்நீர்த் துயின்றவன் அன்று மருதிடையே
போயவன் காணுத பூங்கழல் நல்ல புலத்தினர்நெஞ்
சேயவன் சிற்றம் பலத்துள்நின் றுடுங் கழலெவர்க்குந்
தாயவன் தன்பொற் கழல்என் தலைமறை நன்னிழலே. கூ

நிழல்படு பூண்நெடு மாலயன் காணுமை நீண்டவரே
தழல்படு பொன்னக லேந்தித் தமருகந் தாடித்தமைத்
தெழில்பட வீசிக் கரமெறி நீர்த்தில்லை யம்பலத்தே
குழல்படு சொல்வழி யாடுவர் யாவர்க்குங் கூத்தினையே. ௧௦

கூத்தனென் றுந்தில்லை வாணனென் றுங்குழு மிட்டிமையோர்
ஏத்தனென் றுஞ்செவி மாட்டிசை யாதே யிடுசுணங்கை
மூத்தவன் பெண்டீர் குணலையிட் டாலும் முகில்நிறத்த
சாத்தனென் றும் வருமோ இவளுக்குத் தண்ணெனவே.

தண்ணுர் புனற்றில்லைச் சிற்றம் பலந்தன்னில் மன்னிநின்ற
விண்ணு ளனைக்கண்ட நாள்விருப் பாயென் உடல்முழுதுங்
கண்ணுங்கி லோதொழக் கையாங்கி லோதிரு நாமங்கள்கற்
றெண்ணும் பரிசெங்கும் வாயாங்கி லோஎனக் கிப்பிறப்பே.

பிறவியிற் பெற்ற பயனொன்று கண்டிலம் பேரொலிநீர்
நறவியல் பூம்பொழில் தில்லையுள் நாடகம் ஆடுகின்ற
துறவியல் சோதியைச் சுந்தரக் கூத்தனைத் தொண்டர்தொண்டர்
உறவியல் வாற்கண்கள் கண்டுகண் டின்பத்தை உண்டிடவே.

உண்டேன் அவரருள் ஆரமிர் தத்தினை உண்டலுமே
கண்டேன் எடுத்த கழலுங் கனலுங் கவித்தகையும்

ஒண்டேன் மொழியினை நோக்கிய நோக்கும் ஒளிநகையும்
வண்டேன் மலர்த்தில்லை அம்பலத் தாடும் மணியினையே. ௧௪

மணியொப் பனதிரு மால்மகு டத்து மலர்க்கமலத்
தணியொப் பனவன் றன்முடி மேலடி யேன்இடர்க்குத்
துணியச் சமைந்தநல் வீர்வாள் அனையன சூழ்பொழில்கள்
திணியத் திகழ்தில்லை அம்பலத் தான்றன் திருந்தடியே. ௧௫

அடியிட்ட கண்ணினுக் கோஅவன் அன்பினுக் கோஅவுணர்
செடியிட்ட வான்துயர் சேர்வதற் கோதில்லை அம்பலத்து
முடியிட்ட கொன்றைநன் முக்கட் பிரான்அன்று மூவுலகும்
அடியிட்ட கண்ணனுக் கீந்தது வாய்ந்த திரும்படையே. ௧௬

படைபடு கண்ணிதன் பங்கதென் தில்லைப் பரம்பரவல்
விடைபடு கேதுக விண்ணப்பங் கேளென் விதிவசத்தாற்
கடைபடு சாதி பிறக்கினும் நீவைத் தருளுகண்டாய்
புடைபடு கிங்கிணித் தாட்செய்ய பாதம்என் னுள்புகவே. ௧௭

புகவுகிர் வாளெயிற் றால்நிலங் கீண்டு பொறிகலங்கி
மிகவுகு மாற்கரும் பாதத்த னேல்வியன் தில்லைதன்னுள்
நகவுகு லாமதிக் கண்ணியற் கங்கணன் என்றனன்யாந்
தகவுகொ லாந்தக வன்றுகொ லாம்என்று சங்கிப்பனே. ௧௮

சங்கோர் கரத்தன் மகன்தக்கன் தானவர் நான்முகத்தோன்
செங்கோல இந்திரன் தோடலை யூர்வெள்வி சீருடலம்
அங்கோல வெவ்வழ லாயிட் டழிந்தெரிந் தற்றனவால்
எங்கோன் எழிற்றில்லைக் கூத்தன் கடைக்கண் சிவந்திடவே.

ஏவுசெய் மேருத் தடக்கை எழில்தில்லை அம்பலத்து
மேவுசெய் மேனிப் பிரான்அன்றி அங்கணர் மிக்குளரே
காவுசெய் காளத்திக் கண்ணுதல் வேண்டும் வரங்கொடுத்துத்
தேவுசெய் வான்வாய்ப் புனல்ஆட் டியதிறல் வேடுவனே. ௨௦

வேடனென் றாள்வில் விசயற்கு வெங்கணை யன்றளித்த
கோடனென் றாள்குழைக் காதனென் றாள்இடக் காதிலிட்ட
தோடனென் றாள்தொகு சீர்த்தில்லை அம்பலத் தாடுகின்ற
சேடனென் றாள்மங்கை அங்கைச் சரிவளை சிந்தினவே. ௨௧

சிந்திக் கவும்உரை யாடவுஞ் செம்மல ராற்கழல்கள்
வந்திக் கவும்மனம் வாய்கரம் என்னும் வழிகள்பெற்றுஞ்
சந்திக் கிலர்சிலர் தெண்ணர் தண் ணூர்தில்லை அம்பலத்துள்
அந்திக் கமர்திரு மேனிஎம் மான்றன் அருள்பெறவே.

அருள்தரு சீர்த்தில்லை அம்பலத் தான்றன் அருளின்அன்றிப்
பொருள்தரு வானத் தரசா தலிற்புழு வாதல்நன்றுஞ்
சுருள்தரு செஞ்சடை யோனரு ளேற்றுற விக்குநன்றும்
இருள்தரு கீழேழ் நரகத்து வீழும் இருஞ்சிறையே. உ௫

சிறைப்புள வாம்புனல் சூழ்வயல் தில்லைச்சிற் றம்பலத்துப்
பிறைப்பிள வார்சடை யோன்திரு நாமங்க ளேபிதற்ற
மிறைப்புள வாகிவெண் ணீறணிந் தோடேந்தும் வித்தகர்தம்
முறைப்புள வோஅயன் மாலிமை டும்பர்தம் நாயகற்கே. உ௬

அகழ்சூழ் மதில்தில்லை அம்பலக் கூத்த அடியம்இட்ட
முகிழ்சூழ் இலையும் முகைகளும் ஏயுங்கொல் கற்பகத்தின்
திகழ்சூழ் மலர்மழை தூவித் திறம்பயில் சிந்தையராய்ப்
புகழ்சூழ் இமையவர் போற்றித் தொழுநின் பூங்கழற்கே.

பூந்தண் பொழில்சூழ் புலியூர்ப் பொலிசெம்பொன் அம்பலத்து
வேந்தன் தனக்கன்றி ஆட்செய்வ தென்னே விரிதுணிமேல்
ஆந்தண் பழைய அவிழையன் பாகிய பண்டைப்பறைச்
சேந்தன் கொடுக்க அதுவுந் திருஅமிர் தாகியதே. உ௬

ஆகங் கனகனைக் கீறிய கோளரிக் கஞ்சிவிண்ணோர்
பாகங் கனங்குழை யாயரு ளாயெனத் தில்லைப்பிரான்
வேகந் தருஞ்சிம்புள் விட்டரி வெங்கதஞ் செற்றிலனேன்
மோகங் கலந்தன் றுலந்ததன் றேஇந்த மூவுலகே. உஎ

மூவுல கத்தவர் ஏத்தித் தொழுதில்லை முக்கட்பிராற்
கேவு தொழிற்செய்யப் பெற்றவர் யாரெனில் ஏர்விடையாய்த்
தாவு தொழிற்பட் டெடுத்தனன் மாலயன் சாரதியா
மேவிர தத்தொடு பூண்டதொன் மாமிக்க வேதங்களே. உஅ

வேதகச் சிந்தை விரும்பிய வன்தில்லை அம்பலத்து
மேதகக் கோயில்கொண் டோன்சே யவன்வீர ணக்குடிவாய்ப்

போதகப் போர்வைப் பொறிவாள் அரவரைப் பொங்குசினச்
சாதகப் பெண்பிளை தன்னையன் றந்த தலைமகனே. ௨௯

தலையவன் பின்னவன் தாய்தந்தை இந்தத் தராதலத்து
நிலையவ நீக்கு தொழில்புரிந் தோன்நடு வாகிநின்ற
கொலையவன் சூலப் படையவன் ஆலத்தெழு கொழுந்தின்
இலையவன் காண்டற் கருந்தில்லை அம்பலத் துள்ளிறையே.

இறையுந் தெரிகிலர் கண்டும் எழில்தில்லை அம்பலத்துள்
அறையும் புனற்சென்னி யோன்அரு ளால்அன் றடுகரிமேல்
நிறையும் புகழ்த்திரு வாரூ ரனும்நிறை தார்ப்பரிமேல்
நறையுங் கமழ்தொங்கல் வில்லவ னும்புக்க நல்வழியே. ௩௧

நல்வழி நின்றார் பகைநன் றுநொய்யார் உறவில்லென் னுஞ்
சொல்வழி கண்டனம் யாந்தொகு சீர்த்தில்லை அம்பலத்து
வில்வழி தானவர் ஊரெரித் தோன்வியன் சாக்கியனார்
கல்வழி நேர்நின் றளித்தனன் காண்க சிவகதியே. ௩௨

கதியே அடியவர் எய்ப்பினில் வைப்பாக் கருதிவைத்த
நிதியே நிமிர்புன் சடைஅமிர் தேநின்னை என்னுள்வைத்த
மதியே வளர்தில்லை அம்பலத் தாய்மகிழ் மாமலையாள்
பதியே பொறுத்தரு ளாய்கொடி யேன்செய்த பல்பிழையே.

பிழையா யினவே பெருக்கிநின் பெய்கழற் கன்புதன்னில்
நுழையாத சிந்தையி னேனையும் நந்தா கினித்துவலை
முழையார் தருதலை மாலை முடித்த முழுமுதலே
புழையார் கரியுரித் தோய்தில்லை நாத பொறுத்தருளே. ௩௪

பொறுத்தில னேனும்பல் நஞ்சினைப் பொங்கெரி வெங்கதத்தைச்
செறுத்தில னேனும்நந் தில்லைப் பிரான்அத் திரிபுரங்கள்
கறுத்தில னேனும் கமலத் தயன்கதிர் மாமுடியை
அறுத்தில னேனும் அமரருக் கென்கொல் அடுப்பனவே.

அடுக்கிய சீலைய ராய்அகல் ஏந்தித் தசைஎலும்பில்
ஒடுக்கிய மேனியொ டுண்இரப் பார்ஒள் இரணியனை
நடுக்கிய மாநர சிங்கனைச் சிம்புள தாய்நரல
இடுக்கிய பாதன்றன் தில்லைதொ ழாவிட்ட ஏழையரே. ௩௬

ஏழைஎன் புன்மை கருதா திடையறா அன்பெனக்கு
வாழிநின் பாத மலர்க்கே மருவ அருளுகண்டாய்
மாழைமென் னோக்கிதன் பங்க வளர்தில்லை அம்பலத்துப்
போழிளந் திங்கள் சடைமுடி மேல்வைத்த புண்ணியனே.

புண்ணிய னேஎன்று போற்றிசெ யாது புலன்வழியே
நண்ணிய னேற்கினி யாதுகொ லாம்புகல் என்னுள்வந் திட்
டண்ணிய னேதில்லை அம்பல வாஅலர் திங்கள்வைத்த
கண்ணிய னேசெய்ய காமன் வெளுப்பக் கறுத்தவனே. ௩அ

கறுத்தகண் டாஅண்ட வாணு வருபுனற் கங்கைசடை
செறுத்தசெந் தாமணி யேதில்லை யாய்என்னைத் தீவினைகள்
ஒறுத்தல்கண் டாற்சிரி யாரோ பிறர்என் உறுதுயரை
அறுத்தல்செய் யாவிடின் ஆர்க்கோ வருஞ்சொல் அரும்பழியே

பழித்தக் கவும்இக ழான்தில்லை யான்பண்டு வேட்டுவனும்
பழித்திட் டிறைச்சி கலையன் அளித்த விருக்குழங்கன்
மொழித்தக்க சீரதி பத்தன் படுத்திட்ட மீன்முழுதும்
இழித்தக்க என்று தடிர்துசெய் தான்என் றியம்புவரே. ௪0

வரந்தரு மாறிதன் மேலும்உண் டோவயல் தில்லைதன்னுள்
புரந்தரன் மால்தொழ நின்றபி ரான்புலைப் பொய்மையிலே
நிரந்தர மாய்நின்ற என்னையும் மெய்மையிற் றன்னடியார்
தரந்தரு வான்செல்வத் தாழ்த்தினன் பேசருந் தன்மையிதே.

தன்தாள் தரித்தார் யாவர்க்கும் மீளா வழிதருவான்
குன்றா மதில்தில்லை மூதூர்க் கொடிமேல் விடையுடையோன்
மன்றா டவும்பின்னும் மற்றவன் பாதம் வணங்கிஅங்கே
ஒன்றார் இரண்டில் விழுவர்அந் தோசில ஊமர்களே. ௪உ

களைகணி லாமையுந் தன்பொற் கழல்துணை யாதன்மையுந்
துளைகணி லாமுகக் கைக்கரிப் போர்வைச் சுரம்பினையான்
தளைகணி லாமலர்க் கொன்றையன் தண்புலி யூரன்என்றேன்
வளைகணி லாமை வணங்கும் அநங்கன் வரிசிலையே. ௪௩

வரித்தடந் திண்சிலை மன்மத னுதலும் ஆழிவட்டந்
தரித்தவன் தன்மகன் என்பதோர் பொற்புந் தவநெறிகள்

தெரித்தவன் தில்லையுட் சிற்றம் பலவன் திருப்புருவம்
நெரித்தலுங் கண்டது வெண்பொடி யேஅன்றி நின்றிலவே.

நின்றில வேவிச யன்னொடுஞ் சிந்தை களிப்புறநீள்
தென்தில்லை மாநடம் ஆடும் பிரான்றன் திருமலைமேல்
தன்தலை யால்நடந் தேறிச் சரங்கொண் டிழிந்ததென்பர்
கன்றினை யேவிள மேலெறிந் தார்த்த கரியவனே. சரு

கருப்புரு வத்திரு வார்த்தைகள் கேட்டலுங் கண்பனியேன்
விருப்புரு வத்தினொ டுள்ளம் உருகேன் விதிர்விதிரேன்
இருப்புரு வச்சிந்தை என்னைவந் தாண்டதும் எவ்வணமோ
பொருப்புரு வப்புரி சைத்தில்லை ஆடல் புரிந்தவனே. சசு

புரிந்தஅன் பின்றியும் பொய்மையில் ஏயுந் திசைவழியே
விரிந்தகங் கைம்மலர் சென்னியிற் கூப்பில் வியன்நமனார்
பரிந்தவ னார்புகல் இல்லை பதிமூன் றெரியஅம்பு
தெரிந்தவங் கோன்றன் திரையார் புனல்வயற் சேண்தில்லையே.

சேண்தில்லை மாநகர்த் திப்பியக் கூத்தனைக் கண்டும்அன்பு
பூண்டிலை நின்னை மறந்திலை ஆங்கவன் பூங்கழற்கே
மாண்டிலை இன்னம் புலன்வழி யேவந்து வாழ்ந்திடுவான்
மீண்டனை என்னைஎன் செய்திட வோசிந்தை நீவிளம்பே.

விளவைத் தளர்வித்த விண்டுவுந் தாமரை மேல்அயனும்
அளவிற் கறியா வகைநின்ற அன்று அடுக்கல்பெற்ற
தளர்வில் திருநகை யாளும்நின் பாகங்கொல் தண்புலியூர்க்
களவிற் கனிபுரை யுங்கள்ள வார்சடைக் கங்கையனே. சகூ

கங்கை வலமிடம் பூவலங் குண்டலந் தோடிடப்பால்
தங்கும் கரம்வலம் வெம்மழு வீயிடம் பாந்தள்வலஞ்
சங்கம் இடம்வலந் தோலிடம் ஆடை வலம்அக்கிடம்
அங்கஞ் சரிஅம் பலவன் வலங்காண் இடம்அணங்கே. ருo

அணங்கா டகக்குன்ற மாதற வாட்டிய வாலமர்ந்தாட்
கிணங்கா யவன்தில்லை எல்லை மிதித்தலும் என்புருகா
வணங்கா வழுத்தா விழாஎழும் பாவைத் தவாமதர்த்த
குணங்காண் இவள்என்ன என்றுகொ லாம்வந்து கூடுவதே.

கூடுவ தம்பலக் கூத்தன் அடியார் குழுவுதொறுந்
தேடுவ தாங்கவன் ஆக்கம்அச் செவ்வழி அவ்வழியே
ஓடுவ துள்ளத் திருத்துவ தொண்சுட ரைப்பிறவி
வீடுவ தாக நினையவல் லோர்செய்யும் வித்தகமே. ருஉ

வித்தகச் செஞ்சடை வெண்மதிக் கார்நிறக் கண்டத்தெண்டோள்
மத்தகக் கைம்மலைப் போர்வை மதில்தில்லை மன்னனைத்தஞ்
சித்தகக் கோயில் இருத்துந் திறத்தா கமிகர்க்கல்லாற்
புத்தகப் பேய்களுக் கெங்கித்ததோ அரன்பொன்னடியே.

பொன்னம் பலத்துறை புண்ணியன் என்பர் புயன்மறந்து
கன்னன்மை தீரப் புனிற்றுக் கலிக்காமற் கன்றுபுன்கூர்
மன்னு மழைபொழிந் நீர்அறு வேலிகொண் டாங்கவற்கே
பின்னும் பிழைதவிர்த் நீர்அறு வேலிகொள் பிஞ்ஞகனே.

நேசன்அல் லேன்நினை யேன்வினை தீர்க்குந் திருவடிக்கீழ்
வாசநன் மாமலர் இட்டிறைஞ் சேன்என்றன் வாயதனால்
தேசனென் ஞானபொன் னார்திருச் சிற்றம் பலம்நிலவும்
ஈசனென் னேன்பிறப் பென்னாய்க் கழியுங்கொல் என்றனக்கே.

தனந்தலை சக்கரம் வானத் தலைமை குபேரன்தக்கன்
வனந்தலை யேறடர்த் தோன்வா சவன்உயிர் பல்லுடலூர்
இனந்தலை காலன் பகல்காமன் தானவர் தில்லைவிண்ணோர்
இனந்தலை வன்அரு ளான்முனி வாற்பெற் றிகந்தவரே. ருகூ

அவமதித் தாழ்நர கத்தில் இடப்படும் ஆதர்களுந்
தவமதித் தொப்பில ரென்னவிண் ணோருந் தகைமையரும்
நவநிதித் தில்லைபுட் சிற்றம் பலத்து நடம்பயிலுஞ்
சிவநிதிக் கேநினை யாரும் நினைந்திட்ட செல்வருமே. ருஎ

வருவா சகத்தினில் முற்றுணர்ந் தோனைவண் தில்லைமன்னைத்
திருவாத வூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவைகண் டேயுமற் றப்பொருளைத்
தெருளாத வுள்ளத் தவர்கவி பாடிச் சிரிப்பிப்பரே. ருஅ

சிரித்திட்ட செம்பவ ளத்தின் திரளுஞ் செழுஞ்சடைமேல்
விரித்திட்ட பைங்கதிர்த் திங்களும் வெங்கதப் பாந்தளுந்தீத்

தரித்திட்ட அங்கையுஞ் சங்கச் சுருளும்என் நெஞ்சினுள்ளே
தெரித்திட்ட வாதில்லைச் சிற்றம் பலத்துத் திருநடனே.

நடஞ்செய்சிற் றம்பலத் தான்முனி வென்செய்யுங் காமன்அன்று
கொடுஞ்சினத் தீவிழித் தாற்குக் குளிர்ந்தனன் விற்கொடும்பூண்
விடுஞ்சினத் தானவர் வெந்திலர் வெய்தென வெங்கதத்தை
ஒடுங்கிய காலன்அந் நாணின் றுதையுண்டு விட்டனனே. ௬0

விட்டங் கொளிமணிப் பூண்திகழ் வன்மதன் மெய்புரைக்கில்
இட்டங் கரியநல் லானல்லன் அம்பலத் தெம்பரன்மேற்
கட்டங் கியகணை எய்தலுந் தன்னைப்பொன் னார்முடிமேற்
புள்தங்கி னான்மக னும்என்று பார்க்கப் பொடிந்தனனே. ௬௧

பொடியேர் தருமே னியனாகிப் பூசல் புகவடிக்கே
கடிசேர் கணைகுளிப்பக் கண்டு கோயிற் கருவியில்லா
வடியே படஅமை யுங்கணை என்ற வரகுணன்தன்
முடியே தருகழல் அம்பலத் தாடிதன் மொய்கழலே. ௬௨

கழலும் பசுபாச ராம்இமை யோர்தங் கழல்பணிந்திட்
டழலும் இருக்குந் தருக்குடை யோர்இடப் பால்வலப்பால்
தழலுந் தமருக மும்பிடித் தாடிசிற் றம்பலத்தைச்
சுழலும் ஒருகால் இருகால் வரவல்ல தோன்றல்களே. ௬௩

தோன்றலை வெண்மதி தாங்கியைத் துள்ளிய மாலயற்குத்
தான்தலை பாதங்கள் சார்வரி யோன்தன்னைச் சார்ந்தவர்க்குத்
தேன்தலை ஆன்பா லதுகலந் தாலன்ன சீரனைச்சீர்
வான்தலை நாதனைக் காண்பதென் றோதில்லை மன்றிடையே.

மன்றங் கமர்திருச் சிற்றம் பலவ வடவனத்து
மின்றங் கிடைக்குந்தி நாடக மாடக்கொல் வெண்டரங்கந்
துன்றங் கிளர்கங்கை யானை சுடுசினத் தீயரவக்
கன்றங் கடைசடை மேலடை யாவிட்ட கைதவமே. ௬௫

தவனைத் தவத்தவர்க் கன்பனைத் தன்னடி எற்குதவுஞ்
சிவனைச் சிவக்கத் திரிபுரத் தைச்சிவந் தானைச்செய்ய
அவனைத் தவளத் திருநீ றனைப்பெரு நீர்கரந்த
பவனைப் பணியுமின் நும்பண்டை வல்வினை பற்றறவே. ௬௬

பற்றற முப்புரம் வெந்தது பைம்பொழில் தில்லைதன்னுள்
செற்றரு மாமணிக் கோயிலின் நின்றது தேவர்கணஞ்
சுற்றரு நின்புகழ் ஏத்தித் திரிவது சூழ்சடையோய்
புற்றர வாட்டித் திரியு மதுவொரு புல்லனவே. ௬௭

புல்லறி வின்மற்றைத் தேவரும் பூம்புலி யூருள்நின்ற
வல்லெறி மாமதிக் கண்ணிய னைப்போல் அருளுவரே
கல்லெறிந் தானுந்தன் வாய்நீர் கதிர்முடி மேலுகுத்த
நல்லறி வாளனும் மீளாவழி சென்று நண்ணினரே. ௬௮

நண்ணிய தீவினை நாசஞ் செலுத்தி நமனுலகத்
தெண்ணினை நீக்கி இமையோர் உலகத் திருக்கலுற்றீர்
பெண்ணினொர் பாகத்தன் சிற்றம் பலத்துப் பெருநடனைக்
கண்ணினை யார்தரக் கண்டுகை யாரத் தொழுமின்களே.

கைச்செல்வம் எய்திட லாம்என்று பின்சென்று கண்குழித்தல்
பொய்ச்செல்வர் செய்திடும் புன்மைகட் கேயென்றும் பொன்றல் இல்லா
அச்செல்வம் எய்திட வேண்டுதி யேதில்லை அம்பலத்துள்
இச்செல்வன் பாதங் கருதிரந் தேன்உன்னை என்நெஞ்சமே.

திருச்சிற்றம்பலம்

நம்பியாண்டார்நம்பி அருளிய

# திருத்தொண்டர் திருவந்தாதி

திருச்சிற்றம்பலம்

*பொன்னி வடகரை சேர்நாரை யூரிற் புழைக்கைமுக
மன்னன் அறுபத்து மூவர் பதிதே மரபுசெயல்
பன்னஅத் தொண்டத் தொகைவகை பல்கும்அந் தாதிதனைச்
சொன்ன மறைக்குல நம்பிபொற் பாதத் துணைதுணையே.

## தில்லைவாழ் அந்தணர்

செப்பத் தகுபுகழ்த் தில்லைப் பதியிற் செழுமறையோர்
ஒப்பப் புவனங்கள் மூன்றினும் உம்பரின் ஊரெரித்த

---

*இத்துதி பிற்காலத் தான்றோரால் பாடப்பட்டது. இத்திருமுறையின் மொத்த பாடற்றொகைக் கணக்கில் இது சேர்க்கப்படவில்லை.

அப்பர்க் கமுதத் திருநடர்க் கந்திப் பிறையணிந்த
துப்பர்க் குரிமைத் தொழில்புரி வோர்தமைச் சொல்லுதுமே.

## திருநீலகண்ட நாயனார்

சொல்லச் சிவன்திரு ஆணை தன் தூமொழி தோள்நசையை
ஒல்லைத் துறந்துரு மூத்ததற் பின்உமை கோன்அருளால்
வில்லைப் புரைநுத லாளொ டிளமைபெற் றின்பமிக்கான்
தில்லைத் திருநீல கண்டக் குயவனுஞ் செய்தவனே. ௨

## இயற்பகை நாயனார்

செய்தவர் வேண்டிய தியாதுங் கொடுப்பச் சிவன்தவனாய்க்
கைதவம் பேசிநின் காதலி யைத்தரு கென்றலுமே
மைதிகழ் கண்ணியை ஈந்தவன் வாய்ந்த பெரும்புகழ்வந்
தெய்திய காவிரிப் பூம்பட் டினத்துள் இயற்பகையே. ௩

## இளையான் குடிமாற நாயனார்

இயலா இடைச்சென்ற மாதவற் கின்னமு தாவிதைத்த
வயலார் முளைவித்து வாரி மனைஅலக் கால்வறுத்துச்
செயலார் பயிர்விழுத் தீங்கறி யாக்கும் அவன்செழுநீர்
கயலார் இளையான் குடியுடை மாறனெங் கற்பகமே. ௪

## மெய்ப்பொருள் நாயனார்

கற்றநன் மெய்த்தவன் போலொரு பொய்த்தவன் காய்சினத்தாற்
செற்றவன் தன்னை அவனைச் செறப்புக லுந்திருவாய்
மற்றவன் "தத்தா நமரே" எனச்சொல்லி வானுலகம்
பெற்றவன் சேதியன் மெய்ப்பொரு ளாமென்று பேசுவரே.

## விறன்மிண்ட நாயனார்

பேசும் பெருமையவ் வாரூ ரனையும் பிரானவனும்
ஈசன் தனையும் புறகுதட் டென்றவன் ஈசனுக்கே
நேசன் எனக்கும் பிரான்மனைக் கேபுக நீடுதென்றல்
வீசும் பொழில்திருச் செங்குன்ற மேய விறன்மிண்டனே.

## அமர்நீதி நாயனார்

மிண்டும் பொழிற்பழை யாறை அமர்நீதி வெண்பொடியின்
முண்டந் தரித்த பிராற்குநல் லூரின்முன் கோவணம்நேர்
கொண்டிங் கருளென்று தன்பெருஞ் செல்வமுந் தன்னையுந்தன்
துண்ட மதிநுத லாளையும் ஈந்த தொழிலினனே. ௭

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

தொழுதும் வணங்கியும் மாலயன் தேடருஞ் சோதிசென்றாங்
கெழுதுந் தமிழ்ப்பழ ஆவணங் காட்டி எனக்குன்குடி
முழுதும் அடிமைவர் தாட்செய் எனப்பெற் றவன்முரல்தேன்
ஒழுகும் மலரின்நற் றார்எம்பி ரான்நம்பி யாரூரனே. ௮

## எறிபத்த நாயனார்

ஊர்மதில் மூன்றட்ட உத்தமர்க் கென்றோர் உயர்தவத்தோன்
தார்மலர் கொய்யா வருபவன் தண்டின் மலர்பறித்த
ஊர்மலை மேற்கொளும் பாகர் உடல்துணி யாக்குமவன்
ஏர்மலி மாமதில் சூழ்கரு வூரில் எறிபத்தனே. ௯

## ஏனாதிநாத நாயனார்

பத்தனை ஏனாதி நாதனைப் பார்நீ டெயினிதன்னுள்
அத்தனைத் தன்னோ டமர்மலைந் தான்நெற்றி நீறுகண்டு
கைத்தனி வாள்வீ டொழிந்தவன் கண்டிப்ப நின்றருளும்
நித்தனை ஈழக் குலதீபன் என்பர்இந் நீள்நிலத்தே. ௧௦

## கண்ணப்ப நாயனார்

நிலத்தில் திகழ்திருக் காளத்தி யார்திரு நெற்றியின்மேல்
நலத்திற் பொழிதரு கண்ணிற் குருதிகண் டுள்நடுங்கி
வலத்திற் கடுங்கணை யால்தன் மலர்க்கண் இடந்தப்பினான்
குலத்திற் கிராதன்நங் கண்ணப்ப னாம்என்று கூறுவரே. ௧௧

## குங்குலியக்கலய நாயனார்

ஏய்ந்த கயிறுதன் கண்டத்திற் பூட்டி எழிற்பனந்தாள்
சாய்ந்த சிவன்நிலைத் தான்என்பர் காதலி தாலிகொடுத்

தாய்ந்தநற் குங்குலி யங்கொண் டனற்புகை காலனைமுன்
காய்ந்த அரற்கிட்ட தென்கட வூரிற் கலயனையே. கஉ

## மானக்கஞ்சாற நாயனார்

கலச முலைக்கன்னி காதற் புதல்வி கமழ்குழலை
நலசெய் தவத்தவன் பஞ்ச வடிக்கிவை நல்கெனலும்
அலகு மெனக்கரு தாதவள் கூந்தல் அரிந்தளித்தான்
மலைசெய் மதிற்கஞ்சை மானக்கஞ் சாறன் எனும்வள்ளலே.

## அரிவாட்டாய நாயனார்

வள்ளற் பிராற்கமு தேந்தி வருவோன் உகலும்இங்கே
வெள்ளச் சடையாய் அமுதுசெய் யாவிடில் என்தலையைத்
தள்ளத் தகுமென்று வாட்பூட் டியதடங் கையினன்காண்
அள்ளற் பழனக் கணமங் கலத்தரி வாட்டாயனே. கசு

## ஆனாய நாயனார்

தாயவன் யாவுக்குந் தாழ்சடை மேல்தனித் திங்கள்வைத்த
தூயவன் பாதந் தொடர்ந்துதொல் சீர்துளை யாற்பரவும்
வேயவன் மேல்மழ நாட்டு விரிபுனல் மங்கலக்கோன்
ஆயவன் ஆயன் என்னை உவந்தாண் டருளினனே. கரு

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

"அருட்டுறை அத்தற் கடிமைப்பட் டேன்இனி அல்லன்" என்னும்
பொருட்டுறை யாவதென் னேஎன்ன வல்லவன் பூங்குவளை
இருட்டுறை நீர்வய லுவற் பதிக்கும் பிரான்அடைந்தோர்
மருட்டுறை நீக்கிநல் வான்வழி காட்டிட வல்லவனே. கசு

## மூர்த்தி நாயனார்

அவந்திரி குண்ட மணுவதின் மாள்வன்என் றன்றுலவாய்ச்
சிவன்திரு மேனிக்குச் செஞ்சந் தனமாச் செழுமுழங்கை
உவந்தொளிர் பாறையில் தேய்த்தவ காண்டஒண் மூர்த்திதன்ஊர்
நிவந்தபொன் மாட மதுரா புரிஎன்னும் நீள்பதியே. கஎ

## முருக நாயனார்

*பதிகந் திகழ்தரு பஞ்சாக் கரம்பயில் நாவினன்சீர்*
*மதியஞ் சடையாற் கலர்தொட் டணிபவன் யான்மகிழ்ந்து*
*துதிஅங் கழற்சண்பை நாதற்குத் தோழன்வன் தொண்டன்அம்பொன்*
*அதிகம் பெறும்புக லூர்முரு கனெனும் அந்தணனே.* கஅ

## உருத்திரபசுபதி நாயனார்

*அந்தாழ் புனல்தன்னில் அல்லும் பகலும்நின் றாதரத்தால்*
*உந்தாத அன்பொடு (உ)ருத்திரஞ் சொல்லிக் கருத்தமைந்த*
*பைந்தார் உருத்திர பசுபதி தன்னற் பதிவயற்கே*
*நந்தார் திருத்தலை யூரென் றுரைப்பர்இந் நானிலத்தே.* ககூ

## திருநாளைப்போவார் நாயனார்

*நாவார் புகழ்த்தில்லை அம்பலத் தான்அருள் பெற்றுநாளைப்*
*போவா னவனும் புறத்திருத் தொண்டன்றன் புன்புலைபோய்*
*மூவா யிரவர்கை கூப்ப முனியா யவன்பதிதான்*
*மாவார் பொழில்திகழ் ஆதனூர் என்பர்இம் மண்டலத்தே.*

## திருக்குறிப்புத்தொண்ட நாயனார்

*மண்டும் புனற்சடை யான்தமர் தூசெற்றி வாட்டும்வகை*
*விண்டு மழைமுகில் வீடா தொழியின்யான் வீவன்என்று*
*முண்டம் படர்பாறை முட்டும் எழிலார் திருக்குறிப்புத்*
*தொண்டன் குலங்கச்சி ஏகா வியர்தங்கள் தொல்குலமே.*

## சண்டேசுர நாயனார்

*குலமே றியசேய்ஞ லூரிற் குரிசில் குரைகடல்சூழ்*
*தலமே றியவிறற் சண்டிகண் டீசர்தந்தை தாள்இரண்டும்*
*வலமே றியமழு வால்எறிந் தீசன் மணிமுடிமேல்*
*நலமே றியபால் சொரிந்தலர் சூட்டிய நன்னிதியே.* உஉ

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

*"நிதியார் துருத்திதென் வேள்விக் குடியாய் நினைமறந்த*
*மதியேற் கறிகுறி வைத்துப் புகர்பின்னை மாற்றி"யென்று*

ஆதியா அருள்சொன்ன வாறறி வாரிடைப் பெற்றவன்காண்
நதியார் புனல்வயல் நாவலர் கோனென்னும் நற்றவனே.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

நற்றவன் நல்லூர்ச் சிவன்திருப் பாதந்தன் சென்னிவைக்கப்
பெற்றவன் மற்றிப் பிறப்பற வீரட்டர் பெய்கழற்குள்
உற்றவன் உற்ற விடமடை யாரிட ஒள்ளமுதாத்
துற்றவன் ஆமூரின் நாவுக் கரசெனுந் தூமணியே. உச

மணியினை மாமறைக் காட்டு மருந்தினை வண்மொழியால்
திணியன நீள்கத வந்திறப் பித்தன தெண்கடலிற்
பிணியன கல்மிதப் பித்தன சைவப் பெருநெறிக்கே
அணியன நாவுக் கரையர்பி ரான்தன் அருந்தமிழே. உரு

## குலச்சிறை நாயனார்

அருந்தமி ழாகரன் வாதில் அமணைக் கழுநுதிமேல்
இருந்தமிழ் நாட்டிடை ஏற்றுவித் தோனெழிற் சங்கம்வைத்த
பெருந்தமிழ் மீனவன் தன்னதி காரி பிரசம்மல்கு
குருந்தவிழ் சாரல் மணமேற் குடிமன் குலச்சிறையே. உசு

## பெருமிழலைக்குறும்ப நாயனார்

சிறைநன் புனல்திரு நாவலூ ராளி செழுங்கயிலைக்
கிறைநன் கழல்நாளை எய்தும் இவனருள் போற்றஇன்றே
பிறைநன் முடியன் அடியடை வேனென் றுடல்பிரிந்தான்
நறைநன் மலர்த்தார் மிழலைக் குறும்பன் எனும்நம்பியே.

## காரைக்காலம்மையார்

"நம்பன் திருமலை நான்மிதி யேன்" என்று தாளிரண்டும்
உம்பர் மிசைத்தலை யால்நடந் தேற உமைநகலுந்
செம்பொன் னுருவன் "என் அம்மை" எனப்பெற் றவள்செழுந்தேன்
கொம்பி னுகுகாரைக் காலினில் மேய குலதனமே. உஅ

## அப்பூதியடிகள் நாயனார்

தனமா வதுதிரு நாவுக் கரசின் சரணமென்று
மனமார் புனற்பந்தர் வாழ்த்திவைத் தாங்கவன் வண்தமிழ்க்கே

இனமாத் தனது பெயரிடப் பெற்றவன் எங்கள்பிரான்
அனமார் வயல்திங்கள் ஊரினில் வேதியன் அப்பூதியே. உகூ.

## திருநீலநக்க நாயனார்

பூதிப் புயத்தர் புயத்திற் சிலந்தி புகலும்அஞ்சி
ஊதித் துமிந்த மனைவியை நீப்பவுப் பாலவெல்லாம்
பேதித் தெழுந்தன காண்என்று பின்னுகன் காட்டுமவன்
நீதித் திகழ்சாத்தை நீலநக் கன்எனும் வேதியனே. ரு0.

## நமிநந்தியடிகள் நாயனார்

வேத மறிக்கரத் தாரூர் அரற்கு விளக்குநெய்யைத்
தீது செறிஅமண் கையரட் டாவிடத் தெண்புனலால்
ஏத முறுக அருகரென் றன்று விளக்கெரித்தான்
நாதன் எழில்ஏமப் பேறூர் அதிபன் நமிநந்தியே. ருக.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

நந்திக்கும் நம்பெரு மாற்குநல் ஆரூரில் நாயகற்குப்
பந்திப் பரியன செந்தமிழ் பாடிப் படர்புனலிற்
சிந்திப் பரியன சேவடி பெற்றவன் சேவடியே
வந்திப் பவன்பெயர் வன்தொண்டன் என்பர்இவ் வையகத்தே.

## திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

வையம் மகிழ யாம்வாழ அமணர் வலிதொலைய
ஐயன் பிரம புரத்தரற் கம்மென் குதலைச்செவ்வாய்
பைய மிழற்றும் பருவத்துப் பாடப் பருப்பதத்தின்
தையல் அருள்பெற் றனன்என்பர் ஞானசம் பந்தனையே.

பந்தார் விரலியர் வேள்செங்கட் சோழன் முருகன்நல்ல
சந்தார் அகலத்து நீலநக் கன்பெயர் தான்மொழிந்து
கொந்தார் சடையர் பதிகத்தி லிட்டடி யேன்கொடுத்த
அந்தாதி கொண்ட பிரான்அருட் காழியர் கொற்றவனே.

## ஏயர்கோன்கலிக்காம நாயனார்

கொற்றத் திறல்எந்தை தந்தைதன் தந்தையெங் கூட்டமெல்லாந்
தெற்றச் சடையாய் நினதடி யேந்திகழ் வன்தொண்டனே

மற்றிப் பிணிதவிர்ப் பானென் றுடைவாள் உருவியங்நோய்
செற்றுத் தவிர்கலிக் காமன் குடியயர் சீர்க்குடியே. ௩௫

## திருமூல நாயனார்

குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன் தன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டென்உச்சி
அடிமன்ன வைத்த பிரான்மூல னாகின்ற அங்கணனே. ௩௬

## தண்டியடிகள் நாயனார்

கண்ணார் மணிபொன் றுமின்றிக் கயிறு பிடித்தரற்குத்
தண்ணார் புனல்தடந் தொட்டலுந் தன்னை நகும்அமணர்
கண்ணுங் கிழப்ப அமணர் கலக்கங்கண் டம்மலர்க்கண்
விண்ணு யகனிடைப் பெற்றவன் ஆரூர் விறல்தண்டியே.

## மூர்க்க நாயனார்

தண்டலை சூழ்திரு வேற்காட்டூர் மன்னன் தகுகவற்றாற்
கொண்டவல் லாயம்வன் சூதினை வென்றுமுன் கொண்டபொருள்
முண்டநன் னீற்றன் அடியவர்க் கீபவன் மூர்க்கன்என்பர்
தண்டலை நீரொண் குடந்தையின் மேவுநற் சூதனையே. ௩அ

## சோமாசிமாற நாயனார்

சூதப் பொழில்அம் பர்அந்தணன் சோமாசி மாறனென்பான்
வேதப் பொருள்அஞ் செழுத்தும் விளம்பியல் லான்மொழியான்
நீதிப் பரன்மன்னு நித்த நியமன் பரவையென்னும்
மாதுக்குக் காந்தன்வன் தொண்டன் தனக்கு மகிழ்துணையே.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

துணையும் அளவுமில் லாதவன் தன்அரு ளேதுணையாக்
கணையுங் கதிர்நெடு வேலுங் கறுத்த கயலிணையும்
பிணையும் நிகர்த்தகட் சங்கிலி பேரமைத் தோளிரண்டும்
அணையு மவன்திரு வாரூரன் ஆகின்ற அற்புதனே. ௪0

### சாக்கிய நாயனார்

தகடன ஆடையன் சாக்கியன் மாக்கல் தடவரையின்
மகள்தனந் தாக்கக் குழைந்ததிண் தோளர்வண் கம்பர்செம்பொன்
திகழ்தரு மேனியிற் செங்கல் எறிந்து சிவபுரத்துப்
புகழ்தரப் புக்கவ னூர்சங்க மங்கை புவனியிலே. சக

### சிறப்புலி நாயனார்

புவனியிற் பூதியுஞ் சாதன மும்பொலி வார்ந்துவந்த
தவநிய மற்குச் சிறப்புச்செய் தத்துவ காரணனும்
அவனியிற் கீர்த்தித்தென் ஆக்கூர் அதிபன் அருமறையோன்
சிவன்நிய மந்தலை நின்றதொல் சீர்நஞ் சிறப்புலியே. சஉ

### சிறுத்தொண்ட நாயனார்

புலியின் அதளுடைப் புண்ணியற் கின்னமு தாத்தனதோர்
ஒலியின் சதங்கைக் குதலைப் புதல்வன் உடல்துணித்துக்
கலியின் வலிகெடுத் தோங்கும் புகழ்ச்சிறுத் தொண்டன்கண்டீர்
மலியும் பொழிலொண்செங் காட்டங் குடியவர் மன்னவனே.

### சேரமான்பெருமாள் நாயனார்

மன்னர் பிரான்எதிர் வண்ணான் உடல்உவர் ஊறிநீறார்
தன்னர் பிரான்தமர் போல வருதலுந் தான்வணங்க
என்னர் பிரான்"அடி வண்ணான்" என"அடிச் சேரன்"என்னுந்
தென்னர் பிரான்கழ றிற்றறி வான்எனுஞ் சேரலனே. சச

சேரற்குத் தென்னா வலர்பெரு மாற்குச் சிவன்அளித்த
வீரக் கடகரி முன்புதன் பந்தி இவுளிவைத்த
வீரற்கு வென்றிக் கருப்புவில் வீரனை வெற்றிகொண்ட
சூரற் கெனதுள்ளம் நன்றுசெய் தாய்இன்று தொண்டுபட்டே.

### கணநாத நாயனார்

தொண்டரை யாக்கி யவரவர்க் கேற்ற தொழில்கள்செய்வித்
தண்டர்தங் கோனக் கணத்துக்கு நாயகம் பெற்றவன்காண்
கொண்டல்கொண் டேறிய மின்னுக்குக் கோல மடல்கள்தொறுங்
கண்டல்வெண் சோறளிக் குங்கடற் காழிக் கணநாதனே.

## கூற்றுவ நாயனார்

நாதன் திருவடி யேமுடி யாகக் கவித்துநல்ல
போதங் கருத்திற் பொறித்தமை யாலது கைகொடுப்ப
ஓதந் தழுவிய ஞாலமெல் லாம்ஒரு கோலின்வைத்தான்
கோதை நெடுவேற் களப்பாள னாகிய கூற்றுவனே. சஎ

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

கூற்றுக் கெவனோ புகல்திரு வாரூரன் பொன்முடிமேல்
ஏற்றுத் தொடையலும் இன்னடைக் காயும் இடுதருமக்
கோற்பொருத்து கூனனுங் கூன்போய்க் குருடனுங் கண்பெற்றமை
சாற்றித் திரியும் பழமொழி யாம்இத் தரணியிலே. சஅ

## பொய்யடிமையில்லாத புலவர்

தரணியிற் பொய்ம்மை இலாத்தமிழ்ச் சங்க மதிற்கபிலர்
பரணர்நக் கீரர் முதல்நாற்பத் தொன்பது பல்புலவோர்
அருள்நமக் கீயுந் திருவால வாய்அரன் சேவடிக்கே
பொருள்அமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே. சகூ

## புகழ்ச்சோழ நாயனார்

புலமன் னியமன்னைச் சிங்கள நாடு பொடிபடுத்த
குலமன் னியபுகழ்க் கோகன நாதன் குலமுதலோன்
நலமன் னியபுகழ்ச் சோழன தென்பர் நகுசுடர்வாள்
வலமன் னியஎறி பத்தனுக் கீந்தஒ ரார் வண்புகழே. ருo

## நரசிங்கமுனையரைய நாயனார்

புகழும் படிஎம் பரமே தவர்க்குநற் பொன்னிடுவோன்
இகழும் படியோர் தவன்மட வார்புனை கோலம்எங்கும்
நிகழும் படிகண் டவனுக் கிரட்டிபொன் னிட்டவன்நீள்
திகழும் முடிநர சிங்க முனையர சன்திறமே. ருக

## அதிபத்த நாயனார்

திறம்அமர் மீன்படுக் கும்பொழு தாங்கொரு மீன்சிவற்கென்
றுறம்அமர் மாகடற் கேவிடு வோன்ஒரு நாட்கனக

நிறம்அமர் மீன்பட நின்மலற் கென்றுவிட் டோன்கமலம்
புறம்அமர் நாகை அதிபத்த னாகிய பொய்யிலியே. ருஉ

## கலிக்கம்ப நாயனார்

பொய்மைக் கடிந்துநம் புண்ணியர்க் காட்பட்டுத் தன்னடியான்
சைவத் திருவுரு வாய்வரத் தான்அவன் தாள்கழுவ
வையத் தவர்முன்பு வெள்கிநீர் வாரா விடமனைவி
கையைத் தடிந்தவன் பெண்ணா கடத்துக் கலிக்கம்பனே.

## கலிய நாயனார்

கம்பக் கரிக்கும் சிலந்திக்கும் நல்கிய கண்ணுதலோன்
உம்பர்க்கு நாதற் கொளிவிளக் கேற்றற் குடலிலனாய்க்
கும்பத் தயிலம்விற் றுஞ்செக் குழன்றுங்கொள் கூலியினால்
நம்பற் கெரித்த கலியொற்றி மாநகர்ச் சக்கிரியே. ருச

## சத்தி நாயனார்

கிரிவில் லவர்தம் அடியரைத் தன்முன்பு கீழ்மைசொன்ன
திருவில் லவரைய நாவரி வோன்திருந் தாரைவெல்லும்
வரிவில்ல வன்வயற் செங்கழு நீரின் மருவுதென்றல்
தெருவில் விரைகம ழுந்தென் வரிஞ்சைத் திகழ்சத்தியே.

## ஐயடிகள்காடவர்கோன் நாயனார்

சத்தித் தடக்கைக் குமரன்நற் றாதைதன் தானமெல்லாம்
முத்திப் பதமொரோர் வெண்பா மொழிந்து முடியரசா
மத்திற்கு மும்மைநன் றுள்அரற் காய்ஐய மேற்றலென்னும்
பத்திக் கடலை யடிகளா கின்றநம் பல்லவனே. ருசு

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

பல்லவை செங்கதி ரோனைப் பறித்தவன் பாதம்புகழ்
சொல்லவன் தென்புக லூரரன் பால்துய்ய செம்பொன்கொள்ள
வல்லவன் நாட்டியத் தான்குடி மாணிக்க வண்ணனுக்கு
நல்லவன் தன்பதி நாவலூ ராகின்ற நன்னகரே. ருஎ

பதி. கஅ

## கணம்புல்ல நாயனார்

நன்னக ராயஇருக்குவே ளூர்தனில் நல்குரவாய்ப்
பொன்னக ராயநற் றில்லை புகுந்து புலீச்சரத்து
மன்னவ ராய அரற்குநற் புல்லால் விளக்கெரித்தான்
கன்னவில் தோளெந்தை தந்தைபி ரானெங் கணம்புல்லனே.

## காரி நாயனார்

புல்லன வாகா வகையுல கத்துப் புணர்ந்தனவுஞ்
சொல்லின வுந்நய மாக்கிச் சுடர்பொற் குவடுதனி
வில்லனை வாழ்த்தி விளங்குங் கயிலைபுக் கானென்பராற்
கல்லன மாமதில் சூழ்கட வூரினிற் காரியையே. ருக

## நெடுமாற நாயனார்

கார்த்தண் முகிற்கைக் கடற்கா ழியர்பெரு மாற்கெதிராய்
ஆர்த்த அமணர் அழிந்தது கண்டுமற் றுங்கவரைக்
கூர்த்த கழுவின் நுதிவைத்த பஞ்சவன் என்றுரைக்கும்
வார்த்தை யதுபண்டு நெல்வேலி யில்வென்ற மாறனுக்கே.

## வாயிலார் நாயனார்

மாறு அருளரன் தன்னை மனஆ லயத்திருத்தி
ஆறு அறிவாம் ஒளிவிளக் கேற்றி அகமலர்வாம்
வீறு மலரளித் தன்பெனும் மெய்யமிர் தங்கொடுத்தான்
வீறூர் மயிலையுள் வாயிலான் என்று விளம்புவரே. சுக

## முனையடுவார் நாயனார்

என்று விளம்புவர் நீடூர் அதிபன் முனையடுவோன்
என்றும் அமருள் அழிந்தவர்க் காக்கூலி ஏற்றெறிந்து
வென்று பெருஞ்செல்வ மெல்லாங் கனகன் மேருவென்னுங்
குன்று வளைத்த சிலையான் தமர்க்குக் கொடுத்தனனே. சுஉ

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

கொடுத்தான் முதலைகொள் பிள்ளைக் குயிரன்று புக்கொளியூர்க்
கொடுத்தான் மதுர கவியவி நாசியை வேடர்சுற்றம்

படித்தான் திருமுரு கன்பூண் டியினிற் பராபரத்தேன்
மடுத்தான் அவனென்பர் வன்றொண்ட னாகின்ற மாதவனே.

## கழற்சிங்க நாயனார்

மாதவத் தோர்தங்கள் வைப்பினுக் காரூர் மணிக்குவைத்த
போதினைத் தான்மோந்த தேவிதன் மூக்கை அரியப்பொற்கை
காதிவைத் தன்றே அரிவதென் றங்கவள் கைதடிந்தான்
நாதமொய்த் தார்வண்டு கிண்டுபைங் கோதைக் கழற்சிங்கனே.

## இடங்கழி நாயனார்

சிங்கத் துருவனைச் செற்றவன் சிற்றம் பலமுகடு
கொங்கிற் கனகம் அணிந்த ஆதித்தன் குலமுதலோன்
திங்கட் சடையர் தமரென் செல்வம் எனப்பறைபோக்
கெங்கட் கிறைவன் இருக்குவே ளூர்மன் இடங்கழியே. சுரு

## செருத்துணை நாயனார்

கழிநீள் கடல்நஞ் சயின்றார்க் கிருந்த கடிமலரை
மொழிநீள் புகழ்க்கழற் சிங்கன்தன் தேவிமுன் மோத்தலுமே
எழில்நீள் குடிமிழ்மலர் மூக்கரிந் தானென் றியம்புவரால்
செழுநீர் மருகனன் னாட்டமர் தஞ்சைச் செருத்துணையே.

## புகழ்த்துணை நாயனார்

செருவிலி புத்தூர்ப் புகழ்த்துணை வையஞ் சிறுவிலைத்தா
உருவலி கெட்டுணா வின்றி யுமைகோனை மஞ்சனஞ்செய்
தருவதோர் போதுகை சோர்ந்து கலசம் விழத்தரியாப்
பெருவரை வில்லி அருளும் நிதியது பெற்றனனே. சுஎ

## கோட்புலி நாயனார்

பெற்றம் உயர்த்தோன் விரையாக் கலியிழைத் தோர்தமது
சுற்ற மறுக்குந் தொழில்திரு நாட்டியத் தான்குடிக்கோன்
குற்றம் அறுக்கும்நங் கோட்புலி நாவற் குரிசில்அருள்
பெற்ற அருட்கடல் என்றுல கேத்தும் பெருந்தகையே. சுஅ

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

தருமகட் பேசினேன் வீயவே நூல்போன சங்கிலிபால்
புருமணக் காதலி னல்லொற்றி யூருறை புண்ணியன் றன்
றிருமலர்ப் பாதம் பணிந்தரு ளால்இவ் வியனுலகம்
நரும்வழக் கேநன்மை யாப்புணர்ந் தானநாவ லூர்அரசே. சுசு

## பத்தராய்ப்பணிவார்கள்

அரசினை ஆரூர் அமரர் பிரானை அடிபணிந்திட்
டுரைசெய்த வாய்தடு மாறி யுரோம புளகம்வந்து
கரசர ணாதி அவயவங் கம்பித்துக் கண்ணருவி
சொரிதரும் அங்கத்தி னோர்பத்த ரென்று தொகுத்தவரே.

## பரமனையேபாடுவார்

தொகுத்த வடமொழி தென்மொழி யாதொன்று தோன்றியதே
மிகுத்த இயலிசை வல்ல வகையில்விண் தோயுநெற்றி
வகுத்த மதிற்றில்லை அம்பலத் தான்மலர்ப் பாதங்கள்மேல்
உகுத்த மனத்தொடும் பாடவல் லோரென் பர்உத்தமரே.

## சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்

உத்தமத் தானத் தறம்பொருள் இன்பமொ டியெறிந்து
வித்தகத் தானத் தொருவழிக் கொண்டு விளங்கச்சென்னி
மத்தம்வைத் தான்திருப் பாத கமல மலரிணைக்கீழ்ச்
சித்தம்வைத் தாரென்பர் வீடுபே றெய்திய செல்வர்களே.

## திருவாரூர்ப்பிறந்தார்கள்

செல்வந் திகழ்திரு வாரூர் மதில்வட்டத் துட்பிறந்தார்
செல்வன் திருக்கணத் துள்ளவ ரேயத னால்திகழச்
செல்வம் பெருகுதென் னாரூர்ப் பிறந்தவர் சேவடியே
செல்வ நெறியுறு வார்க்கணித் தாய செழுநெறியே. எரு

## முப்போதுந்திருமேனி தீண்டுவார்

நெறிவார் சடையரைத் தீண்டி முப்போதுமீ டாகமத்தின்
அறிவால் வணங்கிஅர்ச் சிப்பவர் நம்மையும் ஆண்டமரர்க்

கிறையாய்முக் கண்ணும்எண் தோளுந் தரித்தீறில் செல்வத்தொடும்
உறைவார் சிவபெரு மாற்குறை வாய உலகினிலே. எச

## முழுநீறுபூசிய முனிவர்

உலகு கலங்கினும் ஊழி திரியினும் உள்ளொருகால்
விலகுதல் இல்லா விதியது பெற்றநல் வித்தகர்காண்
அலகில் பெருங்குணத் தாரூர் அமர்ந்த அரனடிக்கீழ்
இலகுவெண் ணீறுதம் மேனிக் கணியும் இறைவர்களே. எரு

## அப்பாலும் அடிச்சார்ந்தார்

வருக்க மடைத்துநன் னுவலூர் மன்னவன் வண்டமிழால்
பெருக்கு மதுரத் தொகையிற் பிறைசூடி பெய்கழற்கே
ஒருக்கு மனத்தொடப் பாலடிச் சார்ந்தவர் என்றுலகில்
தெரிக்கு மவர்சிவன் பல்கணத் தோர்நஞ் செழுந்தவரே. எசு

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

செழுநீர் வயல்முது குன்றினிற் செந்தமிழ் பாடிவெய்ய
மழுநீள் தடக்கையன் ஈந்தபொன் னுங்குக்கொள் ளாதுவந்தப்
பொழில்நீ டருதிரு வாரூரில் வாசியும் பொன்னுங் கொண்டோன்
கெழுநீள் புகழ்த்திரு வாரூரன் என்றுநாங் கேட்பதுவே. எஎ

## பூசலார் நாயனார்

பதுமநற் போதன்ன பாதத் தரற்கொரு கோயிலையான்
கதுமெனச் செய்குவ தென்றுகொ லாம்என்று கண்துயிலா
ததுமனத் தேஎல்லி தோறும் நினைந்தருள் பெற்றதென்பர்
புதுமணத் தென்றல் உலாநின்ற வூர்தனிற் பூசலையே. எஅ

## மங்கையர்க்கரசியார்

பூசலயிற் றென்ன னார்க்கன லாகப் பொருமையினால்
வாச மலர்க்குழல் பாண்டிமா தேவியாம் மானிகண்டீர்
தேசம் விளங்கத் தமிழா கரர்க்கறி வித்தவரால்
நாசம் விளைத்தாள் அருகந் தருக்குத்தென் னாட்டகத்தே. எகூ

### நேச நாயனார்

நாட்ட மிட்டன் றரிவந்திப்ப வெல்படை நல்கினர்தந்
தாட்டரிக் கப்பெற்ற வனென்பர் சைவத் தவராயிற்
கூட்டுமக் கப்படங் கோவணம் நெய்து கொடுத்துநன்மை
ஈட்டுமக் காம்பீலிச் சாலிய நேசனை இம்மையிலே. அ0

### கோச்செங்கட்சோழ நாயனார்

மைமைவைத்த கண்டன் நெறியன்றி மற்றோர் நெறிகருதாத்
தெய்வக் குடிச்சோழன் முன்பு சிலந்தியாய்ப் பந்தர்செய்து
சைவத் துருவெய்தி வந்து தரணிநீ டாலயங்கள்
செய்வித் தவன்திருக் கோச்செங்க ணானெனுஞ் செம்பியனே.

செம்பொன் அணிந்து சிற்றம்பலத் தைச்சிவ லோகமெய்தி
நம்பன் கழற்கீழ் இருந்தோன் குலமுதல் என்பர்நல்ல
வம்பு மலர்த்தில்லை ஈசனைச் சூழ மறையவர்த்தான்
நிம்ப நறுந்தொங்கற் கோச்செங்க ணானெனும் நித்தனையே.

### திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார்

தனையொப் பருமெருக் கத்தம் புலியூர்த் தகும்புகழோன்
நினையொப் பருந்திரு நீலகண் டப்பெரும் பாணனைநீள்
சினையொப் பலர்பொழிற் சண்பையர்கோன்செந் தமிழொடிசை
புனையப் பரன்அருள் பெற்றவன் என்பர்இப் பூதலத்தே.

### சடைய நாயனார்

தலம்விளங் குந்திரு நாவலூர் தன்னிற் சடையனென்னுங்
குலம்விளங் கும்புக ழோனை யுரைப்பர் குவலயத்தின்
நலம்விளங் கும்படி நாம்விளங் கும்படி நற்றவத்தின்
பலம்விளங் கும்படி ஆரூ ரனைமுன் பயந்தமையே. அச

### இசை ஞானியார்

பயந்தாள் கறவுடைச் செங்கண் வெள்ளைப்பொள்ளல் நீள்பனைக்கை
கயந்தா னுகைத்தநற் காளையை யென்றுங் கபாலங் கைக்கொண்[க்
டயந்தான் புகுமரன் ஆரூரப் புனித அரன் திருத்தாள்
நயந்தாள் தனதுள்ளத் தென்றும் உரைப்பது ஞானியையே.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

ஞானஆ ரூரரைச் சேரரை யல்லது நாமறியோம்
மானவ ஆக்கை யொடும்புக் கவரை வளரொளிப்பூண்
வானவ ராலும் மருவற் கரிய வடகயிலைக்
கோனவன் கோயில் பெருந்தவத் தோர்தங்கள் கூட்டத்திலே.

## திருத்தொண்டத்தொகையிலுள்ள
## கூட்டஅடியார்கள் தனிஅடியார்கள்

கூட்டமொன் பானொ டறுபத்து மூன்று தனிப்பெயரா
ஈட்டும் பெருந்தவத் தோரெழு பத்திரண் டாம்வினையை
வாட்டுந் தவத்திருத் தொண்டத் தொகைபதி னொன்றின்வகைப்
பாட்டுந் திகழ்திரு நாவலூ ராளி பணித்தனனே. அஎ

## திருத்தொண்டத்தொகைப் பதிகக்
## கவிகளின் முதற்குறிப்பு

பணித்தநற் றொண்டத் தொகைமுதல் தில்லை யிலைமலிந்த
அணித்திகழ் மும்மை திருநின்ற வம்பறு வார்கொண்டசீர்
இணைத்தநற் பொய்யடி மைகறைக் கண்டன் கடல்சூழ்ந்தபின்
மணித்திகழ் சொற்பத்தர் மன்னிய சீர்மறை நாவனொடே.

## நூற்பயன்

ஓடிடும் பஞ்சேந் திரியம் ஒடுக்கிஎன் ஊழ்வினைகள்
வாடிடும் வண்ணம்நின் றெத்தவஞ் செய்தனன் வானினுள்ளோர்
சூடிடுஞ் சீர்த்திருப் பாதத்தர் தொண்டத் தொகையினுள்ள
சேடர்தஞ் செல்வப் பெரும்புகழ் அந்தாதி செப்பிடவே.

திருச்சிற்றம்பலம்

நம்பியாண்டார்நம்பி அருளிய

# ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி

திருச்சிற்றம்பலம்

பார்மண் டலத்தினிற் பன்னிரு பேரொடு மன்னிநின்ற
நீர்மண் டலப்படப் பைப்பிர மாபுரம் நீறணிந்த
கார்மண் டலக்கண்டத் தெண்தடந் தோளன் கருணைபெற்ற
தார்மண் டலமணி சம்பந்தன் மேவிய தண்பதியே. க

பதிகப் பெருவழி காட்டப் பருப்பதக் கோன்பயந்த
மதியத் திருநுதல் பங்கன் அருள்பெற வைத்தஎங்கள்
நிதியைப் பிரமா புரநகர் மன்னனை என்னுடைய
கதியைக் கருதவல் லோர்அம ராவதி காப்பவரே. உ

காப்பயில் காழிக் கவுணியர் தீபற்கென் காரணமா
மாப்பழி வாரா வகையிருப் பேன்என்ன மாரன்என்னே
பூப்பயில் வாளிகள் அஞ்சும்என் னெஞ்சரங் கப்புகுந்த
வேப்பயில் வார்சிலை கால்வளை யாநிற்கு மீண்டிரவே. ௩

இரவும் பகலும்நின் பாதத் தலர்என் வழிமுழுதும்
பரவும் பரிசே அருளுகண் டாய்இந்தப் *பாரகத்தே
விரவும் பரமத கோளரி யேகுட வெள்வளைகள்
தரளஞ் சொரியுங் கடல்புடை சூழ்ந்த தராய்மன்னனே. ச

மன்னிய மோகச் சுவையொளி யூறோசை நாற்றமென்றிப்
பன்னிய ஐந்தின் பதங்கடந் தோர்க்குந் தொடர்வரிய
பொன்னியல் பாடகக் கிங்கிணிப் பாத நிழல்புகுவோர்
துன்னிய காவமர் சண்பையர் நாதற்குத் தொண்டர்களே. ரு

தொண்டினஞ் சூழச் சுரிகுழ லார்தம் மனந்தொடர
வண்டினஞ் சூழ வரும்இவன் போலும் மயில்உகுத்த
கண்டினஞ் சூழ்ந்த வளைபிரம் போர்கழு வாவுடலம்
விண்டினஞ் சூழக் கழுவின வாக்கிய வித்தகனே. சு

---

* "பழனத்தர்தம் - புரையுங் குமுதத் தமுதத்தவர் வெண்குமுதம் வளை" என்றும் பாடம்.

வித்தகம் பேசிநம் வேணுத் தலைவனை வாள்நிகர்த்து
முத்தகங் காட்டும் முறுவல்நல் லார்தம் மனம்அணைய
உய்த்தகம் போந்திருந் துள்ளவும் இல்லா தனவுமுறு
பொத்தகம் போலும் முதுபுலைப் பாணன் புணர்க்கின்றதே. ௭

புணர்ந்தநன் மேகச் சிறுநுண் துளியிற் சிறகொதுக்கி
உணர்ந்தனர் போல இருந்தனை யால்உல கம்பரசுங்
குணந்திகழ் ஞானசம் பந்தன் கொடிமதிற் கொச்சையின்வாய்
மணந்தவர் போயின ரோசொல்லு வாழி மடக்குருகே. ௮

குருந்தலர் முல்லையங் கோவலர் ஏற்றின் கொலைமருப்பால்
அருந்திற லாகத் துழுதசெஞ் சேற்றரு காசனிதன்
பெருந்திற மாமதிற் சண்பை நகர்அன்ன பேரமைத்தோட்
டிருந்திழை யார்வம்.........................முரசே. ௯

முரசங் கறையமுன் தோரண நீட முழுநிதியின்
பரிசங் கொணர்வான் அமைகின் றனர்பலர் பார்த்தினிநீ
அரிசங் கணைதலென் னுமுன் கருதரு காசனிதன்
சரிசங் கணையற் றந்த நகரன்ன தூமொழிக்கே. ௧௦

மொழிவது சைவ சிகாமணி மூரித் தடவரைத்தோள்
தொழுவது மற்றவன் தூமலர்ப் பாதங்கள் தாமங்கமழ்ந்
தெழுவது கூந்தல்அம் பூந்தா மரையினி யாதுகொலோ
மொழிவது சேரி முரிப்புதை மாதர் முறுவலித்தே. ௧௧

வலிகெழு குண்டர்க்கு வைகைக் கரையன்று வான்கொடுத்த
கலிகெழு திண்தோள் கவுணியர் தீபன் கடலுடுத்த
ஒலிதரு நீர்வை யகத்தை யுறையிட்ட தொத்துதிரு
மலிதரு வார்பணி யாமட மாதினை வாட்டுவதே. ௧௨

வாட்டுவர் தத்தந் துயரைவன் கேழலின் பின்புசென்ற
வேட்டுவர் கோலத்து வேதத் தலைவனை மெல்விரலால்
"தோட்டியல் காதன் இவன்"என்று தாதைக்குச் சூழ்விசும்பிற்
காட்டிய கன்றின் கழற்றிற மானவை கற்றவரே. ௧௩

அவர்சென் றணுகுவர் மீள்வதிங் கன்னை அருகர்தம்மைத்
தவர்கின்ற தண்தமிழ்ச் சைவ சிகாமணி சண்பைஎன்னப்

பவர்கின்ற நீள்கொடிக் கோபுரம் பல்கதி ரோன்பரியைக்
கவர்கின்ற சூலத் தொடுநின்று தோன்றுங் கடிநகரே. கச

நகரங் கெடப்பண்டு திண்டேர் மிசைநின்று நான்மறைகள்
பகரங் கழலவ னைப்பதி னாறா யிரம்பதிகம்
மகரங் கிளர்கடல் வையந் துயர்கெட வாய்மொழிந்த
நிகரங் கிலிகலிக் காழிப் பிரானென்பர் நீள்நிலத்தே. கரு

நிலமே றியமருப் பிற்றிரு மாலும் நிலம்படைத்த
குலமே றியமலர்க் கோகன தத்தய னுங்கொழிக்குஞ்
சலமே றியமுடி தாள்கண் டிலர்தந்தை காணஅன்று
நலமே றியபுகழ்ச் சம்பந்தன் காட்டிய நாதனையே. கசு

நாதன் நணிபள்ளி சூழ்நகர் கானக மாக்கிஅஃதே
போதின் மலிவயல் ஆக்கிய கோன்அமர் பொற்புகலி
மேதை நெடுங்கடல் வாருங் கயலோ விலைக்குனது
காதின் அளவு மிளிர்கய லோசொல்லு காரிகையே. கஎ

கைம்மையி னுன்நின் கழல்பர வாதுகண் டார்க்கிவனோர்
வன்மைய னேஎன்னும் வண்ணம் நடித்து விழுப்பொருளோ(டு)
இம்மையில் யான்எய்தும் இன்பங் கருதித் திரிதருமத்
தன்மையி னேற்கும் அருளுதி யோசொல்லு சம்பந்தனே.

பந்தார் அணிவிரற் பங்கயக் கொங்கைப் பவளச்செவ்வாய்க்
கொந்தார் நறுங்குழல் கோமள வல்லியைக் கூறருஞ்சீர்
நந்தா விளக்கினைக் கண்டது நான்எப் பொழுதுமுன்னுஞ்
சந்தார் அகலத் தருகா சனிதன் தடவரையே. ககூ

வரைகொண்ட மாமதிற் சண்பைத் தலைவனை வாழ்த்தலர்போல்
நிரைகொண்டு வானோர் கடைந்ததில் நஞ்சு நிகழக்கொலா
நுரைகொண்டு மெய்ப்பரந் துள்ளஞ் சுழலநொந் தோர்இரவுந்
திரைகொண் டலமரும் இவ்அகல் ஞாலஞ் செறிகடலே. உ௦

கடலன்ன பொய்ம்மைகள் செய்யினும் வெய்ய கடுநரகத்
திடநமன் ஏவுதற் கெவ்விடத் தான்இருஞ் செந்தமிழால்
திடமன்னு மாமதிற் சண்பைத் தலைவன்செந் தாமரையின்
வடமன்னு நீள்முடி யானடிப் போதவை வாழ்த்தினமே.

வாழ்த்துவ தெம்பர மேயாகும் அந்தத்து வையமுந்நீர்
ஆழ்த்திய காலத்தும் ஆழா ததுஅரன் சேவடியே
ஏத்திய ஞானசம் பந்தற் கிடம்இசைத் தும்பிகொம்பர்க்
காத்திகழ் கேதகம் போதகம் ஈனுங் கழுமலமே. உஉ.

மலர்பயில் வாட்கண்ணி கேள்கண்ணி நீள்முடி வண்கமலப்
பலர்பயில் கீர்த்திக் கவுணியர் தீபன் பகைவரென்னத்
தலைபயில் பூம்புனங் கொய்திடு மேகணி யார்புலம்ப
வலர்பயி லாமுன் பறித்தன மாகில் அரும்பினையே. உ௩

அரும்பின அன்பில்லை அர்ச்சனை இல்லை அரன்நெறியே
விரும்பின மாந்தர்க்கு மெய்ப்பணி செய்கிலம் பொய்க்கமைந்த
விரும்பின உள்ளத்தி னேற்கெங்ங னேவந்து நேர்பட்டதால்
கரும்பன நீள்வயல் சூழ்காழி நாதன் கழலடியே. உ௪

அடியால் அலர்மிதித் தாலரத் தம்பில்க மிர்தமின்றிக்
கொடியா ளொடும்பின் னடந்தெவ் வாறலர் கோகனதக்
கடியார் நறுங்கண்ணி ஞானசம் பந்தன் கருதலர்சேர்
வெடியா விடுவெம் பரற்சுறு நாறு வியன்சுரத்தே. உ௫

சுரபுரத் தார்தந் துயருக் கிரங்கிச் சுரர்கள்தங்கள்
பரபுரத் தார்தந் துயர்கண் டருளும் பரமன்மன்னு
மரபுரத் தான்அடி எய்துவன் என்ப தவனடிசேர்
சிரபுரத் தான்அடி யாரடி யேன்என்னுந் திண்ணனவே. உ௬

திண்ணன வாசென்ற நாட்டிடை இல்லைகொல் தீந்தமிழோர்
கண்ணென வோங்குங் கவுணியர் தீபன்கை போற்பொழிந்து
விண்ணின வாய்முல்லை மெல்லரும் பீனமற் றியாம்மெலிய
எண்ணின நாள்வழு வாதிரைத் தோடி எழுமுகிலே. உ௭

எழுவாள் மதியால் வெதுப்புண் டலமந் தெழுந்துவிம்மித்
தொழுவாள் தனக்கின் றருளுங்கொ லாந்தொழு நீரவைகைக்
குழுவா யெதிர்ந்த உறிகைப் பறிதலைக் குண்டர்தங்கள்
கழுவா உடலங் கழுவின வாக்கிய கற்பகமே. உ௮

கற்பா நறவ மணிகொழித் தூந்து மலைச்சிலம்பா
நற்பா மொழியெழில் ஞானசம் பந்தன் புறவமன்ன

விற்பா நுதலிதன் மென்முலை யின்னிளஞ் செவ்விகண்டிட்
டிற்பா விடும்வண்ணம் எண்ணுகின் றாள்அம்ம எம்மனையே.

எம்அனை யாய்எந்தை யாய்என்னை ஆண்டென் துயர்தவிர்த்த
செம்மலர் நீள்முடி ஞானசம் பந்தன் புறவமன்னீர்
வெம்முனை வேல்என்ன என்ன மிளிர்ந்து வெருத்தரிபோன்
றம்மன வோஅல்ல வோவநதென் உள்ளத் தொளிர்வனவே.

ஒளிறு மணிப்பணி நாட்டும் உலகத்தும் உம்பருள்ளும்
வெளிறு படச்சில நிற்பதுண் டேமிண்டி மீனுகளும்
அளறு வயற்சண்பை நாதன் அமுதப் பதிகமென்னுங்
களிறு விடப்புகு மேற்றொண்டர் பாடுங் கவிதைகளே. ௩௧

கவிக்குத் தகுவன கண்ணுக் கினியன கேட்கில்இன்பஞ்
செவிக்குத் தருவன சிந்தைக் குரியன பைந்தரள
நவிக்கட் சிறுமியர் முற்றின் முகந்துதஞ் சிற்றில்தொறுங்
குவிக்கத் திரைபரக் குங்கொச்சை நாதன் குரைகழலே. ௩௨

கழல்கின்ற ஐங்கணை அந்தியும் அன்றிலுங் கால்பரப்பிட்
டுழல்கின்ற தென்றலும் வந்திங் கடர்ப்பவன் றாயிழைக்காச்
சுழல்கின்ற நஞ்சந் தணித்தவன் தன்னைத் தொடர்ந்துபின்போய்
உழல்கின்ற நெஞ்சமிங் கென்றோ இனிஇன்று உறுகின்றதே.

உறுகின்ற அன்பினொ டொத்திய தாளமும் உள்ளுருகிப்
பெறுகின்ற இன்பும் பிறைநுதல் மூண்டமுங் கண்டவரைத்
தெறுகின்ற வாறென்ன செய்தவ மோவநதென் சிந்தையுள்ளே
துறுகின்ற பாதன் கழுமலம் போலுந் துடியிடைக்கே. ௩௪

இடையும் எழுதா தொழியலு மாம்இன வண்டுகளின்
புடையும் எழுதிலும் பூங்குழல் ஒக்கும்அப் பொன்னனையாள்
நடையும் நகையுந் தமிழா கரன்றன் புகலிநற்றேன்
அடையும் மொழியும் எழுதிடிற் சால அதிசயமே. ௩௫

மேனாட் டமரர் தொழவிருப் பாரும் வினைப்பயன்கள்
தாநாட் டருநர கிற்றுளா் வாருந் தமிழர்தங்கள்
கோனாட் டருகர் குழாம்வென்ற கொச்சையர் கோன்கமலப்
பூநாட் டடிபணிந் தாரும்அல் லாத புலையருமே. ௩௬

புலையடித் தொண்டனைப் பூசுர ருக்கிப் பொருகயற்கண்
மலைமடப் பாவைக்கு மாநட மாடும் மணியைஎன்றன்
தலையிடைப் பாதனைக் கற்றுங் குரைத்தசம் பந்தன்என்று
முலையிடைப் பொன்கொண்டு சங்கிழந் தாள்என்றன் மொய்குழலே.

குழலியல் இன்கவி ஞானசம் பந்தன் குரைகழல்போல்
கழலியல் பாதம் பணிந்தேன் உனையுங் கதிரவனே
தழலியல் வெம்மை தணித்தருள் நீதணி யாதவெம்மை
அழலியல் கான்நடந் தாள்வினை யேன்பெற்ற ஆரணங்கே.

அணங்கமர் யாழ்முரித் தாண்பனை பெண்பனை யாக்கிஅமண்
கணங்கழு வேற்றிக் கடுவிடந் தீர்த்துக் கதவடைத்துப்
பிணங்கலை நீர்எதிர் ஓடஞ் செலுத்தின வெண்பிறையோ
டிணங்கிய மாடச் சிரபுரத் தான்றன் இருந்தமிழே. ௩௯

இருந்தண் புகலிகோ லக்கா எழில்ஆ வடுதுறைசீர்
பொருந்தும் அரத்துறை போனகந் தாளம்நன் பொன்சிவிகை
அருந்திட வொத்தமுத் தீசெய வேற அரனளித்த
பெருந்தகை சீரினை எம்பர மோநின்று பேசுவதே. ௪0

பேசுந் தகையதன் றேஇன்றும் அன்றுந் தமிழ்விரகன்
தேச முழுதும் மறைமறந் தூண்கெடச் செந்தழற்கை
ஈசன் திருவரு ளால்எழில் வீழி மிழலையின்வாய்க்
காசின் மழைபொழிந் தான்என் றிஞ் ஞாலங் கவின்பெறவே.

பெறுவது நிச்சயம் அஞ்சல்நெஞ் சேபிர மாபுரத்து
மறுவறு பொற்கழல் ஞானசம் பந்தனை வாழ்த்துதலால்
வெறியுறு கொன்றை மறியுறு செங்கை விடைஎடுத்த
பொறியுறு பொற்கொடி எம்பெரு மான்அமர் பொன்னுலகே.

பொன்னார் மதில்சூழ் புகலிக் கரசை அருகர்தங்கள்
தென்னாட் டரண்அட்ட சிங்கத் தினைஎஞ் சிவன்இவனென்
றந்நாள் குழலைத் திருவாய் மொழிகள் அருளிச்செய்த
என்னனை யைப்பணி வார்க்கில்லை காண்கய மாலயமே. ௪௩

மாலையொப் பாகும் பிறைமுன்பு நின்று மணிகுறுக்கி
வேலையைப் பாடணைந் தாங்கெழில் மன்மதன் விற்குனித்த

கோலைப் போதும் பிடிப்பன் வடுப்படு கொக்கினஞ்சூழ்
சோலையைக் காழித் தலைவன் மலர்இன்று சூடிடினே. சச

சூடுநற் றார்த்தமி ழாகரன் தன்பொற் சுடர்வரைத்தோள்
கூடுதற் கேசற்ற கொம்பினை நீயுங் கொடும்பகைநின்(று)
ஆடுதற் கேயத் தனைக்குனை யேநின்னை ஆடரவம்
வாடிடக் காரும் மறுவும் படுகின்ற வாண்மதியே. சரு

மதிக்கத் தகுநுதல் மாதொடும் எங்கள் மலையில்வைகித்
துதிக்கத் தகுசண்பை நாதன் சுருதி கடந்துழவோர்
மிதிக்கக் கமல முகிழ்த்ததண் தேனுண்டு மீண்டிடரால்
குதிக்கக் குருகிரி யுங்கொச்சை நாடு குறுகுமினே. சசு

குறுமன முள்கல வாத்தமி ழாகரன் கொச்சையன்ன
நறுமலர் மென்குழ லாய்அஞ்சல் எம்மூர் நகுமதிசென்(று)
உறுமனை யொண்சுவர் ஓவியக் கிள்ளைக்கு றும்பதியிற்
சிறுமிகள் சென்றிருந் தங்கையை நீட்டுவர் சேயிழையே.

இழைவளர் ஆகத்து ஞானசம் பந்தன் இருஞ்சுருதிக்
கழைவளர் குன்று கடத்தலுங் காண்பீர் கடைசியர்நீள்
முழைவளர் நண்டு படத்தடஞ் சாலிமுத் தாக்கிளைக்கும்
மழைவளர் நீள்குடு மிப்பொழில் சூழ்ந்த வளவயலே. சஅ

வயலார் மருகற் பதிதன்னில் வாளர வாற்கடியுண்
டயலா விழுந்த அவனுக் கிரங்கி அறிவழிந்த
கயலார் கருங்கண்ணி தன்துயர் தீர்த்த கருணைவெள்ளப்
புயலார் தருகையி னன்என்னத் தோன்றிடும் புண்ணியமே.

புண்ணிய நாடு புகுவதற் காகப் புலன்அடக்கி
எண்ணிய செய்தொழில் நிற்பதெல் லாருமின்றி யான்எனக்கு
நண்ணிய செய்தொழில் ஞானசம் பந்தனை நந்தமர்சீர்க்
கண்ணியன் மாடக் கழுமலத் தானைக் கருதுவதே. ருO

கருதத் தவஅருள் ஈந்தருள் ஞானசம் பந்தன்சண்பை
இரதக் கிளிமொழி மாதே கலங்கல் இவருடலம்
பொருதக் கழுநிரை யாக்குவன் நுந்தமர் போர்ப்படையேன்
மருதச் சினையிற் பொதும்பருள் ஏறி மறைகுவனே. ருக

மறைமுழங் குங்குழ லார்கலி காட்ட வயற்கடைஞர்
பறைமுழங் கும்புக லித்தமி ழாகரன் பற்றலர்போல்
துறைமுழங் குங்கரி சீறி மடங்கல் சுடர்ப்பளிங்கின்
அறைமுழங் கும்வழி நீவரிற் சால வரும்பழியே. ருஉ

பழிக்கே தருகின்ற தின்றிப் பிறைபல் கதிர்விழுந்த
வழிக்கே திகழ்தரு செக்கரைக் கொச்சை வயவரென்னும்
மொழிக்கே விரும்பி முளரிக் கலமரும் ஓவியர்தங்
கிழிக்கே தரும்உரு வத்திவள் வாட்டிடக் கீள்கின்றதே. ருங

கீளரிக் குன்றத் தரவம் உமிழ்ந்த கிளர்மணியின்
வாளரிக் கும்வைகை மாண்டனர் என்பர் வயற்புகலித்
தாளரிக் கும்மரி யான்அருள் பெற்ற பரசமய
கோளரிக் குந்திக ராத்தமிழ் நாட்டுள்ள குண்டர்களே. ருச

குண்டகழ் சூழ்தரு கொச்சைத் தலைவன்றன் குன்றகஞ்சேர்
வண்டக மென்மலர் வில்லியன் னீர்வரி விற்புருவக்
கண்டக வாளி படப்புடை வீழ்செங் கலங்கலொடும்
புண்டகக் கேழல் புகுந்ததுண் டோநுங்கள் பூம்புனத்தே.

புனத்தெழு கைம்மதக் குன்றம தாய்அங்கொர் புண்கலையாய்
வனத்தெழு சந்தனப் பைந்தழை யாய்வந்து வந்தடியேன்
மனத்தெழு பொற்கழல் ஞானசம் பந்தன்வண் கொச்சைஅன்னாள்
கனத்தெழு கொங்கைக ளாய்அல்கு லாய்த்திவர் கட்டுரையே.

கட்டது வேகொண்டு கள்ளுண்டு நுங்கைக ளாற்சுணங்கை
இட்டது வேயன்றி எட்டனைத் தான்இவள் உள்ளுறுநோய்
விட்டது வேயன்றி வெங்குரு நாதன்றன் பங்கயத்தின்
மட்டவிழ் தார்கொண்டு சூட்டுமின் பேதை மகிழ்வுறவே.

உறவும் பொருளும்ஒண் போகமுங் கல்வியுங் கல்வியுற்ற
துறவுந் துறவிப் பயனும் எனக்குச் சுழிந்தபுனற்
புறவும் பொழிலும் பொழில்சூழ் பொதும்புந் ததும்பும்வண்டின்
நறவும் பொழில்எழிற் காழியர் கோன்திரு நாமங்களே. ரு௮

நாம்உகந் தேத்திய ஞானசம் பந்தனை நண்ணலர்போல்
ஏமுக வெஞ்சரஞ் சிந்திவல் இஞ்சி இடிபடுக்கத்

தீமுகந் தோன்றிகள் தோன்றத் தளவ முகையரும்பக்
காமுகம் பூமுகங் காட்டிநின் றார்த்தன காரினமே. ௫௯

காரங் கணைபொழிற் காழிக் கவுணியர் தீபன்நல்லூர்ச்
சீரங் கணைநற் பெருமணந் தன்னிற் சிவபுரத்து
வாரங் கணைகொங்கை மாதொடும் புக்குறும் போதுவந்தார்
ஆரங் கொழிந்தனர் பெற்றதல் லால்அவ் அரும்பதமே. ௬௰

அரும்பத மாக்கும் அடியரொ டஞ்சலித் தார்க்கரிய
பெரும்பதம் எய்தலுற் றீர்வந் திறைஞ்சுமின் பேர்அரவம்
வரும்பத நான்மறைக் காழித் தலைவன் மலர்க்கமலத்
தரும்பத ஞானசம் பந்தன்என் னாதன் தாளிணையே. ௬௧

தாளின் சரணந் தருஞ்சண்பை நாதன் தரியலர்போற்
கீளின் மலங்க விலங்கே புகுந்திடுங் கெண்டைகளும்
வாளுந் தொலைய மதர்த்திரு காதின் அளவும்வந்து
மீளுங் கருங்கண்ணி மின்புரி யாவைத்த மென்னகையே.

நகுகின்ற முல்லைநண் ணார்எரி கண்டத் தவர்கவர்ந்த
மிகுகின்ற நன்னிதி காட்டின கொன்றை விரவலரூர்
புகுகின்ற தீயெனப் பூத்தன தோன்றி புறவமன்கைத்
தகுகின்ற கோடல்கள் அன்பரின் றெய்துவர் கார்மயிலே.

மயிலேந் தியவள்ளல் தன்னை யளிப்ப மதிபுணர்ந்த
வெயிலேந் தியசண்பை நாதன்உலகத் தெதிர்ப்பவர்யார்
குயிலேந் தியபொழிற் கொங்கேந் தியகொம்பின் அம்புதழீஇ
அயிலேந் தியமலர் கண்டுள னாய்வந்த அண்ணலுக்கே. ௬௪

அண்ணன் மணிவளைத் தோளரு காசனி சண்பையன்ன
பெண்ணின் அமிர்தநல் லாள்குழல் நாற்றம் பெடையொடும்பூஞ்
சுண்ணந் துதைந்தவண் டேகண்ட துண்டுகொல் தூங்கொலிநீர்த்
தண்ணம் பொழில்எழிற் காசினி பூத்தமென் தாதுகளே.

தாதுகற் றோய்த்தநஞ் சன்னாசி யார்சட லம்படுத்துத்
தூதையிற் சிக்கங் கரஞ்சேர்த்து வாளா துலுக்குகின்றீர்
போதியிற் புத்தர்கள் வம்மின் புகலியர் கோன்அன்னநாட்
காதியிட் டேற்றுங் கழுத்திறம் பாடிக் களித்திடவே. ௬௬

களியுறு தேன்தார்க் கவுணியர் தீபன் கருதலர்போல்
வெளியுறு ஞாலம் பகல்இழந் தால்விரை யார்கமலத்
தளியுறு மென்மலர்த் தாதளைந் தாழி அமைப்பவருந்
துளியுறு வாடையி தாம்மட மானைத் துவள்விப்பதே. ௬எ

தேறும் புனற்றில்லைச் சிற்றம் பலத்துச் சிறந்துவந்துள்
ஊறும் அமிர்தைப் பருகிட் டெழுவதொர் உட்களிப்புக்
கூறும் வழிமொழி தந்தெனை வாழ்வித் தவன்கொழுந்தேன்
நாறும் அலங்கல் தமிழா கரன்என்னும் நன்னிதியே. ௬அ

நிதியுறு வார்அறன் இன்பம்வீ டெய்துவர் என்னவேதந்
துதியுறு சீர்வயற் காழியர் கோனைத் தொழார்இனைய
நதியுறு நீர்தெளித் தஞ்சல் எனஅண்ணல் அன்றேஎனு
மதியுறு வாள்நுதல் பாதம் பணிந்தனள் மன்னனையே. ௬௯

மன்னங் கனைசெந் தமிழா கரன்வெற்பில் வந்தொருவர்
அன்னங்கள் அஞ்சன்மின் என்றடர் வேழத் திடைவிலங்கிப்
பொன்னங் கலைசா வகைஎடுத் தாற்கிவள் பூண்அழுந்தி
இன்னந் தழும்புள வாம்பெரும் பாலும்அவ் வேந்தலுக்கே. எ0

ஏந்தும் உலகுறு வீர்எழில் நீலநக் கற்கும்இன்பப்
பூந்தண் புகலூர் முருகற்குந் தோழனைப் போகமார்பைக்
காந்தும் கனலிற் குளிர்படுத் துக்கடற் கூடலின்வாய்
வேந்தின் துயர்தவிர்த் தானைஎப் போதும் விரும்புமினே.

விரும்பும் புதல்வனை மெய்யரிந் தாக்கிய இன்னமிர்தம்
"அரும்பும் புனற்சடை யாய்உண் டருள்" என் றடிபணிந்த
விரும்பின் சுடர்க்களிற் றன்சிறுத் தொண்டனை ஏத்துதிரேல்
சுரும்பின் மலர்த்தமி ழாகரன் பாதத் தொடர்வெளிதே.

எளிவந்த வாஎழிற் பூவரை ஞாண்மணித் தார்சழுங்கத்
துளிவந்த கண்பிசைந் தேங்கலும் எங்கள் அரன்துணை யாங்
கிளிவந்த சொல்லிபொற் கிண்ணத்தின் ஞான அமிர்தளித்த
அளிவந்த பூங்குஞ்சி இன்சொற் சிறுக்கன்ற னார்அருளே.

அருளார் தமிழா கரன்கின் அலங்கல்தந் தென்பெயரச்
சுருளார் குழலியற் கிக்கிலே யேமுன்பு தூங்குகரத்

துருளுங் களிற்றினெ டோட்டரு வானை அருளியன்றே
மருளின் மொழிமட வாள்பெய ரென்கண் வருவிப்பதே. எச

வருவார் உருவின் வழிவழி வைத்த வனமருந்துந்
திருவார் இருந்த செழுநகர்ச் செவ்வித் திருவடிக்காள்
தருவான் தமிழா கரன்கரம் போற்சலம் வீசக்கண்டு
வெருவா வணங்கொண்டல் கள்மிண்டி வானத்து மின்னியவே.

மின்னார் குடுமி நெடுவெற் பகங்கொங்கில் வீழ்பனிநோய்
தன்னார் வழிகெட் டழிந்தமை சொல்லுவர் காணிறையே
மன்னார் பரிசனத் தோர்மேற் புகலும் எவர்க்கும்மிக்க
நன்னு வலர்பெரு மான்அரு காசனி நல்கிடவே. எசு

நல்கென் றடியின் இணைபணி யார்சண்பை நம்பெருமான்
பல்கும் பெரும்புகழ் பாடகில் லார்சிலர் பாழ்க்கிறைத்திட்
டொல்கும் உடம்பின ராய்வழி தேடிட் டிடறிமுட்டிப்
பில்கும் இடமறி யார்கெடு வார்உறு பேய்த்தனமே. எஎ

தனமே தருபுகழ்ச் சைவ சிகாமணி தன்னருள்போல்
மனமே புகுந்த மடக்கொடி யேமலர் மேலிருந்த
வனமே அமிர்தக் குமுதச்செவ் வாயுங்க ளாயம்என்னும்
இனமே பொலியவண் டாடெழிற் சோலையுள் எய்துகவே.

உகட்டித்து மோட்டு வரால்இனம் மேதி முலையுரிஞ்ச
அகட்டிற் சொரிபால் தடநிறை கொச்சை வயத்தரசைத்
தகட்டில் திகழ்மணிப் பூண்தமி ழாகரன் தன்னையல்லால்
பகட்டிற் பொலியினும் வேண்டேன் ஒருவரைப் பாடுதலே.

பாடிய செந்தமி ழாற்பழங் காசு பரிசில்பெற்ற
நீடிய சீர்த்திரு ஞானசம் பந்தன் நிறைபுகழான்
நேடிய பூந்திரு நாவுக் கரசோ டெழின்மிழலைக்
கூடிய கூட்டத்தி னல்உள தாய்த்திக் குவலயமே. அ௦

வலையத் திணிதோள் மிசைமழ வேற்றி மனைப்புறத்து
நிலைஎத் தனைபொழு தோகண்ட தாரனை நீதிகெட்டார்
குலையக் கழுவின் குழுக்கண்ட வன்திகழ் கொச்சையன்ன
சிலையொத்த வாணுதல் முன்போல் மலர்க திருக்கண்களே.

கண்ணார் திருநுத லோன்கோலக் காவிற் கரநொடியாற்
பண்ணார் தரப்பாடு சண்பையர் கோன்பாணி நொந்திடுமென்
றெண்ணார் எழுத்தஞ்சும் இட்டபொற் றாளங்கள் ஈயக்கண்டு
மண்ணார் சிலர்சண்பை நாதனை ஏத்தார் வருந்துவதே. ௮௨

வருந்துங் கொலாங்கழல் மண்மிசை ஏகிடில் என்றும்என்றார்த்
திருந்தும் புகழ்ச்சண்பை ஞானசம் பந்தற்குச் சீர்மணிகள்
பொருந்துஞ் சிவிகை கொடுத்தனன் காண்புண ரித்திகழ்நஞ்
சருந்தும் பிரான்நம் அரத்துறை மேய அரும்பொருளே.

பொருளென என்னைத்தன் பொற்கழல் காட்டிப் புகுந்தெனக்கிங்
கருளிய சீர்த்திரு ஞானசம் பந்தன் அருளிலர்போல்
வெருளின மானின்மென் நோக்கியை விட்டு விழுநிதியின்
திரளினை யாதரித் தானன்று சாலஎன் சிந்தனைக்கே. ௮௪

சிந்தையைத் தேனைத் திருவா வடுதுறை யுள்திகழும்
எந்தையைப் பாடல் இசைத்துத் தொலையா நிதியம்எய்தித்
தந்தையைத் தீத்தொழில் மூட்டிய கோன்சரண் சார்விலரேல்
நிந்தையைப் பெற்றொழி யாதிரந் தேகரம் நீட்டுவரே. ௮௫

நீட்டுவ ரோதத்தொ டேறிய சங்க நெருமுளரித்
தோட்டுவெண் முத்தஞ் சொரிசண்பை நாதற் றொழாதவரில்
வேட்டுவர் வேட்டதண் ணீரினுக் குண்ணீர் உணக்குழித்த
காட்டுவர் ஊறல் பருகுங் கொலாம்எங் கனங்குழையே. ௮௬

குழைக்கின்ற கொன்றைபொன் போல மலரநுங் கூட்டமெல்லாம்
அழைக்கின்ற கொண்டல் இயம்பொன் னிலையகன் றார்வரவு
பிழைக்கின் றதுகொலென் றஞ்சியொண் சண்பைப் பிரான்புறவத்
திழைக்கின்ற கூடல் முடியஎண் ணாத இளங்கொடிக்கே.

கொடித்தேர் அவுணர் குழாம்அனல் ஊட்டிய குன்றவில்லி
அடித்தேர் கருத்தின் அருகா சனியை அணிஇழையார்
முடித்தேர் கமலங் கவர்வான் முரிபுரு வச்சிலையால்
வடித்தேர் நயனக் கணையிணை கோத்து வளைத்தனரே. ௮௮

வளைபடு தண்கடற் கொச்சை வயவன் மலர்க்கழற்கே
வளைபடு நீண்முடி வார்புன லூரன்ற னீரிலங்கு

வளைபடு கண்ணியர் தம்பொதுத் தம்பல நாறும்இந்த
வளைபடு கிங்கிணிக் கால்மைந்தன் வாயின் மணிமுத்தமே.

முத்தன வெண்ணகை யார்மயல் மாற்றி முறைவழுவா
தெத்தனை காலம்நின் றேத்தும் அவரினும் என்பணிந்த
பித்தனை எங்கள் பிரானை அணைவ தெளிதுகண்டீர்
அத்தனை ஞானசம் பந்தனைப் பாதம் அடைந்தவர்க்கே. ௯0

அடைத்தது மாமறைக் காடர்தங் கோயிற் கதவினையன்(று)
உடைத்தது பாணன்றன் யாழின் ஒலியை உலகவிடந்
துடைத்தது தோணி புரத்துக் கிறைவன் சுடரொளிவாய்ப்
படைத்தது தண்மையை நள்ளாற் றரசு பணித்திடவே. ௯௧

பணிபடு நுண்ணிடை பாதம் பொறுபல காதமென்று
தணிபடு மின்சொற்க ளாற்றவிர்த் தேற்குத் தழலுமிழ்கான்
மணிபடு பொற்கழல் ஞானசம் பந்தன் மருவலர்போல்
துணிபடு வேலன்ன கண்ணியென் னேவந்து தோன்றியதே.

தோன்றல்தன் னோடுடன் ஏகிய சுந்தரப் பூண்முலையை
ஈன்றவ ரேஇந்த ஏந்திழை யாரவர் இவ்வளவில்
வான்றவர் சூழுந் தமிழா கரன்றன் வடவரையே
போன்றபொன் மாடக் கழுமல நாடு பொருந்துவரே. ௯௩

பொருந்திடு ஞானத் தமிழா கரன்பதி பொற்புரிசை
திருந்திய தோணி புரத்துக் கிறைவன் திருவருளாற்
கருந்தட நீரெழு காலையிற் காகூ கழுமலமென்
றிருந்திட வாம்என்று வானவ ராகி இயங்கியதே. ௯௪

இயலா தனபல சிந்தைய ராய்இய லுங்கொல்என்று
முயலா தனவே முயன்றவன் மோகச் சுழியழுந்திச்
செயலார் வரைமதிற் காழியர் கோன்திரு நாமங்களுக்
கயலார் எனப்பல காலங்கள் போக்குவர் ஆதர்களே. ௯௫

ஆதர வும்பயப் பும்இவள் எய்தினள் என்றயலார்
மாதர வஞ்சொல்லி என்னை நகுவந்து மாமறையின்
ஓதர வம்பொலி காழித் தமிழா கரனொடென்றே
தீதர வம்பட அன்னைஎன் னேபல செப்புவதே. ௯௬

செப்பிய என்ன தவமுயன் றேன்நல்ல செந்தமிழால்
ஒப்புடை மாலைத் தமிழா கரனை உணர்வுடையோர்
கற்புடை வாய்மொழி ஏத்தும் படிகத திட்டிவர
மற்படு தொல்லைக் கடல்புடை சூழ்தரு மண்ணிடையே. கூஎ

மண்ணில் திகழ்சண்பை நாதனை வாதினில் வல்அமணைப்
பண்ணைக் கழுவின் நுதிவைத் தெம் பந்த வினையறுக்குங்
கண்ணைக் கதியைத் தமிழா கரனைஎங் கற்பகத்தைத்
திண்ணாற் றுடையல் கவுணியர் தீபனைச் சேர்ந்தனமே.

சேரும் புகழ்த்திரு ஞானசம் பந்தனை யானுரைத்த
பேருந் தமிழ்ப்பா இவைவல்லவர் பெற்ற இன்புலகம்
காருந் திருமிடற் றாய்அரு ளாய்என்று கைதொழுவர்
நீரும் மலருங்கொ ளாநெடு மாலும் பிரமனுமே. கூகூ

பிரமா புரம்வெங் குருசண்பை தோணி புகலிகொச்சை
சிரமார் புரநற் புறவந்த ராய்காழி வேணுபுரம்
வரமார் பொழில்திரு ஞானசம் பந்தன் பதிக்குமிக்க
பரமார் கழுமலம் பன்னிரு நாமம்இப் பாரகத்தே. க00

பாரகலத் துன்பங் கடந்தமர ராற்பணியும்
ஏரகலம் பெற்றாலும் இன்றாதாற்—காரகிலின்
தூமங் கமழ்மாடத் தோணிபுரத் தலைவன்
நாமஞ் செவிக்கிசையா நாள். க0க

திருச்சிற்றம்பலம்

---

நம்பியாண்டார் நம்பி அருளிய

## ஆளுடையபிள்ளையார் திருச்சண்பை விருத்தம்

திருச்சிற்றம்பலம்

பாலித் தெழில்தங்கு பார்முகம் உய்யப் பறிதலையோர்
மாலுற் றழுந்த அவதரித் தோன்மணி நீர்க்கமலத்
தாவித் தலர்மிசை அன்னம் நடப்ப அணங்கிதென்றுச்
சாலித் தலைபணி சண்பையர் காவலன் சம்பந்தனே. க

கொங்குதங் குங்குஞ்சி கூடாப் பருவத்துக் குன்றவில்லி
பங்குதங் கும்மங்கை தன்னருள் பெற்றவன் பைம்புணரிப்
பொங்குவங் கப்புனல் சேர்த்த புதுமணப் புன்னையின்கீழ்ச்
சங்குதங் கும்வயற் சண்பையர் காவலன் சம்பந்தனே. ௨

குவளைக் கருங்கட் கொடியிடை துன்பந் தவிர அன்று
துவளத் தொடுவிடந் தீர்த்த தமிழின் தொகைசெய்தவன்
திவளக் கொடிக்குன்ற மாளிகைச் சூளிகைச் சென்னியின்வாய்த்
தவளப் பிறைதங்கு சண்பையர் காவலன் சம்பந்தனே. ௩

கள்ளம் பொழில்நனி பள்ளித் தடங்கட மாக்கிஅஃதே
வெள்ளம் பணிநெய்த லாக்கிய வித்தகன் வெண்குருகுப்
புள்ளொண் தவளப் புரிசங்கொ டாலக் கயல்உகளத்
தள்ளந் தடம்புனற் சண்பையர் காவலன் சம்பந்தனே. ௪

ஆறதே றுஞ்சடை யான்அருள் மேவ அவனியர்க்கு
வீறதே றுந்தமி ழால்வழி கண்டவன் மென்கிளிமாந்
தேறல்கோ தித்தூறு சண்பகந் தாவிச் செழுங்கமுகின்
தாறதே றும்பொழிற் சண்பையர் காவலன் சம்பந்தனே. ௫

அந்தமுந் தும்பிற வித்துயர் தீர அரனடிக்கே
பந்தமுந் துந்தமிழ் செய்த பராபரன் பைந்தடத்தேன்
வந்துமுந் திநந்த முத்தங் கொடுப்ப வயற்கயலே
சந்தமுந் தும்பொழிற் சண்பையர் காவலன் சம்பந்தனே. ௬

புண்டலைக் குஞ்சரப் போர்வையர் கோயிற் புகஅடைக்கும்
ஒண்டலைத் தண்டமிழ்க் குண்டா சனியும்பர்ப் பம்பிமின்னுங்
கொண்டலைக் கண்டுவண் டாடப் பெடையொடுங் கொக்குறங்குந்
தண்டலைக் குண்டகழ்ச் சண்பையர் காவலன் சம்பந்தனே.

எண்டலைக் குந்தலை வன்கழல் சூடிஎன் உள்ளம்வெள்ளங்
கண்டலைப் பத்தன் கழல்தந்த வன்கதிர் முத்தம்நத்தம்
விண்டலைப் பத்தியி லோடும் விரவி மிளிர்பவளந்
தண்டலைக் குங்கடற் சண்பையர் காவலன் சம்பந்தனே. ௮

ஆறுமண் டப்பண்டு செஞ்சொல் நடாத்திய மண்முழுதும்
பாறுமண் டக்கண்ட சைவ சிகாமணி பைந்தடத்த

சேறுமண் டச்சங்கு செங்கயல் தேமாங் கனிசிதறிச்
சாறுமண் டும்வயற் சண்பையர் காவலன் சம்பந்தனே. கூ

விடந்திளைக் கும்அர வல்குல்மென் கூந்தல் பெருமணத்தின்
வடந்திளைக் குங்கொங்கை புல்கிய மன்மதன் வண்கதலிக்
கடந்திளைத் துக்கழு நீர்புல்கி ஒல்கிக் கரும்புரிஞ்சித்
தடந்திளைக் கும்புனற் சண்பையர் காவலன் சம்பந்தனே.

பாலித்த கொங்கு குவளைகள் எம்பொழில் கீழ்ப்பாந்து
வாலிப்ப வாறதே றுங்கழ னிச்சண்பை அந்தமுந்து
மேலிட்ட புண்டலைக் குஞ்சரத் தெண்டலைக் குந்தலைவன்
கோலிட்ட வாறு விடந்திளைக் கும்அர வல்குலையே. கக

திருச்சிற்றம்பலம்

நம்பியாண்டார்நம்பி அருளிய

# ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை*

திருச்சிற்றம்பலம்

திங்கட் கொழுந்தொடு பொங்கரவு திளைக்குங்
கங்கைப் பேரியாற்றுக் கடுவரக் கலுழியின்
இதழியின் செம்பொன் இருகரை சிதறிப்
புதலெருக்கு மலர்த்தும் புரிபுன் சடையோன்
5 திருவருள் பெற்ற இருபிறப் பாளன்
முத்தீ வேள்வி நான்மறை வளர
ஐவேள்வு யர்த்த அறுதொழி லாளன்
ஏழிசை அரசை எண்திசை அறியத்
துண்டப் படுத்த தண்டமிழ் விரகன்
10 காழி நாடன் கவுணியர் தலைவன்
மாமறை நோக்கி மலைமகள் புதல்வன்
திருந்திய பாடல் விரும்பினர்க் கல்லது

*ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை முறையே விரவி வரும் கோவை.

கடுந்துய ருட்புகக் கைவிளிக் கும்இந்
நெடும்பிற விக்கடல் நீந்துவ தரிதே. ௧

அரியோடு நான்முகத்தோன் ஆதி சுரர்க்கெல்லாந்
தெரியாமை செந்தழலாய் நின்ற—ஒருவன்சீர்
தன்தலையின் மேல்தரித்த சம்பந்தன் தாள்இணைகள்
என்தலையின் மேலிருக்க என்று. ௨

என்றும் அடியவர் உள்ளத் திருப்பன இவ்வுலகோர்
நன்று மலர்கொடு தூவித் துதிப்பன நல்லசங்கத்
தொன்றும் புலவர்கள் யாப்புக் குரியன ஒண்கவியைப்
பொன்றுங் கவுணியன் சைவ சிகாமணி பொன்னடியே. ௩

அரிசினக் கடகரி யதுபட உரித்த
படர்சடைக் கடவுள்தன் திருவருள் அதனாற் பிறந்தது
கழுமலம் என்னுங் கடிநக ரதுவே வளர்ந்தது
தேங்கமழ் வாவிச் சிலம்பரை யன்பெறு
5 பூங்குழல் மாதிடு போனக முண்டே பெற்றது
குழகனைப் பாடிக் கோலக் காப்புக்
கழகுடைச் செம்பொற் றாளம்அவையே தீர்த்தது
தாதமர் மருகற் சடையனைப் பாடிப்
பேதுறு பெண்ணின் கணவனை விடமே அடைத்த
10 தரைசே டிசையா அணிமறைக் காட்டுக்
குரைசேர் குடுமிக் கொழுமணிக் கதவேயேறிற்(று)
அத்தியும் மாவுந் தவிர அரத்துறை
முத்தின் சிவிகைமுன் னூட்பெற் றேபாடிற்
றருமறை ஒத்தூர் ஆண்பனை அதனைப்
15 பெருநிறம் எய்தும் பெண்பனை யாவே கொண்டது
பூவிடு மதுவிற் பொறிவண் டுழலும்
ஆவடு துறையிற் பொன்னா யிரமேகண்ட
துறியொடு பீலி பொருகையிற் கொள்ளும்
பறிதலைச் சமணைப் பல்கழு மிசையேஈர்த்த
20 தவிழ்ச்சுவை யேஅறிந் தரனடி பரவுந்
தமிழ்ச்சுவை அறியாத் தம்பங்களையே நினைந்த
தள்ளற் பழனக் கொள்ளம் பூதூர்

இக்கரை ஓடம் அக்கரைச் செலவே மிக்கவர்
ஊனசம் பந்தம் அறுத்துயக் கொளவல
20 ஞான சம்பந்தன் இஞ் ஞாலத் திடையே. ௪

நிலத்துக்கு மேலாறு நீடுலகத் துச்சித்
தலத்துக்கு மேலே தானென்பர்—சொலத்தக்க
சுத்தர்கள் சேர்காழிச் சுரன்ஞான சம்பந்தன்
பத்தர்கள் போய்வாழும் பதி. ௫

பதிகம் பலபாடி நீடிய பிள்ளை பரசுதரற்
கதிகம் அணுக்கன் அமணர்க்குக் காலன் அவதரித்த
மதியந் தவழ்மாட மாளிகைக் காழிஎன் றுல்வணங்கார்
ஒதியம் பணைபோல் விழுவர்அந் தோசில ஊமர்களே. ௬

கவள மாளிகைத் திவளும் யானையின்
கவுட்டலைக் கும்பத்
தும்பர்ப் பதணத் தம்புதந் திளைக்கும்
பெருவளந் தழீஇத் திருவளர் புகலி
5 விளங்கப் பிறந்த வளங்கொள் சம்பந்தன்
கருதியஞ் செவ்விச் சுருதியஞ் சிலம்பில்
தேமரு தினைவளர் காமரு புனத்து
மும்மதஞ் சொரியும் வெம்முகக் கைம்மா
மூரி மருப்பிற் சீரிய முத்துக்
10 கொடுஞ்சிலை வளைத்தே கொடுஞ்சரந் துரந்து
முற்பட வந்த முயன்றங் குதவிசெய்
வெற்பனுக் கலது
சுணங்கணி மென்முலைச் சுரிகுழல் மாதினை
மணஞ்செய மதிப்பது நமக்குவன் பழியே. ௭

பழியொன்றும் ஓராதே பாயிடுக்கி வாளா
கழியுஞ் சமண்கையர் தம்மை—அழியத்
துரந்தரங்கச் செற்றான் சுரும்பரற்றும் பாதம்
நிரந்தரம்போய் நெஞ்சே நினை. ௮

நினைவூ தரவெய்தி மேகலை நெக்கு வளைசரிவாள்
தனைவுவ வென்றின் றருளுதி யேதடஞ் சாலிவயற்

கனையா வரும்மேதி கன்றுக் கிரங்கித்தன் கால்வழிபால்
நனையா வருங்காழி மேவிய சீர்ஞான சம்பந்தனே. கூ

தனமலி கமலத் திருவெனுஞ் செல்வி
விருப்பொடுந் திளைக்கும் வீயா இன்பத்
தாடக மாட நீடுதென் புகலிக்
காமரு கவிஞர் கவுணியர் தலைவ
5 பொற்பமர் தோளா நற்றமிழ் விரக
மலைமகள் புதல்வ கலைபயில் நாவ நிருது
பொங்கொளி மார்பில் தங்கிய திருநீ
றுதரித் திறைஞ்சிய பேதையர் கையில்
வெள்வளை வாங்கிச் செம்பொன் கொடுத்தலிற்
10 பிள்ளை யாவது தெரிந்தது பிறர்க்கே. க0

பிறவிஎனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனுந் தோற்றோணி கண்டீர்—நிறையுலகில்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ். கக

ஞானந் திரளையி லேயுண் டனைஎன்று நாடறியச்
சோனந் தருகுழ லார்சொல் விடாமுன் சுரும்புகட்குப்
பானந் தருபங் கயத்தார் கொடுபடைச் சால்வழியே
கூனந் துருள்வயல் சூழ்காழி மேவிய கொற்றவனே. கஉ

அவனி தலநெரிய எதிர்எதிர் மலைஇச்
சொரிமதக் களிற்று மத்தகம் போழ்ந்து
செஞ்சே றாடிச் செல்வன வரியே எஞ்சாப்
படவர வுச்சிப் பருமணி பிதுங்கப்
5 பிடரிடைப் பாய்வன பேழ்வாய்ப் புலியே இடையிடைச்
செறியிருள் உருவச் சேண்விசும் பதனிற்
பொறியென விழுவன பொங்கொளி மின்னே
உறுசின வரையால் உந்திய கலுழிக்
கரையால் உழல்வன காடியின் கணனே நிரையார்
10 பொருகடல் உதைந்த சுரிமுகச் சங்கு
செங்கயல் கிழித்த பங்கய மலரின்

செம்மடல் நிறைய வெண்முத் துதிர்க்கும்
பழனக் கழனிக் கழுமல நாடன்
வைகையில் அமணரை வாதுசெய் தறுத்த
15 சைவ சிகாமணி சம்பந்தன் வெற்பிற்
சிறுகிடை யவள்தன் பெருமுலை புணர்வான்
நெறியினில் வரலொழி நீமலை யோனே. கங

மலைத்தலங்கள் மீதேறி மாதவங்கள் செய்து
முலைத்தலங்கள் நீத்தாலும் மூப்பர்—கலைத்தலைவன்
சம்பந்தற் காளாய்த் தடங்காழி கைகூப்பித்
தம்பந்தம் தீராத தாம். கச

தாமரை மாதவி சேறிய நான்முகன் தண்பதிபோல்
காமரு சீர்வளர் காழிநன் னாடன் கவித்திறத்து
நாமரு மாதவர் போல்அழ கிந்துநல் வில்லிபின்னே
நீர்மரு வாத சுரத்தெங்ஙன் ஏகும்மென் நேரிழையே. கரு

இழைகெழு மென்முலை இதழிமென் மலர்கொயத்
தழைவர வொசித்த தடம்பொழில் இதுவே காமர்
சுனைகுடைந் தேறித் துகிலது புனையநின்
றனையுங் கண்டுவெள் கிடமிதுவே தினைதொறும்
5 பாய்கிளி இரியப் பையவந் தேறி
ஆயவென் றிருக்கும் மணிப்பரண் இதுவே ஈதே
இன்புறு சிறுசொல் லவைபல இயற்றி
அன்புசெய் தென்னை ஆட்கொளு மிடமே பொன்புரை
தடமலர்க் கமலக் குடுமியி லிருந்து
10 நற்றொழில் புரியும் நான்முக னாட்டைப்
புற்கடை கழீஇப் பொங்கு சராவத்து
நெய்த்துடுப் பெடுத்த முத்தீப் புகையால்
நாள்தொறும் மறைக்குஞ் சேடுறு காழி
எண்டிசை நிறைந்த தண்டமிழ் விரகன்
15 நலங்கலந் தோங்கும் விலங்கலின் மாட்டுப்
பூம்புனம் அதனிற் காம்பன தோளி
பஞ்சில் திருந்தடி நோவப் போய்எனை
வஞ்சித் திருந்த மணியறை இதுவே. கசு

வேழங்கள் எய்பவர்க்கு வில்லா வதிக்கால
மாழங் கடல்முத்தம் வந்தலைக்கும்—நீள்வயல்சூழ்
வாய்ந்ததிவண் மாடமதிற் காழிக்கோன் சிலம்பிற்
சாய்ந்தது வண்டழையோ தான். கஎ

தழைக்கின்ற சீர்மிகு ஞானசம் பந்தன் தடமலைவாய்
அழைக்கின்ற மஞ்ஞைக் கலந்தன கோடலம் பெய்திடுவான்
இழைக்கின்ற தந்தரத் திந்திர சாபநின் எண்ணமொன்றும்
பிழைக்கின்ற தில்லைநற் றேர்வந்து தோன்றிற்றுப் பெய்வளையே.

வளைகாண் மந்தி மாமரப் பொந்தில்
விளைதேன் உண்டு வேணுவின் றுணியாற்
பாறை யில்துயில் பனைக்கை வேழத்தை
உந்தி எழுப்பும் அந்தண் சிலம்ப அஃதிங்
5 கென்னையர் இங்கு வருவர் பலரே
அன்னை காணில் அலர்தூற் றும்மே பொன்னேர்
சிறுபாற் கரந்த விளிகுரற் கிங்கிணி
சேவடி புல்லிச் சில்குரல் இயற்றி
அமுதுண் செவ்வாய் அருவி தூங்கத்
10 தாளம் பிரியாத் தடக்கை யசைத்துச்
சிறுகூத் தியற்றிச் சிவனருள் பெற்ற
நற்றமிழ் விரகன் பற்றலர் போல
இடுங்கிய மனத்தொடும் ஒடுங்கிய சென்று
பரிதியுங் குடகடற் பாய்ந்தனன்
15 கருதிநிற் பதுபிழை கங்குல்இப் புனத்தே. கக

தேம்புனமே யுன்னைத் திரிந்து தொழுகின்றேன்
வாம்புகழ்சேர் சம்பந்தன் மாற்றலர்போல்—தேம்பி
அழுதகன்றாள் என்று(து) அணிமலையர் வந்தால்
தொழுதகன்றாள் என்றுநீ சொல்லு. உ0

சொற்செறி நீள்கவி செய்தன்று வைகையில் தொல்லமணர்
பற்செறி யாவண்ணங் காத்தசம் பந்தன் படர்சிலம்பிற்
கற்செறி வார்சுனை நீர்குடைந் தாடுங் கனங்குழையை
இற்செறி யாவணங் காத்திலை வாழி இரும்புனமே. உக

புனலற வறந்த புன்முளி சுரத்துச்
சினமலி வேடர் செஞ்சரம் உரீஇப்
படுகலைக் குளம்பின் முடுகு நாற்றத்
தாடும் அரவின் அகடு தீயப்
5 பாடு தகையின் பஞ்சுரங் கேட்டுக்
கள்ளியங் கவட்டிடைப் பள்ளி கொள்ளும்
பொறிவரிப் புறவே யுறவலை காணீ நறைகமழ்
தேம்புனல் வாவித் திருக்கழு மலத்துப்
பையர வசைத்த தெய்வ நாயகன்
10 தன்னருள் பெற்ற பொன்னணிக் குன்ற
மானசம் பந்த மண்மிசைத் துறந்த
ஞானசம் பந்தனை நயவார் கிளைபோல்
வினையேன் இருக்கும் மனைபிரி யாத
வஞ்சி மருங்குல் அஞ்சொற் கிள்ளை
15 ஏதிலன் பின்செல விலக்கா தொழிந்தனை
ஆதலிற் புறவே யுறவலை நீயே. ௨௨

அலைகடலின் மீதோடி அந்நுளையர் வீசும்
வலைகடலில் வந்தேறு சங்க—மலர்கடலை
வெண்முத் தவிழ்வயல்சூழ் வீங்குபுனற் காழியே
ஒண்முத் தமிழ்பயந்தான் ஊர். ௨௩

ஊரும் பசும்புர வித்தே ரொளித்த தொளிவிசும்பிற்
கூரும் இருளொடு கோழிகண் துஞ்சா கொடுவினையேற்
காரும் உணர்ந்திலர் ஞானசம் பந்தன்அந் தாமரையின்
தாருந் தருகிலன் எங்ஙனம் யான்சங்கு தாங்குவதே. ௨௪

தேமலி கமலப் பூமலி படப்பைத்
தலைமுக டேறி இளவெயிற் காயுங்
கவடிச் சிறுகாற் கர்க்கட கத்தைச்
சுவடிச் சியங்குஞ் சூனரி முதுகைத்
5 துன்னி எழுந்து செந்நெல் மோதுங்
காழி நாட்டுக் கவுணியர் குலத்தை
வாழத் தோன்றிய வண்டமிழ் விரகன்
தெண்டிரைக் கடல்வாய்க்

காண்டகு செவ்விக் களிறுகள் உகுத்த
10 முட்டைமுன் கவரும் பெட்டையங் குருகே
வாடை யடிப்ப வைகறைப் போதில்
தனிநீ போந்து பனிநீர் ஒழுகக்
கூசிக் குளிர்ந்து பேசா திருந்து
மேனி வெளுத்த காரணம் உரையாய்
15 இங்குத் தணந்தெய்தி நமரும்
இன்னம்வந் திலரோ சொல்இளங் குருகே. ௨௫

குருகும் பணிலமுங் கூன்நந்துஞ் சேலும்
பெருகும் வயற்காழிப் பிள்ளை—அருகந்தர்
முன்கலங்க நட்ட முடைகெழுமி யால்இன்னம்
புன்கலங்கல் வைகைப் புனல். ௨௬

புனமா மயில்சாயல் கண்டுமுன் போகா கிளிபிரியா
இனமான் விழியொக்கும் என்றுவிட் டேகா இருநிலத்துக்
கனமா மதிற்காழி ஞானசம் பந்தன் கடன்மலைவாய்த்
தினைமா திவள்காக்க எங்கே விளையுஞ் செழுங்கதிரே. ௨௭

கதிர்மதி நுழையும் படர்சடை மகுடத்
தொருத்தியைக் கரந்த விருத்தனைப் பாடி
முத்தின் சிவிகை முன்னாட் பெற்ற
அத்தன் காழி நாட்டுறை அணங்கோ மொய்த்தெழு
5 தாமரை யல்லித் தவிசிடை வளர்ந்த
காமரு செல்வக் கனங்குழை யவளோ மீமருத்
தருவளர் விசும்பில் தவநெறி கலக்கும்
உருவளர் கொங்கை உருப்பசி தானோ
வாருணக் கொம்போ மதனன் கொடியோ
10 ஆரணி யத்துள் அருந்தெய்வ மதுவோ
வண்டமர் குழலுங் கெண்டையங் கண்ணும்
வஞ்சி மருங்குங் கிஞ்சுக வாயும்
ஏந்திள முலையுங் காந்தள்அங் கையும்
ஓவியர் தங்கள் ஒண்மதி காட்டும்
15 வட்டிகைப் பலகை வான்துகி லிகையால்

இயக்குதற் கரியதோர் உருவுகண் டென்னை
மயக்கவந் துதித்ததோர் வடிவிது தானே. ௨அ

வடிக்கண்ணி யாளைஇவ் வான்சுரத்தி னூடே
கடிக்கண்ணி யாளொடுங் கண்டோம்—வடிக்கண்ணி
மாம்பொழில்சேர் வைகை அமண்மலைந்தான் வண்காழிப்
பூம்பொழிலே சேர்ந்திருப்பார் புக்கு. ௨௯

குருந்துந் தாளமும் போல்வண்ண வெண்ணகைக் கொய்மலராள்
பொருந்துந் திரள்புயத் தண்ணல்சம் பந்தன்பொற் றாமரைக்கா
வருந்துந் திரள்கொங்கை மங்கையை வாட்டினை வானகத்தே
திருந்துந் திரள்முகில் முந்திவந் தேறுதிங் கட்கொழுந்தே.

திருச்சிற்றம்பலம்

நம்பியண்டார்நம்பி அருளிய

## ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை

திருச்சிற்றம்பலம்

திருந்தியசீர்ச் செந்தா மரைத்தடத்துச் சென்றோர்
இருந்தண் இளமேதி பாயப்—பொருந்திய
புள்ளிரியப் பொங்கு கயல்வெருவப் பூங்குவளைக்
கள்ளிரியச் செங்கழுநீர் கால்சிதைத்—துள்ளிக்
குருகிரியக் கூனிறவம் பாயக் களிறு
முருகுவிரி பொய்கையின்கண் மூழ்க—வெருவுற்ற
கோட்டகத்துப் பாய்வாளை கண்டலவன் கூசிப்போய்த்
தோட்டகத்த செந்நெல் துறையடையச்—சேட்டகத்த
5 காவி முகமலரக் கார்நீலங் கண்படுப்ப
வாவிக்கண் நெய்தல் அலமர—மேவிய
அன்னந் துயில்இழப்ப அஞ்சிறைசேர் வண்டினங்கள்
துன்னுந் துணையிழப்பச் சூழ்கிடங்கின்—மன்னிய
வள்ளை நகைகாட்ட வண்குமுதம் வாய்காட்டத்

தெள்ளுபுனற் பங்கயங்கள் தேன்காட்ட—மெள்ள
நிலவு மலரணையின் நின்றிழிந்த சங்கம்
இலகுகதிர் நித்திலங்கள் ஈன—உலவிய
மல்லைப் பழனத்து வார்பிரச மீதழிய
ஒல்லை வரம்பிடறி ஓடிப்போய்ப்—புல்லிய
10 பாசடையைச் செந்நெற் படரொளியாற் பல்கதிரோன்
தேசடைய ஓங்கு செறுவுகளும்—மாசில்நீர்
நித்திலத்தின் சாயும் நிகழ்மரக தத்தோலுந்
தொத்தொளி செம்பொற் றொழிற்பரிய—மொய்த்த
பவளத்தின் செவ்வியும் பாங்கணைய ஓங்கித்
திவளக் கொடிமருங்கிற் சேர்த்தித்—துவளாமைப்
பட்டாடை கொண்டுடுத்துப் பைந்தோ டிலங்குகுழை
இட்டமைந்த கண்ணார் இளங்கமுகும்—விட்டொளிசேர்
கண்கள் அழல்சிதறிக் காய்ச்சினத்த வாய்மதத்துத்
தண்டலையின் நீழல் தறியணைந்து—கொண்ட
15 கொலைபுரியா நீர்மையவாய்க் கொம்புவளைத் தேந்தி
மலையு மரவடிவங் கொண்டாங்—கிலைநெருங்கு
சூதத் திரளுந் தொகுகனிக ளான்நிவந்த
மேதகுசீர்த் தெங்கின் வியன்பொழிலும்—போதுற்
றினமொருங்கு செவ்வியவா யின்தேன் ததும்பு
கனிநெருங்கு திண்கதலிக் காடும்—நனிவிளங்கு
நாற்றத்தால் எண்டிசையும் வந்து நலஞ்சிறப்ப
ஊற்று மடுத்த வுயர்பலவும்—மாற்றமரும்
மஞ்ச ளெழில்வனமும் மாதளையின் வார்பொழிலு
மிஞ்சி இளங்காவின் ஈட்டமும்—எஞ்சாத
20 கூந்தற் கமுகுங் குளிர்பாட லத்தெழிலும்
வாய்ந்தசீர்ச் சண்பகத்தின் வண்காடும்—ஏந்தெழிலார்
மாதவியும் புன்னையும் மன்னும் மலர்க்குரவுங்
கேதையும் எங்குங் கெழீஇப்—போதின்
இளந்தென்றல் வந்தசைப்ப எண்டிசையும் வாசம்
வளர்ந்துன்று வார்பொழிலின் மாடே—கிளர்ந்தெங்கு
மாலை யொலியும் மரிவார் குரலொலியுஞ்
சோலைக் கிளிமிழற்றுஞ் சொல்லொலியும்—ஆலும்

அறுபதங்கள் ஆர்ப்பொலியும் ஆன்ற பெர்லிவெய்தி
உறுதிரைநீர் வேலை ஒலிப்ப—வெறிகமழும்
25 நந்தா வனத்தியல்பும் நற்றவத்தோர் சார்விடமும்
அந்தமில் சீரார் அழகினன்—முந்திப்
புகழ்வாருந் தன்மையவாய்ப் பூதலத்துள் ஓங்கி
நிகழ்கிடங்குஞ் சூழ்கிடப்ப நேரே—திகழு
முளைநிரைத்து முரிச் சிறைவகுத்து மொய்த்த
புளகத்தின் பாம்புரிசூழ் போகி—வளர
விரும்பதணுஞ் சேர விருத்தியெழில் நாஞ்சின்
மருங்கணைய வட்டாலை யிட்டுப்—பொருந்தியசீர்த்
தோமரமுந் தொல்லைப் பொறிவீசி யந்திரமுங்
காமரமும் எப்புழையுங் கைகலந்து—மீமருவும்
30 வெங்கதிரோன் தேர்விலங்கு மிக்குயர்ந்த மேருப்போன்(று)
அங்கனகத் திஞ்சி அணிபெற்றுப்—பொங்கொளிசேர்
மாளிகையும் மன்னியசீர் மண்டபமும் ஒண்தலத்த
சூளிகையுந் துற்றெழுந்த தெற்றிகளும்—வாளொளிய
நாடக சாலையும் நன்பொற் கபோதகஞ்சேர்
பீடமைத்த மாடத்தின் பெற்றியும்—கேடில்
உருவு பெறவகுத்த அம்பலமும் ஓங்கு
தெருவு வகுத்த செய்குன்றும்—மருவினிய
சித்திரக் காவுஞ் செழும்பொழிலும் வாவிகளும்
நித்திலஞ்சேர் நீடும் நிலைக்களமும்—எத்திசையுந்
35 துன்னி எழில்சிறப்பச் சோதி மலர்மடந்தை
மன்னி மகிழ்ந்துறையும் வாய்மைத்தாய்ப்—பொன்னும்
மரகதமும் நித்திலமும் மாமணியும் பேணி
இரவலர்கட் கெப்போதும் ஈந்தும்—கரவாது
கற்பகமுங் காருமெனக் கற்றவர்க்கும் நற்றவர்க்குந்
தப்பாக் கொடைவளர்க்குஞ் சாயாத—செப்பத்தாற்
பொய்ம்மை கடிந்து புகழ்புரிந்து பூதலத்து
மெய்ம்மை தலைசிறந்து மேதக்கும்—உண்மை
மறைபயில்வார் மன்னு வியாகரணக் கேள்வித்
துறைபயில்வார் தொன்னூல் பயில்வார்—முறைமையினல்
40 ஆகமங்கள் கேட்பார் அருங்கலைநூல் ஆதரித்துப்

பதி. ௨௦

போகம் ஒடுங்காப் பொருள்துய்ப்பார்—சோகமின்றி
நீதி நிலையுணர்வார் நீள்நிலத்துள் ஐம்புலனுங்
காதல் விடுதவங்கள் காமுறுவார்—ஆதி
அருங்கலைநூல் ஓதுவார் ஆதரித்து வென்றிக்
கருங்கலியை நீங்கக் கனல்வளர்ப்பார்—ஒருங்கிருந்து
காமநூல் கேட்பார் கலைஞானங் காதலிப்பார்
ஓமநூல் ஓதுவார் உத்தரிப்பார்—பூமன்னும்
நான்முகனே யன்னசீர் நானூற் றுவர்மறையோர்
தாமன்னி வாழுந் தகைமைத்தாய்—நாமன்னும்
45 ஆரணங்கும் மற்றை அருந்ததியும் போல்மடவார்
ஏரணங்கு மாடத் தினிதிருந்து—சீரணங்கு
வீணை பயிற்றுவார் யாழ்பயில்வார் மேவியசீர்ப்
பாணம் பயில்வார் பயன்உறுவார்—பேணியசீர்ப்
பூவைக்குப் பாட்டுரைப்பார் பொற்கிளிக்குச் சொற்பயில்வார்
பாவைக்குப் பொன்புனைந்து பண்புறுவா—ராய்எங்கும்
மங்கையர்கள் கூட்டமும் மன்னு சிறார்குழுவும்
பொங்குலகம் எல்லாம் பொலிவடையத்—தங்கிய
வேத ஒலியும் விழாஒலியும் மெல்லியலார்
கீத ஒலியுங் கிளர்ந்தோங்கும்—மாதரார்
50 பாவை ஒலியும் பறைஒலியும் பல்சனங்கள்
மேவும் ஒலியும் வியன்நகரங்—காவலர்கள்
பம்பைத் துடிஒலியும் பவ்வப் படைஒலியுங்
கம்பக் களிற்றொலியுங் கைகலந்து—நம்பிய
கார்முழக்கும் மற்றைக் கடல்முழக்கும் போற்கலந்த
சீர்முழக்கம் எங்குஞ் செவிடுபடப்—பார்விளங்கு
செல்வம் நிறைந்தவூர் சீரில் திகழ்ந்தவூர்
மல்கு மலர்மடந்தை மன்னுமூர்—சொல்லினிய
ஞாலத்து மிக்கவூர் நானூற் றுவர்களூர்
வேலொத்த கண்ணார் விளங்குமூர்—ஆலித்து
55 மண்ணிருகால் வேலை வளர்வெள்ளத் தும்பரொடும்
பன்னிருகால் நீரின் மிதந்தவூர்—மன்னும்
பிரமனூர் வேணுபுரம் பேரொலிநீர்ச் சண்பை
அரன்மன்னு தண்காழி அம்பொற்—சிரபுரம்

பூந்தராய் கொச்சைவயம் வெங்குருப் பொங்குபுனல்
வாய்ந்தநல் தோணி புரம்மறையோர்—ஏய்ந்த
புகலி கழுமலம் பூம்புறவம் என்றிப்
பகர்கின்ற பண்பிற்ற தாகித்—திகழ்கின்ற
மல்லைச் செழுநகர மன்னவும் வல்லமணர்
ஒல்லைக் கழுவில் உலக்கவும்—எல்லையிலா
60 மாதவத்தோர் வாழவும் வையகத்தோர் உய்யவும்
மேதக்க வானோர் வியப்பவும்—ஆதியாம்
வென்றிக் கலிகெடவும் வேதத் தொலிமிகவும்
ஒன்றிச் சிவனடியார் ஓங்கவுந்—துன்றிய
பன்னு தமிழ்ப்பதினா றாயிர நற்பனுவல்
மன்னு புவியவர்க்கு வாய்ப்பவும்—முன்னிய
சிந்தையாற் சீரார் கவுணியர்க்கோர் சேயென்ன
வந்தங் கவதரித்த வள்ளலை—அந்தமில்சீர்
ஞானச் சுடர்விளக்கை நற்றவத்தோர் கற்பகத்தை
மான மறையவற்றின் வான்பொருளை—ஆனசீர்த்
65 தத்துவனை நித்தனைச் சைவத் தவர்அரசை
வித்தகத்தால் ஓங்கு விடலையை—முத்தமிழின்
செஞ்சொற் பொருள்பயந்த சிங்கத்தைத் தெவ்வருயிர்
அஞ்சத் திகழ்ந்த அடலுருமை—எஞ்சாமை
ஆதிச் சிவனருளால் அம்பொன்செய் வட்டிலிற்
கோதில் அமிர்தநுகர் குஞ்சரத்தைத்—தீதறுசீர்க்
காலத் தொகுதியும் நான்மறையின் காரணமும்
மூலப் பொருளும் முழுதுணர்ந்த—சீலத்
திருஞான சம்பந்தன் என்றுலகஞ் சேர்ந்த
ஒருநாமத் தாலுயர்ந்த கோவை—வருபெருநீர்ப்
70 பொன்னிவள நாடனைப் பூம்புகலி நாயகனை
மன்னர் தொழுதிறைஞ்சு மாமணியை—முன்னே
நிலவு முருகர்க்கும் நீலநக் கர்க்குந்
தொலைவில் புகழ்ச்சிறுத் தொண்டர்க்கும்—குலவிய
தோழமையாய்த் தொல்லைப் பிறப்பறுத்த சுந்தரனை
மாழைஒண்கண் மாதர் மதனனைச்—சூழொளிய
கோதைவேல் தென்னன்றன் கூடற் குலநகரில்

வாதில் அமணர் வலிதொலையக்—காதலால்
புண்கெழுவு செம்புனலா றேடப் பொருதவரை
வண்கழுவில் தைத்த மறையோனை—ஒண்கெழுவு
75 ஞாலத் தினர்அறிய மன்னுநனி பள்ளியது
பாலை தனைநெய்த லாக்கியுங்—காலத்து
நீரெதிர்ந்து சென்று நெருப்பிற் குளிர்படைத்தும்
பாரெதிர்ந்த பல்விடங்கள் தீர்த்துமுன்—நேரெழுந்த
யாழை முரித்தும் இருங்கதவந் தானடைத்துஞ்
சூழ்புனலில் ஓடத் தொழில்புரிந்துந்—தாழ்பொழில்சூழ்
கொங்கிற் பனிநோய் பரிசனத்தைத் தீர்ப்பித்துந்
துங்கப் புரிசை தொகுமிழலை—அங்கதனில்
நித்தன் செழுங்காசு கொண்டுநிலா நெல்வாயின்
முத்தின் சிவிகை முதல்கொண்டும்—அத்தகுசீர்
80 மாயிரு ஞாலத்து மன்னு வடுதுறைபுக்
காயிரஞ் செம்பொன் அதுகொண்டு—மாய்வரிய
மாண்புதிகழ் எம்பெருமான் மன்னுதிரு வோத்தூரில்
ஆண்பனைகள் பெண்பனைக ளாக்கியும்—பாண்பரிசிற்
கைப்பாணி ஒத்திக்கா ழிக்கோலக் காவிற்பொற்
சப்பாணி கொண்டு தராதலத்துள்—எப்பொழுதும்
நீக்கரிய இன்பத் திராகமிருக் குக்குறள்
நோக்கரிய பாசுரம்பல் பத்தோடு—மாக்கரிய
யாழ்மூரி சக்கரமாற் றீரடி முக்காலும்
பாழிமையாற் பாரகத்தோர் தாமுய்ய—ஊழி
85 உரைப்பமரும் பல்புகழால் ஓங்க உமைகோனைத்
திருப்பதிகம் பாடவல்ல சேயை—விருப்போடு
நண்ணு புகழ்மறையோர் நாற்பத்தெண் ணாயிரவர்
எண்ணில் முனிவரா ரீட்டத்துப்—பண்ணமரும்
ஓலக்கத் துள்ளிருப்ப ஒண்கோயில் வாயிலின்கண்
கோலக் கடைகுறுகிக் கும்பிட்டாங்—காலும்
புகலி வளநகருட் பூசுரர் புக்காங்
கிகலில் புகழ்பரவி ஏத்திப்—புகலிசேர்
வீதி எழுந்தருள வேண்டுமென விண்ணப்பம்
ஆதரத்தாற் செய்ய அவர்க்கருளி—நீதியாற்

90 கேதகையுஞ் சண்பகமும் நேர்கிடத்திக் கீழ்த்தாழ்ந்த
மாதவியின் போதை மருங்கணைத்துக்—காதில்
இருவேலி தன்னை இடைஇருத்தி ஈண்டு
மருவோடு மல்லிகையை வைத்தாங்—கருகே
கருமுகையைக் கைகலக்க வைத்துக் கழுநீர்ப்
பெருகு பிளவிடையே பெய்து—முருகியலும்
புன்னாகந் தன்னைப் புணர இருவாச்சி
தன்னயலே முல்லை தலையெடுப்ப—மன்னிய
வண்செருந்தி வாய்நெகிழ்ப்ப மௌவல் அலர்படைப்பத்
தண்குருந்த மாடே தலையிறக்க—ஒண்கமலத்
95 தாதடுத்த கண்ணியால் தண்ணாறுங் குஞ்சிமேற்
போதடுத்த கோலம் புனைவித்துக்—காதிற்
கனவயிர குண்டலங்கள் சேர்த்திக் கழுத்தின்
இனமணியி னாரம் இலகப்—புனைகனகத்
தொத்தடுத்த பூஞ்சரிகைச் சோதிசேர் தாளிம்பம்
வைத்துமணிக் கண்டிகை பூண்டு—முத்தடுத்த
கேயூரந் தோள்மேற் கிடத்திக் கிளர்பொன்னின்
வாய்மை பெருநூல் வலந்திகழ—வேயுந்
தமனியத்தின் தாழ்வடமுந் தண்டரளக் கோப்புஞ்
சிமையவரை மார்பிற் சேர்த்தி—அமைவுற்ற
100 வெண்ணீற்றின் ஒண்களபம் அட்டித்து மேவுதொழில்
ஒண்ணூற் கலிங்கம் உடல்புனைந்து—திண்ணெக்கிற்
காற்றுருமோ குன்றோ கடலோ வடவுருமோ
கூற்றுருவோ என்னக் கொதித்தெழுந்து—சீற்றத்
தழல்விழித்து நின்றெதிர்ந்து தாலவட்டம் வீசிப்
புழைதடக்கை கொண்டெடுத்து பொங்கி—மழைமதத்தாற்
பூத்த கடதடத்துப் போக மிகப்பொலிந்த
காத்திரத்த தாகிக் கலித்தெங்கும்—கோத்த
கொடுநிகளம் போக்கிநிமிர் கொண்டெழுந்து கோபித்
திடுவண்டை யிட்டுக் கலித்து—முடுகி
105 நெடுநிலத்தைத் தானுழக்கி நின்று நிகர்நீத்
திடிபெயரத் தாளந் திளைப்பி—அடுசினத்தாற்
கன்ற முகம்பருகிக் கையெடுத் தாராய்ந்து

வென்றி மருப்புருவ வெய்துயிர்த்—தோன்றிய
கூடம் அரணழித்துக் கோபுரங் களைக்குத்தி
நீடு பொழிலை நிகரழித்—தோடிப்
பணப்பா கரைப்பரிந்து குத்திப் பறித்த
நிணப்பாகை நீள்விசும்பின் வீசி—அணைப்பரிய
வோடைக் கருங்களிற்றை ஒண்பரிக் காரர்கள்தாம்
மாடணையக் கொண்டு வருதலுமே—கூடி
110 நயந்து குரற்கொடுத்து நட்பளித்துச் சென்று
வியந்தணுகி வேட்டந் தணித்தாங்—குயர்ந்த
உடற்றூய வாசிதனைப் பற்றிமேல் கொண்டாங்
கடற்கூடற் சந்தி யணுகி—அடுத்த
பயில்பலவும் பேசிப் படுபுரசை நீக்கி
அயர்வு கெடஅணைத்துத் தட்டி—உயர்தரு
தண்டுபே ரோசையின்கண் தாள்கோத்துச் சீர்ச்சிறுத்
தொண்டர் பிரகணையத் தோன்றுதலும் எண்டிசையும்
பல்சனமும் மாவும் படையும் புடைகிளர
ஒல்லொலியால் ஓங்கு கடல்கிளர—மல்லற்
115 பரித்தூரங் கொட்டப் படுபணிலம் ஆர்ப்பக்
கருத்தோ டிசைகவிஞர் பாட—விரித்த
குடைபலவுஞ் சாமரையுந் தொங்கல்களுங் கூடிப்
புடைபரந்து பொக்கம் படைப்பக்—கடைபடு
வீதி யணுகுதலும் வெள்வளையார் உள்மகிழ்ந்து
காதல் பெருகிக் கலந்தெங்குஞ்—சோதிசேர்
ஆடரங்கின் மேலும் அணிமா ளிகைகளிலுஞ்
சேடரங்கு நீள்மறுகுந் தெற்றியிலும்—பீடுடைய
பேரிளம்பெண் ஈறாகப் பேதை முதலாக
வாரிளங் கொங்கை மடநல்லார்—சீர்விளங்கப்
120 பேணுஞ் சிலம்பும் பிறங்கொளிசேர் ஆரமும்
பூணும் புலம்பப் புறப்பட்டுச்—செண்மறுகிற்
காண்டகைய வென்றிக் கருவரைமேல் வெண்மதிபோல்
ஈண்டு குடையின் எழில்நிழற்கீழ்க்—காண்டலுமே
கைதொழுவார் நின்று கலைசரிவார் மால்கொண்டு
மெய்தளர்வார் வெள்வளைகள் போய்வீழ்வார்—வெய்துயிர்த்துப்

பூம்பயலை கொள்வார் புணர்முலைகள் பொன்பயப்பார்
காம்பனைய மென்றோட் கவின்கழிவார்—தாம்பயந்து
வென்றிவேற் சேயென்ன வேனில்வேள் கோவென்ன
அன்றென்ன ஆமென்ன ஐயுற்றுச்—சென்றணுகிக்
125 காழிக் குலமதலை என்றுதங் கைசோர்ந்து
வாழி வளைசரிய நின்றயர்வார்—பாழிமையால்
உள்ள நிலைதளர்ந்த ஒண்ணுதலார் வெல்களிற்றை
மெள்ள நடவென்று வேண்டுவார்—கள்ளலங்கல்
தாராமை யன்றியுந் தையல்நல் லார்முகத்தைப்
பாராமை சாலப் பயன்என்பார்—நேராக
என்னையே நோக்கினான் ஏந்திழையீர் இப்பொழுது
நன்மை நமக்குண் டெனநயப்பார்—கைம்மையால்
ஒண்கலையும் நாணும் உடைதுகிலுந் தோற்றவர்கள்
வண்கமலத் தார்வலிந்து கோடும்எனப்—பண்பின்
130 வடிக்கண் மலர்வாளி வார்புருவம் வில்மேல்
தொடுத்(து) அதரந்தொண்டை துடிப்பப்—பொடித்தமுலைக்
காசைக் கருங்குழலார் காதற் கவுணியன்பாற்
பூசற் கமைந்து புறப்படுவார்—வாசச்
செழுமலர்த்தார் இன்றெனக்கு நல்காதே சீரார்
கழுமலத்தார்க் கோவே கழல்கள்—தொழுவார்கள்
அங்கோல் வளையிழக்கப் போவது நின்னுடைய
செங்கோன்மை யோவென்று செப்புவார்—நங்கைமீர்
இன்றிவன் நல்குமேல் எண்பெருங் குன்றத்தில்
அன்றமணர் கூட்டத்தை ஆசழித்துப்—பொன்ற
135 உரைகெழுவு செந்தமிழ்ப்பா ஒன்றினால் வென்றி
நிரைகழுமேல் உய்த்தானை நேர்ந்து—விரைமலர்த்தார்
பெற்றிடலாம் என்றிருந்த நம்மினும் பேதையர்கள்
மற்றுளரோ என்று வகுத்துரைப்பார்—மற்றிவனே
பெண்ணிரக்கம் அன்றே பிறைநுதலீர் மாசுணத்தின்
நண்ணு கடுவிடத்தால் நாட்சென்று—விண்ணுற்ற
ஆருயிரை மீட்டன்(று) அவளை யணிமருகல்
ஊரறிய வைத்த தெனவுரைப்பார்—பேரிடரால்
ஏசுவார் தாமுற்ற ஏசறவைத் தோழியர்முன்

பேசுவார் நின்று தம் பீடழிவார்—ஆசையால்
140 நைவார் நலனழிவார் நாணோடு பூணிழப்பார்
மெய்வாடு வார்வெருள்வார் வெய்துயிர்ப்பார்—தையலார்
பூந்துகிலைப் பூமாலை என்றணிவார் பூவிணைமுன்
சாந்த மெனமெய்யில் தைவருவார்—வாய்ந்த
கிளியென்று பாவைக்குச் சொற்பயில்வார் பந்தை
ஒளிமே கலையென் றுடுப்பார்—அளிமேவு
பூங்குழலார் மையலாய்க் கைதொழுமுன் போதந்தான்
ஓங்கொலிசேர் வீதி யுலா.

திருச்சிற்றம்பலம்

நம்பியாண்டார்நம்பி அருளிய

# ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்

திருச்சிற்றம்பலம்

ஒருபோது கோச்சகக் கலிப்பா

அலையார்ந்த கடல்உலகத் தருந்திசைதோ றங்கங்கே
நிலையார்ந்த பலபதிகம் நெறிமனிதர்க் கினிதியற்றி
ஈங்கருளி எம்போல்வார்க் கிடர்கெடுத்தல் காரணமாய்
ஓங்குபுகழ்ச் சண்பையெனும் ஒண்பதியுள் உதித்தனையே

செஞ்சடைவெண் மதியணிந்த சிவனெந்தை திருவருளால்
வஞ்சியன நுண்ணிடையாள் மலையரையன் மடப்பாவை
நற்கண்ணி அளவிறந்த ஞானத்தை அமிர்தாக்கிப்
பொற்கிண்ணத் தருள்புரிந்த போனகமுன் நுகர்ந்தனையே

தோடணிகா தினன்என்றுந் தொல்அமணர்க் கெஞ்ஞான்றுந்
தேடரிய பராபரனைச் செழுமறையின் அகன்பொருளை
அந்திச்செம் மேனியனை அடையாளம் பலசொல்லி
உந்தைக்குக் காணஅரன் உவனென் றுரைத்தனையே

[இவை மூன்றும் நான்கடித் தாழிசை]

வளமலி தமிழிசை வடகலை மறைவல
முளரிநன் மலரணி தருதிரு முடியினை

கடல்படு விடமடை கறைமணி மிடறுடை
அடல்கரி யுரியனை அறிவுடை யளவினை

[இவை யிரண்டும் அராகம்]

கரும்பினுமிக் கினியபுகழ்க் கண்ணுதல்விண் ணவனடிமேற்
பரம்பவிரும் புவியவர்க்குப் பத்திமையை விளைத்தனையே

பன்மறையோர் செய்தொழிலும் பரமசிவா கமவிதியும்
நன்மறையின் விதிமுழுதும் ஒழிவின்றி நவின்றனையே

[இவை யிரண்டும் இரண்டடித் தாழிசை]

அணிதவத் தவர்களுக் கதிகவித் தகனும்நீ
தணிமனத் தருளுடைத் தவநெறிக் கமிர்தம்நீ
அமணரைக் கழுநுதிக் கணைவுறுத் தவனும்நீ
தமிழ்நலத் தொகையினிற் றகுசுவைப் பவனும்நீ

[இவை நான்கும் நாற்சீர்ஓரடி அம்போதரங்கம்]

மறையவர்க் கொருவன்நீ
மருவலர்க்(கு) உருமுநீ
நிறைகுணத் தொருவன்நீ
நிகரில்உத் தமனும்நீ

[இவை நான்கும் முச்சீர்ஓரடி அம்போதரங்கம்]

அரியைநீ
எளியைநீ
அறவன்நீ
துறவன்நீ
பெரியைநீ
உரியைநீ
பிள்ளைநீ
வள்ளல்நீ

[இவை எட்டும் இருசீர்ஓரடி அம்போதரங்கம்]

எனவாங்கு [இது தனிச்சொல்]

அருந்தமிழ் விரகநிற் பரசுதும் திருந்திய
நிரைச்செழு மாளிகை நிலைதொறும் நிலைதொறும்
உரைச்சதுர் மறையின் ஓங்கிய வொலிசேர்
சீர்கெழு துழனித் திருமுகம் பொலிவுடைத்
தார்கெழு தண்டலைத் தண்பணை தழீஇக்
கற்றெருகு புரிசைக் காழியர் நாத
நற்றெருகு கீர்த்தி ஞானசம் பந்த
நின்பெருங் கருணையை நீதிநின்
அன்புடை யடியவர்க் கருளுவோய் எனவே. க

[இது சுரிதகம்]

வெண்பா

எனவே இடரகலும் இன்பமே எய்தும்
நனவே அரனருளை நாடும்—புனல்மேய
செங்கமலத் தண்டார்த் திருஞான சம்பந்தன்
கொங்கமலத் தண்காழிக் கோ. உ

கட்டளைக்கலித்துறை

கோலப் புலமணி சுந்தர மாளிகைக் குந்தளவார்
ஏலப் பொழில்அணி சண்பையர் கோனை யிருங்கடல்சூழ்
ஞாலத் தணிபுகழ் ஞானசம் பந்தனை நற்றமிழே
போலப் பலபுன் கவிகொண்டு சேவடி போற்றுவனே. ௩

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

போற்று வார்இடர் பாற்றிய புனிதன்
பொழில்சு லாவிய புகலியர் பெருமான்
ஏற்ற வார்புகழ் ஞானசம் பந்தன்
எம்பி ரான்இருஞ் சுருதியங் கிரிவாய்ச்
சேற்று வார்புனங் காவல் புரிந்தென்
சிந்தை கொள்வதுஞ் செய்தொழி லானுன்
மாற்றம் நீரெமக் கின்றுரை செய்தால்
வாசி யோகுற மாது நவீரே. ௪

### எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

நலமலி தரும்புவனி நிறைசெய்புக ழின்பநனி
பனிமதி யணைந்த பொழில்சூழ்
பொலமதி விரும்புகலி யதிபதி விதம்பெருகு
புனிதகுணன் எந்தம் இறைவன்
பலமலி தருந்தமிழின் வடகலை விடங்கன்மிகு
பரசமய வென்றி யரிதன்
சலமலி தருங்கமல சரண்நினைவன் என்றனது
தருவினைகள் பொன்றும் வகையே. ௫

### பன்னிருசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

வகைதரு முத்தமி ழாகரன் மறைபயில் திப்பிய வாசகன்
வலகலை வித்தகன் வானவின் மதியணை பொற்குவை மாளிகை
திகைதிகை மட்டலர் வார்பொழில் திகழ்புக லிக்கர சாகிய
திருவளர் விப்பிர சிகாமணி செழுமல யத்தமிழ் கேசரி
மிகமத வெற்றிகொள் வாரண மிடைவரு டைக்குலம் யாளிகள்
விரவிரு ளிற்றனி நீள்நெறி விளைதுயர் மொய்த்துள வேமணி
நகைஎழி லிற்குற மாதுன தருமை நினைக்கிலள் நீஇவண்
நசையின் முழுப்பழி யாதன்முன் நணுக விளிக்கிறி வாணனே.

### பன்னிருசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

வாணில வும்புன லும்பயில் செஞ்சடை வண்கரு ணாகரனை
மலைமா துமையொடு மிவணு வானென முன்னொ ருரைசெய்தோன்
சேணில வும்புகழ் மாளிகை நீடிய தென்புக லிக்கரசைத்
திருவா ளனையெழி லருகா சனிதனை மருவா தவர்கிளைபோல்
நாணில வும்பழி யோகரு தாதய லாளொரு காளையுடன்
நசைதீர் நிலைகொலை புரிவே டுவர்பயில் தருகா னதர்வெயிலிற்
கேணில வுங்கிளி பாவையொ டாயமி யாயெனை யும்மொழியக்
கிறியா லெனதொரு மகள்போ யுறுதுயர் கெடுவேன் அறிகிலனே.

### எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

அறிவாகி யின்பஞ்செய் தமிழ்வாதில் வென்றந்த
அமணான வன்குண்டர் கழுவேற முன்கண்ட
செறிமாட வண்சண்பை நகராளி என்தந்தை
திருஞான சம்பந்தன் அணிநீடு திண்குன்றின்

நெறியால மண்டுன்றி முனைநாள் சினங்கொண்டு
நிறைவார் புனந்தின்று மகள்மேல் வருந்துங்க
வெறியார் மதந்தங்கு கதவா ரணங்கொன்ற
வெகுளாத நஞ்சிந்தை விறலா னுளன்பண்டே, அ

பதின்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

பண்டமுது செய்ததுமை நங்கையருள் மேவுசிவ ஞானம்
பைந்தரள நன்சிவிகை செம்பொனணி நீடுகிற தாளங்
கொண்டதரன் உம்பர்பரன் எங்கள்பெரு மானருள் படைத்துக்
கொடுத்ததமி ழைத்தவ குலத்தவர்க ளுக்குலகில் இன்பங்
கண்டதரு கந்தர்குல மொன்றிமுழு துங்கழுவி லேறக்
கறுத்தது வினைப்பயன் மனத்திலிறை காதலது வன்றி
விண்டதுவும் வஞ்சகரை மஞ்சணவு கின்றமணி மாட
வேணுபுர நாதன்திரு வேதியர் சிகாமணி பிரானே. ௯

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

பிரானை மெய்த்திரு ஞானசம் பந்தனை மறையவர் பெருமானைக்
குராமலர்ப்பொழிற் கொச்சையர் நாதனைக் குரைகழ லிணைவாழ்த்தித்
தராத லத்தினி லவனருள் நினைவொடு தளர்வுறு மடியேனுக்
கிராவி னைக்கொடு வந்ததிவ் வந்திமற் றினிவிடி வறியேனே.

பதினான்குசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

ஏன முகத்தவ புத்தரை இந்திர சித்து மணம்புணர் வுற்றான்
ஈழவ ஞர்சொரி தொட்டி யினங்களை வெட்டியி சித்தனர் பட்டர்
தான மிரக்கிற சீதை மடுப்பது சாதி குடத்தொடு கண்மர்
சக்கிர வர்த்திகள் சிக்கர மட்டுவர் தத்துவ மிப்பரி சுண்டே
ஆன புகழ்ப்பயில் விப்ர சிகாமணி யத்தகு மைப்புரை யுங்கார்
ஆர்பொழில் நீடிய சண்பையர்காவலன்வண்களியேன்எளி யேனோ
சோனக னுக்கும் எனக்கும் எனத்தனை அம்மனை குலதுகொண்டாள்
தும்புரு வாலியை வென்று நிலத்திடை நின்று துலுக்குகி றாரே.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

ஆர்மலி புகலி நாதன் அருளென இரவில் வந்தென்
வார்முலை பயலை தீர மணந்தவர் தணந்து போன

தோரத ரழிய லும்மைச் செய்பிழை எம்ம தில்லை
கார்திரை களுலி மோதிக் கரைபொருங் கடலி னீரே. ௧௨

கலிவிருத்தம்

கடன்மேவு புவியேறு கவிநீரர் பெருமான்
தடமாடு மிகுகாழி தருபேதை யருளாமை
திடமாகில் அணிநீறு செழுமேனி முழுதாடி
மடலேறி எழில்வீதி வருகாதல் ஒழியேனே. ௧௩

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

ஒழியா தின்புறு பொழில்சூழ் சண்பைமன்
உயர்பார் துன்றிய தருஞா னன்புகழ்
எழிலா ருங்கவு ணியர்தீ பன்திகழ்
இணையார் செங்கரன் திகழ்வான் விண்குயின்
பொழியா நின்றன துளிதார் கொன்றைகள்
புலமே துன்றின கலைமான் ஒன்றின
பழிமேல் கொண்டது நுமர்தேர் அன்பொடு
மருகே வந்தது அதுகாண் மங்கையே. ௧௪

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

மங்கை யிடத்தர னைக்கவி நீரெதி ரோட மதித்தருள்செய்
தங்கு புகழ்ச்சதுர் மாமறை நாவளர் சைவ சிகாமணிதன்
துங்க மதிற்பிர மாபுர மேவிய சூழ்பொழில் நின்றொளிர்மென்
கொங்கை யுடைக்கொடி யேரிடை யாள்குடி கொண்டனள் எம்ம
[னமே.

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

மனங்கொண்டு நிறைகொண்டு கலையுங் கொண்டு
மணிநிறமும் இவள்செங்கை வளையுங் கொண்ட
தனங்கொண்ட பெருஞ்செல்வத் திகழுங் கீர்த்திச்
சண்பையர்கோன் திருஞான சம்பந் தற்கு
நனங்கொண்டு மெய்கொண்டு பயலை கொண்டே
நன்னுதலாள் அயர்கின்றாள் நடுவே நின்று
மினங்கொண்டு நகைகொண்டு மடவீர் வாளா
என்செய்தீர் அலர்தூற்றி எழுகின் றீரே. ௧௫

## இதுவுமது. வேறு

எழுகுல வெற்பிவை மிடறில் அடக்குவன்
எறிகட லிற்புனல் குளறி வயிற்றினின்
முழுது மொளித்திர வியையி நிலத்திடை
முடுகுவ னிப்பொழு திவையல விச்சைகள்
கழுமல நற்பதி யதிப தமிழ்க்கடல்
கவுணிய நற்குல திலகன் இணைக்கழல்
தொழுது வழுத்திய பிறரொரு வர்க்குறு
துயர்வரு விப்பணி தரியதொர் விச்சையே. ௧௭

## எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

சயமி குத்தரு கரைமு ருக்கிய தமிழ்ப யிற்றிய நாவன்
வியலி யற்றிரு மருக விற்கொடு விடமி ழித்தருள் நீதன்
சயனு டைப்புனல் வயல்வ ளத்தகு கழும லப்பதி நாதன்
இயலு டைக்கழல் தொழுநி னைப்பவர் இருவி னைத்துயர் போமே.

## எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

மேதகுந் திகழ்பூக நாகசண் பகசூத
வேரிவண் டறைசோலை யாலைதுன் றியகாழி
நாதனந் தணர்கோனை ஞானவண் புகழாளி
ஞானசுந் தரன்மேவு தார்நினைந் தயர்வேனை
நீதியன் றனபேசும் யாயுமிந் துவும்வாச
நீடுதென் றலும்வீணை யோசையுங் கரைசேர
மோதுதெண் டிரைசேவல் சேருமன் றிலும்வேயு
மூடுதண் பனிவாடை கூடிவன் பகையாமே. ௧௯

## இதுவுமது. வேறு

வன்பகை யாமக் குண்டரை வென்றோய்
மாமலர் வாளிப் பொருமத வேளைத்
தன்பகை யாகச் சிந்தையுள் ளையுந்
தையலை உய்யக் கொண்டருள் செய்யாய்

நின்புகழ் பாடிக் கண்பனி சோரா
நின்றெழில் ஞானு என்றகம் நெக்கிட்
டன்பக லாமெய்ச் சிந்தையர் இன்பா
அம்பொழின் மாடச் சண்பையர் கோவே. ௨0

இதுவுமது. வேறு

கோவின்றிரு முகமீதொடு வருதூதுவன் ஈர
குளிர்பைம்பொழில் வளநாடெழில் நிதியம்பரி சம்மீ
மாவீறிய ரிவர்தங்கையென் மருடன்திறம் அமணா
மறவெங்குல மறிகின்றிலன் பழியச்சத வரசன்
பாவேறிய மதுரத்தமிழ் விரகன்புக லியர்மன்
பயில்வண்புக ழருகாசனி பணியன்றெனி னமர்காள்
தூவேரியை மடிமின்றுடி யடிமின்படை எழுமின்
தொகுசேனையும் அவனும்பட மலையும்பரி சினியே. ௨௧

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

இனியின் றொழிமினிவ் வெறியும் மறியடு
தொழிலும் மிடுகுர வையுமெல்லாம்
நனிசிந் தையினிவள் மிகவன் புறுவதொர்
நசையுண் டதுநரை முதுபெண்டீர்
புனிதன் புகலியர் அதிபன் புனைதமிழ்
விரகன் புயமுறும் அரவிந்தம்
பனிமென் குழலியை அணிமின் துயரொடு
மயலுங் கெடுவது சரதம்மே. ௨௨

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

சரத மணமலி பரிசம் வருவன
தளர்வில் புகலியர் அதிபன் அதிதரு
வரதன் அணிதமிழ் விரகன் மிகுபுகழ்
மருவு சுருதிநன் மலையின் அமர்தரு
விரத முடையைநின் இடையின் அவள்மனம்
விரைசெய் குழலியை அணைவ தரிதென
விரத மழிதர வருதன் முனம்இனி
எளிய தொருவகை கருது மலையனே. ௨௩

### இதுவுமது. வேறு

அயன்நெடிய மாலும்அவ ரறிவரிய தாணுவரன்
அருளினொடு நீடவனி யிடர்முழுது போயகல
வயலணிதென் வீழிமிழ லையின்நிலவு காசின்மலி
மழைபொழியு மானகுண மதுரன்மதி தோய்கனக
செயநிலவு மாடமதில் புடைதழுவு வாசமலி
செறிபொழில் சுலாவிவளர் சிரபுரசு நாதன்முதிர்
பயன்நிலவு ஞானதமிழ் விரகன்மறை ஞானமுணர்
பரமகுரு நாதன்மிகு பரசமய கோளரியே. ௨௪

### இதுவுமது. வேறு

அரியாருங் கிரிநெறியெங் ஙனநீர் வந்தீர்
அழகிதினிப் பயமில்லை அந்திக்கப்பால்
தெரியாபுன் சிறுநெறிகள் எந்தம் வாழ்விச்
சிறுகுடியின் றிரவிங்கே சிரமந் தீர்ந்திச்
சுரியார்மென் குழலியொடும் விடியச் சென்று
தொகுபுகழ்சேர் திருஞான சம்பந் தன்றன்
வரியாரும் பொழிலுமெழில் மதிலுந் தோற்றும்
வயற்புகலிப் பதிஇனிது மருவ லாமே. ௨௫

### ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை

ஆமாண்பொன் கூட்டகத்த அஞ்சொல்இளம் பைங்கிளியே
பாமாலை யாழ்முரியப் பாணழியப் பண்டருள்செய்
மாமான சுந்தரன்வண் சம்பந்த மாமுனிஎங்
கோமான்றன் புகழொருகால் இன்புறநீ கூறாயே
கொச்சையர்கோன் றன்புகழ்யான் இன்புறநீ கூறாயே. ௨௬

### எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

கூற தாகமெய் யடிமை தானெனை யுடைய கொச்சைய ரதிபதி
வீற தார்தமிழ் விரகன் மேதகு புகழி னன்இவன் மிகுவனச்
சேற தார்தரு திரள்க ளைக்கன செழுமுலைக்குறி யுவர்சினத்
தேற தானிது தழுவி னுரென இடிகொள் மாமுர சதிருமே.

### அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

சதுரன் புகலியர் அதிபன்கூர்
தவசுந் தரகவு ணியர்தஞ்சீர்
முதல்வன் புகலியர் அதிபன்தாள்
முறைவந் தடையலர் நகரம்போல்
எதிர்வந் தனர்விறல் கெடவெம்போர்
எரிவெங் கணைசொரி புரிமின்கார்
அதிர்கின் றனவிது பருவஞ்சேர்
அலர்தம் பதிமதில் இடிமின்னே. ௨அ

### எண்சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

மின்னு மாகத் தெழிலி யுஞ்சேர்
மிகுபொன் மாடப் புகலி நாதன்
துன்னு ஞானத் தெம்பி ரான்மெய்த்
தொகைசெய் பாடற் பதிகம் அன்னாள்
பொன்னும் மாநல் தரள முந்தன்
பொருக யற்கண் டனநி றைத்தாள்
இன்னும் ஏகிப் பொருள் படைப்பான்
எங்ங னேநான் எண்ணு மாறே. ௨௯

### பன்னிருசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

மாறி லாத பொடிநீ றேறு கோல வடிவும்
வம்பு பம்பு குழலுந் துங்க கொங்கை யிணையு
மூறி ஏறு பதிகத் தோசை நேச நுகர்வு
மொத்து கித்து நடையுஞ் சித்த பத்தி மிகையும்
வீற தேறும் வயல்சூழ் காழி ஞான பெருமான்
வென்றி துன்று கழலின் ஒன்றி நின்ற பணியுந்
தேறல் போலும் மொழியுஞ் சேல்கள் போலும் விழியுஞ்
சிந்தை கொண்ட பரிசும் நன்றிம் மங்கை தவமே. ௩௦

### அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

கைதவத்தால் என்னிடைக்கு நீவந்த
தறியேனோ கலதிப் பாணா
மெய்தவத்தார் உயிர்அனைய மிகுசைவ
சிகாமணியை வேணுக் கோனைச்

செய்தவத்தால் விதிவாய்த்த செழுமலையா
ரவனுடைய செம்பொற் றிண்டோள்
எய்தவத்தால் விளிவெனக்கென் யாதுக்கு
நீபலபொய் இசைக்கின் றாயே. ௩௧

## எண்சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

இசையை முகந்தெழு மிடறு மிதிங்கிவண்
இடுகர ணங்களின் இயல்பும் வளம்பொலி
திசைதிசை துன்றிய பொழில்சுல வுந்திகழ்
சிரபுர மன்றகு தமிழ்விர கன்பல
நசைமிகு வண்புகழ் பயிலு மதங்கிதன்
நளிர்முலை செங்கயல் விழிநகை கண்டபின்
வசைதகு மென்குல மனைமுழு துங்கொள
மதிவளர் சிந்தனை மயல்வரு கின்றதே. ௩௨

## இதுவுமது. வேறு

வருகின் றனனென் றனதுள் ளமுநின்
வசமே நிறுவிக் குறைகொண் டுதணித்
தருகும் புனல்வெஞ் சுரம்யான் அமரும்
மதுநீ இறையுன் னினையா தெனின்முன்
கருகும் புயல்சேர் மதில்வண் புகலிக்
கவிஞன் பயில்செந் தமிழா கரன்மெய்ப்
பெருகுந் திருவா ரருள்பே ணலர்போற்
பிழைசெய் தனைவந் ததர்பெண் கொடியே. ௩௩

## இதுவுமது. வேறு

கொடிநீடு விடையுடைய பெருமானை அடிபரவு
குணமேதை கவுணியர்கள் குலதீப சுபசரிதன்
அடியேன திடர்முழுதும் அறவீசு தமிழ்விரகன்
அணியான புகலிநகர் அனையான கனைகடலின்
முடிநீடு பெருவலைகொ டலையூடு புகுவனுமர்
முறையேவு பணிபுரிவன் அணிதோணி புனைவனவை
படியாரும் நிகரரிய வரியாரும் மதர்நயனி
பணைவார்மென் முலைநுளையர் மடமாதுன் அருள்பெறினே.

இதுவுமது. வேறு

பெறுபயன் மிகப்புவியுள் அருளுவன பிறைமுறை
பெருநெறி யளிப்பனபல் பிறவியை யொழிச்சுவன
உறுதுய ரழிப்பனமுன் உமைதிரு வருட்பெருக
உடையன நதிப்புனலின் எதிர்பஃறி உய்த்தனபுன்
நறுமுறு குரைச்சமணை நிரைகழு நிறுத்தியன
நனிகத வடைத்தனது னருவிட மகற்றியன
துறுபொழில் மதிற்புறவ முதுபதிமன் ஒப்பரிய
தொழில்பல மிகுத்ததமிழ் விரகன கவித்தொகையே. ௩௫

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

தொகு வார்பொழில் சுற்றிய வான்மதி தோயும் மதிற்கனமார்
தொலை யார்கதிருப் பொழில் மாளிகை மாட நெருங்கியசீர்
மிகு காழிமன் முத்தமி ழாகரன் மேதகு பொற்புனைதார்
விரை யார்கம லக்கழ லேதுணை யாக நினைப்பவர்தாம்
மக ராதர நித்தில நீர்நிலை யார்புவி புத்தமராய்
வர லாறு பிழைப்பினி னூழி யிலக்கிதமா
தகு வாழ்வு நிலைத்தெழில் சேரற மான பயிற்றுவர்மா
சது ரால்வினை செற்றதன் மேலனு கார்பிற விக்கடலே.

நேரிசை யாசிரியப்பா

கருமங் கேண்மதி கருமங் கேண்மதி
அருமதிப் பாண கருமங் கேண்மதி
நிரம்பிய பாடல் நின்கண் ணோடும்
அரும்பசி நலிய அலக்கணுற் றிளைத்துக்
5 காந்திய உதரக் கனல்தழைத் தெழுதலில்
தேய்ந்துடல் வற்றிச் சின்னரம் பெழுந்தே
இறுகுபு சுள்ளி இயற்றிய குரம்பை
உறுசெறுத் தனைய உருவுகொண் டுள்வளை இ
இன்னிசை நல்லி யாழ்சுமந் தன்ன
10 மன்னிய வளநகர் மனைக்கடை தோறுஞ்
சென்றுழிச் சென்றுழிச் சில்பலி பெறாது
நின்றுழி நிலாவு வன்துயர் போமொழிக்

தின்புற் றிருநிதி எய்தும் அதுநுன
துள்ளத் துள்ள தாயின் மதுமலர்
15 வண்டறை சோலை வளவயல் அகவை
ஒண்டிறற் கோண்மீன் உலாவு குண்டகம்
உயர்தரு வரையின் இயல்தரு பதணத்துக்
கடுநுதிக் கழுக்கடை மிடைதரு வேலிக்
கனகப் பருமுரட் கணையக் கபாட
20 விலையக் கோபுர விளங்கெழில் வாயில்
நெகிழ்ச்சியில் வகுத்துத் திகழ்ச்சியில் ஓங்கும்
மஞ்சணை யிஞ்சி வண்கொடி மிடைந்த
செஞ்சுடர்க் கனகத் திகழ்நிலம் பணைய
மாளிகை யோளிச் சூளிகை வளாகத்
25 தணிவுடைப் பலபட மணிதுடைத் தழுத்திய
நல்லொளி பரந்து நயந்திகழ் இந்திர
வில்லொளி பலபல விசும்பிடைக் காட்ட
மன்னிய செல்வத்துத் துன்னிய பெருமைச்
செம்மலர் மாது சேர்ந்துறை பிரியாக்
30 கழுமல நாதன் கவுணியர் குலபதி
தண்டமிழ் விரகன் சைவ சிகாமணி
பண்டிதர் இன்பன் பரசமய கோளரி
என்புனை தமிழ்கொண் டிரங்கிஎன் னுள்ளத்
தன்பினை அருளிய ஆண்டகை தன்புகழ்
35 குறைவறத் துள்கி நிறைகடை குறுகி
நாப்பொலி நல்லிசை பாட
மாப்பெருஞ் செல்வம் மன்னுதி நீயே. ௩௭

## வஞ்சித்துறை

நீதியின் நிறைபுகழ்
மேதகு புகலிமன்
மாதமிழ் விரகனை
ஓதுவ(து) உறுதியே. ௩௮

### எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

உறுதி முலைதாழ எனையிகழும் நீதி
உனது மனமார முழுவது மதாக
அறுதிபெறு மாதர் பெயல்தரு தல்தானும்
அழகிதினி யானுன் அருள்புனைவ தாக
பெறுதி இவைநீஎன் அடிபணிதல் மேவு
பெருமைகெட நீடு படிமொழிபொன் மாட
நறைகமழு வாச வளர்பொழில் சுலாவும்
நனிபுகலி நாத தமிழ்விரக நீயே. ௩௯

### ஆசிரியத்துறை

நீமதித் துன்னிநினை யேன்மட நெஞ்சமே
காமதிக் கார்பொழிற் காழி
நாமதிக் கும்புகழ் ஞானசம் பந்தன்ஒண்
பூமதிக் குங்குழல் போற்றே. ௪0

### கட்டளைக் கலிப்பா

போற்றி செய்தரன் பொற்கழல் பூண்டதே
புந்தி யானுந்தம் பொற்கழல் பூண்டதே
மாற்றி யிட்டது வல்விட வாதையே
மன்னு குண்டரை வென்றது வாதையே
ஆற்றெ திர்ப்புனல் உற்றதந் தோணியே
ஆன தன்பதி யாவ(து)அந் தோணியே
நாற்றி சைக்கவி ஞானசம் பந்தனே
நல்ல நாமமும் ஞானசம் பந்தனே. ௪௧

### கைக்கிளை மருட்பா

அம்புந்து கண்ணிமைக்கு மான நுதல்வியர்க்கும்
வம்புந்து கோதை மலர்வாடுஞ்—சம்பந்தன்
காமரு கழுமல மனையாள்
ஆமிவள் அணங்கலள் அடிநிலத் தனவே. ௪௨

## பன்னிருசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

தனமுந் துகிலுஞ் சாலிக் குவையுங் கோலக் கனமாடச்
சண்பைத் திகழ்மா மறையோர் அதிபன் தவமெய்க் குலதீபன்
கனவண் கொடைநீ டருகா சனிதன் கமலக் கழல்பாடிக்
கண்டார் நிறையக் கொள்ளப் பசியைக் கருதா தெம்பாண
புனைதண் டமிழின் இசையார் புகலிக் கரசைப் புகழ்பாடிப்
புலையச் சேரிக் காளை புகுந்தால் என்சொற் புதிதாக்கிச்
சினவெங் கதமாக் களிறொன் றிந்தச் சேரிக் கொடுவந்தார்
சேரிக் குடியும் இழந்தார் இதனைச் செய்வ தறியாரே. ௪௩

## இன்னிசை வெண்பா

யாரேஎம் போல அருளுடையார் இன்கமலத்
தாரேயுஞ் சென்னித் தமிழ்விரகன்—சீரேயுங்
கொச்சை வயன்றன் குரைகழற்கே மெச்சி
அடிமைசெயப் பெற்றேன் அறிந்து. ௪௪

## பதின்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

அறிதரு நுண்பொருள் சேர்பதி கம்மான் கழல்மேல்
அணிதரு சுந்தர மலிதமிழ் விரகன் பிறைதோய்
செறிதரு பைம்பொழில் மாளிகை சுலவுந் திகழ்சீர்த்
திருவளர் சண்பையின் மாடலை கடலொண் கழிசேர்
எறிதிரை வந்தெழு மீனிரை நுகர்கின் றிலைபோய்
இனமும் அடைந்திலை கூரிட ரோடிருந் தனையால்
உறுதுயர் சிந்தையி னூடுத வினரொந் தமர்போல்
உமரு மகன்றன ரோஇது உரைவண் குருகே. ௪௫

## கலி விருத்தம்

குருகணி மணிமுன் கைக்கொடி யும்நல் விறலவனும்
மருகணை குவரப் பாலரி தினிவழி மீண்டின்
றருகெழு முகில்வண் கைத்தகு தமிழ்வி ரகன்றன்
கருகெழு பொழில்மா டக்கழு மலவள நாடே. ௪௬

## இதுவுமது. வேறு

நாடே றும்புகழ் ஞானசம் பந்தன்வண்
சேடே றுங்கொச்சை நேர்வளஞ் செய்தனை

மாடே றுந்தையல் வாட மலர்ந்தனை
கோடே றுங்கொடி யாய்கொல்லை முல்லையே. ௪௭

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

முல்லைநகை யுமைதன் மன்னுதிரு வருளை
முந்தியுறு பெரிய செந்தண்முனி வன்மிகு
நல்லபொழில் சுலவு தொல்லையணி புகலி
நாதன்மறை முதல்வன் வேதமலை யதனில்
வில்லையிலர் கணையும் இல்லைபக ழியுறு
வேழமிர லைகலை கேழல்வினை யுறுவர்
சொல்லையிலர் விரக ரல்லர்தழை கொணர்வர்
தோழியிவ ரொருவர் ஆவவழி தர்வரே. ௪௮

வஞ்சித்துறை

வழிதரு பிறவியின்உறு
தொழில்அமர் துயர்கெடுமிகு
பொழிலணி தருபுகலிமன்
எழிலிணை யடியிறைமினே. ௪௯

திருச்சிற்றம்பலம்



நம்பியாண்டார்நம்பி அருளிய

# ஆளுடையபிள்ளையார் திருத்தொகை



திருச்சிற்றம்பலம்

பூவார் திருநுதல்மேல் பொற்சுட்டி இட்டொளிரக்
கோவாக் குதலை சிலம்பரற்ற—ஓவா
தழுவான் பசித்தான்என் றுங்கிறைவன் காட்டத்
தொழுவான் துயர்தீர்க்குந் தோகை—வழுவாமே
முப்பத் திரண்டறமுஞ் செய்தாள் முதிராத
செப்பொத்த கொங்கைத் திருநுதலி—அப்பன்

அருளாலே ஊட்டுதலும் அப்பொழுதே ஞானத்
திரளாகி முன்னின்ற செம்மல்—இருள்தீர்ந்த
5 காழி முதல்வன் கவுணியர்தம் போரேறு
ஊழி முதல்வன் உவனென்று—காட்டவ(ல்)லான்
வீழி மிழலைப் படிக்காசு கொண்டபிரான்
பாழி அமணைக் கழுவேற்றி னான்பாணர்
யாழை முரித்தான் எரிவாய் இடும்பதிகம்
ஆழி உலகத் தழியாமற் காட்டினான்
ஏழிசை வித்தகன்வந் தேனோரும் வானோருந்
தாழுஞ் சரணச் சதங்கைப் பருவத்தே
பாலையும் நெய்தலும் பாடவலான்—சோலைத்
திருவா வடுதுறையிற் செம்பொற் கிழியொன்
10 றருளாலே பெற்றருளும் ஐயன்—தெருளாத
தென்னவனு டெல்லாந் திருநீறு பாலித்த
மன்னன் மருகல்விடந் தீர்த்தபிரான்—பின்னைத்தன்
கோலக்கா வில்தாளம் பெற்றிக் குவலயத்தின்
மாலக்கா லத்தே மாற்றினான்—ஞாலத்து
முத்தின் சிவிகை அரன்கொடுப்ப முன்னின்று
தித்தித்த பாடல் செவிக்களித்தான்—நித்திலங்கள்
மாடத் தொளிரும் மறைக்காட் டிறைகதவைப்
பாடி யடைப்பித்த பண்புடையான் —நீடுந்
திருவோத்தூர் ஆண்பனையைப் பெண்பனையா கென்னும்
15 பெருவார்த்தை தானுடைய பிள்ளை—மருவினிய
கொள்ளம்பூ தூர்க்குழகன் நாவாய் அதுகொடுப்ப
உள்ளமே கோலாக ஊன்றினான்—வள்ளல்
மழவன் சிறுமதலை வான்பெருநோய் தீர்த்த
குழகன் குலமறையோர் கோமான் நிலவிய
வைகையாற்(று) ஏடிட்டு வானீர் எதிர்ஓட்டுஞ்
செய்கையான் மிக்க செயலுடையான்—வெய்யவிடம்
*மேவி இறந்த அயில்வேற்கண் மடமகளை
வாவென் றழைப்பித்திம் மண்ணுலகில் வாழ்வித்த

---

*"கூனிமிர்த்தா வற்போடு கூட்டமடக் கொடியே" என்றும் பாடம்.

சீர்நின்ற செம்மைச் செயலுடையான்—நேர்வந்த
20 புத்தன் தலையைப் புவிமேற் புரள்வித்த
வித்தகப் பாடல் விளம்பினான்—மெய்த்தொளிசேர்
கொச்சைச் சதுரன்றன் கோமானைத் தான்செய்த
பச்சைப் பதிகத் துடன்பதினா றாயிரம்பா
வித்துப் பொருளை விளக்க வலபெருமான்
முத்திப் பகவ முதல்வன் திருவடியை
அத்திக்கும் பத்தர்எதிர் ஆணைநம தென்னவலான்
கத்தித் திரிபிறவிச் சாகரத்துள் ஆழாமே
பத்தித் தனித்தெப்பம் பார்வாழத் தந்தபிரான்
பத்திச் சிவமென்று பாண்டிமா தேவியொடுங்
25 கொற்றக் கதிர்வேற் குலச்சிறையுங் கொண்டாடும்
அற்றைப் பொழுதத் தமணரிடு வெந்தீயைப்
பற்றிச் சுடுகபோய்ப் பாண்டியனை என்னவல்லான்
வர்த்தமா னீசர் கழல்வணங்கி வாழ்முருகன்
பத்தியை ஈசன் பதிகத்தே காட்டினான்
அத்தன் திருநீல நக்கற்கும் அன்புடையான்
துத்த மொழிக்குதலைத் தூயவாய் நன்னுதலி
நித்திலப் பூண்முலைக்கும் நீண்டதடங் கண்ணினுக்குங்
கொத்தார் கருங்குழற்குங் கோலச்செங் கைமலர்க்கும்
அத்தா மறையடிக்கும் அம்மென் குறங்கினுக்குஞ்
30 சித்திரப்பொற் காஞ்சி செறிந்தபே ரல்குலுக்கும்
முத்தமிழ்நூல் எல்லாம் முழுதுணர்ந்த பிள்ளையார்க்(கு)
ஒத்த மணம்இதுவென் றோதித் தமர்களெல்லாஞ்
சித்தங் களிப்பத் திருமணஞ்செய் காவணத்தே
அற்றைப் பொழுதத்துக் கண்டுடனே நிற்கப்
பெற்றவர்க ளோடும் பெருமணம்போய்ப் புக்குத்தன்
அத்தன் அடியே அடைந்தான் அழகிதே.

திருச்சிற்றம்பலம்

நம்பியாண்டார்நம்பி அருளிய

# திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை

திருச்சிற்றம்பலம்

புலனொ டாடித் திரிம னத்தவர்
பொறிசெய் காமத் துரிசடக்கிய
புனித நேசத் தொடுத மக்கையர்
புணர்வி னாலுற் றுரைசெ யக்குடர்
சுலவு சூலைப் பிணிகெ டுத்தொளிர்
சுடுவெணீ றிட் டமண கற்றிய
துணிவி னான்முப் புரமெரித்தவர்
சுழலி லேபட் டிடுத வத்தினர்
உலகின் மாயப் பிறவி யைத்தரும்
உணர்வி லாஅப் பெரும யக்கினை
ஒழிய வாய்மைக் கவிதை யிற்பல
உபரி பாகப் பொருள்ப ரப்பிய
அலகின் ஞானக் கடலி டைப்படும்
அமிர்த யோகச் சிவவொ ளிப்புக
அடிய ரேமுக் கருளி னைச்செயும்
அரைய தேவத் திருவ டிக்களே. க

திருநாவுக் கரசடி யவர்நாடற் கதிநிதி
தெளிதேனொத் தினியசொல் மடவார் ஊர்ப்பசி முதல்
வருவானத் தரிவையர் நடமாடிச் சிலசில
வசியாகச் சொலுமவை துகளாகக் கருதிமெய்
உருஞானத் திரள்மனம் உருகாநெக் கழுதுகண்
உழவாரப் படைகையி லுடையானைத் தனதமிழ்
குருவாகக் கொடுசிவன் அடிசூடத் திரிபவர்
குறுகார்புக் கிடர்படு குடர்யோனிக் குழியிலே. உ

குழிந்து சுழிபெறுநா பியின்கொண் மயிர்நிரையார்
குரும்பை முலையிடையே செலுந்தகைநன் மடவார்
அழிந்த பொசியதிலே கிடந்திரவு பகல்நீ
அலைந்தயரு மதுநீ யறிந்திலை கொல்மனமே
கழிந்த கழிகிடுநா ளினங்கிதயம் நெகவே
கசிந்திதய மெழுநூ றரும்பதிக நிதியே
பொழிந்தருளு திருநா வினெங்களர சினையே
புரிந்துநினை யிதுவே மருந்துபிறி திலையே. ௩.

இலைமா டென்றிடர் பரியா ரிந்திர
னேயொத் துறுகுறை வற்றாலும்
நிலையா திச்செல்வ மெனவே கருதுவர்
நீள்சன் மக்கடல் இடையிற்புக்
கலையார் சென்றரன் நெறியா குங்கரை
அண்ணப் பெறுவர்கள் வண்ணத்திண்
சிலைமா டந்திகழ் புகழ்ஆ மூருறை
திருநாவுக்கர சென்போரே. ௪.

என்பட் டிக்கட்டிய இந்தப்பைக் குரம்பையை
இங்கிட்டுச் சுட்டபின் எங்குத்தைக் குச்செலும்இது
முன்பிட்டுச் சுட்டிவ ருந்திக் கெத்திக்கென
மொய்ம்புற்றுக் கற்றறி வின்றிக் கெட் டுச்சில
வன்பட்டிப் பிட்டர்கள் துன்புற்றுப் புத்தியை
வஞ்சித்துக் கத்திவி ழுங்கெதச்சுத் தட்டுவர்
அன்பர்க்குப் பற்றிலர் சென்றர்ச்சிக் கின்றிலர்
அந்தக்குக் கிக்கிரை சிந்தித்தப் பித்தரே. ௫.

பித்தரசு பதையாத கொத்தைநிலை யுளதேவு
பெட்டியுரை செய்துசோறு சுட்டியுழல் சமண்வாயர்
கைத்தரசு பதையாத சித்தமொடு சிவபூசை
கற்றமதி யினன்ஓசை இத்தரசு புகழ்ஞால
முத்திபெறு திருவாள னெற்றுணையின் மிதவாமல்
கற்றுணையில் வருமாதி
பத்தரசு வசைதீர வைத்ததன தமிழ்மாலை
பற்பலவு மவையோத நற்பதிக நிதிதானே. ௬.

பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி
பரசுநா வரசான பரமகா ரணவீசன்
அதிகைமா நகர்மேவி அருளினல் அமண்மூடர்
அவர்செய்வா தைகள்தீரும் அனகன்வார் கழல்சூடின்
நிதியரா குவர்சீர்மை யுடையரா குவர்வாய்மை
நெறியரா குவர்பாவம் வெறியரா குவர்சால
மதியரா குவர்ஈசன் அடியரா குவர்வான
முடையரா குவர்பாரின் மனிதரா னவர்தாமே. ௭

தாமரைநகு மகவிதழ் தருவன
சாய்பெறுசிறு தளிரிணை யனையன
சார்தருமடி யவரிடர் தடிவன
தாயினும்நல கருணையை யுடையன
தூமதியினை யொருபது கொடுசெய்த
சோதியின்மிகு கதிரிணை யுடையன
தூயனதவ முனிவர்கள் தொழுவன
தோமறுகுண நிலையின தலையின
ஓமரசினை மறைகளின் முடிவுகள்
ஓலிடுபரி சொடுதொடர் வரியன
ஓவறு முணர் வொடுசிவ ஒளியன
ஊறியகசி வொடுகவி செய்தபுக
ழாமரசுய ரகநெகு மவருள
னாரசதி கையின்அர னருளவு
னாமரசுகொ ளரசெனெ வழிமுழு
தாளரசுதன் அடியிணை மலர்களே. ௮

அடிநாயைச் சிவிகைத் தவிசேறித் திரிவித்
தறியாவப் பசுவைச் சிறியோர்பாற் செறியுங்
கொடியேனுக் கருளைத் திருநாவுக் கரசைக்
குணமேருத் தனைவிட் டெனையாமொட் டகல்விற்
பிடியாரப் பெறுதற் கரிதாகச் சொலும்அப்
பிணநூலைப் பெருகப் பொருளாகக் கருதுஞ்
செடிகாயத் துறிகைச் சமண்மூடர்க் கிழவுற்
றதுதேவர்க் கரிதச் சிவலோகக் கதியே. ௯

சிவசம் பத்திடைத் தவஞ்செய்து
திரியும் பத்தியிற் சிறந்தவர்
திலகன் கற்றசிட் டன்வெந்தொளிர்
திகழும் பைம்பொடித் தவண்டணி
கவசம் புக்குவைத் தரன்கழல்
கருதுஞ் சித்தனிற் கவன்றிய
கரணங் கட்டுதற் கடுத்துள
களகம் புக்கநற் கவந்தியன்
அவசம் புத்தியிற் கசிந்துகொ
டழுகண் டத்துவைத் தளித்தனன்
அனகன்குற் றமற்ற பண்டிதன்
அரசெங்கட் கொர்பற்று வந்தறு
பவசங் கைப்பதைப் பரஞ்சுடர்
படிறின் றித்தனைத் தொடர்ந்தவர்
பசுபந் தத்தினைப் பரிந்தடு
பரிசொன் றப்பணிக்கு நன்றுமே. ௧௦

நன்று மாதர நாவினுக்கரைசடி நளினம்வைத் துயின்அல்லால்
ஒன்று மாவது கண்டிலம் உபாயம்மற் றுள்ளன வேண்டோமால்
என்று மாதியும் அந்தமும் இல்லதோர் இகபரத் திடைப்பட்டுப்
பொன்று வார்புகுஞ் சூழலிற்புகேம் புகிற்பொறியில்ஐம் புலனோடே.

திருச்சிற்றம்பலம்

பதினோராந் திருமுறை முற்றிற்று.

ஆக பாடல்கள் ௧௩௩௩.



# பாட்டு முதற்குறிப் பகராதி

# சமாஜத்திற் கிடைக்கும் புத்தகங்கள்

| புத்தகம் | ரூ. | அ. |
|---|---|---|
| சம்பந்தர் தேவாரம் ... | 1 | 0 |
| அப்பர் தேவாரம் ... | 0 | 12 |
| சுந்தரர் தேவாரம் ... | 0 | 4 |
| திருவாசகம் மூலமும் உரையும் ... | 3 | 0 |
| திருவாசகம், திருக்கோவை, திருவிசைப்பா, திருப்பல்லாண்டு ஆகிய அ, ௬ திருமுறைகள் ... | 0 | 10 |
| தலயாத்திரைப்படம் - விளக்கத்துடன் ... | 0 | 4 |
| மெய்கண்டாரும் சிவஞானபோதமும் ... | 1 | 0 |
| கந்தபுராண வசனம் ... | 2 | 8 |
| சித்தாந்த சாத்திரம் ௧௪-(மூலம்) ... | 1 | 0 |
| "சித்தாந்தம்" கலிக்கோ - மலர் ௧,௨,௩,௪,௫ தனித்தனி ... | 2 | 0 |
| கைவல்ய நவநீதம் மூலமும் உரையும் ... | 1 | 8 |
| பஞ்சாக்கரமாலை மூலமும் உரையும் ... | 0 | 4 |
| திருமயிலை யமக அந்தாதி மூலமும் உரையும் ... | 0 | 4 |
| உமாபதி சிவம் திருமுறைத் திரட்டு ... | 0 | 2 |
| இயற்கைத் தத்துவ நூலும் சைவ சமயமும் ... | 0 | 2 |
| புலால் மறுத்தலுக்கு ஐம்பது காரணங்கள் ... | 0 | 2 |
| திருவெம்பாவைக் கருத்து ... | 0 | 2 |
| திருஞான சம்பந்தமூர்த்திகள் சரித்திரம் ... | 0 | 2 |
| மாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரம் ... | 0 | 2 |
| சமாஜ விதிகள் ... | 0 | 1 |
| The Grace of Lord Siva (ஆங்கிலத்தில்) ... | 0 | 4 |
| திருவிழாவின் அர்த்தம் (பத்துப்பிரதிகள்) ... | 0 | 2 |
| அறுபத்துமூவர் விளக்கம் ௸ ... | 0 | 2 |
| மகிழடி சேவை விளக்கம் ௸ ... | 0 | 2 |
| தேவார விளக்கம் ௸ ... | 0 | 2 |
| சமய குரவர் சம்பாஷணை ௸ ... | 0 | 2 |
| சந்தான குரவர் வரலாறு ௸ ... | 0 | 2 |
| சைவ சமயிகளுக்கு எச்சரிப்பு ௸ ... | 0 | 2 |
| திருமயிலாப்பூர் தலபுராணம் ௸ ... | 0 | 2 |
| தோத்திரத் தேவாரத்திரட்டு ௸ ... | 0 | 2 |
| சைவ சமயம் ௸ ... | 0 | 2 |
| சித்தாந்தம் ஆண்டுச்சந்தா (ஜனவரிமுதல் டிசம்பர்வரை) ... | 2 | 0 |

(திருவிழாவின் அர்த்தம் முதல் சைவ சமயம் வரை: இவைகளிற் ஆயிரப்பிரதிகள் அனுப்ப இலவசமாக)

பாதியிலேயாவது முன்பணம் அனுப்பினாலன்றி வி. பி. அனுப்பப்பட மாட்டாது. சிலோன் வாசிகட்கும் வி. பி. அனுப்பப்பட மாட்டாது. தபாற்கூலி, பார்சல் செலவு முதலியன வாங்குவோரே செலுத்தவேண்டும். விவரங்கட்கு ரிப்ளை கார்டு எழுதுக.

சைவசித்தாந்த மகாசமாஜம்,
150, கோவிந்தப்பநாய்க்கன் தெரு,
சென்னை.

இங்ஙனம் :
ம. பாலசுப்பிரமணியன்,
காரியதரிசி